# ஸ்ரீஸித்தாந்தசிகாமணி

## தமிழ்ச் செய்யுள் வடிவம்



## துறைமங்கலம்
## சிவப்பிரகாச சுவாமிகள் செய்தது

தமிழ் உரைநடை


ஆக்கியோன்

**தி. கணேசன்**

சைவசித்தாந்தம் மற்றும் சைவாகம

முதுநிலை ஆராய்ச்சியாளர்

FRENCH INSTITUTE, PONDICHERRY



**SAIVA BHARATI SHODHA PRATISHTHANAM, VARANASI**

शोधप्रकाशनग्रन्थमाला ८३

# ŚRĪSIDDHĀNTAŚIKHĀMAṆIḤ

by
Śivayogiśivācārya

with
## Tamil Adaptation in verse form
by
## Civappirakāca Cuvāmikaḷ
and

Tamil prose rendering
by

Dr. T. GANESAN
Senior Researcher in Saiva Agama & Saivasiddhanta
French Institute, Pondicherry

Published by
Saiva Bharati Shodha Pratishthan, Varanasi

2016

# ஆசியுரை

Srimatkasi jnanasimhasanadhisvara
Sri 1008 Jagadguru Dr. Chandrashekhara
Shivacharya Mahasvamiji
Jangamawadi Math, Varanasi

ஸ்ரீஸித்தாந்தசிகாமணி எனும் இந்நூல் மஹர்ஷி ரேணுகாசாரியரால் அகஸ்திய முனிவருக்கு உபதேசிக்கப்பட்ட சிவாத்துவைத சித்தாந்தத்தை விளக்கும் ஓர் ஒப்பற்ற தத்துவநூல். வேதாகமங்களில் பொதிந்துள்ள தத்துவக் கருத்துக்களை ஆய்ந்தறிந்து ஸ்ரீசிவயோகி சிவாசாரியார் அவற்றை ஒரு நூலாக யாத்துள்ளார்.

ஸ்ரீகிருஷ்ணர் அர்ஜுனனுக்கு உபதேசித்த பகவத்கீதையை வியாஸமுனிவர் ஒரு நூலாக ஆக்கியதைப் போலவே இந்த ஸித்தாந்தசிகாமணி எனும் நூலும் தோன்றியுள்ளது. வேதம், ஆகமங்கள், புராணங்கள் ஆகியவற்றில் விளக்கப்பட்டுள்ள வீரசைவசித்தாந்தங்கள் அனைத்தும் ஸ்ரீஸித்தாந்தசிகாமணி நூலில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. இந்நூல் வீரசைவர் களுக்கு உரிய ஒப்பற்ற பொக்கிஷம். நூலாசிரியர் இதையே

ஸர்வஸ்வம் வீரசைவாநாம் ஸகலார்த்தபிரதிபாதகம் |

எனக் கூறுகிறார்.

வீரசைவசித்தாந்தக் கருத்துக்களான அஷ்டாவரணம், பஞ்சாசாரியம், ஷட்ஸ்தலம் ஆகியவை இந்நூலில் மிக எளிமையாகவும் அழகுறவும் விளக்கிக் கூறப்படுகின்றன. சிவயோகிசிவாசாரியார் வேதம், காமிகம் தொடங்கி வாதுலம் ஈருன அனைத்து சைவாகமங்கள், மற்றும் புராணங்கள் ஆகிய

நூல்களை ஆழ்ந்து ஆய்ந்து ஸ்ரீஸித்தாந்தசிகாமணி எனும் இந்நூலைத் தான் இயற்றியதாகக் கூறுகிறார்.

ஆலோக்ய சைவதந்த்ராணி காமிகாத்யானி ஸாதரம் |

வாதுலாந்தானி சைவானி புராணானி நிகிலானி து |

இக்காரணத்தினால் வீரசைவர்கள் வேதம், சைவாகமங்கள் மற்றும் புராணங்கள் ஆகிய பல நூல்களைக் கற்று வீரசைவ தத்துவக்கருத்துக்களை அறிய வேண்டிய நிலையின்றி இந்த ஸ்ரீஸித்தாந்தசிகாமணி நூல் வாயிலாகவே அனைத்தையும் எளிதில் அறியும் வாய்ப்பைப் பெற்றுள்ளனர். இக்காரணத்தின்ல் அனைத்து வீரசைவர்களும் சிவயோகிசிவாசாரியாருக்குக் கடன்பட்டுள்ளனர் என்றால் அது மிகையன்று. ஸ்ரீஸித்தாந்த சிகாமணி சுமார் 8 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டிருக்கலாம் என்பது Dr. சிவகுமாரஸ்வாமி போன்ற அறிஞர்களின் கருத்து. இந்நூலில் வீரசைவக்கருத்துக்களே மிகுதியும் விளக்கிக் கூறப்பட்டிருப்பினும் இது வீரசைவர்களுக்கு மட்டுமேயன்றி எல்லா மனிதர்களுக்கும் அவரவர்களுடைய ஆன்மிக சாதனைக்குத் தேவையானவற்றை நன்கு விளக்குகின்றது. சிவயோகத்தை அப்பியாசம் செய்வதற்கும் அதற்கு அடிப்படையான இஷ்டலிங்கதீக்ஷையைப் பெறுவதற்கும் சாதி மற்றும் வருண வேறுபாடின்றி ஆண், பெண் என அனைத்து மக்களும் தகுதியுடையவர்கள் என்று இந்நூல் பறைசாற்றுகிறது.

இந்த தீக்ஷையப் பெறுவதற்கு சிலரே தகுதியுடையார் எனக் கூறாமல்

சக்திபாதம் ஸமாலோக்ய தீக்ஷயா யோஜயேதமும் |

எவனுக்கு தீக்ஷை பெறும் எண்ணமுள்ளதோ அவனுக்குச் சக்திபாதம் எனும் சிவபெருமானின் அருளாற்றல் எந்த அளவுக்கு நிகழ்ந்துள்ளது என்பதை மட்டுமே ஆராய வேண்டுமே தவிர மற்ற தகுதிகளைப் பற்றி எண்ண வேண்டுவதே இல்லை; அதாவது சிவபெருமான் மீது ஆழ்ந்த பக்தியும் அசைக்க முடியாத நம்பிக்கையும் மட்டுமே இஷ்டலிங்கதீக்ஷை பெறுவதற்கான ஒரே தகுதி. பிராம்மணனோ, க்ஷத்திரியனோ, வைசியனோ, சூத்திரனோ மற்ற எந்த சாதியைச் சேர்ந்தவனாயினும் ஆழ்ந்த சிவபக்தி உடையவனே இஷ்டலிங்கதீக்ஷையைப் பெறத் தகுதி யுடையோன் எனும் மிக உயர்ந்த கருத்து ஸ்ரீஸித்தாந்த சிகாமணி நூலில் கூறப்படுகிறது. மேலும், இஷ்டலிங்க தீக்ஷையைப் பெற்றவுடன் அவனுடைய முந்தைய சாதி தருமங்கள் அனைத்தும் நீங்கி அவன் சிவசொரூபத்தையே அடைந்து விடுகிறான் எனவும் இந்நூல் கூறுகிறது.

உதாரணமாக

இந்தனேஷ்வக்னிதக்தேஷு க்வ ஜாதிபரிகல்பநா

எவ்வாறு பல்வகைப்பட்ட விறகுகளும் தீயில் இட்டபின் தங்களது தனித்தன்மை அனைத்தும் நீங்கி நெருப்பாகவே ஆகின்றனவோ அவ்வாறே தீக்ஷை அடைந்த பின்னர் எல்லா மக்களும் அவரவர்களுடைய சாதி முதலிய தனித்தன்மை நீங்கி சிவபாவமொன்றையே அடைகின்றனர் என்பது இந்நூலின் கருத்து. இந்த வகையில் வீரசைவர்களுக்கு மட்டுமேயன்றி மனிதர்கள் அனைவரின் நன்மையையும் இந்நூல் கருதுகிறது; எனவே மனிதராய்ப் பிறந்த எல்லோருக்கும் இந்நூல் உரியது என்றால் அது மிகையன்று.

இக்காரணத்திஞல் தான் காசி ஜகத்குரு மஹாஸ்வாமிகள் இந்நூலைப் பாரதநாட்டின் எல்லா மொழிகளிலும், மற்றும் வெளிநாட்டு மொழிகளான ரஷ்யம், நேபாளம் ஆகியவற்றிலும் அந்தந்த மொழி வல்லுநர்களைக் கொண்டு மொழிபெயர்த்து ஆங்காங்கே வெளியிட்டு உலகம் முழுவதிலும் இந்நூலைப் பரப்பி வந்துள்ளார்கள். தெலுங்கு, கன்னடம், குஜராதி, மைதிலி, மராட்டி, அவதி, ஹிந்தி ஆகிய பாரதநாட்டு மொழிகளிலும் இந்நூல் மொழியாக்கம் பெற்று வெளியிடப் பட்டுள்ளது.

இந்நூலைத் தமிழில் மொழியாக்கம் செய்வதற்குத் தகுதியுள்ளவரைத் தேடி வருகையில் நமது சைவபாரதி ஆராய்ச்சி நிறுவனத்துடன் நன்கு தொடர்புடையவரும் பாண்டிச்சேரியைச் சேர்ந்தவருமான அறிஞர் Dr. கணேசன் இந்நூலைத் தமிழ் மொழியாக்கம் செய்ய முன் வந்தார். 17 ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த மிகப் புகழ் பெற்ற தமிழ்ப் புலவரான ஶ்ரீசிவப்பிரகாசசுவாமிகள் இயற்றிய ஶ்ரீஸித்தாந்தசிகாமணி நூலின் செய்யுள் வடிவிலமைந்த தமிழ் மொழிபெயர்ப்பையும் தனது எளிய தமிழ் உரைநடை மொழியாக்கத்தையும் திரு. கணேசன் உடன் சேர்த்துள்ளார். தமிழ் அறிஞர்கள் பயனடையும் வகையில் இத்தகைய சிறந்த பணியினைத் திரு. கணேசன் செய்துள்ளார். ஜகத்குரு விச்வாராத்ய ஜனகல்யாண் அமைப்பின் கீழ் இயங்கும் சைவபாரதி சோத பிரதிஷ்டான் நிறுவனத்தின் வாயிலாக ஶ்ரீஸித்தாந்தசிகாமணி நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு நூலை இன்று வெளியிடுவதில் மிகவும் மகிழ்ச்சி அடைகிரேம். தமிழ் மொழிபெயர்ப்பாளரான திரு. கணேசனுக்கும் மற்றும் அவரது குடும்பத்தாருக்கும் எங்களது ஆசீர்வாதங்கள். பகவான் விசுவநாதர், மாதா அன்னபூரணி மற்றும் ஜகத்குரு பஞ்சாசாரியார்கள் திரு. கணேசனுக்கும்

அவரது குடும்பத்தாருக்கும் நீண்ட ஆயுளையும் ஆரோக்கியத்தையும் நல்கி திரு.கணேசன் வாழ்நாள் முழுவதும் இத்தகைய அரிய சிறந்த நூல்களைப் பதிப்பித்து வெளியிட வேண்டும் எனவும் மனதார வாழ்த்துகிறோம்.

திரு. கணேசனுக்கு அனைத்து மங்களங்களும் உண்டாகுக என மீண்டும் வாழ்த்துகிறோம்.

தமிழ் மக்களுக்கும் வீரசைவர்களுக்கும் இந்நூலை மீண்டும் அர்ப்பணிப்பதில் பெரு மகிழ்ச்சி கொள்கிறோம்.

சிவபக்தி நிறைந்த அனைவரும் இந்நூலைப் படித்துப் பயனடைவார்களாக என வாழ்த்தி எமது ஆசியுரையை நிறைவு செய்கிறோம்.

எல்லோருக்கும் மங்களம் உண்டாகுக !!!

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

# சிவப்பிரகாச சுவாமிகளின் வாழ்க்கையும் அவரியற்றிய நூல்களும்

சிவப்பிரகாச சுவாமிகள் 17 ஆம் நூற்றுண்டுத் தொடக்கத்தில் தொண்டை நாட்டில் பிறந்தார்; அவருடைய தந்தையார் குமாரசுவாமி தேசிகர். குமாரசிவாமி தேசிகர் ஒரு சிறந்த சைவ ஆசாரியர்; அவர் பலருக்குத் தீட்சா குருவாக இருந்தார். ஒரு சமயம் திருவண்ணுமலைக்குச் சென்றிருந்த போது அங்கிருந்த வீரசைவரொருவருடைய தொடர்பினுல் வீரசைவக் கொள்கைகளில் மனம் ஈடுபட்டு திருவண்ணு மலையிலிருந்த ஒரு வீரசைவ ஞாஞசாரியரிடத்து இலிங்க தாரண தீட்சை பெற்ருர். அண்ணுமலையார் திருவருளால் அவருக்கு மூன்று ஆண்மக்களும் ஒரு பெண்மகவும் பிறந்தனர். அவர்களுள் மூத்தவர் சிவப்பிரகாசர். வீரசைவ சமயாசாரப்படி சிவலிங்கதாரணம் உடையவராய் இளமை யிலேயே கல்வி கேள்விகளில் நன்கு தேர்ச்சி பெற்ருர். இறைவனருளால் அவருக்கு பொம்மபுரம் சிவஞானபாலய சுவாமிகள் என்னும் ஞானதேசிகருடைய அருளுறவு கிட்டியது. அவரிடத்திலே ஞானதீட்சை பெற்று துறவுநிலையை மேற்கொண்டார்.

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் பெரம்பலூர் வட்டத்திலுள்ள வெங்கனூரில் குறுநில மன்னராயிருந்த இலிங்காரெட்டியாரும் அவருடைய புதல்வர் அண்ணுமலை ரெட்டியாரும் சிவநேயச் செல்வர்களாயிருந்து வந்தனர்; அண்ணுமலை ரெட்டியார் சிவப்பிரகாசசுவாமிகளின் கல்வி மற்றும் சிவபக்திச் சிறப்புகளைக் கேட்டு அவரைத் தமது ஊருக்கு வரவேற்று அங்குத் திருமடமமைத்து அதில் தங்கியிருக்கச் செய்தனர். சுவாமிகள் பின்னர் திருச்செந்தூர் முதலிய பல தலங்களுக்கு

யாத்திரை சென்று, சிலகாலம் விருத்தாசலத்தில் இருந்துவிட்டு இறுதியில் புதுச்சேரியையடுத்த நல்லாற்றூரில் தங்கி இட்டலிங்க பரசிவத்தில் கலந்தருளினுர்கள்.

சுவாமிகளியற்ற நூல்கள்

சிவப்பிரகாச சுவாமிகள் 34 நூல்கள் இயற்றியுள்ளதாகத் தெரிகிறது.

தமது ஞாஞசாரியரான சிவஞானபாலய சுவாமிகள் மேற்பாடியவை

தாலாட்டு, நெஞ்சுவிடுதூது, திருப்பள்ளியெழுச்சி, பிள்ளைத்தமிழ், கலம்பகம் ஆகியன.

வெங்கனூர்ப் பழமலைநாதர் மேற்பாடியவை

வெங்கையுலா, வெங்கைக் கலம்பகம், வெங்கையலங்காரம், வெங்கைக் கோவை என்பவை.

விருத்தாசலத்திலுள்ள பழமலைநாதர் மேற்பாடியவை

பழமலையந்தாதி, பிட்சாடன நவமணிமாலை, கொச்சகக் கலிப்பா, பெரியநாயகியம்மை நெடுங்கழிநெடில், கலித்துறை ஆகியன.

தலயாத்திரையின் போது பாடியவை

சோணசைலமாலை, திருச்செந்தில் நிரோட்டக யமகவந்தாதி, தலவெண்பா.

வீரசைவசமய நூல்கள்

சிவப்பிரகாசவிகாசம், சித்தாந்தசிகாமணி, பிரபுலிங்கலீலை.

இட்டலிங்க அபிடேகமாலை, நெடுங்கழிநெடில், குறுங்கழிநெடில், நிரஞ்ஜனமாலை, கைத்தலமாலை.

### சைவசமயநூல்கள்

சதமணிமாலை, நால்வர் நான்மணிமாலை.

### மற்ற நூல்கள்

தருக்கபரிபாடை, வேதாந்தசூடாமணி, சிவநாமமகிமை, நன்னெறி, ஏசுமதநிராகரணம், திருக்கூவப்புராணம், சீகாளத்திப் புராணத்தில் கண்ணப்பர் சருக்கம் ஆகியன.

# நூற்பொருள் சுருக்கம்

சித்தாந்தசிகாமணி என்னும் இந்நூல் வடமொழியில் சிவயோகி சிவாசாரியரால் இயற்றப்பட்டது; 21 பரிச்சேதங்களைக் கொண்டது. சிவயோகி சிவாசாரியார் 8 ஆம் நூற்றுண்டுக்கும் 10 ஆம் நூற்றுண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தவராயிருக்கலாம் என்பது ஆராய்ச்சியாளர்கள் கருத்து.[1] சற்றேறக் குறைய 1000 அநுஷ்டுப் சுலோகங்களால் ஆன இந்நூல் வீரசைவ சித்தாந்தத்தின் எல்லா முக்கியக் கோட்பாடுகளையும் விரிவாகவும், எளிமையாகவும் எடுத்துரைக் கின்றது. ரேணுகாசாரியர் அகத்திய முனிவருக்கு வீரசைவ சித்தாந்தக் கோட்பாடுகளை விரிவாகவும் எளிமையாகவும் விளக்குமுகமாக இந்நூல் அமைந்துள்ளது. முதல் ஐந்து பரிச்சேதங்களில் சிவதத்துவம், சக்திதத்துவம், உலக சிருஷ்டி, கைலாய வருணனை, பஞ்சாக்ஷர மந்திர மஹிமை ஆகியன மிகச் சுருக்கமாகக் கூறப்படுகின்றன; எஞ்சிய பரிச்சேதங்களில் வீரசைவ தத்துவக் கோட்பாடுகள் அனைத்தும் அங்கஸ்தலம், லிங்கஸ்தலம், முதலான அறுவகை ஸ்தலங்களுக்குள் பகுத்து உரைக்கப்படுகின்றன. நூலிலுள்ள அனைத்து சுலோகங்களும் எளிமையாகவும், நூற்பொருள்களை ஐயம் திரிபின்றி புரிந்து கொள்ளும் வண்ணமுமாக ஸித்தாந்த சிகாமணி அமைந் துள்ளது. வீரசைவத் தத்துவக் கோட்பாடுகளை அனைவரும் உணரும் வண்ணம் இந்நூல் ஆக்கப்பட்டுள்ளது இதன் சிறப்பு.

---

[1] Sri Sivayogisivacaryaviracitah: Sri Siddhantasikhamani: Parayana Text, Edited & Translated into English by M. Sivakumara Swamy. Published by Shaiva Bharati Shodha Pratishthanam, Jangamawadi Math, Varanasi, 2014.

இந்நூலின் மற்ற சிறப்பு அம்சங்கள், நூலிலடங்கிய பொருட்களின் விரிவு ஆகியவற்றை Sri Siddhantasikhamani of Sivayogi Sivacarya with Tattvapradipika Sanskrit Commentary by Sri Maritontadarya & Jnanavati Hindi Commentary by Dr. Radheshyam Chaturvedi, Pub. Shaiva Baharati Shodha Pratishthanam, Jangamawadi Math, Varanasi, 2006 எனும் நூலில் காணலாம்.

## நூற்பொருள் சுருக்கம்

முதல் பரிச்சேதத்தில் சிவஸ்துதி மற்றும் நூலாசிரியரான சிவயோகிசிவாசாரியாரின் வமிசம், அவரது முன்னோர்கள், வீரசைவசித்தாந்தத்தில் அவர்களின் ஆழ்ந்த அறிவு ஆகியன விளக்கப்படுகின்றன.

இரண்டாம் பரிச்சேதத்தில் சுயம்பிரகாசமாக விளங்கும் சிவபெருமானிடத்திலிருந்து சக்தியின் வாயிலாக உலகம் தோற்றுவிக்கப்படுதல், ரேணுகர் அகத்தியரைக் காணச் செல்லுதல் ஆகியன விளக்கப்படுகின்றன.

கைலாய வருணனை, ரேணுகரின் சிவபக்தி மாட்சி, ரேணுகர் கயிலையில் தாருகனெனும் தலைசிறந்த சிவபக்தனைக் கண்டு வணங்காதிருத்தல், சிவபெருமான அதைக் கண்ணுற்று சிவபக்தர்களின மாட்சிமையை விளக்கி, ரேணுகரை மனிதராகப் பூவுலகில் தோன்றும்படி சபித்தல், ரேணுகரின் பிரார்த்தனை ஆகியன மூன்றும் பரிச்சேதம் கூறும் செய்திகள்.

தெலுங்கு நாட்டில் கொல்லிபாகமெனும் புண்ணிய க்ஷேத்திரத்தில் ஸோமேசுவரரெனும் சிவலிங்கத்தினின்று ரேணுகர் அவதரித்தல், சிவவேடம் புனைந்து ஒளிபொருந்தி விளங்கும் அம்மகானைக் கண்ட மக்கள் அனைவரும் அவரைக் கண்டு வியப்பில் ஆழ்ந்து வணங்கி யாரென்று வினவுதல்,

சுதந்திரமாகத் தான் தோன்றியது, சாருவாகம், ஜைனம் போன்ற புறச்சமயங்களைக் வாதில் வென்று சிவசித்தாந்தத்தை நிலைபெறச் செய்வதொன்றே தனது ஒப்பற்ற கடமை என்று கூறி ரேணுகர் தென்திசையில் மலயமலைச் சாரலைச் சென்றடைதல், அங்கு அமைதி தவழும் ஆசிரமத்தில் அகத்திய முனிவர் தவம் செய்தலைக் கண்டு அவரை நேரில் காணுதல், அகத்தியர் ரேணுகரை அன்புடன் வரவேற்று வணங்கி உபசரித்தல், இருவரும் ஒருவர் பெருமையை மற்றவர் அன்புடன் நினைவு கூர்தல், ரேணுகரின் திருவாக்கால் தலைசிறந்த சைவசித்தாந்தக் கருத்துக்களைக் கேட்க தான் மிகவும் விரும்புவதாக அகத்தியர் கூறுதல் ஆகியன நான்காம் பரிச்சேதத்தில் விளக்கப்படுகின்றன.

ஐந்தாம் பரிச்சேதத்தில் வேதாந்தம் முதலிய ஏனைய சாத்திரங்களின் முக்கிய கருத்துக்களை விளக்கி, இறுதியாகச் சைவசாத்திரத்தில் வீரசைவசாத்திரம் பக்தஸ்தலம், மாஹேசுவரஸ்தலம், முதலாக அறுவகை ஸ்தலங்களாகப் பகுக்கப்படுதல், அதன் ஒவ்வொன்றுள்ளும் மேலும் பலஸ்தலங்களின் வகை ஆகியவற்றை ரேணுகர் அகத்தியருக்கு எடுத்துக் கூறுதல், பக்தஸ்தலத்தைப் பற்றி விரிவாக எடுத்து இயம்புதல் ஆகியன கூறப்படுகின்றன.

தீக்ஷாலக்ஷணம், குருகாருண்யம், லிங்கதாரணம் ஆகியன ஆறும் பரிச்சேதத்திலும், திருநீறு அணிதல், ருத்திராக்ஷம் அணிதல் ஆகியவற்றின் மஹிமைகளும், அவற்றின் இன்றியமையாதத் தன்மைகளும் ஏழாம் பரிச்சேதத்திலும் விளக்கப்படுகின்றன. ஷடக்ஷரமெனும் பஞ்சாக்ஷர மந்திரமஹிமை, மந்திர ஜபம் ஆகியவற்றை எட்டாம் பரிச்சேதம் விளக்குகிறது.

சிவபக்தியின் வகை, அதன் மாட்சி, சைவத்தில் சிவபக்தியின் இன்றியமையாமை, குரு மற்றும் சிவபக்தர்களின் ஒழுக்கம், ஆகியவை ஒன்பதாம் பரிச்சேதம் விளக்கும் செய்திகள்.

பத்தாம் பரிச்சேதம் மாஹேசுவரஸ்தலத்தின் விரிவுகளை நன்கு விளக்குகின்றது.

பதினோராம் படலம் பிரஸாதிஸ்தலம் முதலான எழுவகை ஸ்தலங்களை விளக்குகிறது.

பிராணலிங்கிஸ்தலம், பிராணலிங்கார்ச்சனஸ்தலம் முதலான வற்றைப் பன்னிரெண்டாம் பரிச்சேதமும், சரணஸ்தலம் ஆகியவற்றைப் பதிமூன்றும் பரிச்சேதமும் விரித்துக் கூறுகின்றன.

ஐக்கியஸ்தலம், ஆசாரஸம்பத்திஸ்தலம், எகபாஜனஸ்தலம், ஸஹபோஜனஸ்தலம் ஆகியன பதினான்காம் பரிச்சேதத்தில் கூறப்படும் செய்திகள்.

லிங்கஸ்தலம், தீக்ஷாகுருஸ்தலம், தொடங்கி பரஸ்தலம் ஈருகப் பத்து ஸ்தலங்களின் விளக்கம் பதினைந்தாம் பரிச்சேதத்திலும், கிரியாகமஸ்தலம் முதலாக ஞானசாரஸ்தலமீருன ஒன்பது ஸ்தலங்களின் விளக்கம் பதினாறும் பரிச்சேதத்திலும் காணப்படுகின்றன.

பிரஸாதிஸ்தலம், இந்திரியானுக்கிரஹஸ்தலம், ஆகியவை பதினேழாம் பரிச்சேதத்திலும், பிராணலிங்கஸ்தலத்தின் வகையைச் சேர்ந்த ஆத்மஸ்தலம், மற்றும் பரமாத்மஸ்தலம், நிர்தேஹாத்மஸ்தலம் ஆகியவை பதினெட்டாம் பரிச்சேதத்திலும் விளக்கப்படுகின்றன.

சரணஸ்தலம், சிக்ஷாபாதோதகஸ்தலம், ஞானபாதோதகஸ்தலம், முதலான பன்னிரண்டு ஸ்தலங்களைப் பத்தொன்பதாம் பரிச்சேதமும்,

ஐக்கியஸ்தலம் தொடங்கி ஞானசூனியஸ்தலம் ஈறான எஞ்சிய ஒன்பது ஸ்தலங்களை இருபதாம் பரிச்சேதமும் விளக்குகின்றன.

விபீஷணனின் இருப்பிடம் சென்று அவனது விருப்பத்தை ரேணுகர் பூர்த்தி செய்ததை இருபத்தொன்றும் பரிச்சேதம் சுருக்கமாக விளக்குவதன் வாயிலாக ஸித்தாந்தசிகாமணி என்னும் இந்நூல் முற்றுப் பெறுகின்றது.

॥ श्रीसिद्धान्तशिखामणिः ॥

शिवयोगिशिवाचार्यविरचितः

## ॥ प्रथमः परिच्छेदः ॥

श्रीनाथः सोममूर्तिर्जयति परशिवस्त्र्यम्बकस्ताररूपः
स्वच्छश्रीब्रह्मरन्ध्रस्थितसितजलप्रोद्यद-
ब्जत्रिकोणे ।
इच्छाज्ञानक्रियाख्ये त्रिविधलिपिमये हक्षलार्णाग्रपार्श्वे
कृत्स्नार्णोन्मुख्यबिन्दौ चिदचिदुदयकृद्दृक्क्रियाङ्घ्रिद्वयाढ्यः ॥

பரிசுத்தமான பிரஹ்மரந்திரத்திலுள்ள சுத்தமான ஜலத்தில் தோன்றியதும், இச்சை, ஞானம், கிரியையாக விளங்கும் ஹ, க்ஷ, ல எனும் மூன்றெழுத்துக்களும் கொண்டதுமான தாமரையிதழ் வடிவான முக்கோணத்தில் பிரகாசிப்பவரும், அனைத்து அக்ஷரங்களும் தோன்றுவதற்கு ஏதுவாய் விளங்குவதுமான பிந்துவில் [பிரகாசிப்பவரும்] சித், அசித் ஆகிய பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பவரும், ஞானம் கிரியை என்னும் இரு சரணங்களைக் கொண்டவரும், திரியம்பகரும், பிரணவவடிவாகத் திகழ்பவரும் ஸ்ரீநாதரும் ஸோமமூர்த்தியாக விளங்குபவருமான பரசிவனுக்கு வெற்றியுண்டாகுக!

अनेकविधसिद्धान्तशिखामणिमनामयम् ।
श्रीवीरशैवसिद्धान्तमेकोत्तरशतस्थलम् ॥
रेणुकागस्त्यसंवादं निगमागमविश्रुतम् ।
प्रदीपयति गुप्तार्थमुद्धृत्य शिवयोगिराट् ॥

பல் வகைப்பட்ட சித்தாந்தங்களுக்குள்ளும் தலைசிறந்த சூடாமணியாகத் திகழ்வதும், குற்றமற்றதும், ஸ்ரீவீரசைவசித்தாந்தமானதும், நூற்றியோரு ஸ்தலங்களைப் பற்றி விளக்குவதும், ரேணுகசித்தருக்கும் அகஸ்தியமுனிவருக்குமிடையே நடந்த சம்பாஷணையாக

இருப்பதும், வேதம் மற்றும் ஆகமங்களில் போற்றப்படுவதுமான ஸித்தாந்தசிகாமணியென்னும் நூலின் உட்பொருள்களைச் சிவயோகிகளுள் தலைசிறந்த சிவயோகிராட் எடுத்துரைத்து விளக்குகிறார்.

சித்தாந்தசிகாமணி

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்

மொழிபெயர்த்தருளியது

**விநாயக வணக்கம்**

**மனவ னத்தின் மதமெனும் யானையைச்**
**சினவி நிற்குந் திகழிள வெண்மதி**
**புனைநு தற்கட் புராரிய ளித்தரு**
**ணனைக வுட்களி நாகிள வேழமே .**

சிவபெருமானருளிய ஆனைமுகக்கடவுளே மனத்தில் தோன்றும் மதயானையை அழிக்கவல்லவர்.

त्रैलोक्यसम्पदालेख्यसमुल्लेखनभित्तये ।
सच्चिदानन्दरूपाय शिवाय ब्रह्मणे नमः ॥ १॥

செழிப்பான மூவுலகங்களெனும் சித்திரத்தை வரைவதற்கான சுவர் போல விளங்குபவரும், ஸச்சிதானந்த வடிவானவருமான சிவமெனும் பரப்பிரம்மத்திற்கு வணக்கம்.

ब्रह्मेति व्यपदेशस्य विषयं यं प्रचक्षते ।
वेदान्तिनो जगन्मूलं तं नमामि परं शिवम् ॥२॥

வேதாந்திகள் எவரை பிரம்மம் என்று அழைக்கிறார்களோ, உலகங்களுக்கெல்லாம் ஆணிவேராகத் திகழும் அப்பரமசிவனை வணங்குகிறேன்.

यस्योर्मिबुद्बुदाभासः षट्त्रिंशत्तत्त्वसञ्चयः ।
निर्मलं शिवनामानं तं वन्दे चिन्महोदधिम् ॥३॥

எந்தச் சின்மயக்கடலின் அலைகளிலிருந்து முப்பத்தாறு தத்துவங்களும் நீர்க்குமிழி போல் தோன்றுகின்றனவோ நிர்மலமான அந்த சிவபரம்பொருளை வணங்குகிறேன்.

यद्भासा भासते विश्वं यत्सुखेनानुमोदते ।
नमस्तस्मै गुणातीतविभवाय परात्मने ॥ ४॥

எவருடைய பிரகாசத்தினால் இவ்வுலகங்கள் மிளிர்கின்றனவோ, எவருடைய ஆனந்தத்தினால் உலகங்கள் மகிழ்கின்றனவோ முக்குணங்களையும் கடந்து விளங்கும் அந்தப் பரம்பொருளுக்கு எனது வணக்கங்கள்.

सदाशिवमुखाशेषतत्त्वोन्मेषविधायिने ।
निष्कलङ्कस्वभावाय नमः शान्ताय शम्भवे ॥ ५॥

ஸதாசிவப் பெருமானுடைய திருமுகத்தாமரை வாயிலாக அனைத்துத் தத்துவங்களையும் தோற்றுவித்தவரும், எவ்விதக் களங்கமுமற்று விளங்குபவருமான சிவபெருமானுக்கு எனது வணக்கங்கள்.

स्वेच्छाविग्रहयुक्ताय स्वेच्छावर्तनवर्तिने ।
स्वेच्छाकृतत्रिलोकाय नमः साम्बाय शम्भवे ॥ ६॥

தனது இச்சைக்கேற்ற உருவம் கொள்பவரும், தனது இச்சைக்கேற்ப உலகங்களை இயக்குபவரும், தன்னிச்சையாக மூவுலகங்களையும் தோற்றுவிப்பவருமான அம்மையப்பருக்கு வணக்கங்கள்.

यत्र विश्राम्यतीशत्वं स्वाभाविकमनुत्तमम् ।
नमस्तस्मै महेशाय महादेवाय शूलिने ॥ ७॥

பரசிவ வணக்கம்

உலகமெனு மோவியங்க டிகழ்த்துமொரு படமாகி யொளிக
ளெல்லா
மிலகுபர வொளியாகிச் சச்சிதா நந்தமா யேக மாகிப்
பலகலைகள் பரப்பிரமம் பரசிவமா லிங்கமெனப் பகரா
நின்ற
திலகநுத லுமைகணவன் றிருவடித்தா மரைவணக்கஞ்
செய்து வாழ்வாம்.

இப்பரந்த உலகமெனும் ஓவியத்தை வரைவதற்கான ஒரு துணிபோல் திகழ்பவரும், சச்சிதானந்த வடிவினரும், எல்லாவற்றையும் கடந்து நிற்கும் ஒளியாக விளங்குபவரும், பரப்பிரம்மமான சிவபெருமானது திருவடிகளை வணங்குவோம்.

यामाहुः सर्वलोकानां प्रकृतिं शास्त्रपारगाः ।
तां धर्मचारिणीं शम्भोः प्रणमामि परां शिवाम् ॥ ८॥

கற்றோர்கள் எந்த சக்தியை உலகங்கள் தோன்றுவதற்கான மூலப்பொருளாகக் கருதுகின்றனரோ, சிவபெருமானின் இல்லத்துணைவியான அந்த சக்திக்கு வணக்கங்கள்.

यया महेश्वरः शम्भुर्नामरूपादिसंयुतः ।
तस्यै मायास्वरूपायै नमः परमशक्तये ॥ ९॥

எந்த சக்தியின் வாயிலாகச் சிவபெருமான் பல உருவங்களையும், பெயர்களையும் அடைகிறாரோ மாயா வடிவான அந்தப் பரமசக்திக்கு எனது வணக்கங்கள்.

शिवाद्यादिसमुत्पन्नशान्त्यतीतपरोत्तराम् ।
मातरं तां समस्तानां वन्दे शिवकरीं शिवाम् ॥ १०॥

சாந்தியதீதம் முதலான பரதத்துவங்கள் எந்த சிவசக்தியின் வாயிலாகத் தோன்றுகின்றனவோ அச்சக்தியை வணங்குகிறேன்.

इच्छाज्ञानादिरूपेण या शम्भोर्विश्वभाविनी ।
वन्दे तां परमानन्दप्रबोधलहरीं शिवाम् ॥ ११॥

எந்த சிவபெருமானுக்கு இச்சா சக்தியாகவும், ஞானசக்தியாகவும் விளங்கி உலகங்களையெல்லாம் தோற்றுவிக்கிறாளோ ஆனந்தக் கடலாகத் திகழும் அந்த சக்தியை வணங்குகிறேன்.

अमृतार्थं प्रपन्नानां या सुविद्याप्रदायिनी ।
अहर्निशमहं वन्दे तामीशानमनोरमाम् ॥१२॥

அழிவற்ற அமிர்தத்தன்மையை அடைய விரும்புவோருக்கு உயர்ந்த ஞானத்தை அருளும் அந்த சக்தியை இடையறாது வணங்குகிறேன்.

பராசக்தி வணக்கம்

மாயையெனு மணல்கொடுல கெனுஞ்சிற்றி லிழைத்தாடும் வளமையாளை
மூயமல விருளிரிக்குஞ் செழுஞ்சுடரை யுயிர்களெல்லா முன்னமீன்ற
தாயையொரு பரசிவனைப் பெயராக்குஞ் சமவாய சத்தி தன்னைத்
தூயவறி வானந்த வடிவாளை மலைமகளைத் தொழுதல் செய்வாம்.

மாயையெனும் மணலால் உலகமெனும் சிறிய வீட்டைக் கட்டி விளையாடும் இளம் பெண்ணாகத் திகழ்பவளும், மூலமலமெனும் இருளை நீக்கும் பரஞ்சுடரானவளும், அனைத்து உயிர்களையும் ஈன்ற ஒப்பற்ற அன்னையானவளும், சிவபெருமானை விட்டகலாத சக்தியுமான மலைமகளைத் தொழுவோம்.

## வசவதேவ வணக்கம்

எண்ணிகழ்ந்த வண்டமெல்லாம் வலம்புரிந்த தெனவுமைமா
னீன்ற வேழந்,
தண்ணிகழ்ந்த நறுங்கொன்றைச் சடையொருவன் றனைச்
சூழ்ந்த தகைமை போல,
மண்ணிகழ்ந்த சிவசரணர் தமையெல்லாந் தொழுந்தகைமை
வாய்ப்ப வெங்க,
ளுண்ணிகழ்ந்த வசவனெனும் பெயருடையோன்
றனைவணங்கி யுவகை கூர்வாம்.

சிவபெருமான் ஒருவரை மட்டும் வலம் வந்து அனைத்துலகங்களையும் வலம் வந்த பேற்றை விநாயகப் பெருமான் அடைந்தது போல், அனைத்து சிவசரணர்களையும் வணங்கிய பேற்றை தன்னை வணங்குவோர்க்கு நல்கும் பஸவபெருமானை வணங்குவோம்.

कश्चिदाचारसिद्धानामग्रणीः शिवयोगिनाम् ।
शिवयोगीति विख्यातः शिवज्ञानमहोदधिः ॥ १३॥
शिवभक्तिसुधासिन्धुजृम्भणामलचन्द्रिका ।
भारती यस्य विदधे प्रायः कुवलयोत्सवम् ॥ १४॥

சைவாசாரங்களைக் கடைப்பிடித்து ஒழுகும் சித்தர்களின் வமிசத்தில் சிவஞானக் கடலாகச் சிவயோகி என்று புகழ்பெற்ற ஒருவர் தோன்றினுர்; சிவபக்தியாகிய அமிர்தத்தைப் பொழியும் சந்திரனைப் போல் அவருடைய சொற்கள் உலக மக்களை ஆனந்தத்தில் ஆழ்த்திவந்தன.

तस्य वंशे समुत्पन्नो मुक्तामणिरिवामलः ।
मुद्ददेवाभिधाचार्यो मूर्धन्यः शिवयोगिनाम् ॥ १५॥

அவருடைய வமிசத்தில் கடலில் முத்து தோன்றுவது போல் சிவயோகிகளுள் தலைசிறந்த முத்ததேவரென்பார் தோன்றினுர்.

मुद्दानात् सर्वजन्तूनां प्रणतानां प्रबोधतः ।
मुद्देवेति विख्याता समाख्या यस्य विश्रुता॥ १६॥

தன்னை வணங்குவோரைப் பேரறிவாற்றலுடன் இணைப்பதால் அவர் முத்ததேவரெனப் புகழடைந்தார்.

तस्यासीन्नन्दनः शान्तः सिद्धनाथाभिधः शुचिः ।
शिवसिद्धान्तनिर्णेता शिवाचार्यः शिवात्मकः ॥ १७॥

அவருக்குச் சாந்தகுணங்கள் நிறைந்தவரும், களங்கமற்றவரும், சைவசித்தாந்த ஆசாரியருமான ஸித்தநாதரெனப் பெயருடைய ஒரு திருமகன் இருந்தார்.

वीरशैवशिखारत्नं विशिष्टाचारसम्पदम् ।
शिवज्ञानमहासिन्धुं यं प्रशंसन्ति देशिकाः ॥ १८॥

கற்றோர்கள் அவரை வீரசைவகுலதிலகமென்றும், மிக உயர்ந்த ஒழுக்கங்கள் நிறைந்தவரெனவும், சிவஞானக் கடலென்றும் புகழ்ந்தனர்.

यस्याचार्यकुलाज्जाता सतामाचारमातृका ।
शिवभक्तिः स्थिरा यस्मिन् जज्ञे विगतविप्लवा ॥ १९॥

அந்த ஆசாரிய குலத்திலிருந்து நல்லோர்களின் ஒழுக்கங்களும், உறுதியான சிவபக்தியும் தோன்றி எவ்விதக் குழப்பமுமின்றி விளங்கின.

तस्य वीरशिवाचार्यशिखारत्नस्य नन्दनः ।
अभवच्छिवयोगीति सिन्धोरिव सुधाकरः ॥ २०॥

பாற்கடலிலிருந்து சந்திரன் உதித்தது போல் அந்த வீரசைவகுலத்திலிருந்து சிவயோகி என்பார் தோன்றினார்.

चिदानन्दपराकाशशिवानुभवयोगतः ।
शिवयोगीति नामोक्तिर्यस्य याथार्थ्ययोगिनी॥ २१॥

சிதானந்த பராகாசமெனும் வெட்ட வெளியைக் கடந்து விளங்கும் சிவானுபவத்தை எப்போதும் அனுபவிப்பதால் அவருக்கு சிவயோகி என்னும் பெயர் நிலைத்து நின்றது.

நூல் வரலாறு

ஓங்குபுகழ்ச் சித்தரா மேசனென வொருகுரவ னுளன
வன்சேய்
தாங்குவிறற் சைவசிகா மணிமுத்தி தேவனவன் றநயன்
மாயை
நீங்குகுணக் குன்றனைய சித்தநா தப்பெயரோ னிகழ்த்த
வன்பால்
வாங்குதிரைக் கடற்கண்மதி போற்சிவயோ கிப்பெயரோன்
வந்து தித்தான்.

புகழ் பெற்ற சித்தராமேசனெனும் பெயர்கொண்ட குரவனுடைய திருமகன் சைவசிகாமணியான முத்திதேவன்; அவனுடைய மகன் குணக்குன்றுன சித்தநாதன்; அவனிடமிருந்து கடலில் சந்திரன் தோன்றியது போல் சிவயோகி வந்துதித்தான்.

शिवागमपरिज्ञानपरिपाकसुगन्धिना ।
यदीयकीर्तिपुष्पेण वासितं हरितां मुखम् ॥२२॥

அவருடைய சிவந்த முகமானது சிவாகமங்களைக் கற்று அந்தப் புகழ்மணம் வீசும் மலரால் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

येन रक्षावती जाता शिवभक्तिः सनातनी ।
बुद्धादिप्रतिसिद्धान्तमहाध्वान्तांशुमालिना ॥ २३॥

சூரியன் [இருளிலிருந்து உலகைக் காப்பது போல்] பௌத்தம் முதலான புறச்சமயக் கொள்கைகளாகிய இருள்மலத்திலிருந்து அவரால் என்றுமழியாது தொன்றுதொட்டு வரும் சிவபக்தியானது பாதுகாக்கப்பட்டது.

स महावीरशैवानां धर्ममार्गप्रवर्तकः ।
शिवतत्त्वपरिज्ञानचन्द्रिकावृतचन्द्रमाः ॥ २४॥
आलोक्य शैवतन्त्राणि कामिकाद्यानि सादरम् ।
वातुलान्तानि शैवानि पुराणान्यखिलानि तु ॥ २५॥

வீரசைவ தருமத்தை நிலைநாட்ட எழுந்தவரும்,
சிவதத்துவங்கள் அனைத்தையும் கற்றுத் தேர்ந்த சந்திரனைப் போல் பிரகாசிப்பவருமான அந்த சிவயோகிகள் காமிகம் முதல் வாதுலம் ஈருன எல்லா சைவாகமங்களையும்,
சைவபுராணங்களையும் நன்கு ஆராய்ந்து,

சிவபத்தி யெனுமமுத மொடுவிளங்குஞ் சிவஞானத் திங்க ளீனு
முவமிக்க வரிய திருப் பாற்கடலாஞ் சிவயோகி யுலக முய்ய
அவவுற்ற வுளத்தினொடு காமிகமே முதலாய வாக மங்க
ணவையற்ற சிவபுரா ணங்களனெப் பட்டவெல்லா நயந்து பார்த்து

वेदमार्गाविरोधेन विशिष्टाचारसिद्धये ।
असन्मार्गनिरासाय प्रमोदाय विवेकिनाम् ॥ २६॥
सर्वस्वं वीरशैवानां सकलार्थप्रकाशनम् ।
अस्पृष्टमखिलैर्दोषैरादृतं शुद्धमानसैः ॥ २७॥
तेष्वागमेषु सर्वेषु पुराणेष्वखिलेषु च ।
पुरा देवेन कथितं देव्यै तन्नन्दनाय च ॥ २८॥

வேதநெறிக்கு விரோதமில்லாததும், வீரசைவக் கொள்கைகள் அனைத்தும் கொண்டதும், எவ்விதக் குற்றமுமற்றதும்,
மற்றவர்களால் கூறப்படாததும், முன்னொரு காலத்தில் சிவபெருமானால் தேவிக்கும் முருகப் பெருமானுக்கும் உபதேசிக்கப்பட்டதுமான கருத்துக்களை அந்த சிவாகமங்கள் மற்றும் புராணங்களிலிருந்து தேர்ந்தெடுத்து புறச்சமயக் கொள்கைகளை அழிப்பதற்கும், சன்மார்க்கம் நிலைபெறுவதற்காகவும்,

மறைநெறிகள் வழுவாம லயனெறிக டடுமாற மதிஞ
ரெல்லா
மறிவமைதி பெறவீர சைவநெறி யனைத்துமொருங்
கமைந்து காண
நிறைவுதரு மாகமவே தங்கள்புரா ணங்கடொறு நெற்றி
நாட்டத்
திறைவனுமை யொடுமுருகற் கருளியதா யறிஞருள
மிசைவ தாகி.

வேதநெறியிலிருந்து வழுவாததும், புறநெறிகளை ஒடுக்குவதும், அறிஞர்கள் படித்து இன்புறுவதும், அனைத்து சைவநெறிகளும் ஒருசேர இருப்பதும், வேதம், ஆகமம், புராணம் ஆகியவை கூறும் எல்லா சைவநெறிகளும் நிரம்பியதும், சிவபெருமான் உமையம்மை, முருகப்பெருமான் ஆகியோர்க்கு அருளியதும், அறிஞர்களால் போற்றப்படுவதும்,

तत्सम्प्रदायसिद्धेन रेणुकेन महात्मना ।
गणेश्वरेण कथितमगस्त्याय पुनः क्षितौ ॥ २९॥
वीरशैवमहातन्त्रमेकोत्तरशतस्थलम् ।
अनुग्रहाय लोकानामभ्यधात् सुधियां वरः ॥ ३०॥

அச்சம்பிரதாயத்தில் வந்தவரும் சிவகணங்களுக்குத் தலைவராகிய விளங்கியவருமான ரேணுகரென்னும் பெரியோரால் முன்னர் அகத்தியருக்கு அருளப்பட்டதும், நூற்றியோரு ஸ்தலங்களைப் பற்றி விளக்குவதுமான அந்நூலை அந்த சிவயோகி என்பார் இயற்றினர்.

சங்கரசம் பிரதாய னாயவிரே ணுகன்முனிவர் தங்கட்
கெல்லாம்
புங்கவனா கியகலய முனிக்குரைத்த தாகியிவண்
பொருந்தி யொன்று
தங்கடலை யிட்டவொரு நூறு தலம் புணர்வீர சைவ
நூலை
யிங்குரைசெய் தனனதனைத் தமிழ்ப்படுத்தி முறைபிறழா
தியம்ப லுற்றேன்.

சிவபக்திச் செல்வம் நிறைந்த சிவயோகிகள் காமிகம் முதலான சிவாகமங்களையும், மற்ற புராணங்களையும் நன்கு ஆய்ந்து மறைகளின் பொருள்கள் இனிதே விளங்குவதும், இரேணுகர் அகத்திய முனிவர்க்கு முன்னர் அருளியதும், நூற்றியோரு தலங்களைப் பற்றி விளக்குவதுமான இந்நூலை நான் தமிழில் செய்கிறேன்.

सर्वेषां शैवतन्त्राणामुत्तरत्वान्निरुत्तरम् ।
नाम्ना प्रतीयते लोके यत्सिद्धान्तशिखामणिः ॥ ३१॥
अनुगतसकलार्थै शैवतन्त्रैः समस्तैः
प्रकटितशिवबोधाद्वैतभावप्रसादे ।
विदधतु मतिमस्मिन् वीरशैवा
विशिष्टाः पशुपतिमतसारे पण्डितश्लाघनीये ॥ ३२॥

எல்லா சைவதந்திரங்களுக்கும் மேலானதால் இந்நூல் ஸித்தாந்தசிகாமணி எனப் புகழ் பெற்றது.
கற்றவர்களால் போற்றத்தக்கதும், எல்லா சைவக்கருத்துக்களும் அடங்கியதும், சிவாத்துவிதானுபவத்தை நல்குவதும், சைவக்கருத்துக்களின் சாரமாக விளக்குவதுமான இந்நூலை சைவர்கள் அனைவரும் ஆதரிப்பார்களாக!

நூற்பெயர்

முந்துறுமெச் சைவதந்தி ரங்களுக்கும் விளங்குதனி முடியாய் வீர
தந்திரமுத் தரமாகித் தனக்குமே லிலாமையினாற் சாற்று நாம
நந்துறுசித் தாந்தசிகா மணியாகுஞ் சிவாத்துவித ஞான வாழ்வைப்
பந்தமறத் தருமிதன்கட் டிகழ்வீர சைவர்மனம் பட்டு நிற்கும்.

சைவதந்திரங்களுள் சிறந்த வீரதந்திரத்தின் உத்தரபாகமாயும், சித்தாந்தசிகாமணி என்னும் பெயர் கொண்டு சிவாத்துவிதஞானத்தை வழங்கும் இந்நூலின்கண் வீரசைவர்களின் மனம் பொருந்தி விளங்கும்.

உலகின்மலி புகழ்படைத்த சிவயோகி தனதுபே ருணர்வி
னாலே
மலைவதற வருளியவிச் சித்தாந்த சிகாமணியின் மதிசெ
லுத்திக்
கலைமுழுது முணர்ந்தவர்மு னியான்மொழியக் கருதலொரு
கடுகு நாட்டி
யலைகடலைக் கடைந்துசுவை யமுதெடுப்பக் கருதலொடொப்
பாகு மன்றே.

புகழ்பெற்ற சிவயோகியானவர் தனது பேருணர்வினுல் அருளிய இந்த சித்தாந்தசிகாமணி எனும் நூலை கற்றவர்கள் முன் உரைக்கப் புகும் நான் எனது சிற்றறிவை எண்ணி வெட்கமடைகிறேன்.

ஆக்கியோன்பெயர்

தலங்குலவு மலயமமர் கலயமுனிக் கிரேணுகன்றண் ணளியா
லீந்த
நலங்குலவு சித்தாந்த சிகாமணியைத் தமிழ்க்கவியா னன்கு
செய்தா
னிலங்குதமிழ்க் கடலையொரு நாவாயாற் கடந்துலக
மிறைஞ்சா நின்ற
பொலங்கழலெம் பெருந்தகையாஞ் சிவப்பிரகா சையனெனும்
பொருவிலானே.

அகத்திய முனிவர்க்கு இரேணுகன் முன்னர் அருளிய சித்தாந்தசிகாமணி எனும் நூலைச் சிவப்பிரகாசையன் என்போன் தமிழ்ச் செய்யுள் வடிவத்தில் ஆக்கியுள்ளான்.

॥ इति श्रीसिद्धान्तशिखामणौ प्रथमपरिच्छेदः ॥

॥ द्वितीयपरिच्छेदः ॥

सच्चिदानन्दरूपाय सदसद्व्यक्तिहेतवे ।
नमः शिवाय साम्बाय सगणाय स्वयम्भुवे ॥

ஸச்சிதானந்த வடிவாயும், சத்து மற்றும் அசத்துப் பொருட்களின் தோற்றத்திற்கு ஏதுவாகவும் விளங்குபவரும், தாஞகவே தோன்றியவரும், அம்பிகையுடன் கூடியிருப்பவருமான சிவபெருமானுக்கு எனது வணக்கங்கள்.

सदाशिवमुखाशेषतत्त्वमौक्तिकशुक्तिकाम् ।
वन्दे माहेश्वरीं शक्तिं महामायादिरूपिणीम् ॥ २॥

ஸதாசிவப்பெருமானுடைய முககமலத்திலிருந்து வெளிவரும் அனைத்துத் தத்துவங்களையும் கொண்ட முத்துச்சிப்பியாகத் திகழ்பவளும், பரமசிவனுடைய ஶக்தியாக விளங்குபவளும், மஹாமாயாவடிவமுடையவளுமான அம்பிகையை வணங்குகிறேன்.

अस्ति सच्चित्सुखाकारमलक्षणपदास्पदम् ।
निर्विकल्पं निराकारं निरस्ताशेषविप्लवम् ॥ ३॥
परिच्छेदकथाशून्यं प्रपञ्चातीतवैभवम् ।
प्रत्यक्षादिप्रमाणानामगोचरपदे स्थितम् ॥ ४॥
स्वप्रकाशं विराजन्तमनामयमनौपमम्।
सर्वज्ञं सर्वहं शान्तं सर्वशक्तिनिरङ्कुशम् ॥ ५॥
शिवरुद्रमहादेवभवादिपदसंज्ञितम् ।
अद्वितीयमनिर्देश्यं परंब्रह्म सनातनम् ॥ ६॥

ஸத், சித், ஆனந்த சொரூபமானதும், இலக்கணத்திற்கு அப்பாற்பட்டதும், மாற்றங்களற்றதும், உருவமற்றதும், எவ்வித சலனமும் இல்லாததும், வரையறையற்றதும், எல்லா உலகங்களையும் கடந்து நிற்பதும், பிரத்தியக்ஷம் முதலான பிரமாணங்களால் அறியப்படாததும், சுயம்பிரகாசமானதும், குற்றமற்றதும், ஒப்பற்றதும், எல்லாவற்றையும் அறிந்ததும், அனைத்தையும் அழித்துத் தன்னுள் ஒடுக்குவதும்,

அமைதியானதும், அளவற்ற ஆற்றல் கொண்டதும், சிவன், ருத்திரன், மஹாதேவன், பவன் முதலான பற்பல பெயர்களைக் கொண்டதும், தன்னொப்பாரில்லாததும், இரண்டற்றதுமான பரபிரம்மம் அநாதிகாலமாய் விளங்கி வருகின்றது.

तत्र लीनमभूत् पूर्वं चेतनाचेतनं जगत् ।
स्वात्मलीनं जगत्कार्यं स्वप्रकाश्यं तदद्भुतम् ॥ ७॥
शिवाभिधं परंब्रह्म जगन्निर्मातुमिच्छया ।
स्वरूपमादधे किञ्चित् सुखास्फूर्तिविजृम्भितम् ॥ ८॥

உயிரற்ற பொருள்களையும், உயிர்களையும் கொண்ட இப்பிரபஞ்சமானது முன்னர் அங்கு ஒடுங்கியிருந்தது; தன்னுள் ஒடுங்கியிருந்த அந்த உலகங்களென்னும் காரியத்தைப் பிரகாசித்து வெளியில் தோற்றுவிக்கும் இச்சையினுல் சிவமென்னும் அந்த பரப்பிரம்மமானது ஆனந்தம் மிளிரும் சொரூபத்தைக் கைக்கொண்டது.

### இரேணுகர்காதை

### பிரபஞ்சோற்பத்தி

ஆதியிலநாதி கன்மத் தாருயிர்க் குலக மாகச்
சேதந மயமா யொன்றாஞ் சித்தாந்த சிவன் றனாது
பேதமில் சத்தியாலே பெற்றதோர் மூர்த்தி யெய்தி
மாதொரு பாகனாகு மகேசனாய் வயங்கா நின்றான்.

ஆதியில் உலகங்களையெல்லாம் கடந்த சிவபெருமான் தன்னை விட்டுப் பிரியாத சக்தியின் வாயிலாக அர்த்தநாரீசுவர வடிவம் தாங்கி நின்றுன்.

निरस्तदोषसम्बन्धं निरुपाधिकमव्ययम् ।
दिव्यमप्राकृतं नित्यं नीलकण्ठं त्रिलोचनम् ॥ ९॥

चन्द्रार्धशेखरं शुद्धं शुद्धस्फटिकसन्निभम् ।
शुद्धमुक्ताफलाभासमुपास्यं गुणमूर्तिभिः ॥ १०॥
विशुद्धज्ञानकरणं विषयं सर्वयोगिनाम् ।
कोटिसूर्यप्रतीकाशं चन्द्रकोटिसमप्रभम् ॥ ११॥
अप्राकृतगुणाधारमनन्तमहिमास्पदम् ।

அந்த சொரூபம் எவ்வித களங்கமுமற்றதாயும், எல்லா நிலைகளையும் கடந்ததும், அழிவற்றதும், தெய்வீகமானதும், பிரகிருதிவிகாரங்களற்றதும், என்றுமழியாததும், நீலகண்டத்தையும், முக்கண்களையும் உடையதும், பிறைச் சந்திரனைத் தலையில் சூடியதும், சுத்த ஸ்படிகம் போல் மிளிர்வதும், சுத்தமான முத்தைப் போன்ற ஒளிபொருந்தியதும், பிரம்மா, விஷ்ணு முதலிய பிரகிருதியின் குணங்களுக்கு ஆட்பட்ட மூர்த்திகளால் எப்போதும் வணங்கப்படுவதும், குற்றமற்ற உயர்ந்த ஞானத்தை வழங்குவதும், யோகிகளால் தியானிக்கப்படுவதும், கோடி சூரியன்களுக்கொப்பான ஒளிபொருந்தியதும், கோடி சந்திரர்களுக்கொப்பான குளிர்ச்சி உடையதும், பிரகிருதியின் குணங்களைக் கடந்ததும், அளவற்ற மஹிமை பொருந்தியதாயும் விளங்கியது.

तदीया परमा शक्तिः सच्चिदानन्दलक्षणा ॥ १२॥
समस्तलोकनिर्माणसमवायस्वरूपिणी ।
तदिच्छयाऽभवत् साक्षात्तत्स्वरूपानुसारिणी ॥ १३॥
जगत्सिसृक्षुः प्रथमं ब्रह्माणं सर्वदेहिनाम् ।
कर्तारं सर्वलोकानां विदधे विश्वनायकः ॥ १४॥

அதன் பரமசக்தியானது ஸச்சிதானந்த வடிவமாய் அனைத்து உலகங்களையும் சிருஷ்டி செய்யும் ஆற்றல் கொண்டதாய் அந்தப் பரப்பிரமத்தின் இச்சையால் அதைப் போன்ற சொரூபம் உடையதாய் விளங்கியது; உலகப் படைப்பில் இச்சைகொண்ட அந்த பிரம்மம் முதலில் அனைத்து உயிர்களையும் உலகங்களையும் உண்டாக்கும் திறன் கொண்டவரான பிரம்மாவைத் தோற்றுவித்தது.

சந்திர மவுலி யெம்மான் சகமெலாம் படைக்கு முன்னம்
வந்துற விறைவ னாகு மலரயன் றன்னை நல்கி
யந்தமில் விச்சை யெல்லா மருளின னருளினாலே
முந்துறு மயன் படைப்புத் தொழிலிடை முயற்சி பெற்றான்.

சந்திரனைத் தலையில் சூடிய சிவபெருமான் பிரம்மாவை முதலில் தோற்றுவித்து அவருக்கு ஞானத்தை அளித்தான்; அதனால் பிரம்மனும் படைப்புத் தொழிலில் ஈடுபட்டான்.

तस्मै प्रथमपुत्राय शङ्करः शक्तिमान् विभुः ।
सर्वज्ञः सकला विद्याः सानुग्रहमुपादिशत् ॥ १५॥

தலைமகனான அப்பிரம்மாவுக்கு சக்திகள் அனைத்தும் பொருந்தியவரும், எங்கும் வியாபித்திருப்பவரும், அனைத்தையும் அறிந்தவருமான சங்கரன் எல்லா வித்தைகளையும் உபதேசித்தார்.

समस्तलोकान्निर्मातुं समुद्यमपरोऽभवत्।
कृतोद्योगोऽपि निर्माणे जगतां शङ्कराज्ञया।
अज्ञातोपायसम्पत्तेरभवन्माययावृतः ॥ १६॥

எல்லா உலகங்களையும் படைப்பதற்கான பெருமுயற்சியை சிவபிரானின் ஆணையால் பிரம்மா மேற்கொண்டார். இருந்தும் அவருக்கு அதன் உபாயம் தெரியவில்லை.

विधातुमखिलान् लोकानुपायं प्राप्तुमिच्छया ।
पुनस्तं प्रार्थयामास देवदेवं त्रियम्बकम् ॥ १७॥

உலகங்களனைத்தையும் படைக்கும் விருப்பமுடன் பிரம்மா திரியம்பகனான சிவபிரானை மீண்டும் பிரார்த்தித்தார்.

சங்கரனாணை கொண்டு சகம்புரி தொழிலிற் புக்க
பங்கயன் மாயை மாலிற் பட்டளிக் குறுமு பாய
மங்குணர் கிலனாய் மீண்டு மரவணிப் பெருமான் பாதச்
செங்கமலங்கள் போற்றி நின்றிது செப்ப லுற்றான்.

படைப்புத் தொழிலில் ஈடுபட்ட பிரம்மா மாயையால் மயங்கி சிருஷ்டி செய்யும் உபாயத்தை அறியாதவனுய் சிவபெருமானே வணங்கி இவ்வாறு கூறினுன்.

नमस्ते देवदेवेश नमस्ते करुणाकर ।
अस्मदादिजगत्सर्वनिर्माणनविधिक्षम ॥ १८॥
उपायं वद मे शम्भो जगत्स्रष्टः! जगत्पते ।
सर्वज्ञः सर्वशक्तिस्त्वं सर्वकर्ता सनातनः ॥ १९॥

தேவதேவரும், கருணைக்கடலும், உலகங்களைப் படைப்பவரும், உலகநாயகரும், எல்லா வல்லமையும் பொருந்தியவரும், அனைத்தையும் அறிந்தவருமான சம்புவிற்கு எனது வணக்கங்கள். உலகங்களைப் படைப்பதற்கான உபாயத்தை எனக்கு அருள வேண்டுகிறேன்.

தேவர்க டலைவ முக்கட் செல்வயான் முதலா யுள்ள
யாவையு மாக்க வல்ல விறைவமுற் றுணர்ந்த மேலோ
யோவரு மயலான் மாழ்கி யுணர்ந்திலேன் றமிய னேற்கு
மூவுல கினையு மாக்கு முபாயநீ மொழிதி யென்றான்.

தேவர்கள் தலைவனே! எனக்கு சிருஷ்டி உபாயத்தை அருளிச் செய்வாயாக என வேண்டினுன்.

इति सम्प्रार्थितः शम्भुर्ब्रह्मणा विश्वनायकः ।
उपायमवदत् तस्मै लोकसृष्टिप्रवर्तनम् ॥२०॥

இவ்வாறு பிரம்மாவினுல் பிரார்த்திக்கப்பட்ட சிவபெருமான் மீண்டும் அவருக்கு உலகப் படைப்பிற்கான உபாயங்களை அருளினுர்.

उपायमीश्वरेणोक्तं लब्ध्वाऽपि चतुराननः ।
न समर्थोऽभवत् कर्तुं नानारूपमिदं जगत् ॥ २१॥
पुनस्तं प्रार्थयामास ब्रह्मा विह्वलमानसः ।

ஈசுவரன் அருளிய உபாயத்தைப் பெற்றும் நான்முகக் கடவுள் பல்வகைப்பட்ட இவ்வுலகத்தைப் படைக்க இயலாமலிருந்தார். எனவே மீண்டும் சிவபிரானை வணங்கிப் பிரார்த்தித்தார்.

நான்முகனிதனைக் கூற நனையவிழ் கொன்றைவேணிக்
கூன்முக மதியணிந்த கொழும்பவ ளக்குன் றன்னான்
றான்முக மலர்ந்து ரைத்தான் சகம்புரி வகையு ரைத்துந்
தேன்முக மலரின் மேலோன் றெரிந்திலன் றியங்கிச்
சொல்வான்.

சிவபெருமானும் அவ்வாறே பிரம்மனுக்கு சிருஷ்டியின் உபாயத்தைக் கூறினர்; இருந்தும் பிரம்மன் அதை அறியாதவனய் மீண்டும் கூறினன்:

देवदेव महादेव जगत्प्रथमकारण ॥ २२॥
नमस्ते सच्चिदानन्द स्वेच्छाविग्रहराजित।
भव शर्व महेशान सर्वकारणकारण॥ २३॥
भवदुक्तो ह्युपायो मे न किञ्चिज्ज्ञायतेऽधुना।
सृष्टिं विधेहि भगवन् प्रथमं परमेश्वर ।
ज्ञातोपायस्ततः कुर्यां जगत्सृष्टिमुमापते ॥ २४॥

தேவதேவனே! மஹாதேவனே! உலகங்களுக்கெல்லாம் முதற்காரணனே! ஸச்சிதானந்த வடிவரே! உமாபதியே! நீங்கள் உரைத்த உபாயங்கள் எதுவும் எனக்கு விளங்கவில்லை. நீங்களே முதலில் உலகசிருஷ்டியைத் தொடங்குங்கள்; அதிலிருந்து உபாயத்தைக் கற்று நான் அதைத் தொடர்வேன் என்றார்.

உலககா ரணப்ப டைப்பி னுபாயநீ யருளி னாலே
பலமுறை யுரைத்து நெஞ்சிற் பட்டதின் றமல நீமுன்
மலர்தலை யுலக மாக்கின் மற்றது கண்டு தேறி
யிலகுற வடிய னேன்பி னியற்றுவ லென்று சொன்னான்.

தேவரீர் பலமுறை கூறியும் என்னல் அறிய இயலவில்லை; தாங்களே உலகங்களைப் படைத்துக் காட்டினல் யானும் அதைக் கற்று சிருஷ்டித் தொழிலைச் செய்வேன் என்றான்.

इत्येवं प्रार्थितः शम्भुर्ब्रह्मणा विश्वयोनिना ।
ससर्जात्मसमप्रख्यान् सर्वगान् सर्वशक्तिकान् ॥ २५॥
प्रबोधपरमानन्दपरिवाहितमानसान् ।
प्रमथान् विश्वनिर्माणप्रलयापादनक्षमान् ॥ २६॥

இவ்வாறு பிரம்மனுல் பிரார்த்திக்கப்பட்ட சிவபெருமான் தன்னையொத்த ஆற்றல் கொண்டவர்களும் அனைத்து வல்லமை உடையவர்களும், எங்கும் வியாபித்திருப்பவர்களும் உயர்ந்த ஞானமும் ஆனந்தமும் உடையவர்களும் உலகங்களைப் படைத்து பின்னர் அழிக்கும் வல்லமை கொண்டவர்களுமான பூதகணங்களை முதலில் தோற்றுவித்தார்.

ஈசுவரசிருஷ்டி

விதியிது புகன்று நிற்ப மின்னவிர் சடையிற் கீற்று
மதிபுனை கடவு டன்போல் வளரொளி வடிவ ராகி
முதிரறி வுடைய ராகி முழுதையு மளித்த ழிக்கு
மதிசய நிலைய டைந்த கணங்களை யளித்தான் முன்னர்.

சிவபெருமானும், அவ்வாறே தன்னைப் போன்ற உருவமும், உலகங்களைப் படைத்து அழிக்கும் வல்லமை கொண்ட சிவகணங்களை முதலில் படைத்தார்.

तेषु प्रमथवर्गेषु सृष्टेषु परमात्मना ।
रेणुको दारुकश्चेति द्वावभूतां शिवप्रियौ ॥ २७॥
सर्वविद्याविशेषज्ञौ सर्वकार्यविचक्षणौ ।
मायामलविनिर्मुक्तौ महिमातिशयोज्वलौ ॥ २८॥

சிவபிரானுல் தோற்றுவிக்கப்பட்ட அப்பூதகணங்களுள் ரேணுகர் தாருகர் என்னும் இருவர் சிவபெருமானிடம் மிக்க அன்பு பூண்டவர்களாயும் எல்லா வித்தைகளிலும் தேர்ந்தவர்களாயும் எல்லாவற்றையும் செய்யும் ஆற்றல் உடையவர்களாயும் மாயை முதலான மலங்களற்றவர்களாயும் தங்களுடைய மஹிமையால் பிரகாசிப்பவர்களாயும்,

சாற்றுறுங் கணங்க டம்மு ளிரேணுக தாரு கப்பே
ரேற்றுள ரிருவ ரெங்க ளீசனுக் கினிய ரன்னோ
ராற்றலை யாவ ரானு மறைந்திடற் கரியர் மாயை
மாற்றிடும் வலியர் விச்சை யாவையும் வல்ல ரம்மா.

அக்கணங்களுள், இரேணுகர், தாருகர் என்னும் இருவர் சிவபெருமானிடம் மிக்க அன்பு பூண்டவர்கள்; அவர்களுடைய வலிமையை எவரும் அறிந்திலர்.

आत्मानन्दपरिस्फूर्तिरसास्वादनलम्पटौ ।
शिवतत्त्वपरिज्ञानतिरस्कृतभवामयौ ॥ २९॥
नानापथमहाशैवतन्त्रनिर्वाहतत्परौ ।
वेदान्तसारसर्वस्वविवेचनविचक्षणौ ॥ ३०॥
नित्यसिद्धौ निरातङ्कौ निरङ्कुशपराक्रमौ ।

தங்களது ஆத்மானந்தத்தையே ரஸிப்பவர்களாயும், சிவதத்துவத்தை உணர்ந்ததால் சம்சாரக் கடலில் வீழாதவர்களாயும், பல்வகைப்பட்ட சைவதந்திரங்களை அறிந்தவர்களாயும், வேதாந்தத்தின் சாரத்தை நன்கு ஆய்ந்தவர்களாயும் எல்லாவகைச் சித்திகளையும் பெற்றவர்களாயும், எதிரிகளற்ற பராக்கிரமம் வாய்ந்தவர்களாயும்

தெளிதரு முளத்தர் மாறாச் சிவாநந்த வமுத முண்டு
களிதரு நலத்தர் கல்விக் கடல்கரை கண்டோர் ஞான
வொளியினர் வேத சார முணர்ந்தவ ரகந்தை யில்லோர்
விளிவுற விடய மைந்து மெளிதென வென்ற வீரர்.

அவர்கள் தெளிந்த மனத்தையுடையவர்; சிவானந்த அமுதை எப்போதும் பருகுபவர்; கல்வியில் கரை கண்டு, வேதசாரத்தை உணர்ந்தவர். புலன்களை வென்றவர்.

तादृशौ तौ महाभागौ सम्वीक्ष्य परमेश्वरः ॥ ३१॥
समर्थौ सर्वकार्येषु विश्वासपरमाश्रितौ ।
अन्तःपुरद्वारपालौ निर्ममे नियतौ विभुः ॥ ३२॥

அனைத்தையும் ஆற்றும் திறன் கொண்டவர்களாயும் தனது நம்பிக்கைக்குப் பாத்திரர்களாயும் திகழும் அவ்விருவர்களையும் சிவபெருமான் தனது அந்தப்புரக் காவலர்களாய் நியமித்தார்.

गणेश्वरौ रेणुकदारुकावुभौ विश्वासभूतौ नवचन्द्रमौलेः ।
अन्तःपुरद्वारगतौ सदा तौ वितेनतुर्विश्वपतेस्तु सेवाम् ॥ ३३ ॥

அவ்வாறு சிவபெருமானின் அந்தப்புரக்காவலர்களாய் நியமிக்கப்பட்ட ரேணுகரும் தாருகரும் பெருமானின் நம்பிக்கைகுப் பாத்திரர்களாய் உலகநாயகனின் சேவையைச் செவ்வனே செய்து வந்தனர்.

**அனையவர் தம்மை நோக்கி யாலயத் துள்ளி லங்கும்**
**புனைமணி வாயில் காப்புப் புரிசடைக் கடவு ணல்க**
**வினிதென வவரு மேற்றவ் வேவலிற் சிறந்தோ ராகித்**
**தனிவிழி நுதலி மைக்குஞ் சங்கரன் பாலி ருந்தார்.**

சிவபெருமான் அவர்களுக்கு தனது உறைவிடத்தின் வாயிற்காப்புப் பணியை வழங்கினர்; அவர்களும் அவ்வேலையைச் செவ்வனே செய்து கொண்டு சிவபெருமான்பால் இருந்து வந்தனர்.

॥ इति श्रीसिद्धान्तशिखामणौ रेणुकदारुकावतरणं नाम
द्वितीयः परिच्छेदः ॥

॥ तृतीयः परिच्छेदः ॥

कदाचिदथ कैलासे कलधौतशिलामये ।
गन्धर्ववामनयनाक्रीडामौक्तिकदर्पणे ॥ १॥
मन्दारबकुलाशोकमाकन्दप्रायभूरुहे ।
मल्लीमरन्दनिष्यन्दपानपीनमधुव्रते ॥ २॥
कुङ्कुमस्तबकामोदकूलङ्कषहरिन्मुखे ।
कलकण्ठकुलालापकन्दलद्रागबन्धुरे ॥ ३॥
किन्नरीगीतमाधुर्यपरिवाहितगह्वरे ।
सानन्दवरयोगीन्द्रवृन्दालङ्कृतकन्दरे ॥ ४॥
हेमारविन्दकलिकासुगन्धिरसमानसे ।
शातकुम्भमयस्तम्भशतोत्तुङ्गविराजिते ॥ ५॥
माणिक्यदीपकलिकामरीचिद्योतितान्तरे ।
द्वारतोरणसंरूढशङ्खपद्मनिधिद्वये ॥ ६॥
मुक्तातारकितोदारवितानाम्बरमण्डिते ।
स्पर्शलक्षितवैडूर्यमयभित्तिपरम्परे ॥ ७॥
सञ्चरत्प्रमथश्रेणीपदवाचालनूपुरे ।
प्रवालवलभीशृङ्गशृङ्गारमणिमण्डपे ॥ ८॥
वन्दारुदेवमुकुटमन्दाररसवासितम् ।
रत्नसिंहासनं दिव्यमध्यस्तं परमेश्वरम् ॥ ९॥

ஒரு சமயம் கந்தருவ கன்னிகையரின் கேளிக்கை நிமித்தம் பற்பல முத்து மாலைகளால் அலங்கரிக்கப்பட்டதும் மந்தாரம், மகிழம், மாகந்தம், அசோகம், முதலிய மரங்களால் சூழப்பட்டதும், மல்லிகை முதலான மலர்களின் தேனை அருந்தும் வண்டுகள் நிறைந்ததும் குங்குமப்பூக் கொடிகளிலிருந்து வெளிப்படும் நறுமணம் நிறைந்ததும் கின்னர கன்னிகைகளின் இனிய கானங்களால் நிறைந்த பொந்துகளையுடையதும் ஆத்மானந்தத்தையே அனுபவிக்கும் யோகிகளால் சூழப்பட்ட சிகரங்களைக் கொண்டதும் தங்கத்தாமரைமலர்களால் அலங்கரிக்கப்பட்டதும்

பொன்னுலான நூற்றுக்கணக்கான தூண்கள் கொண்டதும் மாணிக்கதீபங்களின் ஒளியால் பிரகாசிப்பதும் சங்கநிதி பதுமநிதி எனுமிரண்டையும் நுழைவாயில் தோரணமாய்க் கொண்டதும் கணக்கற்ற முத்துவிதானங்களால் அலங்கரிக்கப்பட்டதும் வைடூரியமயமான சுவர்களைக் கொண்டதும் பூதகணங்கள் அங்குமிங்கும் செல்வதால் உண்டாகும் நூபுர ஓசையையுடையதும் பவளமயமான மண்டபங்களைக் கொண்டதுமான கைலாயமலையில் கணக்கற்ற தேவகணங்கள் தனது திருவடிகளை வணங்குவதால் அவர்களின் கிரீடமாணிக்கக் கற்களால் ஒளிவீசுவதுமான திருவடிகளையுடையவருமான பரமேசுவரன் பொன்மயமான பலகையின் மேல் இரத்தின சிம்மாசனத்தில் வீற்றிருந்தார்.

## கயிலைச் சிறப்பு

வேத னிந்திரன் செங்கண்மால் புன்புகழ் மேவி
யோதி மங்களி றுவணனா யவர்தமை யுயர்த்த
வாதி யம்பிகை நாயகன் பெரும்புக ழவனைக்
காதல் கொண்டுதாங் குற்றது போன்றது கயிலை.

கயிலையில் பிரமன், இந்திரன், திருமால் முதலான தேவர்கள் சிவபெருமானைப் போற்றி துதி பாடிக்கொண்டிருந்தனர்.

தெள்ளு சோதியங் கயிலைமால் வரையினிற் சிறிது
வெள்ளி தான் கொடு திசைமுகக் கம்மியன் விரகா
லள்ளி வானிருள் விழுங்குவா னமைத்ததொன் றன்றோ
வெள்ளு றாமதி யென்பதிவ் வுலகங்க ளெல்லாம்.

பிரமன் எனும் சிற்பி கயிலையிலிருந்து சிறிது வெள்ளியை எடுத்து உலக இருளை விழுங்குவதற்காகச் செய்யப்பட்டதோ என நினைக்கும்படி சந்திரன் விளங்குகிறது.

### சபாமண்டபச் சிறப்பு

அன்ன மாகயி லாயமோ ரருமறை யாகச்
சென்னி மாமொழி யாகுமோர் செம்பொனா லியன்ற
தன்னை நேர்மணி மண்டபத் தரியணை தன்னின்
முன்ன மோர்பக லுமையொடு முதல்வன்வீற் றிருந்தான்.

வேதமே ஓர் மலை போன்ற உருவெடுத்தது போல் தோன்றும் அக்கயிலை மலையில் அழகான மணிமண்டபத்துள் சிவபெருமான் உமையம்மையுடன் வீற்றிருந்தார்.

तमास्थानगतं देवं सर्वलोकमहेश्वरम् ।
त्रय्यन्तकमलारण्यविहारकलहंसकम् ॥ १०॥

ஆஸ்தான மண்டபத்திலே அவ்வாறு வீற்றிருப்பவரும், வேதாந்தத்தின் உட்பொருள் எனும் தாமரைக்காட்டினுள் திரியும் அன்னப்பறவையைப் போன்றவரும்,

उदारगुणमोंकारशुक्तिकापुटमौक्तिकम् ।
सर्वमङ्गलसौभाग्यसमुदायनिकेतनम् ॥ ११॥

உயர்ந்த குணங்களனைத்தும் நிறைந்தவரும் ஓங்காரமெனும் முத்துச்சிப்பியினுள் விளங்கும் முத்தைப் போன்றவரும், அனைத்து மங்கலங்களும் நிறைந்தவரும்,

संसारविषमूर्च्छालुजीवसञ्जीवनौषधम् ।
नित्यप्रकाशनैर्मल्यकैवल्यसुरपादपम् ॥ १२॥

சம்சாரமென்னும் கொடிய விஷத்தால் மூர்ச்சையான ஜீவன்களுக்கு சஞ்ஜீவனி எனும் அமுதம் போன்றவரும், நித்தியப்பிரகாசமான ஒளியினுல் விளங்கும் முக்தியெனும் கற்பகமரம் போல்வரும்,

अनन्तपरमानन्दमकरन्दमधुव्रतम् ।
आत्मशक्तिलतापुष्यत्त्रिलोकीपुष्पकोरकम् ॥ १३॥

எல்லையற்ற பரமானந்தமெனும் தேனைப் பருகும் வண்டு போன்றவரும், தனது சக்தியெனும் கொடியில் தோன்றிய மூவுலகெனும் பூக்களைக் கொண்டவரும்,

ब्रह्माण्डकुण्डिकाषण्डपिण्डीकरणपण्डितम् ।
समस्तदेवताचक्रचक्रवर्तिपदे स्थितम् ॥ १४॥

இப்பிரம்மாண்டமெனும் கலயத்தில் அனைத்தையும் அடக்கும் வல்லமையுடையவரும், எல்லா தேவர்களுக்கும் மேலான உயர்ந்த நிலையிலிருப்பவரும்,

चन्द्रबिम्बायुतच्छायादायादद्युतिविग्रहम् ।
माणिक्यमुकुटज्योतिर्मञ्जरीपिञ्जराम्बरम् ॥ १५॥

எண்ணற்ற சந்திரர்களின் ஒளியையொத்த திருமேனி கொண்டவரும், தனது மாணிக்கமகுடத்தின் ஒளியால் நிறைந்த அனைத்து திக்குகளையுடையவரும்

चूडालं सोमकलया सुकुमारबिसाभया ।
कल्याणपुष्पकलिकाकर्णपूरमनोहरम् ॥ १६॥

மிருதுவான நூல்போன்ற சந்திரகலையைத் தலையில் தரித்தவரும், கல்யாணபுஷ்பத்தைத் தன் காதில் ஆபரணமாகச் சூடியவரும்

मुक्तावलयसम्बद्धमुण्डमालाविरजितम् ।
पर्याप्तचन्द्रसौन्दर्यपरिपन्थिमुखश्रियम् ॥ १७॥

முத்துமாலையையும் முண்டமாலையையும் அணிந்தவரும் சந்திரனைப் பழிக்கும் அழகான முகம் கொண்டவரும்

प्रातः संफुल्लकमलपरियायत्रिलोचनम् ।
मन्दस्मितमितालापमधुराधरपल्लवम् ॥ १८॥

காலையில் அலர்ந்த தாமரையையொத்த முக்கண்களையுடையவரும் புன்சிரிப்புடன் கூடிய அளவான பேச்சைக் கொண்டவரும்,

गण्डमण्डलपर्यन्तक्रीडन्मकरकुण्डलम् ।
कालिम्ना कालकूटस्य कण्ठनाले कलङ्कितम् ॥ १९॥

கன்னம் வரையில் நீண்டு ஒளிவீசும் மகரகுண்டலங்களை அணிந்தவரும் கழுத்தில் காலகூடமெனும் கொடிய விஷத்தால் கருமை நிறமுடையவரும்,

मणिकङ्कणकेयूरमरीचिकरपल्लवैः ।
चतुर्भिः संविराजन्तं बाहुमन्दारशाखिभिः ॥ २०॥

கங்கணம், கேயூரம் முதலான அணிகள் பூண்ட தனது நான்கு புஜங்களெனும் மந்தாரமரத்தின் தளிர் போன்றிலங்கும் விரல்களையுடையவரும்,

गौरीपयोधराश्लेषकृतार्थभुजमध्यमम् ।
सुवर्णब्रह्मसूत्राङ्कं सूक्ष्मकौशेयवाससम् ॥ २१॥

கௌரியின் திருமுலைகளைத் தழுவி ஆனந்தமடையும் புஜங்களைக் கொண்டவரும் தங்கமுப்புரிநூல் அணிந்தவரும், மெல்லிய பட்டாடை அணிந்தவரும்,

नाभिस्थानावलम्बिन्या नवमौक्तिकमालया ।
गङ्गयेव कृताश्लेषं मौलिभागावतीर्णया ॥ २२ ॥

தனது தலையில் வந்திறங்கியவளும் நாபிஸ்தானம் வரையில் திகழும் வெண்முத்துமாலை போன்று விளங்குபவளுமான கங்கையைத் தழுவியவரும்,

पदेन मणिमञ्जीरप्रभापल्लवितश्रिया ।
चन्द्रवत्स्फाटिकं पीठं समावृत्य स्थितं पुरः ॥ २३॥

ஸ்படிகமயமான பீடத்தின் மேல் மணிநூபுரங்களின் ஒளியால் மிளிரும் அழகிய திருவடித்தாமரைகளை வைத்தவரும்

वामपार्श्वनिवासिन्या मङ्गलप्रियवेषया ।
समस्तलोकनिर्माणसमवायस्वरूपया ॥ २४॥

தனது திருமேனியினிடப்பாகத்தில் விளங்குபவளும் மங்கலமே வடிவானவளும், அனைத்துலகங்களையும் சிருஷ்டிக்கும் சக்தியோடு கூடியவளும்,

इच्छाज्ञानक्रियारूपबहुशक्तिविलासया ।
विद्यातत्त्वप्रकाशिन्या विनाभावविहीनया ॥ २५॥

இச்சை, ஞானம், கிரியை முதலான கணக்கற்ற சக்திகளை உடையவளும் வித்தியாதத்துவத்தில் பிரகாசிப்பவளும் எப்போதும் சிவபிரானை விட்டு அகலாதவளும்,

संसारविषकान्तारदाहदावाग्निलेखया ।
धम्मिल्लमल्लिकामोदझङ्कुर्वद्भृङ्गमालया ॥ २६॥

சம்சாரமெனும் கொடிய விஷமரக் காட்டை அழிக்கும் பெருந்தீ போல் விளங்குவதும் [தான் சூடியிருக்கும்] மல்லிகை முதலான மலர்மாலைகளின் தேனைப் பருகும் வண்டுக் கூட்டங்களையே மாலைபோல் அணிந்திருப்பவளும்

सम्पूर्णचन्द्रसौभाग्यसंवादिमुखपद्मया ।
नासामौक्तिकलावण्यनाशीरस्मितशोभया ॥ २७॥

முழுநிலவின் அழகையொத்த திருமுகத்தையும், மூக்கில் அணிந்திருக்கும் முத்தினால் மேலும் அழகான மூக்கினையும் உடையவளும்

मणिताटङ्करङ्गान्तर्वलितापाङ्गलीलया ।
नेत्रद्वितयसौन्दर्यनिन्दितेन्दीवरत्विषा ॥ २८॥

மணிகள் நிறைந்த காதணிகளின் ஒளியினூடே மிளிரும் திருக்கண்ணோக்கையுடையவளும் தாமரையின் அழகைப் பழிக்கும் இருகண்களைக் கொண்டவளும்,

कुसुमायुधकोदण्डकुटिलभ्रूविलासया ।
बन्धूककुसुमच्छायाबन्धुभूताऽधरश्रिया ॥ २९॥

மன்மதனின் கரும்புவில்லைப் போன்ற புருவங்களையும், செம்பருத்திப் பூவையொத்த சிவந்த உதடுகளையும் உடையவளும்

कण्ठनालजितानङ्गकम्बुबिब्बोकसम्पदा ।
बाहुद्वितयसौभाग्यवञ्चितोत्पलमालया ॥ ३०॥

வெண்சங்கின் அழகைப் பழிக்கும் கழுத்தினையும் நீலோத்பலமலர்மாலையின் அழகைப் பழிக்கும் மெல்லிய அழகிய புஜங்களையும் கொண்டவளும்

स्थिरयौवनलावण्यशृङ्गारितशरीरया ।
अत्यन्तकठिनोत्तुङ्गपीवरस्तनभारया ॥ ३१॥

யௌவனத்தின் முழுஅழகையும் பிரதிபலிக்கும் திருமேனியும் உருண்டு திரண்ட கடினமான திருமுலைகளையும் கொண்டவளும்

मृणालवल्लरीतन्तुबन्धुभूतावलग्नया ।
शृङ्गारतटिनीतुङ्गपुलिनश्रोणिभारया ॥ ३२॥

தாமரைத் தண்டினுள் இருக்கும் மிக மெல்லிய இழைகளையொத்த கேசங்களையும் சிருங்காரரசத்தை அதிகரிக்கும் அழகிய இடுப்பையும் கொண்டவளும்

कुसुम्भकुसुमच्छायाकोमलाम्बरशोभया ।
शृङ्गारोद्यानसंरम्भरम्भास्तम्भोरुकाण्डया ॥ ३३॥

செம்பருத்தியின் நிறத்தையொத்த சிவந்த மெல்லிய ஆடையை அணிந்தவளும் சிருங்காரரசம் மிளிரும் அழகான வாழைத்தண்டையொத்த தொடைகளைக் கொண்டவளும்

चूतप्रवालसुषमासुकुमारपदाब्जया ।
स्थिरमङ्गलशृङ्गारभूषणालङ्कृताङ्गया ॥ ३४॥

மாந்தளிர் பவழம் முதலானவை போன்ற மிக மிருதுவான திருப்பாதங்களையுடையவளும் அழகை அதிகரிக்கும் பற்பல அணிகலன்களை அணிந்தவளும்

हारनूपुरकेयूरचमत्कृतशरीरया ।
चक्षुरानन्दलतया सौभाग्यकुलविद्यया ॥ ३५॥
उमया सममासीनं लोकजालकुटुम्बया ।

மணிமாலைகள் முதலான ஆபரணங்கங்களை அணிந்தவளும் காண்பதற்கு அழகான தோற்றம் கொண்டவளும் மங்களகரமான அனைத்து வித்தைகளையும் கொண்டவளும் உலகத்தையே தனது குடும்பமாகக் கருதுபவளுமான உமையம்மையுடன் வீற்றிருந்தார்.

अपूर्वरूपमभजन् परिवाराः समन्ततः ॥ ३६॥

அங்கிருந்த பரிவாரங்கள் புதுவிதமான தோற்றங்களைக் கொண்டிருந்தனர்.

पुण्डरीकाकृतिं स्वच्छं पूर्णचन्द्रसहोदरम् ।
दधौ तस्य महालक्ष्मीः सितमातपवारणम् ॥ ३७॥

முழுநிலவையொத்ததும் தாமரைமலர் போன்ற அமைப்புடையதும் ஒளிபொருந்தியதுமான வெண்கொற்றக் குடையை சிவபிரானுக்கு மஹாலக்ஷ்மி தாங்கினாள்.

तन्त्रीझङ्कारशालिन्या सङ्गीतामृतविद्यया ।
उपतस्थे महादेवमुपान्ते च सरस्वती ॥ ३८॥

சங்கீத அமுதைப் பொழியும் இனிமையான வீணையுடன் ஸரஸ்வதியானவள் மஹாதேவரருகில் இசைத்துக் கொண்டிருந்தாள்.

झणत्कङ्कणजातेन हस्तेनोपनिषद्वधूः ।
ओंकारतालवृन्तेन वीजयामास शङ्करम् ॥ ३९॥

உபநிஷத் எனும் அழகிய மங்கை கைத்தாளம் கொண்டு ஓங்காரநாதம் எழுப்பிக்கொண்டிருந்தாள்.

चलच्चामरिकाहस्ता झङ्कुर्वन्मणिकङ्कणाः ।
आसेवन्त तमीशानमभितो दिव्यकन्यकाः ॥ ४०॥

பற்பல தேவநங்கையர்கள் தங்களது மணிகங்கணங்கள் அணிந்த கைகளால் சாமரம் வீசிக்கொண்டிருந்தனர்.

चामराणां विलोलानां मध्ये तन्मुखमण्डलम् ।
रराज राजहंसानां भ्रमतामिव पङ्कजम् ॥ ४१॥

அங்கு வீசும் சாமரங்களுக்கிடையில் சிவபெருமானுடைய திருமுகம் ராஜஹம்ஸம் எனும் அன்னப்பறவைகள் மத்தியில் ஒளிவீசித் திகழும் தாமரை போல் பிரகாசித்தது.

मन्त्रेण तमसेवन्त वेदाः साङ्गविभूतयः ।
भक्त्या चूडामणिं कान्तं वहन्त इव मौलिभिः ॥ ४२॥

வேதங்கள் தங்களது ஆறு அங்கங்களுடன் திருமுடிகளில் சூடாமணியைத் தரித்தது போல் அங்கு சேவை செய்தன.

तदीयायुधधारिण्यस्तत्समानविभूषणाः ।
अङ्गभूताः स्त्रियः काश्चिदासेवन्त तमीश्वरम् ॥ ४३॥

சிவபெருமானது ஆயுதங்கள் அவ்வவ்வாயுதங்களையொத்த திருமேனிகளுடன் பெருமானை சேவித்துக் கொண்டிருந்தனர்.

आप्ताधिकारिणः केचिदनन्तप्रमुखा अपि ।
अष्टौ विद्येश्वरा देवमभजन्त समन्ततः ॥४४॥

அனந்தன் முதலான வித்தியேசுவரர்கள் தங்களது அதிகாரங்களைப் பெற்று சேவித்து வந்தனர்.

ततो नन्दी महाकालश्चण्डो भृङ्गिरिटिस्ततः ।
घण्टाकर्णः पुष्पदन्तः कपाली वीरभद्रकः ॥ ४५॥

एवमाद्या महाभागा महाबलपराक्रमाः ।
निरङ्कुशमहासत्त्वा भेजिरे तं महेश्वरम् ॥ ४६॥

நந்தி, மஹாகாலர், சண்டர், பிருங்கிரிடி, கண்டாகர்ணர், புஷ்பதந்தர், கபாலி, வீரபத்திரர் போன்ற சக்திவாய்ந்தவர்களும் மிக உயர்ந்தவர்களும் தடையற்ற ஆற்றல் கொண்டவர்களும் மஹேசுவரனை வணங்கி நின்றனர்.

अणिमादिकमैश्वर्यं येषां सिद्धेरपोहनम् ।
ब्रह्मादयः सुरा येषामाज्ञालङ्घनभीरवः ॥ ४७॥
मोक्षलक्ष्मीपरिष्वङ्गमुदिता येऽन्तरात्मना ।
येषामीषत्करं विश्वसर्गसंहारकल्पनम् ॥ ४८॥
ज्ञानशक्तिः परा येषां सर्ववस्तुप्रकाशिनी ।
आनन्दकणिका येषां हरिब्रह्मादिसम्पदः ॥ ४९॥
आकाङ्क्षन्ते पदं येषां योगिनो योगतत्पराः ।
काङ्क्षणीयफलो येषां सङ्कल्पः कल्पपादपः ॥ ५०॥
कर्मकालादिकार्पण्यचिन्ता येषां न विद्यते ।
येषां विक्रमसन्नाहा मृत्योरपि च मृत्यवः ॥ ५१॥
ते सारूप्यपदं प्राप्ताः प्रमथा भेजिरे शिवम् ॥

அணிமா முதலான சித்திகள் எவர்களுடைய சித்திகளுக்கு முன் நிலையற்றவையோ, பிரம்மா முதலான தேவர்கள் எவர்களுடைய ஆணையை மீற அஞ்சுகின்றனரோ, எவர்களுடைய ஆன்மாக்கள் மோக்ஷமெனும் எல்லையற்ற செல்வத்தால் தழுவப்பட்டுள்ளனவோ, எவர்களுக்கு உலகங்களைப் படைத்தல் போன்ற செயல்கள் ஒரு மிகச் சிறிய செயலோ, அனைத்தையும் பிரகாசிக்கும் ஞானசக்தியானது எவர்களுக்கு வாய்க்கப்பட்டதோ, ஹரி, பிரம்மா போன்ற பெருந் தேவர்களின் செல்வங்கள் கூட எவர்களுக்கு மிகச் சிறிய ஆனந்தமோ, எவர்களுடைய நிலையை யோகிகள் அடைவதற்குத் தவம் புரிகின்றனரோ, எவர்களுடைய மனதில் தோன்றும் மிகச் சிறிய இச்சைகளையும் கற்பகமரம் பூர்த்திசெய்கின்றதோ, காலம், கருமம் போன்ற சம்சாரமலங்கள்

எவர்களுக்கு இல்லையோ, எவர்களுடைய பராக்கிரமம் காலனாகிய யமனுக்கே யமனாக விளங்குகிறதோ அத்தகைய சிவபூதகணங்கள் சிவபெருமானை ஒத்த உருவங்களை அடைந்து சாரூப்பியமெனும் முத்தி நிலையை அடைந்து அங்கு விளங்குகின்றனர்.

ब्रह्मोपेन्द्रमहेन्द्राद्या विश्वतन्त्राधिकारिणम् ।
आयुधालङ्कृतप्रान्ताः परितस्तं सिषेविरे ॥ ५२॥

பிரம்மா, உபேந்திரன், மஹேந்திரன் போன்ற தேவர் தலைவர்கள் அங்கு ஆயுதங்களை ஏந்தி உலகங்களை இயக்கும் சர்வ வல்லமை கொண்ட சிவபெருமானைச் சுற்றிலும் காவல் பூண்டு ஒழுகி நின்றனர்.

आदित्या वसवो रुद्रा यक्षगन्धर्वकिन्नराः ।
दानवा राक्षसा दैत्याःसिद्धा विद्याधरोरगाः ।
अभजन्त महादेवमपरिच्छिन्नसैनिकाः ॥५३॥

ஆதித்தியர்கள், வசுக்கள், யக்ஷர்கள் போன்றோர்களும் தங்களது கணக்கற்ற சைனியங்களுடன் அங்கு சேவை புரிந்து வந்தனர்.

மகாசபை கூடுதல்

இந்தி ரன்சுர ரரியய னியக்கர்கந் தருவர்
சந்தி ரன்கதி ருரகர்சித் தர்கள்விறற் றகுவர்
முந்து றுங்கண நாயகர் முனிவரர் வசுக்கள்
வந்து கண்டன ருமையொடு பரமனை மகிழ்ந்து.

இந்திரன், கந்தருவர், சந்திரன், மற்றும் சிவகணத்தலைவர்கள், முனிவர்கள் முதலியோர் பரமேசுவரனைக் கண்டு வணங்கினர்.

वसिष्ठो वामदेवश्च पुलस्त्यागस्त्यशौनकाः ।
दधीचिर्गौतमश्चैव सानन्दशुकनारदाः ॥ ५४॥
उपमन्युभृगुव्यासपाराशरमरीचयः ।
इत्याद्या मुनयः सर्वे नीलकण्ठं सिषेविरे ॥ ५५॥

வஸிஷ்டர், வாமதேவர், புலஸ்தியர், அகஸ்தியர், சௌனகர், ததீசி, கௌதமர், ஸானந்தர், சுகர், நாரதர், உபமன்யு, பிருகு, வியாஸர், பராசரர், மரீசி முதலான முனிவர்கள் நீலகண்டரான சிவபெருமானை வணங்கி நின்றனர்.

पार्श्वस्थपरिवाराणां विमलाङ्गेषु बिम्बितः ।
सर्वान्तर्गतमात्मानं स रेजे दर्शयन्निव ॥ ५६॥

தன்னைச் சூழ்ந்துள்ள பரிவாரங்களின் எவ்வித மலமுமற்ற பரிசுத்தமான தேஹங்களில் சிவபெருமான் தனது திருமேனி பிரதிபலிப்பதால் அனைவரின் அந்தராத்மாவாகத் தான் திகழ்வதைக் கண்டு ரசித்து மேலும் பிரகாசித்தார்.

क्षणं स शम्भुर्देवानां कार्यभागं निरूपयन् ।
क्षणं गन्धर्वराजानां गानविद्यां विभावयन् ॥ ५७॥

சிவபெருமான் க்ஷணநேரம் தேவர்கள் செய்யவேண்டிய செயல்களைக் கண்காணித்தார்; க்ஷணநேரம் கந்தர்வராஜனுடைய கானத்தைக் கேட்டு மகிழ்ந்தார்.

ब्रह्मविष्ण्वादिभिर्देवैः क्षणमालापमाचरन् ।
क्षणं देवमृगाक्षीणां लालयन्नृत्यविभ्रमम् ॥ ५८॥

பிரம்மா, விஷ்ணு முதலிய தேவர்களுடன் க்ஷணநேரம் உரையாடினர்; தேவகன்னிகைகளின் நடனத்தைக் க்ஷணநேரம் ரசித்தார்.

व्यासादीनां क्षणं कुर्वन् वेदोच्चारेषु गौरवम् ।
विदधानः क्षणं देव्या मुखे बिम्बाधरे दृशः ॥ ५९॥

வியாஸர் போன்ற முனிவர்களின் வேதோச்சாரத்தைக் க்ஷணநேரம் கேட்டார்; தேவியின் திருமுகத்தில் விளங்கும் செவ்விய உதடுகளைக் க்ஷணநேரம் நோக்கினர்.

हास्यनृत्यं क्षणं पश्यन् भृङ्गिणा परिकल्पितम् ।

பிருங்கி போன்றோர் நிகழ்த்தும் ஹாஸ்ய நடனத்தைக் க்ஷணநேரம் கண்டு மகிழ்ந்தார்.

नन्दिना वेत्रहस्तेन सर्वतन्त्राधिकारिणा ॥ ६०॥
अमुञ्चता सदा पार्श्वमात्माभिप्रायवेदिना ।
चोदितान् वासयन् कांश्चिद्विसृजन् भ्रूविलासतः ।
सम्भावयंस्तथा चान्यानन्यानपि नियामयन् ॥ ६१॥

அனைத்துக் கண்காணிப்பிலும் தலைசிறந்தவரும் சிவபெருமானின் பக்கலில் எப்போதும் இருப்பவரும் சிவபெருமானது எண்ணத்தை நன்கு அறிந்தவருமாகிய நந்தியெம்பெருமான் பிரம்புத்தடியைக் கையில் கொண்டு உள்ளே செல்ல அனுமதிப்போரை அருகில் இருத்தியும் சிலரைத் தன் புருவநெரிப்பால் வெளியேற்றியும் மற்றும் சிலரைக் கௌரவித்தும் மற்றோரை அடக்கியும் பணி செய்து கொண்டிருந்தார்.

समस्तभुवनाधीशमौलिलालितशासनः ।
अकुण्ठशक्तिरव्याजलावण्यललिताकृतिः ॥ ६२॥
स्थिरयौवनसौरभ्यशृङ्गारितकलेवरः ।
आत्मशक्त्यमृतास्वादरसोल्लासितमानसः ॥ ६३॥
स्वाभाविकमहैश्वर्यविश्रामपरमावधिः ।
निष्कलङ्कमहासत्त्वनिर्मितानेकविग्रहः ॥ ६४॥
अखण्डारातिदोर्दण्डकण्डूखण्डनपण्डितः ।
चिन्तामणिः प्रपन्नानां श्रीकण्ठःपरमेश्वरः ॥ ६५॥

தனது ஆணையை நிறைவேற்றக் காத்து நிற்கும் எல்லா லோகபாலர்களாலும் வணங்கப்படுபவரும், தடையற்ற சக்தி படைத்தவரும் தெய்வீக அழகு மிளிர்பவரும் என்றும் அகலாத இளமையுடன் விளங்குபவரும் தனது எல்லையற்ற சக்தியின் அமிர்தரசத்தை எப்போதும் பருகுபவரும் தனக்கே உரிய அளவற்ற சக்தியிலேயே எப்போதும் திளைப்பவரும் களங்கமற்ற தன் சக்தியினால் தானே ஏற்றுக் கொண்ட பற்பல உருவத்தைக் கொண்டவரும் அனைத்து எதிரிகளையும் போரில் வெல்லும் எல்லையற்ற திறமை உடையவரும் தன்னைச் சரண் அடைந்தோர்க்கு வேண்டிய வரத்தை வாரி வழங்குபவருமாகச் சிவபெருமான் விளங்கினார்.

பாடுவர் சிலர்சிலர் பணிவர் முன்னர்நின்
றாடுவர் சிலர்சில ரார்ப்பர் மென்மலர்
சூடுவர் சிலர்சிலர் துதிப்பரன் பினால்
வாடுவர் சிலர்சிலர் மகிழ்ந்து வாழ்த்துவார்.

சிலர் அங்கு பாடினர், ஆடினர், துதித்துப் போற்றினர், மலர்கள் சூடி வாழ்த்தினர்.

இன்னண மிவர்பல வியற்றல் கண்டுமை
தன்னொடு மரியணை தன்னின் மேவிய
மின்னவிர் சடையினன் விளங்கு பேரவை
முன்னுற நிகழ்ந்ததோர் முறைமை கூறுவாம்.

இவ்வாறு விளங்கும் சிவபெருமானின் சபையில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தைக் கூறுவோம்.

सभान्तरगतं तत्र रेणुकं गणनायकम् ।
प्रसादं सुलभं दातुं ताम्बूलं स तमाह्वयत् ॥ ६६॥

அங்கு சபையில் நுழைந்தோர்க்குத் தாம்பூலப் பிரசாதம் அளிப்பதற்காகப் கணநாயகரான ரேணுகரைப் பெருமான் அழைத்தார்.

அண்டர்க டமெக்கெலா மரிய தன்கவுட்
கொண்டருண் மெல்லிலை கொடுப்ப நூற்கடல்
கண்டிடு மிரேணுக கணேச னென்பவற்
பண்டுறு முவகையாற் பரன ழைத்தனன்.

தேவர்களுக்கே அரிதானதும் தான் சூடியதுமான மெல்லிய இலையைக் கொடுப்பதற்காக அறிவிற் சிறந்த இரேணுகனெனும் சிவகணத்தலைவனைப் பெருமான் உவகையுடன் அழைத்தார்.

शम्भोराह्वानसन्तोषसम्भ्रमेणैव दारुकम् ।
उल्लङ्घ्य पार्श्वमगमल्लोकनाथस्य रेणुकः ॥ ६७॥

சிவபெருமான் தன்னை அழைத்ததால் மிகக் களிப்படைந்த ரேணுகர் தமதருகில் வீற்றிருந்த தாருகரைச் சட்டை செய்யாமல் சென்றார்.

तमालोक्य विभुस्तत्र समुल्लङ्घितदारुकम् ।
माहात्म्यं निजभक्तानां द्योतयन्निदमब्रवीत् ॥ ६८॥

தாருகரைச் சட்டை செய்யாது சென்ற ரேணுகரைக் கண்ட சிவபெருமான் தனது பக்தர்களின் பெருமையை அவருக்கு உணர்த்த நினைத்து இவ்வாறு கூறினர்.

அழைத்தரு ளுவகையா லவ்வி ரேணுகன்
றழைத்துயர் கல்வியந் தாரு கன்றனைப்
பிழைத்தனன் கடந்துநம் வினைபி ழைப்பவே
மழைத்திரு மிடற்றினோன் மருங்கு வந்தனன்.

இரேணுகனும் மன மகிழ்ச்சியுடன் அங்கிருந்த தாருகன் எனும் கல்வியில் சிறந்த சிவபக்தனை மதியாமல் கடந்து வந்தான்.

மிடைந்திடு தனதுபே ரவையின் மெய்யுணர்
வடைந்திடு தாருக நாமத் தன்பனைக்
கடந்துறு மிரேணுக கணேசற் பார்த்திது
மடங்கலந் தவிசுறை வள்ளல் கூறுவான்.

அவ்வாறு வந்த இரேணுகனைப் பார்த்து சிவபெருமான் கூறினன்:

रे रे रेणुक दुर्बुद्धे कथमेष त्वयाऽधुना ।
उल्लङ्घितः सभामध्ये मम भक्तो हि दारुकः ॥ ६९॥

ஓ ரேணுகனே! துர்மதிகொண்டவனே! இச்சபையில் எனது பக்தனுன தாருகன் உன்னல் அவமதிக்காப்பட்டான்.

மதியுறு மிரேணுக மன்னு பேரவை
யிதிலெம தடிமையா யிலங்கு தாருகற்
கதிதரு காலினாற் கடக்கப் பட்டதென்
விதிதவ றினையெனா விளம்பன் மேயினான்.

இரேணுகனே! எமது சபையில் எமது அடிமையான தாருகனை மதியாமல் நீ கடந்து வந்ததன் காரணம் என்ன என வினவினர்.

लङ्घनं मम भक्तानां परमानर्थकारणम् ।
आयुः श्रियं कुलं कीर्त्तिं निहन्ति हि शरीरिणाम् ॥ ७०॥

எனது பக்தர்களை இகழ்வதும் அவமதிப்பதும் எல்லாக் கேடுகளுக்கும் காரணம்; ஆயுள், செல்வம், நற்பிறப்பு, பெருமை முதலியவற்றை அது அழித்துவிடும்.

### சிவபக்தர்கள் மஹிமை

கருதுநம் பத்தரைக் கடத்தல் கேட்டினுக்
கொருதனி மூலமா யுடம்பி னாயுளு
மரிதுறு செல்வமுங் குலமு மன்று தாம்
பெரிதுறு கீர்த்தியும் பெயர்த்த ழிக்குமால்.

எனது பக்தரை மதியாது கடந்து வருதல் ஆயுள், செல்வம் முதலியவற்றை அழித்துவிடும்.

मम भक्तमवज्ञाय मार्कण्डेयं पुरा यमः ।
मत्पादताडनादासीत् स्मरणीयकलेवरः ॥ ७१॥

எனது பக்தனை மார்க்கண்டேயனை முன்னொருகால் யமன் அவமதித்ததால் என் பாதங்களால் அடியுண்டு தனது உடலை இழந்தான்.

கழிந்துள மயலின்மார்க் கண்ட னாகுமென்
றொழும்புடை யவனைமுன் றொடர்ந்தி கழ்ந்தென
தெழுங்கழ லுதையினா லின்று முள்ளுறு
தழும்புறு முடலினன் றண்ட னாயினான்.

இயமன் எனது பக்தனை மார்க்கண்டனைத் துன்புறுத்தியதால் எனது காலால் உதைபட்டான்.

भृगोश्च शङ्कुकर्णस्य मम भक्तिमतोस्तयोः ।
कृत्वानिष्टमभूद्द विष्णुर्विकेशा दशयोनिभाक् ॥ ७२॥

எமது இருபக்தர்களான பிருகுவிற்கும் சங்குகர்ணனுக்கும் தீங்கிழைத்த விஷ்ணு தனது கேசங்களை இழந்து பத்துமுறை பிறவியெடுத்தார்.

தறிபவ மரமுடைச் சங்கு கண்ணனு
மறிவுணர் பிருகுவு மாமென் றொண்டராற்
பறிபடு தலையனாய்ப் பவங்கள் பத்தினு
மறிபடு மாலென மதித்தி டாய்கொலோ.

மேலும் சங்குகர்ணன், பிருகு முதலான எனது பக்தர்களை அவமதித்ததால் திருமால் பத்து முறை இவ்வுலகில் பிறவி எடுத்தார்.

मद्भक्तेन दधीचेन कृत्वा युद्धं जनार्दनः ।
भग्नचक्रायुधः पूर्वं पराभवमुपागमत् ॥ ७३॥

எம் பக்தனுன ததீசியுடன் போரிட்டதில் தன் சக்கராயுதம் துண்டிக்கப்பட்டு விஷ்ணு மிகவும் இகழ்ச்சியடைந்தார்.

कृताश्वमेधो दक्षोऽपि मद्भक्तांश्च गणेश्वरान् ।
अवमत्य सभामध्ये मेषवक्त्रोऽभवत् पुरा ॥ ७४॥

அசுவமேதம் போன்ற பெரிய யாகங்களைச் செய்த தக்ஷன் கணேசுவரர்களாகிய எமது பக்தர்களைச் சபையில் அவமதித்ததால் ஆட்டின் முகத்தைப் பெற்றுன்.

திருமறு மார்பன்முன் செய்ய வென்றொழும்
புரமுறு ததீசியா லொடிந்த நேமியான்
பொருமற மிழந்தனன் புகழ்க்க ணேசரால்
வருமறி முகமொடு தக்கன் மாழ்கினான்.

ததீசி என்னும் எனது பக்தனுகிய முனிவரால் திருமால் தனது சக்கராயுதம் உடைந்தவனுய்ப் போரில் வலிமை இழந்தான்; எனது கணேசனுல் தக்கனுக்கு ஆட்டுத் தலை பொருத்தப்பட்டது.

श्वेतस्य मम भक्तस्य दुरतिक्रमतेजसः ।
औदासीन्येन कालोऽपि मया दग्धः पुराऽभवत् ॥ ७५॥

எவராலும் வெல்லமுடியாத திறமை கொண்ட சுவேதன் எனும் எம் பக்தனை உதாசீனப்படுத்தியதால் காலனுகிய யமன் என்னுல் எரிக்கப்பட்டான்.

एवमन्येऽपि बहवो मद्भक्तानामतिक्रमात् ।
परिभूता हताश्वासन् भक्ता मे दुरतिक्रमाः ॥ ७६॥

இவ்வாறு எம் பக்தர்களை அவமதித்ததால் திறமை மிக்க பலர் என்னுல் அவமதிக்கப்பட்டும் தண்டிக்கப்பட்டும் உள்ளனர்.

தகுஞ்செய லுடையநஞ் சுவேதன் றன்னைமுன்
னிகழ்ந்தனன் மறலியெம் மாலெ ரிந்தனன்
புகன்றிடி னின்னுநம் பொருவி றொண்டரா
லுகுந்திற லுடையவ ருளர நேகரே.

என் பக்தர்களுள் சிறந்த சுவேதன் என்பானை இயமன் இகழ்ந்ததால் அவன் எம்மால் எரிக்கப்பட்டான். இவ்வாறு இன்னும் பல பக்தர்கள் பலர் உளர்.

अविचारेण मद्भक्तो लङ्घितो दारुकस्त्वया ।
एष त्वं रेणुकानेन जन्मवान् भव भूतले ॥ ७७॥

ரேணுகனே! சிறிதும் யோசிக்காமல் எமது பக்தனை தாருகன் உன்னுல் அவமதிக்கப்பட்டதால் நீ பூவுலகில் பிறவி எடுக்கக்கடவாயாக.

### இரேணுகர் அவதரிக்கும் காரணம்

சாதமி றாருகன் றனைக்க டந்தனை
யாதலி னிரேணுக வரவு தாங்குறு
மேதினி தனிலொரு பிறப்பு மேவென
வோதின னடியவர்க் குதவி செய்பவன்.

எனது பக்தனுன தாருகனே நீ கடந்ததால் பூவுலகில் நீ ஒரு பிறவி எடுக்கக் கடவாய் என சிவபெருமான் திருவாய் மலர்ந்தார்.

इत्युक्तः परमेशेन भक्तमाहात्म्यशंसिना ।
प्रार्थयामास देवेशं प्रणिपत्य स रेणुकः ॥ ७८॥

பக்தர்களின் பெருமையை எடுத்துரைக்கும் பரமேசுவரனுல் இவ்விதம் சபிக்கப்பட்ட ரேணுகன் தேவேசுவரரை வணங்கி பிரார்த்தனே செய்தார்.

मानुषीं योनिमासाद्य महादुःखविवर्धिनीम् ।
जात्यायुर्भोगवैषम्यहेतुकर्मोपपादिनीम् ॥ ७९॥
समस्तदेवकैंकर्यकार्पण्यप्रसवस्थलीम् ।
महातापत्रयोपेतां वर्णाश्रमनियन्त्रिताम् ॥
विहाय त्वत्पदाम्भोजसेवां किं वा वसाम्यहम् ॥ ८०॥
यथा मे मानुषो भावो न भवेत् क्षितिमण्डले ।
तथा प्रसादं देवेश विधेहि करुणानिधे ॥ ८१॥

கருணேக்கடலே! பெரும் துயரத்தை விளேவிப்பதும், ஜாதி, ஆயுள், சுகதுக்கம் ஆகியவற்றுக்குக் காரணமான கருமவினேயைத் தோற்றுவிப்பதும், தேவர்களுக்கெல்லாம் பணிசெய்யும் வாய்ப்பினே அழிப்பதும், மூவிதத் துன்பங்களுக்கும் பிறப்பிடமானதும், வருணுசிரமம் போன்ற கட்டுப்பாடுகள் நிறைந்ததுமான மனிதப்பிறவியை அடைந்து, தங்களது திருவடிக்கு திருப்பணி புரியும் வாய்ப்பையும் இழந்து நான் என் செய்வேன்? ஓ தேவதேவனே! பூவுலகில் நான் மானிடன் என்னும் உணர்வே எனக்கு இல்லாதவாறு அருள்புரிய வேண்டுகிறேன என்றுர்.

அறத்தனி முதல்வநீ யழைக்கு மோகைதான்
பெறப்பெறு மடியனேன் பேதைத் தன்மையாற்
சிறப்புறு தாருகற் கடந்த தீமையைப்
பொறுத்தரு ளெனவடி பணிந்து போற்றினான்.

அருந்துயர் வடிவமா யகன்ற மண்ணிடை
வருந்துறு பிறவியை மன்னி நின்னையான்
பிரிந்தன னலமரும் பெற்றி யென்கொலோ
திருந்தடி யவரிடர் தீர்க்கு மெந்தையே.

மானிடப் பிறவியை மயக்கு மண்ணிடை
யானெடுத் திடாவகை யருள்செ யென்றலுந்
தேனெடுத் திதழவிழ் செய்ய கொன்றையோன்
றானுளத் தருளினாற் சாற்றன் மேயினான்.

அடியேன் பேதைத் தன்மையால் செய்த தவறைப் பொறுத்தருள வேண்டும்; உம்மைப் பிரிந்து பூவுலகில் எவ்வாறு அத்துன்பத்தைத் தாங்குவேன். எனக்கு அருள் செய்ய வேண்டுமென இரேணுகன் விண்ணப்பிக்கவும், சிவபெருமான் கூறினுர்:

इति सम्प्रार्थितो देवो रेणुकेन महेश्वरः ।
मा भैषीर्मम भक्तानां कुतो भीतिरिहेष्यति ॥ ८२॥

ரேணுகனுல் இவ்வாறு பிரார்த்திக்கப்பட்ட மஹேசுவரன், ரேணுகனே! எனது பக்தர்களுக்கு எவ்வாறு பயமேற்படும்? நீ சிறிதும் அஞ்சாதே.

श्रीशैलस्योत्तरे भागे त्रिलिङ्गविषये शुभे ।
कोल्लिपाक्यभिधानोऽस्ति कोऽपि ग्रामो महत्तरः ॥ ८३॥
सोमेश्वरभिधानस्य तत्र वासवतो मम ।
अस्पृशन् मानुषं भावं लिङ्गात् प्रादुर्भविष्यसि ॥ ८४॥

ஸ்ரீசைலத்தின் வடபாகத்தில் தெலுங்கு நாட்டில் கொல்லிபாகமெனும் சிறந்த கிராமம் உள்ளது. நான் அங்கு ஸோமேசுவரன் எனும் திருப்பெயருடன் கோயில் கொண்டுள்ளேன். நீ அங்கு மானிடன் எனும் உணர்வில்லாமல் அந்த லிங்கத்தினின்றும் வெளிப்படுவாய்.

मदीयलिङ्गसम्भूतं मद्भक्तपरिपालकम् ।
विस्मिता मानुषाः सर्वे त्वां भजन्तु मदाज्ञया ॥ ८५॥

எனது லிங்கத்திலிருந்து தோன்றியவனும் என் பக்தர்களைக் காப்பவனுமான உன்னை மக்கள் கண்டு மிகவும் வியப்படைந்து எனது ஆணையினால் உன்னை வந்தடைவார்கள்.

मदद्वैतपरं शास्त्रं वेदवेदान्तसम्मतम् ।
स्थापयिष्यसि भूलोके सर्वेषां हितकारकम् ॥ ८६॥

வேத வேதாந்தங்களில் கூறப்படுவதும் அனைவர்க்கும் நன்மையே பயப்பதுமான சிவாத்துவிதசாத்திரத்தை நீ பூவுலகில் நிலநிறுத்துவாய்.

मम प्रतापमतुलं मद्भक्तानां विशेषतः ।
प्रकाशय महीभागे वेदमार्गानुसारतः ॥ ८७॥

வேதநெறி வழுவாமல் என்னுடைய மஹிமையையும் குறிப்பாக என் பக்தர்களின் பெருமையையும் நீ பூவுலகில் பறைசாற்றி நிலைநிறுத்துவாயாக.

इत्युक्त्वा परमेश्वरः स भगवान् भद्रासनादुत्थितो
ब्रह्मोपेन्द्रमुखान् विसृज्य विबुधान् भ्रूसंज्ञया केवलम् ।
पार्वत्या सहितो गणैरभिमतैः प्राप स्वमन्तः पुरं
क्षोणीभागमवातरत् पशुपतेराज्ञावशाद् रेणुकः ॥ ८८॥

இவ்வாறு கூறிய பரமேசுவரன் தனது பத்திராஸனத்திலிருந்து எழுந்து பிரம்மா போன்ற தேவர்களைத் தன் புருவநெரிப்புக் குறிப்பால் விடையளித்து பார்வதிதேவியார் மற்றும் சில நெருக்கமான கணங்களுடன் கூடியவராய் தனது அந்தப்புரத்திற்கு எழுந்தருளினார். பசுபதியின் ஆணையினால் ரேணுகரும் பூவுலகம் வந்திறங்கினார்.

என்னிக ரிரேணுக வின்று மண்ணிடைத்
துன்னுறு பிறவியாற் றுயர மெய்தலை
யென்னடி யவர்தமக் கெவ்வி டத்தினு
மின்னல்வந் தடைகுவ தில்லை யில்லையே.

கண்டவர் தமக்கெலாங் கயிலை காட்டுறும்
வண்டவர் பருப்பத மலையைத் தென்றிசை
கொண்டுள தெலுங்கினிற் கொல்லி பாகமென்
றொண்டல மொன்றுள துரைப்பி னாயிடை.

என்னுரு வாயசோ மேச னென்னவோர்
தன்னிகர் பரசிவ லிங்கந் தங்குமா
லன்னதின் மானிடப் பிறவி யன்றியே
மன்னுதி யுலகெலாம் வியக்கும் வண்ணமே.

மறையொடு மறைமுடி மதம தாகுமென்
னிறையுமத் துவிதநூ னிலத்தி லியாவரு
மறிவுற மொழிதியென் னடியர் மேன்மையுங்
குறைவிலென் மேன்மையுங் கொடுத்தி யெங்கணும்.

எனக்கு நிகரான இரேணுகனே! மண்ணுலகில் பிறப்பதால் உனக்கு எவ்விதத் துன்பமும் நிகழாது. காண்போர்க்கெல்லாம் கயிலேயை நினைவுறுத்தும் திருப்பருப்பதமலேயின் தென்திசையில் கொல்லிபாகமென்பதொரு தலத்தில் சோமேசனென்னும் இலிங்கத்தில் நீ தோன்றுவாயாக. வேதத்துடன் அத்துவிதக் கொள்கையைக் கொண்ட வேதாந்தத்தையும், எனது மஹிமை, எனது அடியார் பெருமை ஆகியவற்றையும் நீ பரவச் செய்வாயாக என்ருர்.

॥ इति श्रीसिद्धान्तशिखामणौ रेणुकस्य भूलोकावतरणं नाम
तृतीयः परिच्छेदः ॥ ३॥

॥ चतुर्थः परिच्छेदः ॥

अथ त्रिलिङ्गविषये कोल्लिपाक्यभिधे पुरे ।
सोमेश्वरमहालिङ्गात् प्रादुरासीत् स रेणुकः ॥ १॥
प्रादुर्भूतं तमालोक्य शिवलिङ्गात् त्रिलिङ्गजाः ।
विस्मताः प्राणिनः सर्वे बभूवुरतितेजसम् ॥ २॥

அங்கு தெலுங்கு நாட்டில் கொல்லிபாகமென்னும் ஊரில் ஸோமேசுவரலிங்கத்திலிருந்து ரேணுகன் வெளித்தோன்றிஞர். ஒளிவீசும் திருமேனியுடன் திகழும் ரேணுகனைக்கண்ட அனைவரும் மிக்க வியப்பில் ஆழ்ந்தனர்.

### இரேணுகர் உலகில் வருதல்

அங்கண னிவ்வகை யருள மெல்லடிப்
பங்கய முடிமிசை படவி றைஞ்சியே
யெங்கண நாயகன் விடைகொண் டெய்தினான்
பொங்கொலி யுததிசூழ் புவியை நோக்கியே.

சிவபெருமான் இவ்வாறு அருளவும், இரேணுகனும் பூவுலகை நோக்கி வந்தான்.

### இரேணுகர் அவதரித்த ஸ்தலம்

எய்திய விரேணுக னிறைவன் கூறிய
மெய்திக ழிலிங்கமெய் மேவித் தோன்றினான்
கொய்துணர் மலிபொழிற் கொல்லி பாகம்வாழ்
செய்தவ முடையர்தாஞ் சென்று கண்டனர்.

புவியையடைந்த இரேணுகன் சிவபெருமான் கூறிய அந்த இலிங்கத்தினின்று தோன்றிஞன். அதை அங்கிருந்த மக்கள் கண்டு மகிழ்ந்தனர்.

भस्मोद्धूलितसर्वाङ्गं साररुद्राक्षभूषणम् ।
जटामुकुटसंयुक्तं त्रिपुण्ड्राङ्कितमस्तकम् ॥ ३॥
कटीतटीपटीभूतकन्थापटलबन्धुरम् ।
दधानं योगदण्डं च भस्माधारं कमण्डलुम् ॥ ४॥
शिवाद्वैतपरिज्ञानपरमानन्दमोदितम् ।
निर्धूतसर्वसंसारवासनादोषपञ्जरम् ॥ ५॥
शिवागमसुधासिन्धुसमुन्मेषसुधाकरम् ।
चित्तारविन्दसङ्गूढशिवपादाम्बुजद्वयम् ॥ ६॥
यमादियोगतन्त्रज्ञं स्वतन्त्रं सर्वकर्मसु ।
समस्तसिद्धसन्तानसमुदायशिखामणिम् ॥ ७॥
वीरसिद्धान्तनिर्वाहकृतपट्टनिबन्धनम् ।
आलोकमात्रनिर्भिन्नसमस्तप्राणिपातकम् ॥ ८॥
तमपृच्छन् जनाः सर्वे नमन्तः को भवानिति ।

மேனி முழுதும் திருநீறு பூசியும், உயர்ந்த ருத்திராக்ஷங்களை அணிந்தும், ஜடாமகுடம் சூடியும், நெற்றியில் திரிபுண்டரம் தரித்தும், இடையில் துவராடை தரித்தும், யோகதண்டம், திருநீற்றுப்பாத்திரம், கமண்டலு ஆகியவற்றைக் கையிலேந்தியும், சிவாத்துவிதஞானம் ஒளிவீசும் திருமுகத்தையுடையவராயும், சிவாகமமெனும் கடலில் தோன்றிய சந்திரனைப் போல விளங்குபவரும், மனமெனும் தாமரையில் சிவபெருமானின் இரு திருவடிகளையும் ஒளித்துவைத்திருப்பவராயும், யமம், நியமம் முதலிய யோகாங்கங்களை நன்கு அறிந்தவராயும், எல்லாச் செயல்களிலும் சுதந்திரமானவராயும், அனைத்துச் சித்தர்களுக்கும் சிகாமணியாகத் திகழ்பவராயும், வீரசைவசித்தாந்தத்தை நிலபெறச் செய்பவரும், தனது பார்வையாலேயே அனைத்துயிர்களின் பாவங்களை போக்குபவராயும் விளங்கும் அவரை எல்லோரும் தாங்கள் யார் எனக் கேட்டனர்.

## இரேணுகர் அவதாரம்

**நீற்றொளி விளங்கக் கண்டி நிறையணி யணிந்து வேணி**
**தோற்றழ கிலங்க ஞானச் சோதியின் வயிற்றிற் றோன்றிப்**
**போற்றிளங் கதிர்போ னின்ற புண்ணியன் றன்னைக் கண்டோ**
**ராற்றவும் வியப்புற் றோரா யடியிணை பணிந்து சொல்வார்.**

திருநீறு, உருத்திராக்கம் முதலான சிவசின்னங்களை அணிந்து ஞான சோதியாய் இலிங்கத்தில் தோன்றிய அப்புண்ணிய மூர்த்தியைக் கண்டவர்கள் இவ்வாறு கூறினர்:

**इति पृष्टो महायोगी जनैर्विस्मितमानसैः ॥ ९॥**
**प्रत्युवाच शिवाद्वैतमहानन्दपरायणः ।**

இவ்வாறு வியப்படைந்த மக்கள் கேட்கவும் சிவாத்வைத ஆனந்தத்தில் திளைக்கும் அந்த மஹாயோகியானவர் பின் வருமாறு கூறினர்.

**पिनाकिनः पार्श्ववर्ती रेणुकाख्यगणेश्वरः ॥ १०॥**
**केनचित् कारणेनाहं शिवलिङ्गादिहाभवम् ।**
**नाम्ना रेणुकासिद्धोऽहं सिद्धसन्ताननायकः ॥ ११॥**

பிநாகமெனும் வில்லைத் தரித்த சிவபிரானின் அணுக்கத் தொண்டன் நான்; ஏதோ காரணம் பற்றி நான் இங்கு சிவலிங்கத்திலிருந்து தோன்றினேன். சித்தர் கூட்டங்களுக்குத் தலைவனுகிய எனக்கு ரேணுகன் என்று பெயர்.

**சோதிமா லிங்கந் தன்னிற் றோன்றுநீ யாரை யென்ன**
**வாதியா மிறைவன் பாங்க ரமர்தரு மிரேணு கனியான்**
**வேதநா யகன்வி டுப்ப விடைகொண்டிங் கெய்தி னேனென்**
**றோதினான் வீர சைவத் தூதிய மாகி நின்றான்.**

இச்சோதிலிங்கத்தில் தோன்றிய நீ யார்? என அவர்கள் வினவ, வீரசைவத்தின் பயனுகி நின்ற அவர் நான் இரேணுகன்; சிவபெருமானுல் அனுப்பப்பட்டு இங்கு வந்தேன் என்றுர்.

स्वच्छन्दचारी लोकेऽस्मिन् शिवसिद्धान्तपालकः ।
खण्डयन् जैनचार्वाकबौद्धादीनां दुरागमान् ॥ १२॥
इत्युक्त्वा पश्यतां तेषां विषयस्थिरचक्षुणाम् ।
उत्थाय व्योममार्गेण मलयाद्रिमुपागमत् ॥ १३॥

சுதந்திரமாக நான் சஞ்சரிப்பவன்; இவ்வுலகில் ஜைனம், பௌத்தம், சாருவாகம் போன்ற புறச்சமயங்களை வாதிட்டு அழித்து சிவசித்தாந்தத்தை நிலபெறச் செய்பவன் என்று கூறி கூடியிருந்தோர் பார்த்துக் கொண்டிருக்கும் போதே ஆகாயமார்க்கமாக மலயமலையைச் சென்றடைந்தார்.

### இரேணுகர் பொதிகையடைதல்

விளங்குறு சிவசித் தாந்த மென்பயிர் தன்னை வேறா
யுளங்கவல் சயின புத்த ராதிய ருணர்வி னூலாம்
வளர்ந்தெழு களைக ளைந்து வளர்ப்பதற் குற்றே னானென்
றிளங்கதி ரனையான் வானத் தெழுந்துபோய் மலயத் துற்றான்.

சிவசித்தாந்தப் பயிரை வளர்ப்பதற்கும், ஜைன, பௌத்த சமய நூல்களென்னும் களையை நீக்குவதற்கும் நான் இங்கு வந்தேன் எனக் கூறி இரேணுகன் பொதிகை மலையை அடைந்தார்.

नवचन्दनकान्तारकन्दलन्मन्दमारुतम् ।
अभङ्गुरभुजङ्गस्त्रीसङ्गीतरससङ्कुलम् ॥ १४॥
करिपोतकराकृष्टस्फुरदेलातिवासितम् ।
वराहदंष्ट्रिकाध्वस्तमुस्तासुरभिकन्दरम् ॥ १५॥
पटीरदलपर्यङ्कप्रसुप्तव्याधदम्पतिम् ।
माधवीमल्लिकाजातीमञ्जरीरेणुरञ्जितम् ॥ १६॥

சந்தனமரக்காட்டிலிருந்து வீசும் நறுமணக்காற்றைக் கொண்டதாயும், அங்கு திரியும் பெண்நாகப்பாம்புகளின் இடையைறுத ஓசையையுடையதும், யானைக்கூட்டங்களால் உலுக்கப்படும் ஏலக்காய்க் கொடிகளையுடையதும், காட்டுப் பன்றிகளால் பரிக்கப்படும் முஸ்தம் முதலான கிழங்குகளின்

மணமுடையதும், நிலத்தின் நடுவே கட்டிலில் உறங்கும் வேடுவத் தம்பதிகளையுடையதும், முல்லை, மல்லிகை முதலான நறுமணப் பூங்கொடிகளிலிருந்து உதிரும் மகரந்தத்தூள்களையுடையதுமாய் அம்மலயமலை விளங்கியது.

பொதொகைமலைச் சிறப்பு

ஓங்கிய விந்த வெற்பங் கொருகரஞ் சுமக்க லாற்றா
தேங்குபு பிலத்தில் வீழக் கண்டவவ் விருடி தன்னைத்
தீங்கறு முனிவ ரெண்ணி லோரொடு சிகரந் தன்னிற்
றாங்கிய மலய வெற்பின் றன்மையார் சாற்ற வல்லார்.

மலயச மென்று மிக்க மலயமா ருதமா மென்று
முலகொரு மூன்றி னுந்த னோங்குறு புகழ்சென் றெய்த
நலமலி சந்துங் காலு நல்கிய வதுபோற் றன்பே
ரிலகுற மலைக ளுள்ளொன் றேனுமீந் ததுதா னுண்டோ.

அகத்திய முனிவரைச் சுமக்க முடியாமல் பாதாலத்தில் வீழ்ந்த விந்தியமலையின் பெருமையையும், அகத்தியரைப் போன்ற பல முனிவர்களைத் தாங்கிய பொதிகைமலையின் மஹிமையையும் யார் கூற வல்லார்? உலகில் ஒப்பற்றதும், சந்தனம் முதலான பல மரங்களைக் கொண்டதுமான பொதிகை மலைக்கு ஈடு உண்டோ?

तत्र कुत्रचिदाभोगसर्वर्तुकुसुमद्रुमे ।
अपश्यदाश्रमं दिव्यमगस्त्यस्य महामुनेः ॥ १७॥

அங்கு நறுமணம் மிக்க பூக்களைக் கொண்ட மரத்தின் கீழ் அகஸ்தியமுனிவரின் ஆசிரமத்தைக் கண்டார்.

मन्दारचन्दनप्रायैर्मण्डितं तरुमण्डलैः ।
शाखाशिखरसंलीनतारकागणकोरकैः ॥ १८॥

மந்தாரம், சந்தனம் முதலான மரங்கள் சூழ்ந்ததும், அம்மரங்களின் நெடிய கிளைகள் நட்சத்திரங்களைத் தொடுவது போன்று இருப்பதும்,

मुनिकन्याकरानीतकलशाम्बुविवर्धितैः ।
आलवालजलास्वादमोदमानमृगीगणैः ॥ १९॥

முனிவர்கள் வீட்டு இளம் கன்னிகைகளால் நீர்விட்டு வளர்க்கப்படும் மரங்களையுடையதாயும், அந்நீரைப் பருகும் இளமான்களைக் கொண்டதும்,

हेमारविन्दनिष्यन्दमकरन्दसुगन्धिभिः ।
मरालालापवाचालुवीचिमालामनोहरैः ॥ २०॥

தங்கத்தாமரை மலர்களிலிருந்து கொட்டும் மகரந்ததூள்களின் நறுமணம் வீசுவதாயும், யானைகளின் பிளிறல்களால் எதிரொலிக்கப்படுவதும்,

इन्दीवरवरज्योतिरन्धीकृतहरिन्मुखैः ।
लोपामुद्रापदन्यासचरितार्थतटाङ्कितैः ॥ २१॥
हारनीहारकर्पूरहरहासामलोदकैः ।
नित्यनैमित्तिकस्नाननियमार्थैस्तपस्विनाम् ॥ २२॥
प्रकृष्टमणिसोपानैः परिवीतं सरोवरैः ।

அலர்ந்த தாமரைமலர்களின் ஒளியினுல் ஆகாயத்தின் ஒருபாகம் இருண்டு காணப்படுவதாயும் [அகத்தியரின் பத்தினியும், கற்பில் சிறந்தவளுமான] லோபாமுத்திரையின் திருவடிகள் பதிக்கப்பட்டதாயும், பனி, கற்பூரம், சிவ பெருமானின் அட்டஹாஸச்சிரிப்பு ஆகியன போன்று வெண்மையான புனித நீரைக்கொண்டதாயும், தவமியற்றும் முனிவர்கள் நித்தியம், நைமித்திகம் ஆகிய ஸ்நானங்களைச் செய்வதற்காக இழைக்கப்பட்ட உயர்ந்த மணிகளாலான படிக்கட்டுகளைக் கொண்டதுமான அழகிய திருக்குளங்களையுடையதாயும்,

विमुक्तसत्त्ववैरस्यं ब्रह्मलोकमिवापरम् ॥ २३॥
हूयमानाज्यसन्तानधूमगन्धिमहास्थलम् ।
शुकसंसत्समारब्धश्रुतिशास्त्रोपबृंहणम् ॥ २४॥

அங்கு வேட்டப்படும் வேள்விகளில் சொரியும் நெய் ஆகுதிகளின் நறுமணம் சூழ்ந்ததாயும், தங்களுக்குள் வேதசாத்திரங்களைப் பற்றிய வாதங்கள் புரியும் கிளிக் கூட்டங்களையுடையதாயும் அந்த ஆசிரமம் விளங்கியது.

तस्य मध्ये समासीनं मूले चन्दनभूरुहः ।
सुकुमारदलच्छायादूरितादित्यतेजसः ॥ २५॥

அவற்றின் நடுவே இளந்தளிர்களின் ஒளியினால் சூரிய ஒளியை விரட்டும் சந்தனமரத்தின் அடியில் அகத்தியர் அமர்ந்திருந்தார்.

तडित्पिङ्गजटाभारैस्त्रिपुण्ड्राङ्कितमस्तकैः ।
भस्मोद्धूलितसर्वाङ्गैः स्फुरद्रुद्राक्षभूषणैः ॥ २६॥
नववल्कलवासोभिर्नानियमधारिभिः ।
परिवीतं मुनिगणैः प्रमथैरिव शङ्करम् ॥ २७॥

அவர் மின்னலைப் போல் ஒளிபொருந்திய ஜடைகளையும் நெற்றியில் திரிபுண்டரத்தையும் உடல் முழுவதும் திருநீறு பூசியும் பிரகாசிக்கும் ருத்திராக்ஷமாலைகளை அணிந்தும் புதிய மரவுரி தரித்து பற்பல நியமங்களைக் கடைப்பிடித்தும் சிவபெருமான் பூதகணங்கள் சூழ விளங்குவது போல் பல முனிவர்களால் சூழப்பட்டும்,

समुज्वलजटाजालैस्तपः पादपपल्लवैः ।
स्फुरत्सौदामिनीकल्पैर्ज्वालाजालैरिवानलम् ॥ २८॥

அவரது கடுமையான தவமெனும் மரத்தில் விளைந்த இளந்தளிர் போல் பளிச்சிடும் மின்னல் போன்ற ஜடைகளை உடையவராயிருந்தார்.

विशुद्धभस्मकृतया त्रिपुण्ड्राङ्कितरेखया ।
त्रिस्रोतसेव सम्बद्धशिलाभागं हिमाचलम् ॥ २९॥

இமயமலைப் பாறை கங்கை, யமுனை, ஸரஸ்வதீ எனும் மூன்று நதிகளின் சங்கமமாக விளங்குவது போல் அவரது நெற்றியில் திரிபுண்டரம் பிரகாசித்தது.

भस्मालङ्कृतसर्वाङ्गं शशाङ्कमिव भूगतम् ।
वसानं वल्कलं नव्यं बालातपसमप्रभम् ॥ ३०॥
वडवाग्निशिखाजालसमालीढमिवार्णवम् ।

உடல் முழுதும் திருநீற்றால் அலங்கரிக்கப்பட்டும், சந்திரன் பூவுலகிற்கு வந்திறங்கியது போன்ற தோற்றமும், இளம் சூரியனைப் போல் சிவந்த புதிய மரவுரியை தரித்தும், வடவாக்கினி ஜ்வாலைகள் கடலைச் சூழ்ந்தது போல் பிரகாசித்துக் கொண்டும்,

सर्वासामपि विद्यानां समुदायनिकेतनम् ॥ ३१॥
न्यक्कृतप्राकृताहन्तं निरूढशिवभावनम् ।
तृणीकृतजगज्जालं सिद्धीनामुदयस्थलम् ॥ ३२॥
मोहान्धकारतपनं मूलबोधमहीरुहम् ।
ददर्श स महायोगी मुनिं कलशसम्भवम् ॥ ३३॥

அனைத்து வித்தைகளும் ஒருசேரத் திகழ்பவரும், உயிர்களின் இயற்கையான அஹம்பாவத்தை அழித்தவரும், ஆழ்ந்த சிவபாவத்தில் திளைப்பவரும், உலகத்தை ஒரு துரும்பாக மதிப்பவரும், எல்லா சித்திகளுக்கும் பிறப்பிடமாக விளங்குபவரும், மோஹம் என்னும் இருளை அழிக்கும் சூரியனைப் போன்றவரும், எல்லாவற்றிற்கும் மேலான ஞானத்தில் தோன்றிய மரம் போன்றவரும், கலயத்தில் தோன்றியவருமான அகத்திய முனிவரை ரேணுகர் கண்டார்.

### இரேணுகர் அகத்தியரைக் காணுதல்

**அப்பெரு மலயந் தன்னை யடைந்தகத் தியனி ருக்குஞ்**
**செப்பரும் வளமலிந்த விடத்தினைச் சென்று கண்ணுற்**
**றொப்பரு முவகை கூர்ந்த வுளத்தொடு கணங்கள் கோமா**
**னெய்ப்பறு முனிவ ரோடங் கிருந்துள முனியைக் கண்டார்.**

மலயமென்னும் புகழ்பெற்ற அப்பொதிகைமலையைச் சென்றடைந்த இரேணுகன் அகத்தியமுனிவர் இருக்குமிடம் சென்று மிகுந்த மகிழ்ச்சியுடன் அவரைக் கண்டார்.

तमागतं महासिद्धं समीक्ष्य कलशोद्भवः ।
गणेन्द्रं रेणुकाभिख्यं विवेद ज्ञानचक्षुषा ॥ ३४॥

கணங்களுக்குத் தலைவரும் மிகப் பெரிய சித்தருமாகிய ரேணுகர் அங்கு வந்திருப்பதை அகத்தியர் தன் ஞானக்கண்ணால் அறிந்தார்.

வந்தெதிர் நின்ற ஞான வாரியைக் கண்ணிற் கண்டு
சந்திர மவுலி தன்பாற் சார்ந்துள விரேணுகப் பேர்
முந்துறு பவனா மென்று முனிவனு முணர்வாற் கண்டு
சிந்தனை மகிழ்ந்தெ ழுந்து திருவடித் தலத்தில் வீழ்ந்தான்.

எதிரே வந்து நின்ற ஞானத்திற் சிறந்த இரேணுகனைக் கண்ட அகத்தியமுனிவரும் அவரது திருவடியில் விழுந்து வணங்கினார்.

तस्यानुभावं विज्ञाय सहसैव समुत्थितः ।
लोपामुद्राकरानीतैरुदकैरतिपावनैः ॥
पादौ प्रक्षालयामास स तस्य शिवयोगिनः ॥ ३५॥
सम्पूज्य तं यथाशास्त्रं तन्नियोगपुरस्सरम् ।
मुनिर्विनयसम्पन्नो निषसादासनान्तरे ॥ ३६॥

ரேணுகருடைய மஹிமை பெருமைகளை அறிந்த அகத்தியர் விரைந்து எழுந்து லோபாமுத்திரை அளித்த புனிதநீரால் அவரது கால்களைக் கழுவி மிக்க விநயத்துடன் தக்கவாறு பூஜை செய்து உபசரித்து அவரருகில் வேறொரு ஆசனத்தில் அமர்ந்தார்.

பின்னரங் கவனைத் தானோர் பெருந்தவி சுறவி ருத்தித்
தன்னிக ரமல லோபா முத்திரை தந்த நீராற்
பொன்னடி விளக்கி நூலிற் புகன்முறை யருச்சித் தேத்தி
யன்னவ னருகு வேறோ ராதனத் தமர்ந் திருந்தான்.

உடனே இரேணுகரை ஆசனத்தில் அமர்த்தி தன் மனையாள் லோபாமுத்திரை கொணர்ந்த நீரால் அவரது திருவடிகளை அலம்பி, முறைப்படி அர்ச்சித்து வணங்கி தானும் ஓர் ஆசனத்தில் அமர்ந்தார்.

समासीनं मुनिवरं सर्वतेजस्विनां विभुम् ।
उवाच शान्तया वाचा रेवणः सिद्धशेखरः ॥ ३७॥
निर्विघ्नं वर्तसे किं नु नित्या ते नियमक्रिया ।
अथ वाऽगस्त्य तेजस्विन् कृतः स्युस्तेऽन्तरायकाः ॥ ३८॥

தேஜோமயமாகத் தன்னருகில் அமர்ந்திருக்கும் அம்முனிவரை நோக்கி சித்தர்கள் தலைவரான ரேவணர் அமைதியான வார்த்தைகளால் வினவினார். ஓ பிள்ளாய்! அகத்தியரே! உன்னுடைய நித்திய நியமங்கள் தவறாது நடைபெறுகின்றனவா? அல்லது யாதேனும் இடையூறு ஏற்படுகிறதா?

இருந்துள முனியை நோக்கி யிரேணுக னன்றாய் நின்பா
லருந்தவ நடந்த தேயென் றருளினால் வினாய்நி னக்குப்
பொருந்துறு மிடையூ றெண்ணிப் புரிபவ ரியாவ ரென்று
திருந்திய வுளத்த னாகிச் செப்புவ னுவகை மாற்றம்.

இரேணுகனும் அகத்தியருடைய தவச்செயல்கள் எவ்வித இடையூறின்றி நிகழ்கின்றனவா என வினவினார்.

विन्ध्यो निरुद्धो भवता विश्वोल्लङ्घनविभ्रमः ।
नहुषो रोषलेशात् ते सद्यः सर्पत्वमागतः ॥ ३९॥
आचान्ते भवता पूर्वं पङ्कशेषाः पयोधयः ।
जीर्णस्ते जाठरे वह्नौ दृप्तो वातापिदानवः ॥ ४०॥
एवं विधानां चित्राणां सर्वलोकातिशायिनाम् ।
कृत्यानां तु भवान् कर्ता कस्तेऽगस्त्य समप्रभः ॥ ४१॥

முன்னர் எவராலும் ஏறிக்கடக்க இயலாத விந்தியமலையானது உன்னால் அடக்கப்பட்டது; நீ சிறிது கோபமடைந்ததால் நஹுஷன் என்பான் பாம்பாகச் சபிக்கப்பட்டான். உன்னால் ஏழ்கடல் நீரும் முன்னொருகாலத்தில் அருந்தப்பட்டன; வாதாபி போன்ற கொடிய அரக்கர்கள் உன் வயிற்று நெருப்பால் சீரணிக்கப்பட்டனர். அனைவரும் வியப்படையும் இத்தகைய செயல்களைச் செய்த உனக்கு நிகர் இவ்வுலகில் யார் உளர்?

விந்தமு நின்னாற் கீழ்போய் வீழ்ந்தது நகுட னின்னான்
முந்தர வுருவ மானான் முழங்குவெண் டிரைசு ருட்டுஞ்
சிந்துவு மருந்தப் பட்டுச் சேறலா தொழிந்த தன்று
வந்தொரு தகுவ னுன்றன் வயிற்றிடை யற்றா னன்றே.

மேலும், அகத்தியர் முன்னுளில் செய்ததான விந்தியமலேயைப் பாதாளத்தில் வீழ்த்தியது, ஏழ்கடல்களேயும் அருந்தியது முதலிய மகத்தான செயல்களேப் பற்றியும் இரேணுகன் வினவினுர்.

शिवाद्वैतपरानन्दप्रकाशनपरायणम् ।
भवन्तमेकं शंसन्ति प्रकृत्या सङ्गवर्जितम्॥ ४२॥
पुरा हैमवतीसूनुरवदत् ते षडाननः ।
शिवधर्मोत्तरं नाम शास्त्रमीश्वरभाषितम् ॥ ४३॥
भक्तिः शैवी महाघोरसंसारभयहारिणी ।
त्वया राजन्वती लोके जाताऽगस्त्य महामुने ॥ ४४॥

ஓ மஹாமுனிவராகிய அகத்தியரே! சிவாத்வைத ஆனந்தத்தில் திளேக்கும் உன்னே இயற்கையிலேயே எவ்விதப் பற்றுமற்றவன் என மக்கள் புகழ்கின்றனர். ஹைமவதியான பார்வதி தேவியின் புதல்வனுன ஷண்முகன் உனக்கு சிவதருமோத்தரம் என்னும் உயர்ந்த சாத்திரத்தை முன்பு உபதேசித்தான். மிகக் கொடிய சம்சாரத்திலிருந்து காக்கும் சிவபக்தியானது உன்ஞல் புத்துயிர் பெற்றது.

செங்கண்மால் விடையா னல்குஞ் சிவதரு மோத்த ரத்தை
யெங்கண்மா முருக னாமத் திலங்கிலை வேலோ னல்க
வங்கண்மா ஞால முய்யப் பெற்றனை யருந்த வத்தோர்
தங்கண்மா நிதிய னாயுன் றனைநிகர் பவர்யார் சொல்லாய்.

சிவபெருமான் அருளிய சிவதருமோத்தரம் என்னும் ஒப்பற்ற நூலேத் திருமுருகனிடமிருந்து உலகோர் உய்யும்பொருட்டு நீ பெற்ருய். உனக்கு நிகர் யார்தான் உளர் என்று போற்றினுர்.

इति तस्य वचः श्रुत्वा सिद्धस्य मुनिपुङ्गवः ।
गम्भीरगुणया वाचा बभाषे भक्तिपूर्वकम् ॥ ४५॥

சித்தர்கள் தலைவரான ரேணுகரின் இவ்வார்த்தைகளைக் கேட்ட முனிவர்களுள் சிறந்த அகத்தியர் பக்தியுடன் கம்பீரமாகப் பேசினர்:

**अहमेव मुनीन्द्राणां लालनीयोऽस्मि सर्वदा ।**
**भवदागमसम्पत्तिर्मां विना कस्य सम्भवेत् ॥ ४६॥**

முனிவர்கள் மத்தியில் நான் ஒருவனே கொண்டாடப்படத்தக்கவன். [ஏனெனில்] உங்களின் வருகை எனும் பேறு வேறெவர்க்கு வாய்க்கும்?

**என்றுரை செய்ய வெங்க ளிரேணுகன் முனிவன் கேளா**
**நின்றனி வரவெ னக்கே நேர்தலாற் றவத்தோன் யானே**
**நன்றிக ளனைத்து முள்ளேன் ஞானநல் விழியும் பெற்றேன்**
**வென்றனன் பவமு மேலாம் வீடடைந் துய்ந்தே னியானே.**

இவ்வாறு இரேணுகன் கூறக்கேட்ட அகத்தியர் பேருவகையடைந்து தங்களது வருகையால் நான் பெருந்தவம் செய்தவனுனேன்; பிறவிக்கடலைக் கடந்தேன் என மகிழ்ச்சியுடன் கூறினுர்.

**स्थिरमद्य शिवज्ञानं स्थिरा मे तापसक्रिया ।**
**भवद्दर्शनपुण्येन स्थिरा मे मुनिराजता ॥ ४७॥**

இன்றே சிவஞானம் உறுதிபெற்றது; எனது தவமும் இன்று வலுவடைந்தது; உங்களைத் தரிசித்ததால் முனிவர் தலைவன் எனும் பதவி எனக்கு உறுதி பெற்றது.

**संसारसर्पदष्टानां मूर्च्छितानां शरीरिणाम् ।**
**कटाक्षस्तव कल्याणां समुज्जीवनभेषजम् ॥ ४८॥**

சம்சாரமெனும் கொடிய விஷப்பாம்பால் கடிக்கப்பட்டவர்களும் முழுதும் மூர்ச்சையாய்க் கிடப்பவர்களுமாகிய மக்களுக்கு உங்கள் கடைக்கண் பார்வை உயிரூட்டும் சஞ்ஜீவனி போல் திகழ்கிறது.

புண்ணிய மூர்த்தி நீயென் பொருட்டிவ ணடைந்தாய்
நின்னைக்
கண்ணுறில் வினைக ளெல்லாங் கதிரெதிர்ப் பனியை
யொக்கும்
பண்ணிய தவநி றைந்து பயன்றரு காலத் தல்லா
லண்ணலுன் வரவெ வர்க்கு மரிதரி தென்று சொல்வான்.

புண்ணியமூர்த்தியான நீங்கள் என் பொருட்டு இங்கு வந்துள்ளீர்கள்; அது நான் பற்பல காலங்களில் செய்த தவங்களின் பயனே. தங்களைப் பார்த்தவுடனேயே அனைத்து வினைகளும் நீங்கிவிடும் என்று அகத்தியன் உரைத்தான்.

समस्तलोकसंदाहतापत्रयमहानलः ।
त्वत्पदाम्बुकणास्वादादुपशाम्यति देहिनाम् ॥ ४९॥

அனைத்து உயிர்களையும் வாட்டும் மூவிதத் துன்பங்களும் தங்களின் திருவடி நீரின் ஒரு சிறுதுளியினுல் முற்றிலும் அழியும்.

रेणुकं त्वां विजानामि गणनाथं शिवप्रियम् ।
अवतीर्णमिमं भूमिं मदनुग्रहकाङ्क्षया ॥ ५०॥

சிவகணங்களுக்குத் தலைவனுன ரேணுகன் என்றும் சிவபெருமானுக்குப் பிரியமானவரென்றும் எனக்கு அருள்புரிவதற்காக இப்பூவலகை வந்தடைந்துள்ளீர்கள் என்றும் தங்களை நான் அறிவேன்.

भवादृशानां सिद्धानां प्रबोधध्वस्तजन्मनाम् ।
प्रवृत्तिरीदृशी लोके परानुग्रहकारिणी ॥ ५१॥

உயர்ஞானத்தால் பிறவி நீங்கியவர்களாகிய தங்களைப் போன்றோர்கள் இவ்வாறு மற்றவர்களுக்கு உதவி செய்வதையே தொழிலாகக் கொண்டுள்ளீர்கள்.

त्वन्मुखाच्छ्रोतुमिच्छामि सिद्धान्तं श्रुतिसम्मतम् ।
सर्वज्ञ वद मे साक्षाच्छैवं सर्वार्थसाधकम् ॥ ५२॥

सद्यः सिद्धिकरं पुंसां सर्वयोगीन्द्रसेवितम् ।
दुराचारैरनाघ्रातं स्वीकृतं वेदवेदिभिः ॥
शिवात्मैक्यमहाबोधसम्प्रदायप्रवर्तकम् ॥ ५३॥

வேதநெறிக்கு உடன்பட்டதும், எல்லாவற்றையும் நல்குவதும் விரைவில் சித்திகளை அளிப்பதும் கெட்ட நெறிகள் சிறிதும் இல்லாததும் சிவத்திற்கும் ஆன்மாவிற்கும் உள்ள ஐக்கியத்தை உணர்த்துவதுமான சிவசாத்திரத்தைத் தங்களின் திருவாக்கால் அறிந்து கொள்ள விரும்புகிறேன்.

उक्त्वा भवान् सकललोकमहोपकारं
सिद्धान्तसंग्रहमनादृतबाह्यतन्त्रम् ।
सद्यः कृतार्थयितुमर्हति दिव्ययोगिन्
नानागमश्रवणवर्तितसंशयं माम् ॥ ५४॥

தெய்வீக யோகியே! எல்லோருக்கும் பெரும் உபகாரமாய் விளங்குவதும் புறச்சமயங்களால் அறியப்படாததுமான சித்தாந்தத்தின் சுருக்கத்தை பற்பல ஆகமங்களைக் கேட்டும் ஐயம் அகலாத எனக்கு உபதேசித்து என்னைக் கிருதார்த்தனாக ஆக்க வேண்டுகிறேன் என்று அகத்தியர் வேண்டி நின்றார்.

பற்பல கலையு ணர்ந்தும் பற்றிலன் றுணிவு மாறா
வுற்பவ மொழியும் வண்ண முயிர்சிவத் தேக மாகும்
பொற்பரு ளுவதாய் வேதப் பொருள்படு சிவசித் தாந்தஞ்
சிற்பர யோகி நின்னாற் றெளிந்திட விழைவ லென்றான்.

பல கலைகளைக் கற்றும் என் உள்ளத்தில் ஒரு துணிவு பிறக்கவில்லை; பிறவிக்கடலைக் கடக்கும் உபாயமாய்த் திகழ்வதும், வேதங்களின் தலைப் பொருளாய் விளங்குவதுமான சிவசித்தாந்தக் கருத்துக்களை உம்மிடமிருந்து கற்க நான் விழைகிறேன் என்றார்.

॥इति श्रीसिद्धान्तशिखामणौ रेणुकागस्त्यदर्शनप्रसङ्गो नाम
चतुर्थः परिच्छेदः ॥ ४॥

## ॥ पञ्चमः परिच्छेदः ॥

अथागस्त्यवचः श्रुत्वा रेणुको गणनायकः ।
ध्यात्वा क्षणं महादेवं साम्बमाह समाहितः ॥ १ ॥

அகத்தியரின் இவ்வார்த்தைகளைக் கேட்ட ரேணுகர் க்ஷணநேரம் மஹாதேவரைத் தியானித்துப் பின்வருமாறு கூறினார்.

### இரேணுகர் அகத்தியருக்கு உபதேசம் செய்தல்

முனிவ னின்ன மொழிய வுளங்கொளா
வினிய னென்னுமி ரேணுகன் முக்கணான்
றனைநி னைந்து சமாதி யடைந்து பின்
னினைவ டைந்து நிகழ்த்துதன் மேயினான்.

இரேணுகன் சிவபெருமானை உள்ளத்தில் நினைந்து சொல்லத் தொடங்கினான்.

अगस्त्य मुनिशार्दूल समस्तागमपारग ।
शिवज्ञानकरं वक्ष्ये सिद्धान्तं शृणु सादरम् ॥ २ ॥

முனிவருள் சிறந்தோனே! அகத்தியனே! எல்லா ஆகமங்களையும் கற்றறிந்தோனே! சிவஞானத்தை அருளும் சித்தாந்தத்தைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்.

அருந்த வத்த ரரச வுனக்கிவண்
டிருந்து மெய்ச்சிவ ஞானத் தெளிவினைப்
பொருந்து மிக்கசித் தாந்தம் புகலுது
மொருங்கு சித்தத் துவந்து செவிக்கொளே.

இரேணுகனும், அருந்தவம் புரியும் முனிவனே! சிவஞானத் தெளிவினை உண்டாக்கும் சிவசித்தாந்தத்தை நான் விளக்குகிறேன். மனத்தில் மகிழ்வுடன் நீ கேட்பாயாக என்றார்.

अगस्त्य खलु सिद्धान्ता विख्याता रुचिभेदतः ।
भिन्नाचारसमायुक्ता भिन्नार्थप्रतिपादकाः ॥ ३ ॥

அகத்தியனே! சித்தாந்தங்கள் அவரவர் எண்ணங்களுக்கேற்பப் பல்வகையான ஒழுக்கங்களையும் கோட்பாடுகளையும் கொண்டுள்ளன.

பேத விச்சையிற் பின்னப் பொருள்களு
மோது பற்பல வாய வொழுக்கமு
மாதல் பெற்றிடு மாசில்சித் தாந்தநூன்
மாத வத்தர் வழுத்து முனிவனே.

சைவசித்தாந்தநூல் பற்பல கருத்துக்களைக் கொண்டது என்றார்.

सांख्यं योगः पाञ्चरात्रं वेदाः पाशुपतं तथा ।
एतानि मानभूतानि नोपहन्यानि युक्तिभिः ॥ ४॥

சாங்கியம், யோகம், பாஞ்சராத்ரம், வேதம் பாசுபதம் ஆகியன பிரமாணங்களே; அவை தருக்கவாதங்களால் ஒருபோதும் கண்டிக்கத்தக்கன அல்ல.

ஆய்ஞ்ச சாங்கிய மாசறு யோகநற்
பாஞ்ச ராத்திரம் பாசு பதத்தொடு
வாய்ஞ்ச வேத மிவைபிர மாணமாய்த்
தாஞ்செய் வாதத்திற் றள்ளுவ வல்லவாம்.

சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம், பாசுபதம், வேதம் ஆகிய ஐந்தும் வாதம் செய்கையில் பிரமாணமாய்க் கொள்ளத்தக்கன.

वेदः प्रधानं सर्वेषां सांख्यादीनां महामुने ।
वेदानुसरणादेषां प्रामाण्यमिति निश्चितम् ॥ ५॥

ஓ மஹாமுனிவரே! சாங்கியம் முதலான எல்லாச் சமயங்களுக்கும் வேதம் பொது; வேதத்தை அனுசரிப்பதால் தான் இச்சமயங்கள் சான்றோர்களால் ஒத்துக்கொள்ளப்படுகின்றன.

சாங்கி யாதிகட் கென்றுந் தலைமையா
மோங்கு மாமறை யும்மறை யைத் தொடர்ந்

தீங்கு நின்றத னாலவை யாவையுந்
தாங்கு மானத் தகைமைய வென்பவே.

சாங்கியம் முதலியவற்றிற்கு வேதம் தலையாயது; ஆதலின் அவை பிரமாணமாகக் கொள்ளப்பட்டன.

पाञ्चरात्रस्य सांख्यस्य योगस्य च तथा मुने ।
वेदैकदेशवर्त्तित्वं शैवं वेदमयं मतम् ॥ ६॥

பாஞ்சராத்ரம், சாங்கியம், யோகம் ஆகியன வேதத்தின் ஒரு புடைத்தாய் அமைந்துள்ளன; ஆனால் சைவமோ முழுவதும் வேதமயமாகவே விளங்குகிறது.

யோக சாங்கிய மோரைந் திராத்திர
மாகும் வேதத் தொருபுடை யன்னபோ
லேக தேச முறாமறை யெங்குமா
மாகம் விழ்மலை மாதவ சைவமே.

वेदैकदेशवर्तिभ्यः सांख्यादिभ्यो महामुने ।
सर्ववेदानुसारित्वाच्छैवतन्त्रं विशिष्यते ॥ ७॥

வேதத்தின் ஒரு சாரியாய்த் திகழும் சாங்கியம் முதலானவற்றைக் காட்டிலும் முழுதும் வேதமயமாக விளங்கும் சைவம் சிறந்தது.

ஓங்கும் வேதத் தொருபுடை யாகிய
சாங்கி யாதியிற் சைவஞ் சிறந்ததாய்த்
தீங்கில் வேதமெ லாந்தொடர் செய்கையா
னீங்கு பாச முனிவ நிலைக்குமால்.

யோகம், சாங்கியம், பாஞ்சராத்திரம் ஆகியன வேதத்தின் ஒரு பாகமாகும்; ஆனால், சைவமானது வேதம் முழுதும் வியாபித்தது. ஆகையால் அது என்றும் நிலை பெற்று நிற்கும்.

शैवतन्त्रमिति प्रोक्तं सिद्धान्ताख्यं शिवोदितम् ।
सर्ववेदार्थरूपत्वात् प्रामाण्यं वेदवत् सदा ॥ ८॥

சித்தாந்தமென்றழைக்கப்படும் சிவதந்திரங்கள் சிவபெருமானுல் அருளப்பட்டவை; அனைத்து வேதங்களின் கோட்பாடுகளும் அவற்றில் காணப்படுவதால் வேதங்களைப் போன்று எக்காலத்திலும் பிரமாணம் உடையன.

பிரம மோதுசித் தாந்தப் பெயர்பெறு
தரும சைவமென் றந்திர நான்மறைப்
பொருள தாகலி னம்மறை போலவே
வரம தாம்பிர மாண மெனப்படும்.

பிரம்மமாகிய சிவபெருமான் ஒருவரையே பொருளாகக் கொண்டுள்ளதால் சைவதந்திரமும் நான்மறைகளைப் போல் பிரமாணமாகும்

आगमा बहुधा प्रोक्ताः शिवेन परमात्मना ।
शैवं पाशुपतं सोमं लाकुलं चेति भेदतः ॥ ९॥

பரமாத்மாவான சிவபெருமானுல் சைவம், பாசுபதம், ஸோமம், லாகுலம் எனப் பல்வகைப்பட்ட ஆகமங்கள் அருளப்பட்டுள்ளன.

கண்ணு தற்பெருங் காரண னாற்பல
வெண்ணு மாகமஞ் சைவமி லாகுளம்
பண்ணு பாசு பதமொடு சோமமென்
றண்ணன் மாமுனி யன்றறை யப்படும்.

சிவபெருமானுல் அருளப்பட்ட ஆகமங்கள் சைவம், இலாகுலம், பாசுபதம், சோமம், என நால்வகைப்படும்.

तेषु शैवं चतुर्भेदं तन्त्रं सर्वविनिश्चितम् ।
वामं च दक्षिणं चैव मिश्रं सिद्धान्तसंज्ञकम् ॥ १०॥

அவற்றுள் சைவம் நால்வகைப்பட்டது: அவை வாமம், தக்ஷிணம், மிசிரம், ஸித்தாந்தம் என்பன.

ஓது வாம மொழிவறுந் தக்கண
மேதை யாகு மிசிர முனிவர

தீதி லாதசித் தாந்த மெனவரு
பேத நான்கு பெறும்புகல் சைவமே.

அவற்றுள், சைவமானது வாமம், தக்கணம், மிசிரம், சித்தாந்தம் என நால்வகைப்படும்.

शक्तिप्रधानं वामाख्यं दक्षिणं भैरवात्मकम् ।
सप्तमातृपरं मिश्रं सिद्धान्तं वेदसम्मतम् ॥ ११॥

சக்திக்கு முக்கியத்துவம் கொண்டது வாமம்; பைரவருக்கு முக்கியத்துவமளிப்பது பைரவம்; மிசிரம் சப்தமாதாக்களுக்கு முக்கியத்துவத்தையும், ஸித்தாந்தம் வேதத்திற்கு உடன்பட்டும் விளங்குவன.

வாமஞ் சத்தி பரஞ்சொல் வயிரவர்க்
காமந் தக்கண மம்மி சிரத்தெழு
நாமங் கொண்டுறு மாதர் நணுகுவா
ரேமஞ் செய்மறை யின்மத மற்றதே.

வாமம் சக்தியை முழுமுதற்பொருளாகக் கொண்டது; தக்கணம் பைரவரையும், மிசிரம் பிராஹ்மீ முதலான சப்த மாதர்களையும் முழுமுதலாக உடையன. இவை வேதத்தின் சம்மதம் பெற்றனவல்ல.

वेदधर्माभिधायित्वात् सिद्धान्ताख्यः शिवागमः ।
वेदबाह्यविरोधित्वात् वेदसम्मत उच्यते ॥ १२॥

வேததருமத்தையே கூறுவதாலும், வேதங்களுக்கெதிரான சமயங்களுடன் வாதிடுவதாலும் ஸித்தாந்தமென்று வழங்கப்படும் சிவாகமங்கள் வேதங்களுக்குடன்பட்டன என்று அறியப்படுகின்றன.

மறையு ரைக்குந் தருமம் வகுத்தலாற்
புறம தத்தொடு நின்று பொருதலாற்
றிறம டுத்தசித் தாந்த சிவாகம
மறமு ரைக்கு மறைமத மாகுமால்.

வேதங்கள் கூறும் தருமங்களை வகுத்துக் கூறுவதாலும், பிறமதங்களுடன் வாதம் புரிவதாலும் சைவசித்தாந்த ஆகமங்கள் வேதங்களுடன் முழுதும் சம்மதமுடையனவே.

वेदसिद्धान्तयोरैक्यमेकार्थप्रतिपादनात् ।
प्रामाण्यं सदृशं ज्ञेयं पण्डितैरेतयोः सदा ॥ १३॥

ஒரே கருத்தையே உரைப்பதால் வேதங்களும் சைவாகமங்களும் ஒத்த பிராமாணியம் கொண்டன என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

செப்பும் வேதசித் தாந்த மபேதமா
மொப்பின் மெய்ப்பொரு ளொன்றே யுரைத்தலா
லிப்பெ ருஞ்சொற் கலைக ளிரண்டையும்
வைப்ப ரொப்பென மானத் தறிஞரே.

வேதமும், சித்தாந்த ஆகமமும் அபேதமானதும், ஒப்பற்றதுமான பொருளையே உரைப்பதால் இவ்விரண்டையும் அறிஞர்கள் சமமாகவே மதிப்பர்.

सिद्धान्ताख्ये महातन्त्रे कामिकाद्ये शिवोदिते ।
निर्दिष्टमुत्तरे भागे वीरशैवमतं परम् ॥ १४॥

காமிகம் முதலான சைசித்தாந்த ஆகமங்களின் உத்தரபாகத்தில் விளக்கப்படுவது வீரசைவமாகும்.

### வீரசைவ விளக்கம்

ஏக னுற்றருள் காமிக மேமுத
லாக மத்தி னிறைந்திடு முத்தர
பாக முற்றும் பகர்வீர சைவமாஞ்
சோக மற்றுயர் தொன்மதந் தோன்றுமால்.

தனிப் பரம்பொருளாகிய சிவபெருமான் அருளிய காமிகம் முதலான சிவாகமங்களின் பிற்பகுதி பழமைவாய்ந்த வீரசைவத்தை விளக்கிக் கூறுகின்றன.

विद्यायां शिवरूपायां विशेषाद् रमणं यतः ।
तस्मादेते महाभागा वीरशैवा इति स्मृताः ॥ १५॥

சிவவடிவான வித்தையிலேயே எப்போதும் திளைத்திருப்பதால் வீரசைவர்கள் என அழைக்கப்படுகின்றனர்.

சித்த மாகுஞ் சிவமய மாகிய
வித்தை யூடு விசேடம தாகியே
யெத்தி னாலிங் கிரமிப்ப னன்னவன்
பொய்த்தி டாத புகழ்வீர சைவனே.

எக்காரணத்தினுல் சிவமயமாகிய ஞானத்தில் சிறப்பாக மகிழ்கிருனே அக்காரணத்தினுல் அவன் வீரசைவன் எனப்படுகிருன்.

वीशब्देनोच्यते विद्या शिवजीवैक्यबोधिका ।
तस्यां रमन्ते ये शैवा वीरशैवास्तु ते मताः ॥ १६॥

வீ என்பது சிவனுக்கும் ஜீவனுக்குமுள்ள ஐக்கியத்தைப் போதிக்கும் வித்தையைக் குறிப்பது; அவ்வித்தையில் மூழ்கியிருப்போர் வீரசைவர்களெனப்பட்டனர்.

தீத கன்ற சிவசீவ யிக்கியமாம்
வீத ரும்பெரு வித்தையி னன்குறச்
சாத மின்றி ரமிக்குமச் சைவன்மற்
றோதி லன்னோ னுயர்வீர சைவனே.

குற்றமற்ற சிவஜீவ ஐக்கியஞானத்தில் எவனெருவன் மிகவும் மகிழ்கிருனே அவன் வீரசைவனுவான்.

विद्यायां रमते यस्मान्मायां हेयां श्ववद् रहेत् ।
अनेनैव निरुक्तेन वीरमाहेश्वरः स्मृतः ॥ १७॥

மாயையை நாயெனக் கைவிட்டு எப்போதும் உயர்வித்தையிலேயே திளைப்பதால் வீரமாஹேசுவரர் எனவும் அழைக்கப்படுகின்றனர்.

வித்தை யூடு விரவிய மாயையைக்
கைத்து நாயெனக் கண்டு விடுதலை
வைத்த வாதி வருண முணர்த்துறு
முத்தி யாலுயர் வீர மாகேசனாம்.

வித்தையுடன் கலந்த மாயையை நாயென வெறுத்து முத்தியை அடைய முற்படும் பிராமணர்கள் அறிவிக்கும் யுக்தியினுல் உயர்ந்தவன் வீரமாஹேசுவரனுவான்.

वेदान्तजन्यं यज्ज्ञानं विद्येति परिकीर्त्यते ।
विद्यायां रमते तस्यां वीर इत्यभिधीयते ॥ १८॥

வேதாந்தங்களில் உரைக்கப்படும் ஞானமே வித்தையெனப்படுகிறது; அந்த வித்தையில் எப்போதும் திளேப்பவனே வீரசைவனுவான்.

அரியவே தாந்தத்தி னாகு ஞானமே
மருவரும் வித்தையென் றுரைப்பர் மற்றதில்
விரவினோன் யாவன்மற்ற னையன்வீ ரனென்
றுரைதரு கிற்பர்மெய் யுணர்ந்து ளோர்களே.

வேதாந்தம் உணர்த்தும் ஞானமே உயர்ந்த வித்தை எனப்படும். அதில் திளேப்பவனே வீரசைவன்.

शैवैर्माहेश्वरैश्चैव कार्यमन्तर्बहिः क्रमात् ।
शिवो महेश्वरश्चेति नात्यन्तमिह भिद्यते ॥ १९॥

உட்புறம் பூசனை யுடையர் சைவருந்
திட்பமா யேசரு மாவர் தேர்ந்திடிற்
கொட்பறு சிவனரன் போலக் கூறிய
பெட்புறு மவர்களும் பின்ன மாயிடார்.

அகப்பூசையுடையவர் வீரசைவர், புறப்பூசையுடையவர் வீரமாஹேசுவரர்; எனினும், அரன், சிவன் என்பது போல் அவர்களுள் வேற்றுமையில்லே.

यथा तथा न भिद्यन्ते शैवा माहेश्वरा अपि ।
शिवश्रितेषु ते शैवा ज्ञानयज्ञरता नराः ॥२०॥
माहेश्वराः समाख्याताः कर्मयज्ञरता भुवि ।
तस्मादभ्यन्तरे कुर्युः शैवा माहेश्वरा बहिः ॥ २१॥

சைவர்களும் மாஹேசுவரர்களும் உண்மையில் வேறுபட்டவர்களல்லர்; சைவர்கள் மெய்ஞ்ஞானவேள்வியிலும், மாஹேசுவரர்கள் வெளிப்பூசையிலும் திளைப்பவர்கள்.

மிறையறுஞ் சைவர்மெய்ஞ் ஞான வேள்வியுங்
கறையின்மா யேசரொண் கரும வேள்வியும்
பெறுநரென் றுரைத்திடும் பெற்றி யாலகம்
புறமுறு நெறியினர் புகன்று ளோர்களே.

சைவர்கள் மெய்ஞ்ஞானவேள்வியும், மாஹேசுவரர் கருமவேள்வியும் இயற்றுபவர்கள்.

वीरशैवास्तु षड्भेदाः स्थलधर्मविभेदतः ।
भक्तादिव्यवहारेण प्रोच्यन्ते शास्त्रपारगैः ॥ २२॥

ஸ்தலம், தருமம் ஆகியவற்ருலும் பக்தர்கள் முதலியவற்ருலும் வீரசைவர்கள் அறுவகைப்பட்டவர்கள் என அறிஞர் கூறுவர்.

விலகுறு பலநெறி வீர சைவர்தா
மலைவறு பத்தன்முன் வழக்க பேதமுந்
தலநெறி விபேதமுந் தரிக்குந் தன்மையா
லிலகுவ ரறுவகை யினரென் றெண்ணவே.

வீரசைவநெறி அறுவகைப்படும்.

शास्त्रं तु वीरशैवानां षड्विधं स्थलभेदतः ।
धर्मभेदसमायोगादधिकारिविभेदतः ॥ २३॥

வீரசைவசாத்திரமானது ஸ்தலம் தருமம் ஆகிய பேதத்தால் அறுவகைப்பட்டது.

தலத்தொடு பலவகைத் தருமமாதலா
லிலக்கதி காரிகள் பேத மெய்தலால்
விலக்கரு மறிஞராம் வீர சைவர்தங்
கலைத்திற மதுவுமோ ராறு காண்டமாம்.

வீரசைவர்களது நூல்களும் ஆறு காண்டங்கள் கொண்டதாகும்.

आदौ भक्तस्थलं प्रोक्तं ततो माहेश्वरस्थलम् ।
प्रसादिस्थलमन्यत्तु प्राणलिङ्गस्थलं ततः ॥ २४॥
भक्तस्थलं प्रवक्ष्यामि प्रथमं कलशोद्भव ।
तदवान्तरभेदांश्च समाहितमनाः शृणु ॥ २५॥

முதலில் பக்தஸ்தலம், பின்பு மாஹேசுவரஸ்தலம், பிரசாதிஸ்தலம் பிராணலிங்கஸ்தலம், சரணஸ்தலம் பின்னர் ஐக்கியஸ்தலம் என்பன. அவற்றுள் ஓ அகத்தியனே! பக்தஸ்தலத்தையும் அதனுட் பேதங்களையும் விரிவாக முதலில் நான் கூறக் கேள்.

அங்கஸ்தலம்

ஆதிதனி லரும்பத்தத் தலமாகே சத்தலம்பி னடுக்கும் பின்னர்
சாதமுறும் பிரசாதித் தலமதன்பின் பிராணலிங்கித் தலமா
கும்பின்
போதுசர ணத்தலமா றாவதயிக் கியத்தலமாம் புகன்ற
வற்றுண்
மாதவமுன் புறுபத்தத் தலமொடதன் றிறமுரைத்து மகிழ்ந்து
கேண்மோ.

ஆறு தலங்களாவன: பத்தத்தலம், மாகேசத்தலம், பிரசாதித்தலம், பிராணலிங்கித்தலம், சரணத்தலம், ஐக்கியத்தலம் என்பன. அவற்றுள் பத்தத்தலத்தை விளக்குகிறேன். கேள்.

शैवी भक्तिः समुत्पन्ना यस्यासौ भक्त उच्यते ।
तस्यानुष्ठेयधर्माणां मुक्तिर्भक्तस्थलं मतम् ॥ २६॥

எவனுக்கு சிவபக்தி உண்டாகியுள்ளதோ அவன் பக்தன் எனப்படுகிருன். அவனுல் அநுஷ்டிக்கப்பட வேண்டிய தருமங்கள் பக்தஸ்தலம் என வழங்கப்படுகின்றன.

अवान्तरस्थलान्यत्र प्राहुः पञ्चदशोत्तमाः ।
पिण्डता पिण्डविज्ञानं संसारगुणहेयता ॥ २७॥
दीक्षा लिङ्गधृतिश्चैव विभूतेरपि धारणम् ।
रुद्राक्षधारणं पश्चात् पञ्चाक्षरजपस्तथा ॥ २८॥

இதனுட் பிரிவுகள் பதினைந்து ஸ்தலங்கள்: பிண்டதா, பிண்டவிஞ்ஞானம், சம்சாரகுணஹேயதா, தீக்ஷை, லிங்கதாரணம், விபூதிதாரணம், ருத்ராக்ஷதாரணம், பஞ்சாக்ஷரஜபம்,

(இதனுட் பிரிவு)
பரமசிவ பத்தியுள னெவனவனே பத்தனெனப் படுவ
னன்னோன்
றருமமுறை செய்திடுத றலமாகு மதன்றிறத்த தலமூ வைந்தா
நிரையினவை பிண்டமதன் ஞானமொடு சமுசார நீக்க மாசா
னருளிலிங்க நீறுமணி முறைதரித்த லஞ்செழுத்து மறிந்து
கூறல்.

பரமசிவனிடத்தில் பக்தியுடையவனே பக்தன் எனப்படுவான்; அவனுடைய தருமத்தைக் கூறுவதே பத்தத்தலமெனப்படும். அவை பதினைந்துவகைப்படும். அவை முறையே பிண்டம், பிண்டஞானம், சம்சாரநீக்கம், குருகாருணியம், இலிங்க தாரணம், விபூதிதாரணம், உருத்திராக்கதாரணம், பஞ்சாக்கரஜபம்;

भक्तमार्गक्रिया चैव गुरोर्लिङ्गस्य चार्चनम् ।
जङ्गमस्य तथा ह्येषां प्रसादस्वीकृतिस्तथा ॥ २९॥
अत्र दानत्रयं प्रोक्तं सोपाधिनिरुपाधिकम् ।
सहजं चेति निर्दिष्टं समस्तागमपारगैः ॥३०॥
एतानि शिवभक्तस्य कर्तव्यानि प्रयत्नतः ।

பக்தநெறிகிரியை, குரு மற்றும் லிங்கங்களை அருச்சித்தல், குரு, லிங்க, ஜங்கமர்களின் பிராசாதத்தை உட்கொள்ளுதல், ஸோபாதிதாநம், நிருபாதிதானம், ஸஹஜம் என்னும் மூவகை தானங்கள் ஆகியன. இவை அனைத்தையும் அனுஷ்டித்தல் சிவபக்தனின் கடமையாகும்.

**பத்திநெறி குருலிங்க வந்தனைசங் கமபூசை பகர்ந்த வன்னோர்**
**வைத்தபிர சாதவுண வவரிடத்திற் செயுந்தான வகையு பாதி**
**மெய்த்தநி ருபாதியொடு சகசமென மூதறிஞர் விளம்பாநின்ற**
**வித்தலத்தில் வருநெறிக ளனைத்து மியற் றுதல் பத்தர்க் கியல்பு மாதோ.**

பக்திநெறி, குருலிங்கவந்தனம், அவர்கள் வைத்த உணவைப் பிரசாதமாக உண்ணுதல், அவர்களிடத்தில் செய்யும் உபாதி, நிருபாதி, சகசம் எனும் மூவகைத்தானம்; இவை பக்தர்க்கு இயல்பு.

**बहुजन्मकृतैः पुण्यैः प्रक्षीणे पापपञ्जरे ॥ ३१॥**
**शुद्धान्तःकरणो देही पिण्डशब्देन गीयते ।**

பல பிறவிகளில் செய்த நல்வினைப்பயனால் பாவங்கள் முழுதும் அழிக்கப்பட்டு மனம் சுத்தம் அடைந்த ஜீவன் பிண்டம் என அழைக்கப்படுகிறான்.

**शिवशक्तिसमुत्पन्ने प्रपञ्चेऽस्मिन् विकल्प्यते ॥ ३२॥**
**पुण्याधिकः क्षीणपापः शुद्धात्मा पिण्डनामकः ।**

சிவசக்தியால் தோற்றுவிக்கப்படும் இப்பிரபஞ்சத்தில் புண்ணியமிகுதியும் பாவக்குறைவும் அதனால் உண்டான மனத்தூய்மையும் உடையோன் பிண்டன் எனப்படுகிறான்.

### பிண்டத்தலம்

**பண்டொ ராயிரம் பிறவியிற் பயின்றபுண் ணியத்தான்**
**மண்டு தீவினைப் பரப்பறப் புனிதமா மனத்தைக்**

கொண்ட தேகியே கடல்குடித் துயர்குறு முனிவ
பிண்ட நாமமுற் றிடுமென வறைகுவர் பெரியோர்.

எவனுடைய தீவினைகள் முந்தைய பிறவிகளில் செய்த புண்ணியமிகுதியால் முழுதும் களையப்பட்டனவோ அவனே பிண்டமெனப்படுவான்.

एक एव शिवः साक्षाच्चिदानन्दमयो विभुः ॥ ३३॥
निर्विकल्पो निराकारो निर्गुणो निष्प्रपञ्चकः ।
अनाद्यविद्यासम्बन्धात् तदंशो जीवनामकः ॥ ३४॥
देवतिर्यङ्मनुष्यादिजातिभेदे व्यवस्थितः ।

சிவன் ஒருவனே சிதானந்தமயனுயும், எங்கும் வியாபித்தும், எவ்வித மாற்றங்களுமின்றி, எவ்வித உருவமுமின்றி, நிர்க்குணனுய், உலகங்களெல்லாம் கடந்தவனுய் விளங்குகிருன். அச்சிவனின் ஒரு அம்சமான ஜீவன் தொடக்கமிலாத அவித்தையினுல் தேவன், மனிதன், மிருகம் முதலான பிறப்புகளை அடைகிருன்.

உலகி றந்துசிந் மயவ விகாரியா யொளியா
யிலகு றும்பர சிவன்றன தஞ்சமா யிருந்த
வலகி றந்துள சீவர்க ளநாதியா மவித்தை
மலமு றும்பரி சாற்பல பிறவியின் வருவார்.

எல்லாவுலகங்களையும் கடந்து அறிவுருவாய் எவ்வித மாற்றமுமின்றி விளங்கும் பரசிவனின் அம்சமாய்த் திகழும் சீவர்கள் தொடக்கமில் காலந்தொட்டு நிகழும் அவித்தையாகிற மலத்தால் பல பிறவிகளில் தோன்றுவர்.

मायी महेश्वरस्तेषां प्रेरको हृदि संस्थितः ॥ ३५॥
चन्द्रकान्ते यथा तोयं सूर्यकान्ते यथाऽनलः ।
बीजे यथाङ्कुरः सिद्धास्तथात्मनि शिवः स्थितः ॥ ३६॥

மாயையை அடக்கியாள்பவனுன மஹேசுவரன் அனைத்துயிர்களின் இதயத்தில் வீற்றிருந்து அவற்றை இயக்குகிருன். சந்திரகாந்தக்கல்லில் நீரைப் போலும்,

சூரியகாந்தக் கல்லில் நெருப்பைப் போலும், விதையில் முளேயைப் போலும் எல்லா உயிர்களிலும் சிவபெருமான் விளங்குகிருன்.

அனையர் நெஞ்சிடை யியக்கும யேசனுற் றருள்வன்
பனிய விந்துகாந் தத்தினிற் புனல்கதிர்ப் பளிங்கிற்
கனலும் வெவ்வழல் வித்தினின் முளையெனக் கலந்து
முனைவர் சிங்கமென் றுரைத்திட மலையொடு முனிவோய்.

சந்திரகாந்தக்கல்லினுள் இருக்கும் நீரைப் போலும், சூரியகாந்தக் கல்லினுள் நெருப்பைப் போலும், வித்துக்குள் முளேயைப் போலும் சிவபெருமான் அந்த சீவர்களுக்குள் விளங்குகிருன்.

आत्मत्वमीश्वरत्वं च ब्रह्मण्येकत्रकल्पितम् ।
बिम्बत्वं प्रतिबिम्बत्वं यथा पूषणि कल्पितम् ॥ ३७॥

சூரியனில் பிம்பத்தன்மையும் பிரதிபிம்பத்தன்மையும் காணப்படுவது போல் பிரம்மனுன சிவபெருமானிடத்தில் ஜீவான்மத்தன்மையும் ஈசுவரத்தன்மையும் ஏற்றிக் கூறப்படுகின்றன.

வெற்பெ ழுங்கதி ரிடத்தில்விம் பப்பதி விம்ப
முற்ப வம்பெறு மாறென வொருபிர மத்தின்
முற்ப கர்ந்திடு சீவனோ டீசனா முறைமை
கற்பி தம்பெறு மென்பர்பல் கலைநெறி கற்றோர்.

சூரியனிடத்தில் பிம்பபிரதிபிம்பங்கள் தோன்றுவது போல் ஒன்ருகிய பிரம்மத்திலிருந்து சீவர்கள் தோன்றுவதுபோல் விளங்கும்.

गुणत्रयविभेदेन परतत्त्वे चिदात्मनि ।
भोक्तृत्वं चैव भोज्यत्वं प्रेरकत्वं च कल्पितम् ॥ ३८॥

முக்குணங்களின் வேறுபாட்டால் சின்மயமான பரதத்துவத்தில் நுகர்வோன், நுகரப்படும் பொருள், இவற்றை இயக்குபவன் ஆகிய வேறுபாடுகள் ஏற்றப்படுகின்றன.

அறிவ தேவடி வாம்பர தத்துவ மதனி
னிறைவ தாகிய பிரேரகத் துவமொடு நிலைத்த
மறிவில் போத்துருத் துவமிகு போக்கியம் வருமாற்
குறைவி லாதெழு முக்குண பேதமே கொண்டு.

அறிவுருவான பரதத்துவத்தில் முக்குணங்களின் பேதத்தால் பிரேரகத்துவம், போக்திருத்துவம், போக்கியம் ஆகியன தோன்றும்.

गुणत्रयात्मिका शक्तिर्ब्रह्मनिष्ठा सनातनी ।
तद्वैषम्यात् समुत्पन्ना तस्मिन् वस्तुत्रयाभिधा ॥ ३९॥

முக்குண வடிவான சக்தி எப்போதும் பிரம்மத்திலேயே விளங்குகிறது; அதன் மாற்றங்களினுல் மேற்கூறிய நுகர்வோன், நுகரப்படும் பொருள், இவற்றை இயக்குபவன் ஆகிய மூன்று வேறுபாடுகள் ஏற்றப்படுகின்றன.

மடிவி லாதமுக் குணவடி வாகிய மாயை
முடிவி லாதமெய்ச் சிவத்துறு மக்குண மூன்றும்
விடம மேவுற விளம்புமுப் பொருட்பெயர் விரியுங்
கடிவி லாநிலைப் பிரமமா மொருபொருட் கண்ணே.

மாயையானது பிரம்மத்தின்கண் பொருந்தியிருக்கும்; அது முக்குணங்களுக்கேற்றபடி பொருள்களைத் தோற்றுவிக்கும்.

किञ्चित्सत्त्वरजोरूपं भोक्तृसंज्ञकमुच्यते ।
अत्यन्ततामसोपाधिर्भोज्यमित्यभिधीयते ।

சிறிது சத்துவம் மற்றும் ரஜோகுணமுடையது நுகர்வோனெனவும், முற்றிலும் தமோகுணம் கொண்டது நுகரப்படும் பொருளாகவும் வழங்கப்படுகிறது.

परतत्वमयोपाधिर्ब्रह्मचैतन्यमीश्वरः ॥ ४०॥
भोक्ता भोज्यं प्रेरयिता वस्तुत्रयमिदं स्मृतम् ।
अखण्डे ब्रह्मचैतन्ये कल्पितं गुणभेदतः ॥ ४१॥

பிரம்மசைதந்நியம் மாயை உபாதியால் பரதத்துவமாக விளங்குகிறது; நுகர்வோன், நுகரப்படும் பொருள், இவற்றை இயக்குபவன் ஆகிய மூன்று வேறுபாடுகள் பிரிவற்ற பரந்த பிரம்ம சைதந்நியத்தில் ஏற்றப்படுகின்றன.

**தக்க சத்துவ வுபாதிகொள் பிரமசை தந்ய**
**மொக்க வீசனாஞ் சத்துவ ரசோமய முயிரா**
**மிக்க தாமத முடையதே போக்கிய விளைவா**
**முக் கணக்கின்முப் பொருளும்வந் துறுஞ்சிவத் திசைந்து.**

சத்துவ உபாதி மிக்கது ஈசுவரனுகும்;சத்துவமும் ரஜோகுணமும் உடையது சீவனுகும்; தாமதகுணமதிகமுடையது போக்கியமாகிய உலகமாகும்.

अत्र प्रेरयिता शम्भुः शुद्धोपाधिर्महेश्वरः ।
समिश्रोपाधयः सर्वे भोक्तारः पशवः स्मृताः ॥ ४२॥

இங்கு இயக்குபவன் சம்புவாகிய பரமேசுவரன்; அவன் எவ்வித உபாதிகளுமற்று சுயம்பிரகாசமானவன். போகங்களை நுகரும் பசுக்களாகிய ஆன்மாக்கள் உபாதிகளுடையவர்கள்.

भोज्यमव्यक्तमित्युक्तं शुद्धतामसरूपकम् ।
सर्वज्ञः प्रेरकः शम्भुः किञ्चिज्ज्ञो जीव उच्यते ।
अत्यन्तगूढचैतन्यं जडमव्यक्तमुच्यते ॥ ४३॥

நுகரப்படும் பொருள்கள் முழுதும் தமோகுணமுடையன; அவ்வியக்தமென அழைக்கப்படுகின்றன. இயக்குபவனுகிய பரமேசுவரன் அனைத்தையுமறிந்தவன்; அவனுல் இயக்கப்படும் பசுக்களாகிய ஜீவன்கள் சிற்றறிவு உடையன; முழுதும் அறிவற்ற சடப்பொருள்கள் அவ்வியக்தமெனப்படுகின்றன.

**சுத்த மென்றுள வுபாதியிற் றோய்ந்திடு மீசன்**
**மெய்த்தி டும்பதி யாகிய பிரேரகன் மிசிர**
**முய்த்த போத்துருப் பசுவென வறைவர்பே ருணர்வோ**
**னத்த னவ்வுயிர் சிற்றுணர் வுடைய தென்றறியே.**

சுத்த உபாதியுடையோன் ஈசுவரன்; கலந்த உபாதியை உடையவர்கள் பசுவாகிய ஆன்மாக்கள்; ஈசுவரன் பேரறிவாளன்; உயிராகிய பசு சிற்றறிவு உடையது.

उपाधिः पुनराख्यातः शुद्धाशुद्धविभेदतः ।
शुद्धोपाधिः परा माया स्वाश्रया(ऽ)मोहकारिणी ॥ ४४॥

உபாதியானது சுத்தம் அசுத்தம் என இருவகைப்பட்டது; பரமாயையே சுத்த உபாதியென்றும் வழங்கப்படுகிறது. அது தான் ஆசிரயித்திருக்கும் சைதந்நியத்திற்கு எவ்வித குழப்பத்தையும் உண்டாக்காது.

अशुद्धोपाधिरप्येवमविद्याश्रयमोहिनी ।
अविद्याशक्तिभेदेन जीवा बहुविधाः स्मृताः ॥ ४५॥

அவித்தை எனப்படுவதே அசுத்தோபாதியாக உள்ளது. அது தான் ஆசிரயித்திருக்கும் சைதந்நியத்திற்கு குழப்பத்தை விளைவிப்பது. அதன் சக்திபேதத்தால் ஜீவர்கள் பல்வகைப்பட்டவர்களாக உள்ளனர்.

மிகுதி கொண்மறை யுணர்வதவ் வியத்தமாம் பெயர்கொள்
பகுதி நண்ணினர்க் கமோககா ரணியெனும் பரையே
தகுதி கொண்டிடு சுத்தமா மசுத்தமுஞ் சாற்றிற்
றொகுதி கொண்டிடு மோககா ரணியெனத் துணியே.

பரை எனும் மாயை அமோககாரணி—தன்னை ஆசிரயித்தவர்களுக்கு மோகத்தை உண்டாக்காது; அவியக்தமெனும் மாயை மோகத்தை உண்டுபண்ணும்.

मायाशक्तिवशादीशो नानामूर्तिधरः प्रभुः ।
सर्वज्ञः सर्वकर्ता च नित्यमुक्तो महेश्वरः ॥ ४६॥

மாயையின் சக்தியால் சர்வவல்லமையும், அனைத்தையும் அறியும் ஆற்றலும் கொண்ட மஹேசுவரன் பல உருவங்கள் கொள்கிறுன்.

किञ्चित्कर्ता च किञ्चिज्ज्ञो बद्धोऽनादिशरीरवान् ।
अविद्यामोहिता जीवा ब्रह्मैक्यज्ञानवर्जिताः ॥ ४७॥

அவித்தையினுல் கட்டுண்ட ஜீவர்கள் சிற்றறிவும், மிகச் சிறிய அளவே உள்ள ஆற்றலும் கொண்டவர்களாகி தனக்கும் பிரம்மத்திற்குமுள்ள ஐக்கியத்தை அறியாதவர்களாகின்றனர்.

மாயை கொண்டிறை பற்பல மூர்த்திகண் மருவுந்
தூய தன்றெனு மவித்தையாற் றோன்றுவர் பலரா
யேய சீவர்க ளநாதியே முத்தனவ் வீசன்
றீய பந்தனை யநாதியே யுற்றுளர் சீவர்.

மாயையால் ஈசன் பற்பல உருவங்களை அடைவான்; அசுத்தமான அஞ்ஞானத்தால் சீவர்கள் பலராய்த் தோன்றுவார்கள். ஈசன் அநாதிமுத்தன்; சீவர்கள் அநாதியே பந்தத்தை உடையவர்கள்.

परिभ्रमन्ति संसारे निजकर्मानुसारतः ।
देवतिर्यङ्मनुष्यादिनानायोनिविभेदतः ॥ ४८॥

[அதனுல்] ஜீவர்கள் சம்சாரசக்கரத்தில் சுழல்கிருர்கள். தங்களது முந்தைய ஜன்மங்களில் செய்த வினைப்பயனுக்கேற்ப தேவர்கள், மனிதர்கள் மற்றும் மிருகங்கள் முதலான பிறவிகளை அடைகின்றனர்.

चक्रनेमिक्रमेणैव भ्रमन्ति हि शरीरिणः ।
जात्यायुर्भोगवैषम्यकारणं कर्म केवलम् ॥ ४९॥

இவ்வாறு சக்கரச்சுழற்சி போல் சம்சாரத்தில் உழல்கின்றனர்; அவர்களின் பிறப்பு, ஆயுள், சுகதுக்கபோகங்கள் ஆகியவற்றில் காணப்படும் பல வேற்றுமைகளுக்கு அவர்களின் வினைப்பயனே காரணம்.

பரம ஞானமற் றநாதியாம் பாசமுற் றநாதி
கருமவேதுவா லடுத்துள காயங்கண் மருவி

மிருக மாதியாம் பற்பல பிறவியின் விரவித்
தெரும ருஞ்சுழன் றிடும்பெருந் திகிரிபோற் சீவன்.

உயர்ந்த ஞானமற்று அநாதியான பாசத்தைப் பொருந்தி அநாதிகருமங்களால் சீவர்கள் பற்பல பிறவிகளை அடைகிறார்கள்.

एतेषां देहिनां साक्षी प्रेरकः परमेश्वरः ।
एतेषां भ्रमतां नित्यं कर्मयन्त्रनियन्त्रणे ॥ ५०॥
देहिनां प्रेरकः शम्भुर्हितमार्गोपदेशकः ।
पुनरावृत्तिरहितमोक्षमार्गोपदेशकः ॥ ५१॥

இந்த ஜீவர்களுக்குப் பரமேசுவரனே சாக்ஷியாயிருந்து வினைப்பயனை நுகரச் செய்து அவர்களை இயக்குகிறான். அவர்களுக்கு சன்மார்க்கத்தை உபதேசித்து மீண்டும் பிறவியில்லாத மோக்ஷத்தை அடையச் செய்கிறான்.

சாதி யாயுவோ டுணவது தரும்விட மத்திற்
கேது வாயுறுங் கருமமெந் திரமெனச் சுழல்வோர்க்
காதி யாமிறை யியக்குவோ னாய்க்கரி யாகிப்
போத கம்புரிந் தருளுநன் னெறியினைப் பொருந்தி.

கருமமானது பிறவி, ஆயுள், சுகதுக்கபோகங்கள் முதலியவற்றை நல்கும்; இறைவன் ஞானத்தையளித்து அருள்வான்.

स्वकर्मपरिपाकेन प्रक्षीणमलवासनः ।
शिवप्रसादाज्जीवोऽयं जायते शुद्धमानसः ॥ ५२॥

தன் வினைப்பயன் முதிர்ச்சியடைவதால் ஜீவர்களின் [ஆணவ]மலத்தின் தாக்கம் குறைந்து, சிவபெருமானின் கருணையால் மனம் தூய்மை அடைகிறான்.

கூறு சீவனும் வினைபரி பாகமே கொண்டு
மாறு மாமல வாதனை மருவினோ னாகி
யாறு மாமுடி புனைந்தருள் பரசிவ னருளின்
பேறு கூடுறச் சுத்தமா மனமொடு பிறக்கும்.

சீவனும் வினைபரிபாகத்தால் சிவபெருமானின் அருள்கொண்டு வீடுபேறு அடைய சுத்தமான மனத்துடன் பிறப்பான்.

शुद्धान्तः करणे जीवे शुद्धकर्मविपाकतः ।
जायते शिवकारुण्यात् प्रस्फुटा भक्तिरैश्वरी ॥ ५३॥
जन्तुरन्त्यशरीरोऽसौ पिण्डशब्दाभिधेयकः ॥ ५४॥

இவ்வாறு மனத்தூய்மை பெற்ற ஜீவனின் நல்வினைப்பயன்கள் முதிர்ச்சியடைவதாலும் சிவபெருமானின் கருணை நோக்காலும் அவனுக்கு சிவபக்தி உண்டாகிறது. அதன் பயனால் இப்பிறவியே இறுதிப் பிறவியாகிறது. அத்தகைய ஜீவனே பிண்டம் என அழைக்கப்படுகின்றான்.

பாக மாகிய நல்வினைப் பயன்கொடு சுத்த
மாகு மாமன முன்னிடத் தங்கண னருளா
லேக மாஞ்சிவ பத்திதோன் றுறுமவ னீற்றுத்
தேக மோடுநற் பிண்டமென் பெயர்கொடு செறியும்.

பக்குவமடைந்த நல்வினைப்பயனாலும் சிவபெருமானருளினாலும் சிவபக்தி தோன்றும்; அவன் பிண்டம் என்னும் பெயருடன் உலகில் சஞ்சரிப்பான்.

शरीरात्मविवेकेन पिण्डज्ञानी स कथ्यते ।

உடலுக்கும் ஆன்மாவிற்குமிடையே உள்ள வேறுபாட்டை உணர்ந்த அவனே பிண்டஞானி எனப்படுகிறான்.

உற்றிடு முடலுயி ருணர்வி வேகமே
பெற்றவ னெவனவன் பிண்ட ஞானியென்
றற்றம தறுமலை யமர்ந்த மாதவ
கற்றறி புலவர்மெய் கழறு வாரரோ.

உயிரானது எல்லாவற்றையும் அறிவதற்கான விவேகம் பெற்றிருந்தால் அவன் பிண்டஞானி என அழைக்கப்படுகிறான்.

शरीरमेव चार्वाकैरात्मेति परिकीर्त्यते ॥ ५५॥
इन्द्रियाणां तथात्मत्वमपरैः परिभाष्यते ।
बुद्धितत्त्वगतैर्बौद्धैर्बुद्धिरात्मेति गीयते ॥ ५६॥

இப்பருவுடலே ஆன்மா என சாருவாகர்களாலும், இந்திரியங்களே ஆன்மாவென ஏனையோராலும், புத்தியே ஆன்மாவென்று பௌத்தர்களாலும் கூறப்படுகிறது.

உடலுயி ரெனுமுல காய தன்பொறி
யடலுயி ரென்னுமற் றொருவ னன்றியே
புடைவரு புத்தியே யென்னும் புத்தனிவ்
விடலுறு மிவைகளான் மாவின் வேறவாம்.

உலகாயதன் உடலே உயிரென்பான்; வேறொருவன் பொறிகளே உயிரென்பான்; பௌத்தனே புத்தியே உயிரெனக் கொள்வான். ஆனால் அவை யாவும் ஆன்மாவினின்று வேருகும்.

नेन्द्रियाणां न देहस्य न बुद्धेरात्मता भवेत् ।
अहंप्रत्ययवेद्यत्वादनुभूतस्मृतेरपि ॥ ५७॥
शरीरेन्द्रियबुद्धिभ्यो व्यतिरिक्तः सनातनः ।
आत्मस्थितिविवेकी यः पिण्डज्ञानी स कथ्यते ॥ ५८॥

நான் எனும் அறிவால் உணரப்படுவதாலும், உடல் மனம் ஆகியவற்றுல் அறிந்தவற்றை உணர்வதாலும் இந்திரியங்களோ, பருவுடலோ அல்லது புத்தியோ ஆன்மா அன்று; இப்பருவுடல், மனம், இந்திரியம் ஆகியவற்றினின்று வேறுபட்டு எப்போதும் அழியாமல் விளங்கும் அறிவுடைப் பொருளே ஆன்மா என உணர்பவனே பிண்டஞானியாவான்.

உயிரின்வே றாகிநின் றுணரப் பட்டிடுஞ்
செயிருறு முடலோ டிந்திரிய புத்தியி
னயலழி வரியவான் மாவுண் டாமென
நயமுட னுணர்பவன் பிண்ட ஞானியே.

உடல், உணரும் உயிர், இந்திரியங்கள், புத்தி ஆகியவற்றிலிருந்து வேருகி நிற்பதே ஆன்மா என உணர்பவனே பிண்டஞானி.

नश्वराणि शरीराणि नानारूपाणि कर्मणा ।
आश्रितो नित्य एवासाविति जन्तोर्विवेकिता ॥ ५९॥

பற்பல உருவங்கொண்ட பருவுடல் முதலியன நிலையற்றவை; முற்பிறவிகளில் செய்த வினைப்பயன்களுக்குப் புகலிடமே இவை என அறிவதே ஜீவர்களின் விவேகஞானமாகும்.

शरीरात् पृथगात्मानमात्मभ्यः पृथगीश्वरम् ।
प्रेरकं यो विजानाति पिण्डज्ञानीति कथ्यते ॥ ६०॥

உடலினின்றும் வேறுபட்டு ஆன்மா உள்ளது என்றும், ஆன்மாக்களிலிருந்து வேறுபட்டவன் ஈசுவரன் என்றும், அவனே நம்மை இயக்குபவன் என்றும் அறிந்தவனே பிண்டஞானியாவான்.

வினைவழி திரிதரு மெய்யும் வேறதாய்
நினைவரு நித்தவான் மாவு நித்தமா
யனையவான் மாவின்வே றாய வீசனும்
பினமுற வறிபவன் பிண்ட ஞானியே.

வினையின் வழி இயங்கும் உடல், நித்தியமான ஆன்மா, ஈசுவரன் என்னும் முப்பொருளையும் வெவ்வேறென அறிபவனே பிண்டஞானி.

निरस्तहृत्कलङ्कस्य नित्यानित्यविवेकिनः ।
संसारहेयताबुद्धिर्जायते वासनाबलात् ॥ ६१॥

மனத்திலுள்ள அழுக்குகள் நீங்கப்பெறுவதாலும், நித்தியம் மற்றும் அநித்தியப் பொருள்களைப் பற்றிய விவேகஞானம் உண்டாவதாலும் நல்வினைப் பயனுலும் அந்த ஜீவனுக்கு இந்த சம்சாரச் சுழற்சி நீக்கப்படவேண்டுமெனும் எண்ணம் ஏற்படுகிறது.

## சமுசாரநீக்கத்தலம்

சுத்தம துறுமனந் தோன்று நித்தியா
நித்திய விவேகிபா னின்ற வாதனா
சத்தியின் மிகுசமு சாரம் விட்டொழி
புத்திவந் துறுமெனப் புகல்வர் கற்றுளார்.

நித்தியப் பொருளேயும் அநித்தியப் பொருளேயும் பகுத்துணரும் விவேகியினிடத்தில் முந்தைய ஜன்ம புண்ணிய வாசனையால் சம்சாரத்தை விட்டு நீங்க வேண்டும் எனும் புத்தியுண்டாகும்.

ऐहिके क्षणिके सौख्ये पुत्रदारादिसम्भवे ।
क्षयित्वादियुते स्वर्गे कस्य वाञ्छा विवेकिनः ॥ ६२॥

மனேவி, மக்கள் முதலிய இவ்வுலக இன்பங்களும், சுவர்க்க இன்பங்களும் நொடிப்பொழுதில் அழிவன; எனவே அவை நிலேயற்றவை. விவேகமுடையவனுக்கு இவற்றில் பற்றே இராது.

பெண்டெழு வாய்தரு பேறி மைப்பினில்
விண்டிடு மிம்மையு மேய புண்ணிய
முண்டொழி துயர்முத லுறுது றக்கமுங்
கண்டெவர் விரும்புவார் கற்று ளோரினே.

இமைப் பொழுதில் நீங்கும் இவ்வுலக இன்பங்களேயும், பரலோக சுகங்களேயும் கற்றவர்கள் விரும்புவதில்லே.

जातस्य हि ध्रुवो मृत्युर्ध्रुवं जन्म मृतस्य च ।
जन्तुर्मरणजन्मभ्यां परिभ्रमति चक्रवत् ॥ ६३॥

பிறந்தவனுக்கு இறப்பும், இறந்தவனுக்குப் பிறப்பும் இவ்வுலகில் மாருமல் சக்கரம் போல் சுழன்று கொண்டே உள்ளது.

பிறந்தவர்க் குண்மையே பெறுமி றப்புமற்
றறிந்தவர்க் கன்னதே பிறப்பு மிவ்வகை
செறிந்துள பிறப்புட னிறப்பிற் சீவனு
மறிந்திடு சகடமே போல வந்துறும்.

சக்கரச் சுழற்சி போல் பிறப்பும் இறப்பும் சீவர்களுக்கு தொடர்ந்து வந்து கொண்டே இருக்கும்.

मत्स्यकूर्मवराहाद्यैर्नृसिंहमनुजादिभिः ।
जातेन निधनं प्राप्तं विष्णुनापि महात्मना ॥ ६४॥

கடவுளான விஷ்ணுவும் மச்சம், கூர்மம், வராஹம், நரசிம்ஹம் போன்ற பிறவிகளையடைந்து பின்னர் மரணமும் அடைந்தார்.

மீனொடு கமடமே வெண்பற் பன்றிமா
மானிட வரிமுத லாக வந்துள
வேனைய பிறப்பினு மெய்து மாயவன்
றானுமம் மரணநோய் தள்ள வல்லனோ.

மீன், ஆமை, நரசிங்கம் முதலான பிறவிகளையெடுத்த திருமால் கூட மரண நோயைத் நீக்கவல்லவன் அல்லன்.

भूत्वा कर्मवशाज्जन्तुर्ब्राह्मणादिषु जातिषु ।
तापत्रयमहावह्निसन्तापाद् दह्यते भृशम् ॥ ६५॥

ஜீவன் தனது முன்வினைப்பயனுல் பிராம்மணன் முதலான பிறப்புகளை அடைந்து மூவகைத்துன்பங்களையும் அனுபவிக்கிறது.

ஆவிமுன் வினைவசத் தந்த ணாதியாய்
மேவுறு சாதியின் விரவித் தோன்றியே
தாவுற வடருமுத் தாப வங்கியால்
வேவுறு நிலைமையாம் விளம்ப வேண்டுமோ .

உயிரானது முன்வினைவசத்தால் அந்தணர் முதலிய சாதிகளில் பிறந்து பற்பல துன்பங்களை அனுபவிக்கிறது.

कर्ममूलेन दुःखेन पीड्यमानस्य देहिनः ।
आध्यात्मिकादिना नित्यं कुत्र विश्रान्तिरिष्यते ॥ ६६॥

கருமவசத்தால் ஆத்தியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் எனும் மூவகைத் துன்பங்களை அனுபவிக்கும் ஜீவர்களுக்கு அமைதி என்பது ஏது?

பொய்த்திடா தடையுறும் வினையிற் போதரு
மத்தியான் மிகமுத லாய வெந்துயர்க்
கொத்தினான் மிகுமிடர் கொண்டு ளோர்தமக்
கெய்த்திடா தமைதலெவ் விடத்துண் டாகுமோ.

தவறுமல் வந்து சேரும் வினைப் பயனுல் ஆத்தியாத்மிகம் முதலான துன்பங்கள் சீவனை வந்தடையும்.

आध्यात्मिकं तु प्रथमं द्वितीयं चाधिभौतिकम् ।
आधिदैविकमन्यच्च दुःखत्रयमिदं स्मृतम् ॥ ६७॥

முதலாவது ஆத்யாத்மிகம், இரண்டாவது ஆதிபௌதிகம், மூன்றுவது ஆதிதைவிகம் என அவை மூவகைப்படும்.

ஆதியத் தியான்மிகம் பவுதி கம்பினா
மோதுதெய் வீகமூன் றாவ தாகுமாற்
போதுமத் தியான்மிகம் புறமுட் கொண்டிரு
பேதமுற் றிடுமெனப் பேசு வாரரோ.

ஆத்தியான்மிகம், ஆதிபௌதிகம் ஆதிதைவிகம் என்பன அம்மூவகைத் துன்பங்கள்; அகம், புறம் என ஆத்தியான்மிகம் இருவகைப்படும்.

आध्यात्मिकं द्विधा प्रोक्तं बाह्याभ्यन्तर भेदतः ।
वातपित्तादिजं दुःखं बाह्यमाध्यात्मिकं मतम् ॥ ६८॥

ஆத்யாத்மிகம் பாஹியம், ஆப்பியந்தரம் என இருவகைப்பட்டது; வாதம், பித்தம், முதலியவற்ருல் ஏற்படும் துக்கம் பாஹிய ஆத்யாத்மிகம் ஆகும்.

வளிமுத லனதர வரல்பு றத்ததா
முளினது மடிவில்கா மாதி யுய்க்குதல்
களியர சாதிநோய் பவுதி கங்கழு
தளியிடர் முதலதெய் வீக மாகுமால்.

வாதம் முதலியவற்ருல் உண்டாகும் நோய்கள் புறத்தன; காமம் ஆகியவை தோற்றுவிப்பன அகத்தன. அரசர்கள், பிருதிவீ

முதலிய பஞ்சபூதங்களும் தோற்றுவிப்பன பௌதிகமாகும். பேய் முதலானவை உண்டாக்குவன ஆதிதைவிகம்.

रागद्वेषादिसम्पन्नमान्तरं परिकीर्त्यते ।
आधिभौतिकमेतद्धि दुःखं राजादिभूतजम् ॥ ६९॥
आधिदैविकमाख्यातं ग्रहयक्षादिसम्भवम् ।
दुःखैरेतैरुपेतस्य कर्मबद्धस्य देहिनः ।
स्वर्गे वा यदि वा भूमौ सुखलेशो न विद्यते ॥ ७०॥

விருப்பு வெறுப்பு ஆகியவற்ருல் ஏற்படும் துன்பங்கள் ஆப்பியந்தரம் ஆகும்; அரசர்கள், மற்றும் ஐம்பெரும் பூதங்களால் உண்டாகும் துன்பங்கள் ஆதிபௌதிகமாகும். கிரஹங்கள், பேய் முதலியவற்ருல் உண்டாகுபவை ஆதிதைவிகம் எனப்படும். இத்தகைய துன்பங்களாலும், முன்வினைப்பயன்களாலும் கட்டுண்ட ஜீவர்களுக்கு சுவர்க்கத்திலோ அல்லது இப்புவியிலோ எவ்வித சுகமும் இல்லை.

இனைய வெந்துயர் பலவிசைந் துகட்டுறும்
வினையொடு திரிதரு முயிர்க்கு விண்ணிடை
யெனினுமிம் மண்ணிடை யெனினு மோர்கணந்
துனியறும் படிசிறு சுகமு மின்றரோ.

வினைப்பயனுல் இத்தகைய துன்பங்களை அனுபவிக்கும் உயிர்க்கு மண்ணுலகிலும் விண்ணுலகிலும் எவ்வித சுகமுமில்லை.

तडित्सु वीचिमालासु प्रदीपस्य प्रभासु च ।
सम्पत्सु कर्ममूलासु कस्य वा स्थिरतामतिः ॥ ७१॥

மின்னல், கடல் அலைகள், தீபஒளியின் பிரதிபலிப்பு, அவ்வாறே முன்வினைப்பயனின் விளைவான செல்வங்கள் ஆகியன நிலையானவை என்று எவன் தான் நம்புவான்?

மின்னினு மலையினும் விளக்கெ ழுஞ்சிகை
தன்னினு நிலையறத் தபுசெல் வத்தினை

மன்னுறு பொருளென மதிப்ப ரோகண
மென்னினு மறிஞரோ டிருந்து ளோருமே.

செல்வமானது மின்னலைபோலும் கடல் அலையைப் போலும் நிலையற்றதென அறிஞர்களோடு கூடியிருந்தவர்கள் அறிவார்கள்.

मलकोशे शरीरेऽस्मिन् महादुःखविवर्धने ।
तडिदङ्कुरसङ्काशे को वा रुच्येत पण्डितः ॥ ८२॥

மலசலங்கள் நிறைந்ததும் பெரும் துயரத்திற்கு இடமானதும் மின்னலைப் போலும் விதையின் முளையைப் போலும் நிலையற்றதுமான இப்பருவுடலை அறிவுடைய எவன் தான் விரும்புவான்?

மலசல நிறைதரு கடத்தை வன்றுய
ரலைபடு துரும்பினை யழியு மின்னினு
நிலையறு மிவ்வுட றன்னை நிந்தைசெய்
புலைமனை தன்னையார் பொருந்து வார்களே.

மலம் முதலான அழுக்குகள் நிறைந்த குடத்திற்கொப்பானதும், பல துன்பங்களுக்கு ஆட்பட்டதும், மின்னலைப் போல் நிலையற்றதுமான இவ்வுடலை யார்தான் வெறுக்கமாட்டார்கள்?

नित्यानन्दचिदाकारमात्मतत्त्वं विहाय कः ।
विवेकी रमते देहे नश्वरे दुःखभाजने ॥ ८३॥

அழிவற்ற ஆனந்தம் மற்றும் சைதந்நிய சொரூபமான ஆன்மாவை விட்டு நிலையற்றதான இந்த சரீரத்தில் எந்த விவேகிதான் ஆனந்தமடைவான்?

நித்தியா நந்தசிற் சொரூப நின்றிட
மித்தையா மியல்புடைத் துயர வீடென
வைத்தவா கத்தினை மகிழ்ந்தி ருந்திடும்
புத்தியார் செய்குவர் புலவர் தம்மினே.

அழிவில்லாத ஆனந்தத்தையுடைய சிற்சொரூபமான ஆன்மா இருக்க, துன்பத்திற்கே இடமான இவ்வுடலை அறிஞர்கள் ஒருபோதும் விரும்பமாட்டார்கள்.

विवेकी शुद्धहृदयो निश्चितात्मसुखोदयः ।
दुःखहेतौ शरीरेऽस्मिन् कलत्रे च सुतेषु च ॥८४॥
सुहृत्सु बन्धुवर्गेषु धनेषु कुलपद्धतौ ।
अनित्यबुद्ध्या सर्वत्र वैराग्यं परमश्नुते ॥ ८५॥

விவேகமும் தூய்மையான மனத்தையுமுடையவன் ஆன்மசுகமே நிலையானது என்னும் உணர்வுடன் அனைத்துத் துன்பங்களுக்கும் காரணமான இப்பருவுடல், மனைவி, மக்கள், நண்பர்கள், உறவினர்கள், செல்வம், குல வழக்கங்கள் ஆகியவை நிலையற்றவை என்று உறுதி கொண்டு அவற்றிலிருந்து வைராக்கியம் அடைகிறான்.

ஓதியா னிடர்தரு முடம்பின் மக்களின்
மாதரி னுறவினின் மற்று ளோர்தமிற்
கோதுறு தனத்தினிற் குலத்திற் போக்குறு
காதலி னநித்தியங் காண்ப னென்றுமே.

நல்ல நூல்களைக் கற்றவன் துன்பத்திற்கிடமான இவ்வுடல், பொருள், மக்கள், உறவு ஆகியவற்றில் நாட்டம் கொள்ளமாட்டான்.

विवेकिनो विरक्तस्य विषयेष्वात्मरागिणः ।
संसारदुःखविच्छेदहेतौ बुद्धिः प्रवर्तते ॥ ८६॥

விவேகம் வைராக்கியம், உலக இன்பங்களில் வெறுப்பும் உடையோனுக்கு சம்சார துக்கத்திலிருந்து விடுதலை பெறுவதற்கான உபாயத்தைத் தேடுவதில் புத்தி நாட்டம் கொள்கிறது.

பொறிகளின் விரத்தியாய்ப் பொருவி றம்மையே
யறிவுற விழைவுடை யறிஞர்க் காழ்துயர்
மறிவுறு குடும்பநோய் மாற்று மேதுவிற்
செறிவுறு முளமெனச் செப்பு வாரரோ.

ஐம்புலன்களிலும் வெறுப்புடையோர்க்கு அவர்களின் மனம் அமைதி பெறும் என அறிஞர்கள் கூறுவர்.

नित्यानित्यविवेकिनः सुकृतिनः शुद्धाशयस्यात्मनो
ब्राह्मोपेन्द्रमहेन्द्रमुख्यविभवेष्वस्थायितां पश्यतः ।
नित्यानन्दपदे निराकृतजगत्संसारदुःखोदये
साम्बे चन्द्रशिरोमणौ समुदयेद्भक्तिर्भवध्वंसिनी ॥ ७७॥

நித்தியம் அநித்தியம் ஆகியவற்றைப் பகுத்தறிந்தவனும், முற்பிறவிகளின் நல்வினைப்பயனுடையவனும், மனம் தூய்மை பெற்றவனும், பிரம்ம, விஷ்ணு மஹேந்திரன் ஆகிய தேவர்களின் சுகங்கள் கூட நிலயற்றவை என்று உணர்ந்தவனுமாகிய விவேகஞானிக்கு அழிவற்ற சுகமுடையதும் சம்சாரதுக்கத்தை அறவே அழிப்பதுமான சிவபதத்தை அடைவதற்கான சிவபக்தி உண்டாகிறது.

ஆசறு மனமுட னநித்த நித்தமுந்
தேசுற வுணர்ந்துநற் றெய்வ வாழ்வினு
நேசம தகன்றுள நெறியி னோனிடைப்
பாசம தறுசிவ பத்தி தோன்றுமால்.

குற்றமற்ற மனத்துடன் நித்தியப் பொருளேயும் அநித்தியப் பொருளேயும் பகுத்தறிந்து, சுவர்க்கவாழ்வு முதலியவற்றில் விரக்தி கொண்டு நன்னெறியுடன் வாழ்பவனிடத்தில் சிவபக்தி தோன்றும்.

॥इति श्रीवीरशैवधर्मनिर्णये सिद्धान्तशिखामणौ भक्तस्थले पिण्डज्ञानसंसारहेयस्थलप्रसङ्गो नाम पञ्चमः परिच्छेदः ५॥

॥ षष्ठः परिच्छेदः ॥

ततो विवेकसम्पन्नो विरागी शुद्धमानसः ।
जिज्ञासुः सर्वसंसारदोषध्वंसकरं शिवम् ॥ १॥
उपैति लोकविख्यातं लोभमोहविवर्जितम् ।
आत्मतत्त्वविचारज्ञं विमुक्तविषयभ्रमम् ॥ २॥

பின்னர் அவ்வாறு விவேகமும் வைராக்கியமும் கொண்டவனுகி மனத்தூய்மையுடன் சம்சாரதுக்கத்தை அழிக்கவல்ல சிவபெருமானை அறிந்து கொள்வதற்காக புகழ் பெற்றவரும், விருப்பு வெறுப்பு அற்றவரும் ஆன்மதத்துவத்தை நன்கு உணர்ந்தவரும் உலக இன்பங்களைத் துறந்தவரும்,

மலர்தலை யுலக மெல்லா மலிபெரும் புகழோ டொன்றி
யிலனென விவறன் மோக மிரித்துத்தத் துவமு ணர்ந்து
புலநெறி கடந்து சாந்தம் பொருந்திச்சித் தாந்த மோடு
பலகலை தெரிவுற் றையம் பாற்றிட வல்ல னாகி.

உலகில் புகழுடன் வாழ்ந்து, லோபம், மோகம் முதலிய தீய குணங்களின்றி, உண்மைப் பொருளையறிந்து, புலன்களை அடக்கி, மனத்தில் அமைதியுடன் சைவசித்தாந்தம் முதலான நூல்களைக் கற்றுணர்ந்து,

शिवसिद्धान्ततत्त्वज्ञं छिन्नसन्देहविभ्रमम् ।
सर्वतन्त्रप्रयोगज्ञं धार्मिकं सत्यवादिनम् ॥ ३॥

சிவசித்தாந்தக் கருத்துக்களை நன்கு அறிந்தவரும், ஐயம் சிறிதுமில்லாதவரும், எல்லா தந்திரங்களின் பிரயோகத்தையுமறிந்தவரும், தருமத்தின் வழி நடப்பவரும், உண்மையே பேசுபவரும்,

कुलक्रमागताचारं कुमार्गाचारवर्जितम् ।
शिवध्यानपरं शान्तं शिवतत्त्वविवेकिनम् ॥ ४॥

தன்னுடைய குலவழக்கமான ஒழுக்கங்களைக் கடைப்பிடிப்பவரும், தீயநடத்தையற்றவரும், சிவபெருமான் மீது

தியானம் செய்பவரும், மன அமைதியுடையவரும் சிவதத்துவத்தையறிந்தவரும்,

அறநெறி வாய்மை மேவி யாரிய குலத்தாற் போந்த
முறைநெறி யொழுக்க மெய்தி முத்திநே யத்தனாகிப்
பொறையொடு பொருந்தி யக்க மணிதிகழ் பூதி யென்று
நிறைவுற வணிந்தி லிங்க நிலைபெற வுடற ரித்து.

தருமநெறியைக் கைக்கொண்டு, முத்தியில் நாட்டமுடையோனுகி, ருத்திராக்கமாலே, விபூதி, லிங்கம் ஆகிய சிவசின்னங்களேயணிந்து,

भस्मोद्धूलननिष्णातं भस्मतत्त्वविवेकिनम् ।
त्रिपुण्ड्रधारणोत्कण्ठं धृतरुद्राक्षमालिकम् ॥ ५॥

திருநீற்றை அணிபவரும் அதன் தத்துவத்தை அறிந்தவரும் திருநீற்றினுல் திரிபுண்டரம் தரிப்பதில் எப்போதும் விருப்பமுடையவரும், ருத்திராக்ஷமாலேகளே அணிபவரும்,

लिङ्गधारणसंयुक्तं लिङ्गपूजापरायणम् ।
लिङ्गाङ्गयोगतत्त्वज्ञं निरूढाद्वैतवासनम् ॥ ६॥

லிங்கத்தை அணிந்திருப்பவரும் லிங்கபூஜையை இடையருது செய்பவரும் லிங்கம் அங்கம் ஆகியவற்றின் தத்துவங்களே அறிந்தவரும், அத்துவித அனுபவமுடையவரும்

लिङ्गाङ्गस्थलभेदज्ञं श्रीगुरुं शिववादिनम् ।
सेवेत परमाचार्यं शिष्यो भक्तिभयान्वितः ॥ ७॥

லிங்கத்தலம் அங்கத்தலம் ஆகியவற்றின் பேதத்தை உணர்ந்தவரும் சிவத்தைப் பற்றியே பேசுபவருமான நல்ல குருவைச் சென்றடைகிருன்.

அகத்துறு தியாந மேவி யருச்சனை புரிவோ னாகி
யுகப்புறு மங்க லிங்க யோகதத் துவமு ணர்ந்தே
யிகப்பறு தலங்க ளோர்வுற் றெய்தியத் துவித ஞானந்
தகச்சிவ முணர்த்த வல்ல தயங்குஞ்சீர்க் குரவன் றன்னை.

மாசறு மனத்த னாகி மதியுடை விராகி யானோன்
பாசம தனைத்து நீக்கும் பரசிவ முணரத் தோன்று
நேசமோ டடைவன் பாம்பி னெளிதிரைக் கடல்வ றப்ப
வாசம நஞ்செய் தோங்கு மகத்தியப் பெயரி னானே.

மனத்தில் தியானம் செய்து சிவபெருமானை அருச்சித்து, அங்கலிங்க தத்துவங்களையறிந்தவன் பாசம் நீங்குவதற்காக சிவாத்துவித ஞானத்தை நல்கும் தக்க குருவை அடைவான்.

षण्मासान्वत्सरं वापि यावदेष प्रसीदति ।
प्रसन्नं परमाचार्यं भक्त्या मुक्तिप्रदर्शकम् ॥ ८॥
प्रार्थयेदग्रतः शिष्यः प्राञ्जलिर्विनयान्वितः ।
भो कल्याण महाभाग शिवज्ञानमहोदधे ॥ ९॥
आचार्यवर्य सम्प्राप्तं रक्ष मां भवरोगिणम् ।

ஆறு மாதங்களோ ஒரு வருடமோ அவரது மனது மகிழ்ச்சியடையும் வரை முத்திமார்க்கத்தைக் காட்டவல்ல அக்குருவிற்குப் பணிவிடைகள் செய்து, பின்னர் சீடனைவன் அவர் முன் வீழ்ந்து வணங்கி மிக்க அடக்கத்துடன், ஓ நன்மை மிக்கவரே! பெருந்தகையே! சிவஞானக் கடலே! ஆசாரியர்களுட் சிறந்தவரே! சம்சாரமெனும் கொடிய நோயால் பீடிக்கப்பட்டு தங்களை வந்தடைந்த என்னைக் காப்பாற்றுங்கள்.

திங்களா றேனு மாண்டொன் றாயினுந் தேசி கன்றன்
பொங்கருள் காணுங் காறும் புரிந்துநற் பணிகள் காணி
னங்கருள் சில சீட னஞ்சலி செய்து நின்றே
பங்கமாம் பிறவி நோயெற் பரிந்தருள் புரிக வென்பான்.

அச்சீடன் ஆறு மாதங்களாயினும் ஓராண்டாயினும் குருவிற்கு பணிவிடைகள் செய்து அவரது அருளைப் பெற்று எனது பிறவி நோயை நீக்கவேண்டுமென அவரைப் பிரார்த்திப்பான்.

इति शुद्धेन शिष्येण प्रार्थितः परमो गुरुः ॥ १०॥
शक्तिपातं समालोक्य दीक्षया योजयेदमुम् ।

தூய்மையான அச்சீடனுல் வேண்டிக்கொள்ளப்பட்ட அக்குருவானவர் அவனுடைய சக்திபாதத்தின் தன்மையை நன்கு ஆய்ந்து தகுந்த தீக்ஷையை அவனுக்குச் செய்யவேண்டும்.

दीयते च शिवज्ञानं क्षीयते पाशबन्धनम् ॥ ११॥
यस्मादतः समाख्याता दीक्षेतीयं विचक्षणैः ।

சிவஞானத்தை அளிப்பதும் பாசக்கட்டுக்களை அழிக்கவல்லதுமே தீக்ஷை என கற்றவர்களால் கூறப்படுகின்றது.

புனித மாணாக்க னின்ன புகன்றரு ளிரந்து நிற்ப
வனையவன் றனது சத்தி பாதமுற் றறிந்து பின்னர்
வினைதபு தீக்கை யோடு மேவுவித் தருள்வ னென்ப
தனிவரு பரமா நந்த தத்துவக் குரவ னன்றே.

சீடன் இவ்வாறு வேண்டவும், குருவானவர் அவனது சக்திநிபாதத்தை ஆராய்ந்து அதற்குத் தக்கவாறு தீக்கை செய்து அருள்புரிவார்.

सा दीक्षा त्रिविधा प्रोक्ता शिवागमविशारदैः ॥१२॥
वेधारूपा क्रियारूपा मन्त्ररूपा च तापस ।

ஓ முனிவரே! சைவாகமங்களை உணர்ந்தோரால் அத்தீக்ஷை மூவிதமாகக் கூறப்படுகிறது: அவை வேதா, கிரியை மற்றும் மந்திரம் என்பன.

गुरोरालोकमात्रेण हस्तमस्तकयोगतः ॥ १३॥
यः शिवत्वसमावेशो वेधा दीक्षेति सा मता ।

குருவின் பார்வை ஒன்றினுலேயே அவருடைய கைகளால் சீடனுடைய தலையைத் தொட்டு சிவத்துவத்தை அடைவித்தல் வேதா தீக்ஷை எனப்படும்.

மூவகை யுறுமத் தீக்கை முறைதரு வேதா வென்றும்
தாவின்மந் திரம தென்றுந் தகுதிகொள் கிரியை யென்று

மேவுறு மவற்றுள் வேதா மெய்க்குரு காட்சி யானே
யாவிகொள் சிவம்வி ளங்க லத்தமத் தகயோ கத்தால்.

அத்தீக்ஷை வேதா, மந்திரம், கிரியை என மூவகைப்படும். குரு தனது திருக்கண்ணோக்காலும், திருக்கையால் சீடனின் தலையைத் தீண்டுவதாலும், அவனிடத்திலுள்ள சிவத்துவத்தை விளங்கச் செய்தல் வேதா தீக்ஷை எனப்படும்.

मन्त्री दीक्षेति सा प्रोक्ता मन्त्रमात्रोपदेशिनी॥ १४॥
कुण्डमण्डलिकोपेता क्रियादीक्षा क्रियोत्तरा ।

மந்திரதீக்ஷையில் மந்திரம் மட்டுமே உபதேசிக்கப்படும்; குண்டம் மண்டலம் ஆகியன கொண்டு இயற்றப்படுவது கிரியா தீக்ஷையாகும்.

மந்திர மதனை யேதன் மைந்தனுக் குபதே சித்தல்
சிந்தைசெய் மந்தி ரப்போர்த் தீக்கையாங் குண்ட மாதி
தந்திரங் கொண்டு செய்த றக்கநற் கிரியை யென்ப
ரந்தம தடைந்த வந்தக் கிரியையை யறைது மாதோ.

சீடனுக்கு மந்திரத்தை உபதேசித்தல் மந்திரதீக்ஷை; குண்டம், மண்டலம் ஆகியன கொண்டு செய்தல் கிரியாதீக்ஷை எனப்படும்.

शुभमासे शुभतिथौ शुभकाले शुभेऽहनि ॥ १५॥
विभूतिं शिवभक्तेभ्यो दत्त्वा ताम्बूलपूर्वकम् ।
यथाविधि यथायोगं शिष्यमानीय देशिकः ॥ १६॥
स्नातं शुक्लाम्बरधरं दन्तधावनपूर्वकम् ।

சுபமாதத்தில் சுபதிதியில் சுபநாளில் சுபவேளையில் சிவபக்தர்களுக்கு விபூதி மற்று தாம்பூலம் ஆகியன அவர்களுக்குத் தக்கவாறு முறையே கொடுத்து தேசிகர் பற்களைத் தேய்த்து சுத்தம் செய்து, ஸ்நானம் செய்து வெள்ளாடை தரித்த சீடனை அழைத்து வந்து

தீங்கறு திங்க ணல்ல திதிகால வார மொன்ற
வோங்குறு பூதி தாம்பூ லத்தொடு முதவிப் பத்தர்க்

கீங்கற லாட லாதி யியற்றிவெண் டுகில்பு னைந்து
பாங்குறு சீடன் றன்னைப் பகர் முறை யருக ழைத்து.

ஒரு சுபதினத்தில் விடியும் முன்னரே துயிலெழுந்து, நீராடி தூய ஆடையணிந்து சீடனே அருகில் அழைத்து,

मण्डले स्थापयेच्छिष्यं प्राङ्मुखं तदुदङ्मुखः ॥ १७॥
शिवस्य नाम कीर्तिं च चिन्तामपि च कारयेत् ।

மண்டலத்தில் கிழக்கு முகமாக நிறுத்தி தான் வடமுகமாக நின்று கொண்டு சிவநாமங்களேயும் மஹிமைகளேயும் பாடி சிவத்தியாநம் செய்யவேண்டும்.

உத்தர திசையை நோக்கி யுற்றதன் பாங்கர்ச் செய்த
சித்திர மண்ட பத்திற் குணக்கெனுந் திசையை நோக்கி
வைத்தருள் புரியு மாசான் மலிசிவத் துதிக டாஞ்செய்
வித்தக விருளி ரிக்குந் தியாநமும் விரவு விப்பன்.

குரு வடதிசை நோக்கியமர்ந்து, சீடனே மண்டபத்தில் கிழக்கு நோக்கி அமர்த்தி, சிவத்துதிகளேயும் தியானம் முதலியவற்றையும் செய்து,

विभूतिपट्टं दत्त्वाग्रे यथास्थानं यथाविधि ॥१८॥
पञ्चब्रह्ममयैस्तत्र स्थापितैः कलशोदकैः ।
आचार्यः सममृत्विग्भिस्त्रिः शिष्यमभिषिञ्चयेत् ॥ १९॥

அந்தந்த இடத்திற்கேற்றவாறு முறைப்படி விபூதிபட்டம் முதலில் கொடுத்து முன்னரே பூஜிக்கப்பட்ட பஞ்சபிரம்ம கலசத்திலிருந்து ஆசாரியர் ரித்விக்குகளுடன் சேர்ந்து சீடனே மும்முறை அபிஷேகம் செய்யவேண்டும்.

முன்னர்நன் னீற்றுப் பட்ட மொழியிடம் வழாத ணிந்து
பின்னர்மெய்க் குரவ ராயைம் பிரமமே வடிவா யுற்ற
தன்னிகர் கும்ப நீரச் சற்குரு வழியின் வந்த
செந்நெறி யுடைய வாசான் சிதறுக சீடன் மீது.

சீடனுடைய உடலில் உரிய இடங்களில் திருநீற்றுப் பட்டங்களை அணிவித்து, பஞ்சபிரமமே உருவான திருக்குடநீரைக் குருவானவர் சீடன் மேல் மும்முறை புரோக்ஷிப்பார்.

अभिषिच्य गुरुः शिष्यमासीनं परितः शुचिम् ।
ततः पञ्चाक्षरीं शैवीं संसारभयतारिणीम् ॥२०॥
तस्य दक्षिणकर्णे तु निगूढमपि कीर्तयेत् ।
छन्दो रूपमृषिं चास्य देवतान्यासपद्धतिम् ॥ २१॥

பின்னர் சீடனை ஆசனத்தில் இருத்தி சம்சாரபயத்தைப் போக்கவல்லதான பஞ்சாக்ஷரமந்திரத்தை அவனது வலக்காதில் மெதுவாக உபதேசித்து ரிஷி, சந்தஸ், தேவதாநியாஸம் ஆகியன செய்யும் முறையை உபதேசிக்கவேண்டும்.

**ஆண்டரு கிருந்த சுத்த னாகிய மாணாக் கன்றன்**
**மாண்டகு வலக்கா தின்கட் பவப் பிணி மருந்தாய் நல்லோர்**
**வேண்டுமஞ் செழுத்து மெல்ல விளம்புபு சொருபஞ் சந்தம்**
**காண்டகு மிருடி மிக்க கடவுணன் னியாசஞ் சொல்க.**

இவ்வாறு சுத்தனுகிய சீடனின் வலக்காதில் பிறவி நோய்தீர்க்கும் ஐந்தெழுத்தை மெதுவாக உபதேசிப்பர்; பின்னர் அம்மந்திரத்திற்கு நியாசம் முதலியவற்றையும் உபதேசிப்பர்.

स्फाटिकं शैलजं वापि चन्द्रकान्तमयं तु वा ।
बाणं वा सूर्यकान्तं वा लिङ्गमेकं समाहरेत् ॥ २२॥

ஸ்படிகம், கருங்கல், சந்திரகாந்தக்கல், பாணம் அல்லது சூரியகாந்தம் இதில் ஏதேனும் ஒன்ருலான லிங்கத்தைக் கொணரவேண்டும்.

**சந்திர காந்தத் தேனுந் தபநகாந் தத்தி லேனுஞ்**
**சுந்தர சயிலந் தன்னிற் றோன்றிய சிலையி லேனும்**
**வந்துறு படிகத் தேனு மகிழ்வாண லிங்கத் தேனு**
**முந்தழ குறுமி லிங்க மொன்றுகொள் கிற்க மன்னோ.**

சந்திரகாந்தம், சூரியகாந்தம், மலையில் தோன்றிய கல், ஸ்படிகம் இதில் ஏதேனும் ஒன்றினால் செய்த லிங்கத்தை எடுத்துக் கொண்டு.

सर्वलक्षणसम्पन्ने तस्मिल्लिङ्गे विशोधिते ।
पीठस्थितेऽभिषिक्ते च गन्धपुष्पादिपूजिते ॥ २३॥
मन्त्रपूते कलां शैवीं योजयेद्विधिना गुरुः ।

குருவானவர் அனைத்து லக்ஷணங்களும் பொருந்திய அந்த லிங்கத்தை நன்கு சோதித்து பீடத்திலிருத்தி அபிஷேகம் செய்து சந்தனம் புஷ்பங்களால் அருச்சித்து மந்திரங்களால் சுத்தம் செய்து முறைப்படி சிவகலைகளை அந்த லிங்கத்தில் நியாஸம் செய்ய வேண்டும்.

இலக்கண முழுது மொன்றி யிலங்குமா னைந்து மாடிக்
குலக்கடி மலர்சந் தாதி கொண்டருச் சிக்கப் பட்டு
விலக்கரு மநுவாற் சுத்த மேவுமவ் விலிங்கந் தன்னிற்
கலைக்கதி வழாது சைவ கலையையுய்த் திடுவ னாசான்.

பஞ்சகவியம் முதலியவற்றால் அபிஷேகம் செய்து சந்தனம், மற்றும் நன்மலர்களால் அருச்சித்து அந்த லிங்கத்தில் சாத்திரங்களில் கூறிய முறையில் ஆசாரியர் சிவகலைகளை ஆவாஹனம் செய்வார்.

शिष्यस्य प्राणमादाय लिङ्गे तत्र निधापयेत् ॥ २४॥
तल्लिङ्गं तस्य तु प्राणे स्थापयेदेकभावतः ।
एवं कृत्वा गुरुर्लिङ्गं शिष्यहस्ते निधापयेत् ॥ २५॥

சீடனின் பிராணனை லிங்கத்தில் ஸ்தாபித்து பின்னர் லிங்கத்தை அவனுடைய பிராணனுடன் ஏகபாவமாகச் சேர்க்கவேண்டும். பிறகு லிங்கத்தைச் சீடனின் கையில் கொடுக்கவேண்டும்.

சீடன துயிரை யந்தச் சிவலிங்கந் தன்னி லுய்த்துப்
பீடுறு மிலிங்க மன்னோன் பிராணனி லுறவி ருத்தி

யேடென விரும்பு மாசா னிவ்வகை யேக பாவங்
கூடுற வியலி லிங்கங் கொடுக்கவச் சீடன் கையில்.

சீடனது பிராணனை அந்த லிங்கத்தில் செலுத்தி அதை அவனது பிராணனில் இருத்தி ஐக்கியபாவம் பொருந்த அந்த லிங்கத்தை சீடனது கையில் கொடுப்பார்.

प्राणवद्धारणीयं तत्प्राणलिङ्गमिदं तव ।
कदाचित्कुत्रचिद्वापि न वियोजय देहतः ॥ २६॥
यदि प्रमादात् पतिते लिङ्गे देहान्महीतले ।
प्राणान् विमुञ्च सहसा प्राप्तये मोक्षसम्पदः ॥ २७॥

இது உன்னுடைய பிராணலிங்கமாகும்; இதை நீ உனது பிராணனைப் போல் எப்போதும் தரிக்கவேண்டும். கவனக் குறைவால் உனது உடலிலிருந்து இது பூமியில் விழுந்தால் மோக்ஷத்தை அடையும் பொருட்டு நீ உடனே பிராணனை விடவேண்டும்.

இலங்குழிப் பிராண லிங்க மினியநின் பிராண னேபோற்
சலந்தவி ருனக்கு மைந்த தரிப்பதெவ் விடத்து மென்றும்
விலங்குவ தன்றெங் கேனும் வீழ்ந்திடின் மெய்யி னின்று
நலங்கிளர் முத்தி சேர்வா னல்லுயிர் விடுக வல்லே.

ஓ மகனே! உனது பிராணனைப் போன்ற இந்த லிங்கத்தை நீ எப்போதும் தரிக்கவேண்டும். ஒரு போதும் அது உன்னைவிட்டு நீங்கக் கூடாது. உன் உடலிலிருந்து வீழ்ந்தால் முத்தியடையும் பொருட்டு நீ உன் உயிரை விடக் கடவாய் என சீடனுக்கு அறிவுறுத்துவார்.

इति सम्बोधितः शिष्यो गुरुणा शास्त्रवेदिना ।
धारयेच्छाङ्करं लिङ्गं शरीरे प्राणयोगतः ॥ २८॥

இவ்வாறு சாத்திரங்களை நன்கு கற்ற குருவினால் உபதேசிக்கப்பட்ட சீடன் அந்த லிங்கத்தைத் தனது பிராணனைப் போல் தரிக்கவேண்டும்.

நூனெறி முழுது மாய்ந்த நுண்ணுணர் வுடையோன் றன்னாற்
றானினி திவ்வா றோதிச் சாற்றிடப் பட்ட சீடன்
மேனியி னுயிர்வாழ் காறும் விடாதுநன் குறத்த ரிக்க
கூனிள மதிய ணிந்த குழகன்மெய்ச் சிவலிங் கத்தை.

இவ்வாறு ஆசாரனல் உபதேசிக்கப்பட்ட சீடன் தன் வாழ்நாள் முழுவதும் சிவலிங்கத்தைத் தனது உடம்பில் தரிக்கவேண்டும்.

लिङ्गस्य धारणं पुण्यं सर्वपापप्रणाशनम् ।
आदृतं मुनिभिः सर्वैरागमार्थविशारदैः ॥ २९॥

லிங்கதாரணம் செய்து கொள்வது மிகவும் புண்ணியச் செயல்; அது அனைத்துப் பாவங்களையும் போக்கவல்லது. ஆகமங்களைக் கற்றுணர்ந்த முனிவர்களால் மிகவும் போற்றப்பட்டது.

புண்ணிய மனைத்தி னுக்கும் புகலிட மாகி நின்றங்
கெண்ணரும் பவம கற்று மிலிங்கதா ரணம தென்று
கண்ணுத லருளிச் செய்த காமிகா திகளை யோர்ந்த
நுண்ணுணர் வுடைய வெல்லா முனிகளு நுவல்வ ரன்றே.

சிவலிங்கத்தை உடலில் தரிப்பது கணக்கற்ற புண்ணியங்களுக்கிடமாகத் திகழ்கிறதென்பதும், பிறவிநோயை அறவே நீக்குமென்பதும் ஆகமங்களைக் கற்ற முனிவர்களின் கருத்து.

लिङ्गधारणमाख्यातं द्विधा सर्वार्थसाधकैः ।
बाह्यमाभ्यन्तरं चेति मुनिभिर्मोक्षकाङ्क्षिभिः ॥ ३०॥

லிங்கதாரணம் பாஹியம், ஆப்பியந்தரம் என இருவகைப்பட்டது.

चिद्रूपं परमं लिङ्गं शाङ्करं सर्वकारणम् ।
यत्तस्य धारणं चित्ते तदान्तरमुदाहृतम् ॥ ३१॥

சர்வகாரணனுன சிவபெருமானை மனத்தில் எப்போதும் தரித்திருத்தலே ஆப்பியந்தரலிங்கதாரணம் எனப்படும்.

தகைபெறு பரம லிங்க தாரண முட்பு றம்பாம்
வகைபெற விரண்டா மென்பர் மாதவ ரவற்று ளாதி
பகவனென் பெயர்பு னைந்த பரமசிந் மயலிங் கத்தை
யகமதி லுறத்த ரித்த லாந்தர மாகு மன்றே.

லிங்கத்தை தரித்தல் இருவகை: சின்மயமான ஆதிலிங்கத்தை உள்ளத்தில் எப்போதும் அணிதல் ஆந்தரம் ஆகும்.

चिद्रूपं हि परं तत्त्वं शिवाख्यं विश्वकारणम् ।
निरस्तविश्वकालुष्यं निष्कलं निर्विकल्पकम् ॥ ३२॥
सत्तानन्दपरिस्फूर्तिमुल्लासकलामयम् ।
अप्रमेयमनिर्देश्यं मुमुक्षुभिरुपासितम् ॥ ३३॥

பரம்பொருளாய் விளங்குவது சிவமே; அது சைதந்நியமயமானது; எவ்வித மலமுமற்றது, பிரிவற்று அகண்டமாய் மாற்றங்கள் எதுவுமில்லாதது. எப்போதும் உள்ள பொருளாய் ஆனந்தமயமாய்த் திகழ்வது. அளவிடற்கரிதாய் இப்படிப்பட்டதென அறியப்படாமல் மோக்ஷமடைய விருப்பமுள்ளவர்களால் எப்போதும் உபாசிக்கப்படுகிறது.

மூலகா ரணமாய் ஞான மூர்த்தியா யின்ப மாகி
மேலதா யுண்மை யாகி விகற்பமோ டழிவு மின்றி
மாலிலா துலகி றந்த பிரமமா மாலிங் கந்தான்
சாலவீ டுறுதல் வேண்டுந் தக்கவ ரடைத லாமே.

அனைத்துக்கும் மூலகாரணமாயும், ஞானம் மற்றும் இன்பவடிவாயும் எல்லாவற்றுக்கும் மேலாயும், அழிவற்றதாயும் விளங்கும் பிரம்மமாகிய மஹாலிங்கத்தையே முத்தியை விரும்புவோர் அடைவர்.

परं ब्रह्म महालिङ्गं प्रपञ्चातीतमव्ययम् ।
तदेव सर्वभूतानामन्तस्त्रिस्थानगोचरम् ॥ ३४॥

மஹாலிங்கவடிவாய் பிரபஞ்சங்களையெல்லாம் கடந்த அப்பரம்பொருளே எல்லா உயிர்களுக்குள்ளும் மூவிடத்தில் விளங்குகிறது.

मूलाधारे च हृदये भ्रूमध्ये सर्वदेहिनाम् ।
ज्योतिर्लिङ्गं सदा भाति यद् ब्रह्मेत्याहुरागमाः ॥ ३५॥

மூலாதாரம், இதயம், நெற்றிநடு ஆகிய அம்மூவிடங்களிலும் சோதிவடிவாய் அப்பரப்பிரம்மம் எப்போதும் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது.

வேதமா முடிய னைத்தும் விளங்குறப் பிரம மென்னுஞ்
சோதிமா லிங்க மெல்லா வாவிக டோறு நிற்கு
மாதி யாதாரமாசி லகமெனு மிதய நன்றிக்
கேதுவாம் புருவ நாப்ப ணெனவரு மூன்றிடத்தும்.

எல்லா உயிர்களினுடைய மூலாதாரம், இருதயம், புருவநடு ஆகிய மூவிடங்களிலும் வேதாந்த நூல்களில் சொல்லப்பட்ட பிரம்மமானது எப்போதும் நிலைபெற்றிருக்கும்.

अपरिच्छिन्नमव्यक्तं लिङ्गं ब्रह्म सनातनम् ।
उपासनार्थमन्तः स्थं परिच्छिन्नं स्वमायया ॥ ३६॥

அழிவற்று தொடக்கமும் முடிவுமின்றி புலன்களுக்குப் புலப்படாமல் இருக்கும் பிரம்மமே உபாசனை நிமித்தம் தனது சிறிய மாயையால் ஒரு எல்லைக்குட்பட்டதாய் ஆன்மாவிற்குள் விளங்குகிறது.

அழிவற வரிதா யென்று மகண்டமாய்ப் பிரம மென்னு
மொழிபெறு பரம லிங்க முத்திநே யத்த ராகி
வழிபடு பவர்க்கா கத்தன் மாயையாற் கண்டி தப்பட்
டொழிவற விருக்கு மென்றே யுரைப்பர் நுண் ணுணர்வி
னோரே.

எந்நாளும் அகண்டமாய் அழிவின்றி விளங்கும் பிரம்மமான லிங்கம் முத்தியை விரும்புவோர்கள் வழிபடுவதற்காகத் தனது மாயையினால் பின்னமாயும் நீக்கமற்றதாயும் இருக்கும்.

लयं गच्छति यत्रैव जगदेतच्चराचरम् ।
पुनः पुनः समुत्पत्तिं तल्लिङ्गं ब्रह्म शाश्वतम् ॥ ३७॥

எதில் அனைத்துலகங்களும் லயமடைகின்றனவோ எதிலிருந்து மீண்டும் மீண்டும் உலகங்கள் தோன்றுகின்றனவோ அதுவே என்றுமழிவற்று விளங்கும் லிங்கமாகும்.

சரமுட னசரமென்னச் சாற்றிய வுலகு திக்குங்
கருமமோ டிலய மெய்துங் காரண மதனா லென்று
முரைமன மிறந்து ஞான வொளியுரு வாகி நின்ற
பிரமம திலிங்க நாமம் பெறுமென விசைப்பர் தக்கோர்.

அசையும் பொருட்களையும் அசையாப் பொருட்களையும் கொண்ட இவ்வுலகம் தோன்றி, இருந்து பின்னர் ஒடுங்கும் காரணத்தால் என்றும் அழியாது நிலைபெற்று விளங்கும் பிரம்மப் பொருளானது லிங்கம் எனும் பெயரைப் பெற்றது.

तस्माल्लिङ्गमितिख्यातं सत्तानन्दचिदात्मकम् ।
बृहत्वाद् बृंहणत्वाच्च ब्रह्मशब्दाभिधेयकम् ॥ ३८॥

ஸத் சித் ஆனந்தமாய் விளங்கும் அதுவே லிங்கமெனப்படுகிறது; எங்கும் பரந்து அளவிடற்கரிதாய் விளங்குவதால் அது பிரம்மம் என அழைக்கப்படுகிறது.

சாற்றரும் பரம தாய சச்சிதா நந்த லிங்க
மாற்றவும் பெரிதாந் தன்மை யடைதலி னானு மின்றித்
தோற்றுறு முலகி னுக்குக் கருப்பமாந் தொடர்பி னானும்
போற்றுறும் பிரம நாமம் பொருந்துமென் றறிந்து கொண்மோ.

அந்த மேலான சச்சிதானந்த வடிவமான லிங்கமானது உலகத்திற்கு இருப்பிடமாய்த் திகழ்வதால் யாவராலும் போற்றப்படுகின்ற பிரம்மம் எனும் பெயரைப் பெற்றது.

आधारे हृदये वापि भ्रूमध्ये वा निरन्तरम् ।
ज्योतिर्लिङ्गानुसन्धानमान्तरं लिङ्गधारणम् ॥ ३९॥

மூலாதாரத்திலோ இதயத்திலோ அல்லது நெற்றி நடுவிலோ சோதிவடிவான லிங்கத்தை எப்போதும் தியானம் செய்வதே அந்தர்லிங்கதாரணமெனப்படும்.

மருவுமா தாரத் தேனு மிதயநன் மலரி னேனும்
புருவமா நடுவி லேனும் பொருந்திய வொன்றி லென்றும்
விரவுமா சோதி லிங்கம் விடாதநு சந்தா னந்தா
னிரவிலாந் தரவி லிங்க தாரண மென்பர் மேலோர்.

மூலாதாரத்திலோ, இதய நடுவிலோ, அல்லது புருவமத்தியிலோ பரஞ்சோதி வடிவான லிங்கத்தைத் தியானித்தல் ஆந்தரலிங்கதாரணம் என்பர்.

आधारे कनकप्रख्यं हृदये विद्रुमप्रभम् ।
भ्रूमध्ये स्फटिकच्छायं लिङ्गं योगी विभावयेत् ॥ ४०॥

யோகியானவன் மூலாதாரத்தில் பொன்னிறமுடையதாயும் இதயத்தில் பவளநிறமுடையதாயும் நெற்றி நடுவில் ஸ்படிகம் போலும் விளங்கும் லிங்கத்தைத் தியானம் செய்யவேண்டும்.

ஆடக வுருவ மாக வணிகொண்மூ லாதா ரத்திற்
பாடல வொளியி மைக்கும் பவளம்போ லிதயந் தன்னி
னீடொளி யுபலம் போல நிகழ்தரு புருவ நாப்ப
ணாடரு முணர்வி லிங்க ஞானயோ கிகள்சிந் திப்பார்.

யோகிகள் மூலாதாரத்தில் பொன்னுருவமாகவும், இதயத்தில் பவளவண்ணமாகவும், புருவநடுவில் படிகம் போலும் அந்த லிங்கத்தைத் தியானம் செய்வர்.

निरुपाधिकमाख्यातं लिङ्गस्यान्तरधारणम् ।
विशिष्टं कोटिगुणितं बाह्यलिङ्गस्य धारणात् ॥ ४१॥

லிங்கத்தை மனத்திற்குள் தரிப்பது எவ்வித வரையறையும் அற்றது; வெளியுடம்பில் தரிப்பதைக் காட்டிலும் அது கோடி மடங்கு சிறந்தது.

ये धारयन्ति हृदये लिङ्गं चिद्रूपमैश्वरम् ।
न तेषां पुनरावृत्तिर्घोरसंसारमण्डले ॥ ४२॥

சித்ரூபமான ஈசுவரனுடைய லிங்கத்தைத் தங்களது மனதிற்குள் தரிப்பவர்களுக்கு மீண்டும் இந்தக் கொடிய சம்சாரத்தில் பிறப்பே கிடையாது.

> புறத்துறு தார ணத்திற் புகல்கோடி மடங்கு மிக்க
> சிறப்புறு மகவி லிங்க தாரணந் தீர்ந்து பாதி
> பிறப்பிடை மறிதல் செய்யார் பிறங்கொளி யிலிங்கந் தன்னைத்
> துறப்பற விதய மொன்றத் துணிவொடு தரித்து ளோரே.

உள்ளத்தில் லிங்கதாரணம் செய்தல் புறத்தில் செய்வதைக் காட்டிலும் பலகோடி மடங்கு சிறந்தது; ஆதலின் ஒளிபொருந்திய லிங்கத்தை இடையறுது இதயத்தில் தரிப்போர் மீண்டும் பிறவித் துன்பம் அடையமாட்டார்கள்.

अन्तर्लिङ्गानुसन्धानमात्मविद्यापरिश्रमः ।
गुरूपासनशक्तिश्च कारणं मोक्षसम्पदाम् ॥४३॥

இதயத்தில் லிங்கத்தை எப்போதும் தியானித்தல், ஆன்மாவைப்பற்றிய சிந்தனை, குருவை வழிபடுதல் ஆகியன மோக்ஷமென்னும் பெரும் செல்வத்திற்குக் காரணம்.

> உள்ளத்தி லிலிங்கந் தன்னை யொழிவற விடாது பற்ற
> றெள்ளுற்ற வான்ம வித்தை சேர்ந்தமை வுறுத லம்ம
> வள்ளற்றண் ணளிநல் லாசான் மகிழ்செய்குற் றேவலென்னத்
> தள்ளற்ற விவைக டாமே காரணந் தனிமுத் திக்கே.

உள்ளத்தில் லிங்கத்தை இடையறுது எண்ணுதல், ஆன்மஞானத்தை எப்போதும் பற்றியிருத்தல், தனது ஆசானின் குற்றேவல்களைச் செய்தல் என இம்மூன்றும் முத்திக்குக் காரணங்களாகும்.

वैराग्यज्ञानयुक्तानां योगिनां स्थिरचेतसाम् ।
अन्तर्लिङ्गानुसन्धाने रुचिर्बाह्ये न जायते ॥ ४४॥

வைராக்கியம், ஞானம், உறுதியான மனம் ஆகியன கொண்ட யோகிகளுக்கு இதயத்தில் லிங்கோபாசனை செய்வதில்தான் நாட்டமே தவிர வெளியில் லிங்கோபாசனை செய்வதில் இல்லை.

ஊனமாம் விடய நீத்தே யுளந்தடு மாற லில்லா
மானமா யோகி கட்கு மனத்தெழுந் திலங்கா நின்ற
ஞானமா லிங்கத் தன்றி நவின்றுள புறத்தி லென்றுந்
தானுறா துளவி ருப்பென் றுணருதி தவத்தின் மேலோய்.

உள்ளத்தில் உறுதிபடைத்த யோகிகளுக்கு ஞானலிங்கத்தைத் தவிர வெளித் தோற்றங்களில் விருப்பம் உண்டாகாது.

ब्रह्मा विष्णुश्च रुद्रश्च वासवाद्याश्च लोकपाः ।
मुनयः सिद्धगन्धर्वा दानवा मानवास्तथा ॥ ४५॥
सर्वे च ज्ञानयोगेन सर्वकारणकारणम् ।
पश्यन्ति हृदये लिङ्गं परमानन्दलक्षणम् ॥ ४६॥

பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், இந்திரன், லோகபாலர்கள், முனிவர்கள், சித்தர்கள், கந்தருவர்கள், தானவர்கள் மற்றும் மனிதர்கள் என அனைவருமே ஞானயோகத்தால் பரமகாரணமாய் விளங்குவதும் எல்லையற்ற ஆனந்த வடிவானதுமான லிங்கத்தையே இதயத்தில் பார்க்கின்றனர்.

வேதனோ டரிய ரன்சீர் விண்முழு தாளி யாதி
மாதிர மன்ன ரீண்டு மனிதர்கந் தருவர் சித்தர்
தீதறு முனிவ ரெல்லாஞ் சிந்மய மாய கத்துட்
சோதிகொள் பரமா நந்த லிங்கமே துணிந்து காண்பார்.

பிரம்மா, விஷ்ணு முதலான தேவர்களும், மனிதர், கந்தர்வர், முனிவர்கள் ஆகிய அனைவரும் தங்களது இதயத்தில் சோதி வடிவான லிங்கத்தையே காண்பர்.

तस्मात् सर्वप्रयत्नेन शाङ्करं लिङ्गमुत्तमम् ।
अन्तर्विभावयेद् विद्वानशेषक्लेशमुक्तये ॥ ४७॥

எனவே அனைத்துத் துன்பங்களினின்றும் விடுதலையடைவதற்காக ஞானியானவன் இதயத்தில் உத்தமமான சிவலிங்கத்தைத் தியானம் செய்யவேண்டும்.

சச்சி தாநந்த மாகுந் தற்பர லிங்கந் தன்னை
யிச்சையா லறிஞ னானோ னெத்திறத் தானு மென்று
மச்சமார் துயர மெல்லா மருக்கன்முன் னிருளே போல
வெச்சமாய் நிலாது பொன்ற விதயத்திற் றியானஞ் செய்க.

சச்சிதானந்த வடிவான லிங்கத்தையே மனத்தில் இச்சையுடன் துயரமெல்லாம் நீங்கும் வண்ணம் தியானம் செய்யக்கடவன்.

अन्तर्धारयितुं लिङ्गमशक्तः शक्त एव वा ।
बाह्यं च धारयेल्लिङ्गं तद्रूपमिति निश्चयात् ॥ ४८॥

அவ்வாறு லிங்கத்தை உள்ளத்தில் தரிக்க இயன்றாலும் இல்லாவிட்டலும் அந்த லிங்கத்தின் வடிவத்தையே வெளியுடலில் தரிக்கவேண்டும்.

அத்தனை யகந் தரிக்க வசத்தனா யினுும தாஅன்று
சத்தனே யெனினு ஞான தற்பர லிங்க மேயென்
புத்தியின் றிட்ப மெய்திப் புறத்திலிங் கந்த ரிக்க
வித்தக னெறி யுணர்ந்த வீரசை வர்கடா மன்றே.

உள்ளத்தில் லிங்கத்தைத் தரிக்க இயன்றாலும் அல்லது இயலாவிடினும் புறத்தில் ஞானவடிவான லிங்கத்தை வீரசைவர்கள் தரிப்பர்.

लिङ्गं तु त्रिविधं प्रोक्तं स्थूलं सूक्ष्मं परात्परम् ।
इष्टलिङ्गमिदं स्थूलं यद् बाह्ये धार्यते तनौ ॥ ४९॥
प्राणलिङ्गमिदं सूक्ष्मं यदन्तर्भावनामयम् ।
परात्परं तु यत्प्रोक्तं तृप्तिलिङ्गं तदुच्यते ॥ ५०॥

லிங்கம் ஸ்தூலம் ,சூக்ஷ்மம், பராத்பரம் என மூவகையானது; வெளியுடம்பில் தரிக்கப்படும் இஷ்டலிங்கம் ஸ்தூலமாகும்; உள்ளத்தில் எப்போதும் தியானிக்கப்படும் பிராணலிங்கம் சூக்ஷ்மம்; திருப்திலிங்கமே பராத்பரமாகும்.

திரம்பெறு மிலிங்க மூன்று திறத்ததாந் தூல லிங்கம்
பரம்பெறு சூக்கு மம்பின் பராற்பர மென்னத் தூலங்
கரம்பெறு மிட்ட லிங்கங் கருத்தது சூக்கு மந்தா
னிரம்புறு மிலிங்கந் தானே நிகழ்பராற் பரமென் றோர்வாய்.

லிங்கம் தூலம், சூக்குமம், பராத்பரம் என மூவகைப்பட்டது. கையை இடமாகக் கொண்ட இஷ்டலிங்கம் தூலம்; மனத்தில் உள்ளது சூக்குமம்; எங்கும் நிறைந்தது பராத்பரம்.

भावनातीतमव्यक्तं परब्रह्म शिवाभिधम् ।
इष्टलिङ्गमिदं साक्षादनिष्टपरिहारतः ॥
धारयेदवधानेन शरीरे सर्वदा बुधः ॥ ५१॥

சிந்தனைக்கப்பாற்பட்டதாயும் மற்றவர்களுக்குப் புலப்படாததாயும் விளங்கும் பரப்பிரம்மான சிவலிங்கம் வேண்டாதவற்றை விலக்குவதால் இஷ்டலிங்கமெனப்படுகிறது. கற்றறிந்தவன் மிக்க சிரத்தையுடன் இந்த லிங்கத்தைத் தன்னுடலில் தரிக்கவேண்டும்.

மாட்சியாய்ப் பிரம மிக்க சிவமென மருவி யன்றே
யாட்சியா மநிட்ட மெல்லா மகற்றியே யிட்ட மாகிக்
காட்சியா னிகழ்வ தாஞ்சிற் கனபரி ணாமலிங்கம்
பூட்சியூ டகலா தென்றும் புலமையோர் தரிக்க மாதோ.

எங்கும் நிறைந்த ஞானலிங்கமே அறிஞர்கள் தரிக்கும்படி இஷ்டலிங்கமாய் விளங்குகிறது.

मूर्ध्नि वा कण्ठदेशे वा कक्षे वक्षःस्थलेऽपि वा ।
कुक्षौ हस्तस्थले वापि धारयेल्लिङ्गमैश्वरम् ॥ ५२॥
नाभेरधस्ताल्लिङ्गस्य धारणं पापकारणम् ।
जटाग्रे त्रिकभागे च मलस्थाने न धारयेत् ॥ ५३॥

தலை, கழுத்து, தோள்பட்டை, மார்பு, வயிறு, கை ஆகிய ஏதேனும் ஓர் அங்கத்தில் இந்த ஈசுவரனுடைய லிங்கத்தைத் தரிக்கவேண்டும். தொப்புளுக்குக் கீழ் தரிப்பது இழிவானது; சடை நுனி ஆகிய இடங்களில் தரித்தல் குற்றமாகும்.

சிரமொடு களநன் மார்பு சிவந்துள வுதரங் கக்கங்
கரமெனு மிவற்றி லொன்றின் கட்சிவ லிங்கந் தாங்கல்
வரமிழி நாபி யின்கீழ் வார்சடை நுதியிற் பின்பாற்
புரைதரு மிடத்தி லென்றும் பொருந்துறத் தரிக் கொணாதால்.

தலை, கழுத்து, மார்பு, வயிறு, கக்கம், கரம் என்னும் இவற்றுள் ஏதேனும் ஓர் உறுப்பில் லிங்கத்தை தரிப்பது மிகச் சிறந்தது; தொப்புளுக்குக் கீழ் தரிப்பது இழிவு; சடை நுனி ஆகிய இடங்களில் தரித்தல் குற்றம்.

लिङ्गधारी सदा शुद्धो निजलिङ्गं मनोरमम् ।
अर्चयेद् गन्धपुष्पाद्यैः करपीठे समाहितः ॥ ५४॥

லிங்கத்தைத் தரிப்பவன் அந்த அழகிய லிங்கத்தைக் கையில் வைத்து மிக்க சிரத்தையுடன் சந்தனம் பூ ஆகியன கொண்டு எப்போதும் அருச்சிக்கவேண்டும்.

தம்பொருளாமி லிங்கந் தன்னைவள் ளிதழ விழ்ந்த
வம்பலர் கந்த மாதி மருவுற முறையிற் கொண்டு
கம்பமின் மனத்தி னோடு கரபீடத் தினிலர்ச் சிப்ப
ரிம்பரி னென்றுஞ் சுத்த ரெனப்படும் வீர சைவர்.

வீரசைவர்கள் தமது பொருளாகிய லிங்கத்தைக் கையினில் வைத்து சந்தனம் பூக்கள் ஆகியவற்ருல் அருச்சிப்பர்.

बाह्यपीठार्चनादेतत् करपीठार्चनं वरम् ।
सर्वेषां वीरशैवानां मुमुक्षूणां निरन्तरम् ॥ ५५॥

வெளிப்பீடத்தில் வைத்து லிங்கத்தை அருச்சிப்பதைக் காட்டிலும் கையில் வைத்து அருச்சிப்பது மோக்ஷத்தை விரும்பும் வீரசைவர்களுக்குச் சாலச் சிறந்தது.

உரம்பெறு முத்தி நேய மூற்றமாம் வீர சைவர்
நிரந்தரம் விடாது பற்று நிகழ்கர பீட பூசை
பரம்புற மியற்றும் பீட பூசையிற் பராரை வெற்பி
லிருந்துமை பாக னோடொப் பென்பதை யுணர்த்த வல்லோய்.

வீரசைவர்கள் லிங்கத்திற்கு இயற்றும் கரபீடபூசையானது மற்ற பூசைகளைக் காட்டிலும் சிறந்தது.

ब्रह्मविष्ण्वादयो देवा मुनयो गौतमादयः ।
धारयन्ति सदा लिङ्गमुत्तमाङ्गे विशेषतः ॥ ५६॥
लक्ष्म्यादिशक्तयः सर्वाः शिवभक्तिविभाविताः ।
धारयन्त्यलिकाग्रेषु शिवलिङ्गमहर्निशम् ॥५७॥

பிரம்மா, விஷ்ணு முதலான தேவர்களும், கௌதமர் முதலான முனிவர்களும் லிங்கத்தைத் தங்களது சிரசில் தரிக்கின்றனர்; லக்ஷ்மி முதலான தேவியர்கள் சிவபக்தியுடன் எப்போதும் லிங்கத்தைத் தங்களது நெற்றியில் விழும் குழற்கற்றையில் தரிக்கின்றனர்.

பனிமல ரயன்மா லாதிப் பண்ணவர் கோத மாதி
முனிவர ரனைவ ருந்தம் முடிமிசை யென்றுங் கொள்வர்
தனிவரு மிலிங்கம் வாட்கட் பொறிமுதற் சத்தி யெல்லாம்
புனைமல ரளக மீது பொருந்துறத் தரிப்பர் மன்னோ.

திருமால் முதலான தேவர்கள் தமது முடியின் மேலும், இலக்குமி முதலான சக்திகள் தங்களது கூந்தலின் மீதும் லிங்கத்தை எப்போதும் தரிக்கின்றனர்.

वेदशास्त्रपुराणेषु कामिकाद्यागमेषु च ।
लिङ्गधारणमाख्यातं वीरशैवस्य निश्चयात् ॥ ५८॥

வீரசைவக் கொள்கையின்படி வேதங்கள், காமிகம் முதலான சைவாகமங்கள் ஆகிய நூல்களில் லிங்கதாரணம் கூறப்படுகிறது.

சதுமறை யுள்ளு மிக்க சாத்திரங் களினு மீரொன்
பதுவித புராணத் துள்ளும் பகர்தரு காமி கந்தான்
முதல்வரு மாக மத்து மொழிந்திடப் பட்டி டுஞ்சந்
ததமுமெய் விடாவி லிங்க தாரணம் விறற் சைவர்க்கே.

நான்மறைகளிலும், புராணங்களிலும், காமிகம் முதலான ஆகமங்களிலும் உடலில் லிங்கத்தை தரித்தல் கூறப்படுகிறது.

ऋगित्याह पवित्रं ते विततं ब्रह्मणस्पते ।
तस्मात्पवित्रं तल्लिङ्गं धार्यं शैवमनामयम् ॥ ५९॥
ब्रह्मेति लिङ्गमाख्यातं ब्राह्मणः पतिरीश्वरः ।
पवित्रं तद्धि विख्यातं तत्सम्पर्कात्तनुः शुचिः ॥ ६०॥
अतप्ततनुरज्ञो वै आमः संस्कारवर्जितः ।
दीक्षया रहितः साक्षान्नाप्नुयाल्लिङ्गमुत्तमम् ॥ ६१॥

பவித்ரம் தே விததம் எனத்தொடங்கும் ரிக்வேதமந்திரம் மிகப் புனிதமான லிங்கதாரணத்தைப் போற்றிக் கூறுகிறது; பிரம்மமே லிங்கம், பிரம்மணஸ்பதியே ஈசுவரன். அதுவே பவித்திரம், அதன் தொடர்பால் உடல் சுத்தமடைகிறது. அவ்வாறு லிங்கத்தின் தொடர்பில்லாத உடல் அசுத்தம். தீக்ஷை செய்யப்படாதவன் லிங்கத்தை அடைய இயலாது.

பங்கயற் கிறைவ னின்மெய் பவித்திர மெனவி ருக்கொன்
றிங்குரைப் பதனாற் றூய்தா விலங்குறுஞ் சிவலிங்கந் தான்
றங்குறத் தரிக்கத் தக்க தாகுமச் சைவ லிங்க
மங்கலம் புனித தீக்கை மருவுறா னடைந்தி டானால்.

சிவபெருமானின் உடல் புனிதமானதென்று வேதங்கள் உரைக்கின்றன. ஆதலால், பரிசுத்தமான லிங்கம் ஒன்றுதான் தரிக்கத் தக்கது. பரிசுத்தமான தீக்ஷையைப் பெறுதவன் அந்த லிங்கத்தை அடையமாட்டான்.

अघोरा पापकाशीति या ते रुद्र शिवा तनूः ।
यजुषा गीयते यस्मात् तस्माच्छैवोऽघवर्जितः ॥ ६२॥

யா தே ருத்ர சிவா தநூ: அகோரா அபாபகாசீ என்று யஜுர்வேதமந்திரம் உரைப்பதால் சைவனுனவன் பாவங்களற்றவன்.

உன்றநு வகோர மாகி யுருத்ர பாவத்தி னீங்கு
மென் றெசு ருரைத்த லாலே லிங்கதா ரகனாஞ் சைவன்
றுன்றுபா வங்களெல்லாந் தொலைப்பவ னென்பர் மேலோர்
தென்றலங் குன்றி னுற்ற செஞ்சடை முனிவ ரேறே.

லிங்கதாரணம் செய்துகொள்ளும் வீரசைவன் அனைத்துப் பாவங்களினின்றும் நீங்குவன்.

यो लिङ्गधारी नियतान्तरात्मा नित्यं शिवाराधनवद्धचित्तः ।
स धारयेत् सर्वमलापहत्यै भस्मामलं चारु यथाप्रयोगम् ॥ ६३॥

எவனொருவன் லிங்கம் தரித்து மனத்தை அடக்கி தினந்தோறும் சிவபெருமானை ஆராதிப்பதில் சிரத்தையுடையவனாய் இருக்கிறானோ அவன் அனைத்து மலங்களும் அகலும் பொருட்டு புனிதமான திருநீற்றை முறைப்படி அணியக்கடவன்.

நித்தலு நியமஞ் செய்து நிமலபூ சையின்கட் பட்ட
சித்தம துடையனான சிவலிங்க தாரகன்றா
னெத்திற மலமு நீங்கா விருடெறு கதிரின் மாய்க்குஞ்
சுத்தம துறும்வி பூதி தோன்றுறப் புனைவ னன்றே.

சிவலிங்கத்தையணிந்தவன் தினமும் நியமத்துடன் சிவபூசையில் நாட்டமுடையவனாய், எல்லா மலங்களையும் அழிக்கவல்ல விபூதியை விளக்கமாகத் தரிப்பன்.

॥ इति श्रीवीरशैवधर्मनिर्णये सिद्धान्तशिखामणौ भक्तस्थले गुरुकारुण्यलिङ्गधारणप्रसङ्गो नाम षष्ठः परिच्छेदः ॥६॥

॥ सप्तमः परिच्छेदः॥

भस्मधारणसंयुक्तः पवित्रो नियताशयः ।
शिवाभिधानं यत्प्रोक्तं भासनाद्भसितं तथा ॥ १॥
महाभस्मेति सञ्चित्य महादेवं प्रभामयम् ।
वर्तन्ते ये महाभागा मुख्यास्ते भस्मधारिणः ॥ २॥

திருநீற்றையணிந்து புனிதமானவன் தனது மனத்தையடக்கி வெண்மையாகப் பிரகாசிப்பதால் பஸ்மம் என அழைக்கப்படும் திருநீற்றை ஒளிவீசும் சிவபெருமானாக எண்ணி மஹாபஸ்மம் எனக் கொண்டு அதை அணியவேண்டும்.

பூதிதனை யணிந்ததனிற் பட்டகலாக் கருத்தொடுநற் புனித
நாகிச்
சோதிமய மாயசிவ மெனும்பொருளை விளக்குதலாற் றூய்தாம்
வெண்ணீ
றோதலுறு பசிதமொடு பசுமமெனப் பட்டிடுமென் றுளத்திற்
கொண்டு
போதுமவ னியாவனவ னுயர்ந்தவனிங் குபாதியறும் பூதி
யுள்ளோன்.

வெண்ணீறுனது சோதிமயமான சிவத்தை விளக்குதலால் பஸிதம் எனப்பட்டது. அதையணிந்தவன் உயர்ந்தவன்.

शिवाग्न्यादिसमुत्पन्नं मन्त्रन्यासादियोगतः ।
तदुपाधिकमित्याहुर्भस्मतन्त्रविशारदाः ॥ ३॥
विभूतिर्भसितं भस्म क्षारं रक्षेति भस्मनः ।
एतानि पञ्चनामानि हेतुभिः पञ्चभिर्भृशम् ॥ ४॥

மந்திரநியாஸங்கள் முதலியன செய்து சிவாக்கினியிலிருந்து கிட்டும் திருநீற்றை உபாதிகம் என்று அறிஞர்கள் கருதுவர்; விபூதி, பஸிதம், பஸ்ம, க்ஷாரம், ரக்ஷை எனத் திருநீற்றுக்கு ஐந்து காரணங்களால் ஐந்து பெயர்கள்.

மந்திரமே முதலாய நெறிவழா தழலினிடை வந்து தோன்றுஞ்
சுந்தரமா கியநீற்றை யுபாதிகமென் றறைகுவர்நூ றுணிந்த
நல்லோர்
பந்தமறு மதனாமம் விபூதியோடு பசிதமணி பசுமஞ் சார
நிந்தையறு மிரக்கையெனக் காரணமைந் துற்றுலகி னிகழு
மன்றே.

மந்திரங்களை வழுவாது ஓதி சிவாக்னியில் தோன்றுகின்ற திருநீறு உபாதிகம் எனப்படும். மேலும் விபூதி, பஸிதம், பஸ்மம், ஸாரம், ரக்ஷை என ஐந்து பெயர்களையுமுடையது.

विभूतिर्भूतिहेतुत्वाद् भसितं तत्त्वभासनात् ।
पापानां भर्त्सनाद्भस्म क्षरणात् क्षारमापदाम् ॥ ५॥
रक्षणात् सर्वभूतेभ्यो रक्षेति परिगीयते ।

செல்வங்களை வழங்குவதால் விபூதியென்றும், தத்துவங்களை விளக்குவதால் பஸிதமென்றும், பாவங்களை விரட்டுவதால் பஸ்மம் என்றும், துன்பங்களை அழித்து ஓட்டுவதால் க்ஷாரமென்றும், எல்லா உயிர்களையும் துயரத்திலிருந்து காப்பதால் ரக்ஷை என்றும் அழைக்கப்படுகின்றது.

பூதியெனப் படுஞ்செல்வ வேதுவினாற் சிவமாகும் பொரு
டிகழ்த்து
மேதுவினிற் பசிதமிகு பாவங்க டமையச்சத் திசைத்த லாலே
யோதலுறும் பசுமமா மிடரிடைநின் றகற்றுதலா லொன்றுஞ்
சாரந்
தீதகல வனைவரையு மளித்தலினா லிரக்கையெனச் செப்பு
நூலே.

பெருஞ்செல்வத்துக்குக் காரணமாதலால் பூதியென்றும், சிவமாகிய பரம்பொருளை விளக்குதலால் பஸிதம் என்றும், அனைத்துப் பாவங்களையும் அழித்தலால் பஸ்மம் என்றும், துன்பத்தினின்றும் நீக்குதலால் ஸாரம் எனவும், அனைவரையும் காத்தலால் ரக்ஷை எனவும் போற்றப்படுகிறது.

नन्दा भद्रा च सुरभिः सुशीला सुमनास्तथा ॥ ६॥
पञ्च गावो विभोर्जाताः सद्योजातादिवक्त्रतः ।
कपिला कृष्णा च धवला धूम्रा रक्ता तथैव च ॥ ७॥
नन्दादीनां गवां वर्णाः क्रमेण परिकीर्तिताः ।

நந்தா, பத்ரா, ஸுரபி, ஸுசீலா, ஸுமநா என ஐந்து பசுக்கள் ஈசுவரனுடைய ஸத்யோஜாதம் முதலான ஐந்து முகங்களினின்றும் தோன்றின; அவை முறையே பழுப்பு, கருமை, வெண்மை, புகைநிறம், மற்றும் சிவப்பு என ஐந்து நிறங்கள் கொண்டவை.

தோன்றியிடு நந்தைபத் திரைசுரபி சுசீலையொடு சுமனை
யென்ன
வான்றிறமோ ரைந்துமெழிற் சத்தியோ சாதமுத லரன்மு
கத்தி
லேன்றமுறை கபிலைநிறங் கருமைமிகும் வெண்மையெழுந்
திலங்கு செந்திக்
கான்றபுகை நிறஞ்செம்மை யெனுமைந்து மவற்றினிறங்
கண்டு கொண்மோ.

நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை என்னும் ஐவகைப் பசுக்களும் சிவபெருமானின் சத்தியோசாதம் முதலான ஐந்து முகங்களினின்றும் தோன்றின. கபிலையின் நிறம் பொன்னிறம். ஏனையவை செந்நிறம், புகைநிறம் முதலியவற்றைக் கொண்டவை.

सद्योजाताद्विभूतिश्च वामाद्भसितमेव च ॥ ८॥
अघोराद्भस्म सजातं तत्पुरुषात्क्षारनाम च ।
रक्षा चेशानवक्त्राच्च नन्दादिद्वारतोऽभवत् ॥ ९॥

ஸத்யோஜாதத்திலிருந்து விபூதியும் வாமதேவத்திலிருந்து பஸிதமும், அகோரத்திலிருந்து பஸ்மமும், தத்புருஷத்திலிருந்து க்ஷாரமும், ஈசானமுகத்திலிருந்து ரக்ஷையும் நந்தா முதலிய பசுக்களின் வாயிலாகத் தோன்றின.

முன்னிகழும் விபூதிசத்தி யோசாதந் தனில்வாம முகத்தின்
கண்ணே
தன்னிகர்நற் பசிதமகோ ரத்தினிரும் பசுமமெழிற் சாரமென்ப
துன்னலரும் புருடத்தி னீசாநத் திரக்கையடைந் துதிக்கு
மென்பர்
பன்னுமுறை நந்தைமுத லாயபெரும் பெயர்படைத்த பசுக்க
டாமே.

விபூதி சத்தியோசாதத்திலும், பஸிதம் வாமமுகத்திலும், பஸ்மம் அகோரத்திலும், ஸாரம் தத்புருஷத்திலும், ரக்ஷை ஈசானத்திலும் உதிக்கின்றன.

धारयेन्नित्यकार्येषु विभूतिं च प्रयत्नतः ।
नैमित्तिकेषु भसितं क्षारं काम्येषु सर्वदा॥ १०॥
प्रायश्चित्तेषु सर्वेषु भस्म नाम यथाविधि ।
रक्षा च मोक्षकार्येषु प्रयोक्तव्या सदा बुधैः ॥ ११॥

நித்தியகருமங்கள் செய்யும்போது விபூதியையும், நைமித்திககருமங்களில் பஸிதமும், காமியகருமங்களில் க்ஷாரத்தையும் பிராயச்சித்தகருமங்களில் பஸ்மத்தையும் மோக்ஷகாரியங்களில் ரக்ஷையையும் கற்றோர் அணிவர்.

நித்தியகா ரியமதனில் விபூதிநை மித்திகத்தி னிகழா நின்ற
சுத்தமா கியபசிதம் பசுமமே பரிகாரத் தொழிற்க ணன்றி
முத்தியாம் வினையதனி லிரக்கையெலாக் கருமத்து
மொழியின் சாரம்
புத்தியா னுயர்வீர சைவரணி குவரெனவே புகல்வ ரன்றே.

அறிவிற் சிறந்த வீரசைவர்கள் நித்திய கருமங்களில் விபூதியையும், நைமித்திக கருமத்தில் பஸிதத்தையும், பிராயச்சித்தகருமங்களில் பஸ்மத்தையும், முத்தி பேற்றுக்குரிய காலங்களில் ரக்ஷையையும், எல்லாக் கருமங்களிலும் ஸாரத்தையும் அணிவர்.

नन्दादीनां तु ये वर्णाः कपिलाद्याः प्रकीर्तिताः ।
त एव वर्णा विख्याता भूत्यादीनां यथाक्रमम् ॥ १२॥

भस्मोत्पादनमुद्दिष्टं चतुर्धा तन्त्रवेदिभिः ।
कल्पं चैवानुकल्पं तूपकल्पमकल्पकम् ॥ १३॥
एषामादिममुत्कृष्टमन्यत् सर्वमभावतः ।

நந்தா முதலிய பசுக்களின் வண்ணம் எதுவோ அதுவே முறையே விபூதி முதலியவற்றின் வண்ணமாகும்; தந்திரங்களையறிந்தோர் பஸ்மம் உண்டாக்கும் முறையை நால்வகையாகக் கூறுவர்: அவை கல்பம், அனுகல்பம், உபகல்பம், அகல்பம் என்பன. இவற்றுள் முதலாவது மிகச் சிறந்தது; ஏனையவை முதலாவது இல்லாவிட்டால் சிறந்ததாகக் கொள்ளப்படுகின்றன.

நந்தைமுத லாயவற்றி னிறமாகுங் கபிலாதி நவின்ற வன்ன
மைந்துமுறை விபூதிமுத லைந்தினுக்கு மாகுநீ றாத னான்கா
மந்தமலி கற்பமநு கற்பமுப கற்பமுட னகற்ப மென்றே
முந்தையுள கற்பமே சிறந்ததுமற் றேனையவு முறையி
னாமால்.

நந்தை முதலியவற்றின் நிறங்களே விபூதி ஆகியவற்றிற்காகும். நீறு கற்பம், அநுகற்பம், உபகற்பம், அகற்பம் என நால்வகைப்பட்டது. அவற்றுள் கற்பமே சிறந்தது; மற்றவையும் முறையே சிறந்தன.

यथाशास्त्रोक्तविधिना गृहीत्वा गोमयं नवम् ॥ १४॥
सद्येन वामदेवेन कुर्यात्पिण्डमनुत्तमम् ।
शोषयेत्पुरुषेणैव दहेद्द घोरच्छिवाग्निना ॥ १५॥
कल्पं तद्भस्म विज्ञेयमनुकल्पमथोच्यते ।

சாத்திரங்களில் கூறியவாறு புதிய கோமயத்தை ஸத்யோஜாத மந்திரத்தால் கைக்கொண்டு வாமதேவமந்திரத்தால் அழகிய உருண்டைகளாகச் செய்து தத்புருஷமந்திரம் கொண்டு காயவைத்து அதை சிவாக்கிநியில் அகோரமந்திரம் கொண்டு எரித்தல் கல்பபஸ்மம் எனப்படும்.

சாற்றுமுறை வழாதுநவ கோமயத்தைச் சத்தியோ சாதந்
தன்னா
லேற்றுருள்செய் பிண்டமது வாமதே வத்தினுற விழைத்து
லர்த்திப்
போற்றலுறு புருடத்தாற் சுட்டதனை யகோரமநுப் புகன்றீ
சாநத்
தூற்றமுற வெடுத்திருத்தல் கற்பமநு கற்பாதி யுரைத்து
மன்றே.

சிவாகமங்களில் சொல்லப்பட்ட முறை தவருமல் புதிய கோமயத்தை சத்தியோசாதமந்திரம் கொண்டு எடுத்து, வாமதேவமந்திரம் கொண்டு உருண்டை செய்து, அப்பிண்டத்தை அகோரமந்திரம் கொண்டு சுட்டெடுத்து, ஈசானமந்திரம் கொண்டு உற்சாகமாய் எடுத்து வைத்தல் கற்பம் எனப்படும்.

वनेषु गोमयं यच्च शुष्कं चूर्णीकृतं तथा ॥ १६॥
दग्धं चैवानुकल्पाख्यमापणादिगतं तु यत् ।
वस्त्रेणोत्तरितं भस्म गोमूत्राबद्धपिण्डितम् ॥ १७॥
दग्धं प्रागुक्तविधिना भवेद्भस्मोपकल्पकम् ।
अन्यैरापादितं भस्माप्यकल्पमिति निश्चितम् ॥ १८॥

காடுகளில் இருக்கும் கோமயம் முதலானவற்றைப் பொடித்து அதை எரித்து வைப்பது அனுகல்பமாகும்; கடைகளில் கிடைக்கும் திருநீற்றைத் துணியில் வடிகட்டி கோமூத்திரத்துடன் கலந்து முன் சொன்ன முறையில் எரித்து வைப்பது உபகல்பமாகும்; மற்றவர்களால் செய்யப்பட்ட திருநீறு அகல்பமெனப்படும்.

காட்டுலர்கோ மயம்பொடித்தம் முறைசுடுத லநுகற்பங்
கடையர் தீக்க
ணிட்டுபொடி துகில்கொடுசோ தித்துருட்டி யானீர்விட் டிசைத்த
வாறே
மூட்டுமழற் சுடுவதுப கற்பமென லாகுமிவண் மொழிந்த
வன்றிக்
கூட்டுதிரு நீறகற்ப மெனச்சிவா கமமனைத்துங் கூறு மன்றே.

காட்டிலே உலர்ந்த கோமயத்தைப் பொடித்து சுடுதல் அநுகற்பம்; கடைக்காரர்கள் விற்கும் விபூதியை தீயிலிட்டு பொடித்து துணியால் வடிகட்டி பசுநீர் விட்டு உருட்டி தீயில் சுடுவதே உபகற்பம்; வேறு வகையில் சேர்த்த திருநீறு அகற்பம் எனப்படும்.

एष्वेकतममादाय पात्रेषु कलशादिषु ।
त्रिसन्ध्यमाचरेत् स्नानं यथासम्भवमेव वा॥ १९॥
स्नानकाले करौ पादौ प्रक्षाल्य विमलाम्भसा ।
वामहस्ततले भस्म क्षिप्त्वाच्छाद्यान्यपाणिना ॥ २०॥
अष्टकृत्वाथ मूलेन मौनी भस्माभिमन्त्र्य च ।

மேற்கூறியவற்றுள் ஏதேனும் ஒருவகைத் திருநீற்றைச் சுத்தமான கலயத்தில் வைத்து மூன்று ஸந்தியாகாலங்களிலும் அதனுல் ஸ்நானம் செய்யவும். ஸ்நானம் செய்யும் முன்னர் கைகால்களை தூய நீரால் நன்கு கழுவி, இடக்கையில் திருநீற்றைச் சிறிது எடுத்து வைத்து வலக்கையால் மூடி எட்டுமுறை மூலமந்திரத்தை மௌனமாக ஜபித்து,

கலயமுத லாயபாத் திரத்துளமர் நீறொன்று கவர்ந்து மூன்றா
நலமருவு சந்திகளி லெனினுமெப்போ தெனினுமதை நானஞ் செய்த
நிலையதனிற் புதுப்புனலாற் கரம்விளக்கி மவுனியாய் நீற்றை யெண்காற்
பலமுதவு மூலமநுக் கொண்டபிமந் திரித்துப்பின் பகர்ந்த வாறே.

கலயத்தில் நீற்றை எடுத்து, ஸ்நானம் செய்த நிலையில், கரம் விளக்கி, எட்டுதரம் மூலமந்திரத்தால் திருநீற்றை அபிமந்திரித்து,

शिर ईशानमन्त्रेण पुरुषेण मुखं तथा ॥ २१॥
हृत्प्रदेशाघोरेण वामदेवेन गुह्यकम् ।
पादौ सद्येन सर्वाङ्गं प्रणवेनैव सेचयेत् ॥ २२॥

சிரசில் ஈசானமந்திரத்தாலும், முகத்தைத் தத்புருஷ மந்திரத்தாலும், இதயத்தை அகோரமந்திரத்தாலும், மறைவிடத்தை வாமதேவமந்திரத்தாலும், பாதங்களை ஸத்யோஜாத மந்திரதாலும் எல்லா அங்கங்களையும் பிரணவ மந்திரத்தாலும் பூசவேண்டும்.

சிரமதிலீ சாநத்தாற் புருடத்தான் முகமதனிற் றீர்கோ ரத்தா
லுரமதனில் வாமதே வத்தினாற் குய்யத்தி னொண்ப தத்தில்
வரமருவு சத்தியோ சாதத்தாற் பிரணவமா மந்தி ரத்தாற்
புரமுழுதும் புனைந்திடுக வநாதிமல விருடுமிக்கும் பூதி
தன்னை.

தனது சிரத்தில் ஈசானமந்திரத்தாலும், தத்புருஷத்தால் முகத்திலும், அகோரத்தால் மார்பிலும், வாமதேவத்தால் குஹ்யத்திலும், சத்தியோசாதத்தால் பாதத்திலும், பிரணவமந்திரத்தால் உடல் முழுதும் பூசிக்கொள்க.

भस्मना विहितं स्नानमिदमाग्नेयमुत्तमम् ।
स्नानेषु वारुणाद्येषु मुख्यमेतन्मलापहम् ॥ २३॥
भस्मस्नानवतां पुंसां यथायोगं दिने दिने ।
वारुणाद्यैरलं स्नानैर्बाह्यदोषापहारिभिः ॥ २४॥
आग्नेयं भस्मना स्नानं यतिभिस्तु विधीयते ।
आर्द्रस्नानात् परं भस्म आर्द्रे जन्तुवधो ध्रुवम् ॥ २५॥
आर्द्रं तु प्रकृतिं विन्यात् प्रकृतिं बन्धनं विदुः ।
प्रकृतेस्तु प्रहाणार्थं भस्मना स्नानमिष्यते ॥ २६॥

இவ்வாறு திருநீற்றினுல் செய்யப்படும் ஆக்னேயம் என்னும் ஸ்நானம் வாருணம் முதலான ஸ்நான வகைகளைக் காட்டிலும் சிறந்தது; தினந்தோறும் ஆக்னேய ஸ்நானம் செய்பவனுக்கு வெளியுடலின் அழுக்கை மட்டுமே அகற்றக் கூடிய வாருணம் முதலான ஸ்நானங்கள் தேவையற்றவை. துறவிகளுக்கு ஆக்னேயஸ்நானமே விதிக்கப்பட்டது; ஏனெனில் நீர் முதலியவற்ருல் செய்யப்படும் ஸ்நானங்களில் மிக நுண்ணிய உயிரினங்களின் கொலை தவிர்க்கமுடியாதது. நீரினுல் செய்யப்படும் ஸ்நானம் பிரகிருதி எனப்படும்; பிரகிருதியானது

பாசக் கட்டுக்களை உண்டாக்குவது. அதை அழிப்பதற்கே திருநீற்றினுல் ஸ்நானம் விதிக்கப்படுகிறது.

விதிமுறையின் விபூதிதனின் மூழ்குறுதல் கங்கைமுதல்
விரிநீ ராட்டி
னதிகமென வறிகபுற மாசொழிப்ப தாகிச்சிற் றாவி மாயு
நதியறலின் மூழ்குதலின் விருப்பென்கொ லுண்மலிந நசித்து
மிக்க
முதிருமறி வுதவியிடர்ப் பகுதிநீக் குறுநீற்றின் மூழ்கு
வோர்க்கே.

முறையாக விபூதிதனில் முழுகுதல் கங்கை முதலான புண்ணியதீர்த்தங்களில் முழுகுவதைக் காட்டிலும் சிறந்தது; புறமலத்தை மட்டுமே ஒழிப்பதும் சிற்றுயிர்கள் மாய்தற்கேதுவாயும் இருக்கும் நதிநீரில் மூழ்கும் ஆசை இடர்களை நீக்கும் திருநீற்றில் மூழ்குவோர்க்கு உண்டாகாது.

ब्रह्माद्या विबुधाः सर्वे मुनयो नारदादयः ।
योगिनः सनकाद्याश्च बाणाद्या दानवा अपि ॥ २७॥
भस्मस्नानयुताः सर्वे शिवभक्तिपरायणाः ।
निर्मुक्तदोषकलिला नित्यशुद्धा भवन्ति हि ॥ २८॥

பிரம்மா முதலான தேவர்களும் நாரதர் முதலான முனிவர்களும் ஸநகர் போன்ற யோகிகளும் பாணன் போன்ற தானவர்களும் சிவபக்தியுடன் எப்போதும் திருநீற்றினுல் ஸ்நானம் செய்கிருர்கள். அதனுல் அனைத்துப் பாவங்களும் நீங்கிப் புனிதமடைகிருர்கள்.

முண்டகனே முதலாய வானவர்நா ரதன்முதலா முனிவர்
மிக்க
வண்டர்புகழ் சநகன்முதல் யோகிகள்வா ணாதியா மசுர
ரெல்லாம்
வெண்டிருநீ றணிபவராய் விமலசிவ பத்தியொடு விளங்கி
நெஞ்சிற்
கொண்டவரிப் புனிதநித்த சுத்தரா யினரெனவே கூறு நூலே.

பிரமன் முதலாய தேவர்களும், நாரதர், சனகர் முதலாய யோகிகளும், பாணன் போன்ற அசுரர்களும் திருநீற்றையணிந்து, சிவபக்தியுடன் விளங்கி புனிதமாயினர்.

नमश्शिवायेति भस्म कृत्वा सप्ताभिमन्त्रितम् ।
उद्धूलयेत् तेन देहं त्रिपुण्ड्रं चापि धारयेत् ॥ २९॥
सर्वाङ्गोद्धूलनं चापि न समानं त्रिपुण्ड्रकैः ।
तस्मात् त्रिपुण्ड्रमेवैकं लिखेदुद्धूलनं विना ॥ ३०॥

நம:சிவாய எனும் மந்திரத்திஞல் திருநீற்றை ஏழுமுறை அபிமந்திரித்து அதை உடல் முழுதும் பூசி திரிபுண்டரத்தைத் தரிக்கவும்; எல்லா அங்கங்களேயும் பூசுவதுகூட திரிபுண்டரம் அணிவதற்குச் சமமாகாது. எனவே உடல் முழுதும் பூசுவதை விட்டு திரிபுண்டரம் மட்டுமே அணியவும்.

எழுமுறையைந் தெழுத்தோதி யுடன்முழுதுத் தூளநஞ்செய் திட்டுப் பின்னர்
வழுவகல வுயர்திரிபுண் டரமிடுக வன்றிமுனம் வருமுத் தூளம்
விழுமியவொண் புண்டரத்தோ டொவ்வாமை யாலதனை விடுத்தே யேனுஞ்
செழுமைதரு புண்டரமே யிடுகவென வறைந்திடுவர் தீத கன்றோர்.

ஏழுதரம் ஐந்தெழுத்தை ஓதி உடல் முழுதும் திருநீற்றைப் பூசுக; பின்னர் திரிபுண்டரம் இடுக.

त्रिपुण्ड्रं धारयेन्नित्यं भस्मना सलिलेन च ।
स्थानेषु पञ्चदशसु शरीरे साधकोत्तमः ॥ ३१॥
उत्तमाङ्गे ललाटे च श्रवणद्वितये तथा ।
गले भुजद्वये चैव हृदि नाभौ च पृष्ठके ॥ ३२॥
बाहुयुग्मे ककुद्देशे मणिबन्धद्वये तथा ।
त्रिपुण्ड्रं भस्मना धार्यं मूलमन्त्रेण साधकैः ॥ ३३॥

சிறந்த சாதகன் தினந்தோறும் திருநீற்றையும் நீரையும் சேர்த்துக் குழைத்து உடலின் பதினைந்து இடங்களில் மூலமந்திரத்தை உச்சரித்து திரிபுண்டரம் அணியவேண்டும்; அவை, தலை, நெற்றி, இருகாதுகள், கழுத்து, இரு புஜங்கள், இதயம், தொப்புள், முதுகு, இருகைகள், அக்குள், இருமணிக்கட்டு.

**சென்னியொளிர் நுதல்செவிகள் களம்புயங்க ளகலிதயஞ் சிறந்த வுந்தி**
**மன்னுபிட ரிருவாகு வொடுககுத்தே சங்கவின்கூர் மணிபந் தங்க**
**ளென்னவரு மூவைந்து தானத்தும் புனல்கலந்த வினிய நீற்றா**
**லுன்னலரும் புகழ்த்திரிபுண் டரமிடுவர் மூலமநு வுரைத்து நல்லோர்.**

தலை, நெற்றி, கழுத்து, தோள், கொப்பூழ், கைகள், கக்கம், முதுகு, மணிக்கட்டு ஆகிய பதினைந்து இடங்களில் நீர்கலந்த திருநீற்றால் மூலமந்திரம் உச்சரித்து திரிபுண்டரம் இடுக.

वामहस्ततले भस्म क्षिप्त्वाच्छाद्यान्यपाणिना ।
अग्निरित्यादिमन्त्रेण स्पृशन् वाराभिमन्त्र्य च ॥ ३४॥
त्रिपुण्ड्रमुक्तस्थानेषु दध्यात् सजलभस्मना ।
शिवं शिव(क)रं शान्तं स प्राप्नोति न संशयः ॥ ३५॥

இடக்கைத்தலத்தில் திருநீற்றை இட்டு வலக்கைத்தலத்தால் மூடி அக்னிரிதி எனத் தொடங்கும் மந்திரத்தால் அபிமந்திரித்து அதை நீரினால் குழைத்து உடலின் மேற்கூறிய இடங்களில் திரிபுண்டரம் இடவேண்டும். அதனால் அனைத்து மங்கலங்களையும் வழங்கும் சிவபெருமானை அவன் அடைதல் திண்ணம்.

**நீற்றினையொள் வாமகரங் கொண்டுவலக் கரமதனா னெறியின் மூடித்**
**தோற்றுறுமக் கினிரிதியென் பதுமுதலா கியமநுக்க டொட்டிங் கேழ்காற்**
**போற்றிமுனம் புகன்றவிடங் களிற்புனலாற் குழைத்தவெழிற் புனித நீற்றா**
**லேற்றதிரி புண்டரமிட் டிடுபவன்மெய்ப் பரசிவனை யெய்துவானால்.**

திருநீற்றிஜன இடக்கரத்தில் வைத்து, அக்கினிரிதி எனத் தொடங்கும் வேதமந்திரங்கஜள ஏழுதரம் அபிமந்திரித்து, தனது உடலில் முன்னர்க் கூறிய இடங்களில் நீரால் குழைத்து திரிபுண்டரம் இடுபவன் சிவகதி அடைவான்.

मध्याङ्गुलित्रयेणैव स्वदक्षिणकरस्य तु ।
षडङ्गुलायतं मानमपि वाऽलिकमानकम् ॥ ३६॥
नेत्रयुग्मप्रमाणेन भाले दध्यात् त्रिपुण्ड्रकम् ।

வலக்கரத்தின் நடு மூன்று விரல்களால் மட்டுமே ஆறு அங்குல நீளமோ அல்லது கடைக்கண்ணளவு நீளமோ நெற்றியில் திரிபுண்ட்ரம் இடவேண்டும்.

தன்னுடைய வலக்கரத்தி னடுவிரல்கண் மூன்றுகொடு தயங்கு நீற்றான்
மன்னுதலி னீளமறு விரலளவா யினுங்கடைக்கண் மட்டா யேனு
முன்னளக வளவேனும் வயங்குதிரி புண்டரஞ்சொன் முறையிற் சாத்திற்
பன்னலுறு மழற்பொறிபோற் பவமனைத்துந் தொலைக்குமெனப் பகர்வர் நல்லோர்.

தன்னுடைய வலக்கரத்தின் மூன்று நடுவிரல்கஜளக் கொண்டு நெற்றியில் ஆறுவிரல் நீளமாயினும், கடைக்கண்ணளவாயினும், முன்மயிரினளவாயினும் திரிபுண்டரமிடுபவன் பிறவி நோயிலிருந்து விடுபடுவான்.

मध्यमानामिकाङ्गुष्ठैरनुलोमविलोमतः ॥ ३७॥
धारयेद्यस्त्रिपुण्ड्राङ्कं स रुद्रो नात्र संशयः ।

நடுவிரல், மோதிரவிரல் சிறுவிரல் ஆகிய மூவிரல்களால் வலமும் இடமும் எவனெருவன் திரிபுண்ட்ரம் இடுகிருனே அவன் ருத்திரனே என்பதில் ஐயமில்ஜல.

மத்திமையோ டநாமிகையங் குட்டமெனு மிவ்விரலான்
மறைகளெல்லாம்
வைத்ததிரி புண்டரத்தை யநுலோம விலோமத்தால் வயங்க
மல்கு
பத்திகொடு திரிநுதலி லிடுபவனே யுருத்திரனாம் பகரி னிந்த
மெய்த்தவுரை தனினைய மிலைமலயத் திருந்து தவம்
விளைக்கு மேலோய்.

நடுவிரல், மோதிரவிரல், சிறுவிரல் ஆகிய மூவிரல்களால் வலமாயும் இடமாயும் நெற்றியில் திரிபுண்டரமிடுபவனே ருத்திரனுவான்.

ऋजु श्वेतमनुव्याप्तं स्निग्धं श्रोत्रप्रमाणकम् ॥ ३८॥
एवं सल्लक्षणोपेतं त्रिपुण्ड्रं सर्वसिद्धिदम् ।
प्रातःकाले च मध्याह्ने सायाह्ने च त्रिपुण्ड्रकम् ॥ ३९॥
कदाचिद्भस्मना कुर्यात् स रुद्रो नात्र संशयः ।
एवंविधं विभूत्या च कुरुते यस्त्रिपुण्ड्रकम् ।
स रौद्रधर्मसंयुक्तस्त्रयीमय इति श्रुतिः ॥ ४०॥

கோணுமலும், வெண்ணிறமுடையதாயும், அழகானதாயும் காதுவரையில் நீண்டும் விளங்கும் த்ரிபுண்ட்ரம் அனைத்து சித்திகளையும் நல்கும்; விடியற்காலை, மதியம், சாயங்காலம் என மூவேளையும் திருநீற்றினுல் திரிபுண்ட்ரம் அணிபவன் ருத்திரன் என்பதில் ஐயமேயில்லை. அவன் எல்லாச் சிவகுணங்களும் பொருந்தி வேதமயமாகத் திகழ்கிருன் என்று வேதங்கள் இயம்புகின்றன.

செவ்வியவா யொன்றொடொன்று புணராது நயந்துமிகச்
சேர்ந்த வெண்மை
யெவ்வமறு செவியளவா யினையவிலக் கணமுழுது
மிசைந்து மிக்க
வவ்வியமி லாததிரி புண்டரதா ரணஞ்சித்தி யனைத்து
மாமென்
றிவ்வுலகின் மறைமுதலாங் கலையுணர்ந்த மூதறிஞ
ரெல்லாஞ் சொல்வர்.

முப்பொழுதி னொருபொழுதா யினுந்திருவெண் ணீற்றினான்
முறை வழாம
லப்புனித வருந்திரிபுண் டரமிடுவோ னுருத்திரனே யைய
மில்லை
யிப்பரிசு நற்றிரிபுண் டரமிடுவோ னிறைதருமத் திசைவுற்
றன்னோ
னொப்பரிய மும்மூர்த்தி மயனாவ னெனச்சுருதி யுரைக்கு
மன்றே.

திரிபுண்டரங்கள் அளவாகவும், ஒன்றேடொன்று சேராமலும், ஒளிபொருந்தியனவாகவும் இருந்தால் எல்லா சித்திகளையும் நல்கும். முப்போதில் ஒருபொழுதாயினும் திருவெண்ணீற்றினுல் திரிபுண்டரம் இடுபவன் மும்மூர்த்தி வடிவினனுய்த் திகழ்வான்.

ब्रह्मा विष्णुश्च रुद्रश्च देवाः शक्रपुरोगमाः ।
त्रिपुण्ड्रं धारयन्त्येव भस्मना परिकल्पितम् ॥ ४१॥
वसिष्ठाद्या महाभागा मुनयः श्रुतिकोविदाः ।
धारयन्ति सदाकालं त्रिपुण्ड्रं भस्मना कृतम् ॥ ४२॥

பிரம்மா, விஷ்ணு, இந்திரன் முதலான தேவர்களும் வேதங்களைக் கற்றுணர்ந்த வசிஷ்டர் முதலான முனிவர்களும் திருநீற்றினுல் எப்போதும் திரிபுண்ட்ரம் அணிகின்றனர்.

இந்திரனே முதலாய விமையவரு மலர்த்தவிசி லிருப்போன்
றானு
முந்திமலர் தனிலுலகம் பூத்தலையா ழியினரவி னுறங்கு வானு
முந்துபுக ழுருத்திரனும் வதிட்டனே முதலாய முனிவர் தாமுஞ்
சுந்தரமா கியதிரிபுண் டரமணிந்து விளக்கமொடு தோன்று வாரே.

பிரம்மா, திருமால், இந்திரன் முதலான எல்லா தேவர்களும் திரிபுண்டரமணிந்து விளங்குகின்றனர்.

शैवागमेषु वेदेषु पुराणेष्वखिलेषु च ।
स्मृतीतिहासकल्पेषु विहितं भस्मपुण्ड्रकम् ॥।
धारणीयं समस्तानां शैवानां च विशेषतः ॥ ४३॥

சைவாகமங்கள், வேதங்கள், எல்லாப் புராணங்கள், ஸ்மிருதி, இதிஹாஸம் என எல்லாச் சாத்திரங்களிலும் திருநீற்றிஞல் திரிபுண்ட்ரம் அணிதல் அனைத்துச் சைவர்களுக்கும் விதிக்கப்பட்டுள்ளது.

அரியவே தாகமங்க ளனைத்தும்விரி புராணங்க ளனைத்து மெல்லா
மிருதிகளு மிதிகாச கற்பங்க ளியாவுமெழில் விளங்கு நீற்றாற்
புரியுமிணை தவிர்திரிபுண் டரம்விதிக்கப் படுமினைய புண்ட ரந்தா
னுரியரெனுஞ் சைவர்களாற் சிறப்பினணி யப்படுமென் றுரைக்கு நூலே.

வேதாகமங்கள், புராணங்கள் முதலான நூல்கள் யாவும் திரிபுண்டரம் அணிவதொன்றையே மிகச் சிறந்ததென உரைக்கின்றன.

नास्तिको भिन्नमर्यादो दुराचारपरायणः ।
भस्मत्रिपुण्ड्रधारी चेन्मुच्यते सर्वकिल्बिषैः ॥ ४४॥

நாத்திகனும், நல்லொழுக்கங்களைக் கைவிட்டவனும், தீயநடத்தையுடையவனும் திருநீற்றிஞல் திரிபுண்ட்ரம் தரித்தால் அனைத்துப் பாவங்களினின்றும் விடுபடுவான்.

நீங்கியதோ ரொழுக்கமுடை யவனாகித் தீயொழுக்க நெறிநின் றோனாய்த்
தீங்குபுரி நாத்திகனே யெனினுமிள நிலவெறிக்குந் திருவெண் ணீற்றி
னோங்குதிரி புண்டரதா ரகன்மிகுபா வங்களெல்லா மொழிந்து நிற்பன்
வாங்குதிரைக் கடலுலகிற் குறுமுனியென் றுயர்ந்தபெரு மாத வத்தோய்.

தீயவொழுக்கமுடையோனுயினும், நாத்திகனுயினும் திரிபுண்டரமணிபவன் எல்லாப் பாவங்களினின்றும் நீங்குவான்.

भस्मना विहितस्नानस्त्रिपुण्ड्राङ्कितमस्तकः ।
शिवार्चनपरो नित्यं रुद्राक्षमपि धारयेत् ॥ ४५॥
रुद्राक्षधारणादेव मुच्यन्ते सर्वपातकैः ।
दुष्टचित्ता दुराचारा दुष्प्रज्ञा अपि मानवाः ॥ ४६॥

திருநீற்றினுல் ஸ்நானம் செய்து நெற்றியில் திரிபுண்டரம் தரித்து தினமும் சிவார்ச்சனை புரிபவன் ருத்திராக்ஷத்தையும் தரிக்கவேண்டும்; தீய எண்ணமுடையோரும் தீய நடத்தை கொண்டவர்களும் தீயபுத்திகொண்ட மனிதர்கள் கூட ருத்திராக்ஷத்தை அணிவதால் அனைத்துப் பாவங்களிலிருந்தும் நீங்குவர்.

நீற்றின் மூழ்கிநன் னெற்றியிற் புண்டரந்
தோற்ற வீசனைத் தொண்டினர்ச் சிப்பவன்
போற்றி யக்க மணியும் புனைகவென்
றாற்றன் மிக்குய ராகம மோதுமால்.

திருவெண்ணீறணிந்து முறையாக சிவபெருமானை அருச்சிப்பவன் ருத்திராக்ஷமணிகளையும் அணிய வேண்டுமென ஆகமங்கள் கூறுகின்றன.

पुरा त्रिपुरसंहारे त्रिनेत्रो जगतां पतिः ।
उदपश्यत् पुरां योगमुन्मीलितविलोचनः ॥ ४७॥
निपेतुस्तस्य नेत्रेभ्यो बहवो जलबिन्दवः ।
तेभ्यो जाता हि रुद्राक्षा रुद्राक्षा इति कीर्तिताः॥ ४८॥

முன்னொரு சமயம் முக்கண்ணனை சிவபெருமான் திரிபுராசுரர்களை அழிக்கும் போது திறந்த கண்களால் முப்புரங்களையும் நோக்க, அக்கண்களிலிருந்து பல நீர்த்துளிகள் கீழே விழுந்தன; அவற்றிலிருந்து தோன்றியவையே ருத்திராக்ஷங்களாகும்.

புரங்கள் மூன்றும் பொடித்துறங் காலரன்
றிரங்கொ ணாட்டந் திறப்பப் பஃறுளி

பரந்த வன்னவற் றிற்படு பன்மணி
வரங்கொ ளக்க மணியென வோதுவார்.

முப்புரங்களையும் அழித்த போது சிவபெருமான் தனது கண்களைத் திறந்தவுடன் சிலநீர்த்துளிகள் சிந்தின. அவற்றிலிருந்து உண்டான மணிகளே அக்கமணியென வழங்கப்படுகின்றன.

रुद्रनेत्रसमुत्पन्ना रुद्राक्षा लोकपावनाः ।
अष्टत्रिंशत्प्रभेदेन भवन्त्युत्पत्तिभेदतः ॥ ४९॥

ருத்திரனுடைய கண்களிலிருந்து தோன்றிய அந்த ருத்திராக்ஷங்கள் எல்லா உலகங்களையும் புனிதமாக்குவன; அவை முப்பத்தெட்டு வகைகள் கொண்டவை.

உருத்தி ராக்கத் துதித்திடுந் தன்மையா
லுருத்தி ராக்கப் பெயர்பெறு மொண்மணி
யிருக்கு முப்பதொ டெண்வகை பேதமாய்த்
தரித்து ளோர்வினை சாடுவ வாகியே.

ருத்திரனுடைய கண்களிலிருந்து தோன்றியதால் அவை ருத்திராக்கமணியென அழைக்கப்படுகின்றன. அவற்றை அணிபவர் துன்பத்திலிருந்தும் விடுபடுவர். அம்மணிகள் முப்பத்தெட்டு வகைப்பட்டன.

नेत्रात् सूर्यात्मनः शम्भोः कपिला द्वादशोदिताः ।
श्वेताः षोडश सञ्जाताः सोमरूपाद्विलोचनात् ॥ ५०॥
कृष्णा दशविधा जाता वह्निरूपाद्विलोचनात् ।
एवमुत्पत्तिभेदेन रुद्राक्षा बहुधा स्मृताः ॥ ५१॥

சிவபெருமானின் சூரியக்கண்ணிலிருந்து பழுப்பு நிற ருத்திராக்ஷங்கள் பன்னிரெண்டு வகையும், சந்திரக்கண்ணிலிருந்து வெண்ணிற ருத்திராக்ஷங்கள் பதினாறு வகையும், அக்கினிக்கண்ணிலிருந்து கருநிற ருத்திராக்ஷங்கள் பத்துவகையும் தோன்றின. இவ்வாறு அவற்றின் உற்பத்தியினால் ருத்திராக்ஷங்கள் பல்வகைப்பட்டன.

கதிர்க்க ணாறிரண் டாகுங் கபிலமாய்
மதிக்க ணீரெட்டு மன்னுறும் வெண்மையை
யுதிக்குந் தீக்கணிற் பத்தொண் கருமையாய்
விதித்த வீசன் விழிமணி யென்பவே.

சூரியக்கண்ணிலிருந்து பழுப்பு நிற ருத்திராக்ஷங்கள் பன்னிரெண்டு வகையும், சந்திரக்கண்ணிலிருந்து வெண்ணிற ருத்திராக்ஷங்கள் பதினாறு வகையும், அக்கினிக்கண்ணிலிருந்து கருநிற ருத்திராக்ஷங்கள் பத்துவகையும் தோன்றின.

अच्छिद्रं कनकप्रख्यमनन्यधृतमुत्तमम् ।
रुद्राक्षं धारयेत् प्राज्ञः शिवपूजापरायणः ॥ ५२॥

பழுதில்லாததும், பொன்னிறமானதும் மற்றவர்களால் தரிக்கப்படாததுமான ருத்திராக்ஷத்தையே சிவபூஜையில் நாட்டமுடையோனும் கற்றறிந்தவனும் அணியவேண்டும்.

பழுதி லாது பசும்பொ னிறத்தவா
யழகு கூர்ந்தய லாரணி யாமணி
முழுது ணர்ந்த முதல்வனைப் பூசைசெய்
விழுமி யோன்புனை கிற்பன் விழைவினால்.

பழுதில்லாததும், பொன்னிறமானதும் மற்றவர்களால் தரிக்கப்படாததுமான ருத்திராக்ஷத்தையே சிவபூஜையில் நாட்டமுடையோன் அணியக்கடவன்.

यथास्थानं यथावक्त्रं यथायोगं यथाविधि ।
रुद्राक्षधारणं वक्ष्ये रुद्रसायुज्यसिद्धये ॥ ५३॥
शिखायामेकमेकास्यं रुद्राक्षं धारयेद् बुधः ।
द्वित्रिद्वादशवक्त्राणि शिरसि त्रीणि धारयेत् ॥ ५४॥
षट्त्रिंशद्धारयेन्मूर्ध्नि नित्यमेकादशाननान् ।

ருத்திரனுடன் ஐக்கியமடைதற் பொருட்டு தக்க இடத்தில் அந்தந்த நேரத்திற்கேற்றவாறு தக்க முகங்களையுடைய ருத்திராக்ஷங்களை அணியும் முறையை நான் விளக்குகிறேன். கற்றறிந்தவன் சிகையில் ஒருமுக ருத்திராக்ஷம் ஒன்றையும்,

சிரசில் இரண்டு, மூன்று அல்லது பத்துமுகம் கொண்ட ருத்திராக்ஷங்கள் மூன்றையும், பதினேருமுகம் கொண்ட முப்பத்தாறு ருத்திராக்ஷங்களைத் தலையிலும் தினமும் அணியவேண்டும்.

> சிகையி னோர்முகத் தொன்று சிரத்தினின்
> முகமி ரண்டுமூன் றாறிரண் டுள்ளமூன்
> றிகலில் பன்னொன் றிசையுமா றாறுதாம்
> புகழு றுந்தலை தன்னிற் புனைகவே.

கற்றறிந்தவன் சிகையில் ஒருமுக ருத்திராக்ஷம் ஒன்றையும், சிரசில் இரண்டு, மூன்று அல்லது பத்துமுகம் கொண்ட ருத்திராக்ஷங்கள் மூன்றையும், பதினேருமுகம் கொண்ட முப்பத்தாறு ருத்திராக்ஷங்களைத் தலையிலும் தினமும் அணியவேண்டும்.

> दशसप्तपञ्चवक्त्रान् षट् षट् कर्णद्वये वहेत् ॥ ५५॥
> षडष्टवदनान् कण्ठे द्वात्रिंशद्धारयेत् सदा ।
> पञ्चाशद्धारयेद् विद्वान् चतुर्वक्त्राणि वक्षसि ॥ ५६॥

பத்து, ஏழு, ஐந்து முக ருத்திராக்ஷங்களில் ஆறு ஆறு மணிகளை இரு காதுகளிலும் அணியவேண்டும்; ஆறு அல்லது எட்டு முக ருத்திராக்ஷங்களில் முப்பத்திரண்டு மணிகளைக் கழுத்திலும், நான்குமுக ருத்திராக்ஷங்களில் ஐம்பது மணிகளை மார்பிலும் தரிக்கவேண்டும்.

> ஐந்தொ டேழுபத் துள்ளவவ் வாறுகா
> துந்து மாறொடெட் டுள்ளவெண் ணான்குநற்
> கந்த ரம்முக நான்குள வைம்பதாய்
> வந்த நன்மணி மார்பி னணிவரால்.

பத்து, ஏழு, ஐந்து முக ருத்திராக்ஷங்களில் ஆறு ஆறு மணிகளை இரு காதுகளிலும் அணியவேண்டும்; ஆறு அல்லது எட்டு முக ருத்திராக்ஷங்களில் முப்பத்திரண்டு மணிகளைக் கழுத்திலும், நான்குமுக ருத்திராக்ஷங்களில் ஐம்பது மணிகளை மார்பிலும் தரிக்கவேண்டும்.

त्रयोदशमुखान् बाह्वोर्धरेत् षोडश षोडश ।
प्रत्येकं द्वादश वहेन्नवास्यान् मणिबन्धयोः ॥५७॥

புஜங்கள் ஒவ்வொன்றிலும் பதிமூன்று முக ருத்திராக்ஷங்களில் பதினாறு மணிகளையும், மணிக்கட்டு ஒவ்வொன்றிலும் ஒன்பது முக ருத்திராக்ஷங்களில் பன்னிரண்டு மணிகளையும் அணிய வேண்டும்.

வாகு விற்பதின் மூன்றுள வேறுவே
றாக வீரெட்டங் காறிரண் டாறிரண்
டோகை நன்முக மொன்ப துடையவா
மோக வொண்மணி முன்கையிற் கொள்கவே.

புஜங்கள் ஒவ்வொன்றிலும் பதிமூன்று முக ருத்திராக்ஷங்களில் பதினாறு மணிகளையும், மணிக்கட்டு ஒவ்வொன்றிலும் ஒன்பது முக ருத்திராக்ஷங்களில் பன்னிரண்டு மணிகளையும் அணிய வேண்டும்.

चतुर्दशमुखं यज्ञसूत्रमष्टोत्तरं शतम् ।
धारयेत् सार्वकालं तु रुद्राक्षं शिवपूजकः ॥५८॥

பதினான்கு முக ருத்திராக்ஷங்களில் நூற்றெட்டு மணிகள் கொண்ட யஜ்ஞோபவீதத்தை சிவபூஜை செய்வோன் எப்போதும் அணியவேண்டும்.

ஏழி ரண்டுமு கத்துநூற் றெட்டுயர்
வாழ்வி லங்குப வீதம் வனைகுவர்
தாழி ருஞ்சடைத் தாணுவைப் பூசனை
யூழி லங்க வுஞற்றிடு முத்தமர்.

பதினான்கு முக ருத்திராக்ஷங்களில் நூற்றெட்டு மணிகள் கொண்ட யஜ்ஞோபவீதத்தை சிவபூஜை செய்வோன் எப்போதும் அணியவேண்டும்.

एवं रुद्राक्षधारी यः सर्वकाले तु वर्तते ।
तस्य पापकथा नास्ति मूढस्यापि न संशयः ॥ ५९॥

இவ்வாறு ருத்திராக்ஷங்களை எப்போதும் தரிப்பவன் அறிவற்றவனுயினும் அவனுக்குப் பாவங்களைப் பற்றிய பேச்சே எழாது.

இனைய வாறிங் கிறைமணி யென்றுமே
புனைகு வார்நற் புலனறு மூடரே
யெனினு மங்கவர்க் கென்று மருவுதீ
வினையி னாமமு மின்றிது மெய்ம்மையே.

இவ்வாறு ருத்திராக்ஷங்களை எப்போதும் தரிப்பவன் அறிவற்றவனுயினும் அவனுக்குப் பாவங்களைப் பற்றிய பேச்சே எழாது.

ब्रह्महा मद्यपायी च स्वर्णहृद् गुरुतल्पगः ।
मातृहा पितृहा चैव भ्रूणहा कृतघातकः ।
रुद्राक्षधारणादेव मुच्यते सर्वपातकैः ॥ ६० ॥

பிராமணனைக் கொன்றவனுயினும், கள் குடிப்போனுயினும், பொன்னைத் திருடியவனும், குருவின் மனைவியை விழைபவனுயினும், தாய், தந்தையரைக் கொன்றவனுயினும், கருவிலுள்ள சிசுவைக் கொன்றவனுயினும் ருத்திராக்ஷங்களைத் தரிப்பதாலேயே எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகின்றுன்.

வேதி யர்க்கனை யத்தனுக் கொண்மக வினுக்குத்
தீதி ழைத்தவன் கள்ளுணி செய்ந்நன்றி செற்றோன்
போத நற்குரு தற்பரன் பொன்கொளி யெனினும்
பாத கத்தினி னீங்குவன் பரன்மணி தரிப்போன்.

பிராமணனைக் கொன்றவனுயினும், கள் குடிப்போனுயினும், பொன்னைத் திருடியவனும், குருவின் மனைவியை விழைபவனுயினும், தாய், தந்தையரைக் கொன்றவனுயினும், கருவிலுள்ள சிசுவைக் கொன்றவனுயினும் ருத்திராக்ஷங்களைத் தரிப்பதாலேயே எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகின்றுன்.

दर्शनात् स्पर्शनाच्चैव स्मरणादपि पूजनात् ।
रुद्राक्षधारणाल्लोके मुच्यन्ते पातकैर्जनाः ॥ ६१ ॥

गवां कोटिप्रदानस्य यत्फलं भुवि लभ्यते ।
तत्फलं लभते मर्त्यो नित्यं रुद्राक्षधारणात् ॥ ६३॥

ருத்திராக்ஷத்தைத் தொடுவதாலும், பார்ப்பதாலும், நினைப்பதாலும் அதைப் பூசிப்பதாலும் அதை அணிவதாலும் மக்கள் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள். கோடி பசுக்களைத் தானம் செய்வதால் கிட்டும் புண்ணியத்தைத் தினந்தோறும் ருத்திராக்ஷம் அணிவதால் அடையலாம்.

தீண்ட லான்மனத் துன்னலாற் பூசனை செயலாற்
காண்ட லாலுடற் புனைதலான் மணிவினை களைவர்
வேண்டு மானொரு கோடியீத் துறுபலன் விளைவு
பூண்டு ளோன்றனக் கக்கமா மணியருள் புரியும்.

ருத்திராக்ஷத்தைத் தொடுவதாலும், பார்ப்பதாலும், நினைப்பதாலும் அதைப் பூசிப்பதாலும் அதை அணிவதாலும் மக்கள் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள். கோடி பசுக்களைத் தானம் செய்வதால் கிட்டும் புண்ணியத்தைத் தினந்தோறும் ருத்திராக்ஷம் அணிவதால் அடையலாம்.

ब्राह्मणो वान्त्यजो वापि मूर्खो वा पण्डितोऽपि वा ।
रुद्राक्षधारणादेव मुच्यते सर्वपातकैः ॥ ६२॥

பிராம்மண ஜாதியில் பிறந்தவனாயினும் அல்லது இழிகுலத்தில் பிறந்தோனாயினும் ருத்திராக்ஷம் அணிவதாலேயே அனைத்துப் பாவங்களிலிருந்தும் நீங்குகிறான்.

அந்த ணக்குலத் துதித்தவ னாயினு மன்றி
நிந்த னைப்புலைப் பிறப்பின னாயினும் புலமை
முந்து பெற்றவ னாயினு மூடனா யினுமே
சிந்து முற்பவ மனைத்தயுஞ் சிவன்மணி தரிப்போன்.

பிராம்மண ஜாதியில் பிறந்தவனாயினும் அல்லது இழிகுலத்தில் பிறந்தோனாயினும் ருத்திராக்ஷம் அணிவதாலேயே அனைத்துப் பாவங்களிலிருந்தும் நீங்குகிறான்.

मृत्युकाले च रुद्राक्षं निष्पीड्य सह वारिणा ।
यः पिबेच्चिन्तयन् रुद्रं रुद्रलोकं स गच्छति ॥ ६४॥

உயிர் பிரியும் தருவாயில் ஒருவன் ருத்திராக்ஷத்தைப் பொடித்து நீரில் கலந்து ருத்திரனைச் சிந்தனை செய்து கொண்டே அருந்தினால் அவன் ருத்திரலோகத்தைச் சென்றடைவது திண்ணம்.

மரித்தல் சேர்வுறு காலையி னக்கமா மணியை
யுரைத்து நீரிடை யுமையொரு பாகனை யுவந்து
கருத்தி னாடியே குடித்திடிற் றுயரெலாங் களைந்து
திருத்த மாகிய வுருத்திர வுலகினைச் சேர்வார்.

உயிர் பிரியும் தருவாயில் ஒருவன் ருத்திராக்ஷத்தைப் பொடித்து நீரில் கலந்து ருத்திரனைச் சிந்தனை செய்து கொண்டே அருந்தினால் அவன் ருத்திர லோகம் சென்றடைவது திண்ணம்.

भस्मोद्धूलितसर्वाङ्गा धृतरुद्राक्षमालिकाः ।
ये भवन्ति महात्मानस्ते रुद्रा नात्र संशयः ॥ ६५॥

திருநீற்றை உடல் முழுதும் பூசிக்கொண்டு ருத்திராக்ஷமாலைகளை அணிந்து கொண்டு விளங்கும் சான்றோர்கள் ருத்திரர்களே என்பதில் ஐயமில்லை.

பூதி யாலுடன் முழுதுமுத் தூளநம் புரிந்து
சாத மேவரு மக்கமா மணியினைத் தரிக்கு
மேதை யானவ னுருத்திர னேயென விளம்பு
மாதி மாமறை யனைத்துமிவ் வுரைக்கிலை யையம்.

திருநீற்றை உடல் முழுதும் பூசிக்கொண்டு ருத்திராக்ஷமாலைகளை அணிந்து கொண்டு விளங்கும் சான்றோர்கள் ருத்திரர்களே என்பதில் ஐயமில்லை.

नित्यानि काम्यानि निमित्तजानि
कर्माणि सर्वाणि सदाऽपि कुर्वन् ।
यो भस्मरुद्राक्षधरो यदि स्याद्
द्विजो न तस्यास्ति फलोपपत्तिः ॥ ६६॥

நித்தியம், நைமித்திகம் முதலான கருமங்களைத் தவருது இயற்றுபவனுயினும் திருநீறு ருத்திராக்ஷங்களை அணிபவன் அக்கருமங்களின் பலன்களால் கட்டப்படமாட்டான்.

நித்தி யந்திகழ் காமிய நிமித்திய நிகழ்த்து
மெத்தி றப்பெருங் கருமங்க ளியற்றுவோ னெனினும்
பத்தி யிற்றிரு நீற்றொடு பரன்மணி புனையா
னத்தி றக்கரு மங்களின் பலன்களை யடையான்.

நித்தியம், நைமித்திகம் முதலான கருமங்களைத் தவருது இயற்றுபவனுயினும் திருநீறு ருத்திராக்ஷங்களை அணியாதவன் அக்கருமங்களின் பலன்களால் கட்டப்படமாட்டான்.

सर्वेषु वर्णाश्रमसङ्गतेषु
नित्यं सदाचारपरायणेषु ।
श्रुतिस्मृतिभ्यामिह चोद्यमानो
विभूतिरुद्राक्षधरः समानः ॥ ६७॥

வருணுசிரம ஒழுக்கங்களைத் தவருது கடைப்பிடிப்போருள்ளும் திருநீறு ருத்திராக்ஷங்களை அணிபவனே சுருதி ஸ்மிருதிகளால் போற்றப்படுகிருன்.

வன்ன மாச்சிர மத்தினின் மாசிலா சாரந்
தன்னி னிற்பவர் தம்முண்மெய் தயங்குநீற் றோடு
பொன்னெ னத்திக ழக்கமா மணிபுனை பவனே
சொன்னி ரைத்துயர் சுருதியு மிருதியுந் துதிப்பான்.

வருணாசிரம ஒழுக்கங்களைத் தவறாது கடைபிடிப்போருள் திருநீறு ருத்திராக்ஷங்களை அணிபவனே சுருதி ஸ்மிருதிகளால் போற்றப்படுகிறான்.

உருத்திராக்கதாரணத்தலம் முற்றும்

॥ इति श्रीषट्स्थलब्रह्मिणा शिवयोगिनाम्ना प्रणीते श्रीवीरशैवधर्मनिर्णये सिद्धान्तशिखामणौ भक्तस्थले विभूतिरुद्राक्षधारणप्रसङ्गो नाम सप्तमः परिच्छेदः ॥७॥

## ॥ अष्टमः परिच्छेदः ॥

धृतश्रीभूतिरुद्राक्षः प्रयतो लिङ्गधारकः ।
जपेत् पञ्चाक्षरीविद्यां शिवतत्त्वप्रबोधिनीम् ॥ १॥

விபூதி ருத்திராக்ஷங்களையும் சிவலிங்கத்தையும் முறைப்படி தரித்துக் கொண்டவன் சிவதத்துவத்தை விளக்கமுறச் செய்யும் பஞ்சாக்ஷரமந்திரத்தை ஜபம் செய்ய வேண்டும்.

அக்க மாமணி நீறணி யிலிங்கதா ரணன்றான்
மிக்க தாஞ்சிவ தத்துவம் விளங்குற விளக்கு
நக்க னாமமா மைந்தெழுத் தாகவே நவிலுந்
தக்க வித்தையை முறையினிற் செபித்திடத் தகுமால்.

விபூதி ருத்திராக்ஷங்களையும் சிவலிங்கத்தையும் முறைப்படி தரித்துக் கொண்டவன் சிவதத்துவத்தை விளக்கமுறச் செய்யும் பஞ்சாக்ஷரமந்திரத்தை ஜபம் செய்ய வேண்டும்.

शिवतत्त्वात् परं नास्ति यथा तत्त्वान्तरं महत् ।
तथा पञ्चाक्षरीमन्त्रान्नास्ति मन्त्रान्तरं महत् ॥ २॥

எவ்வாறு சிவதத்துவத்தைக் காட்டிலும் வேறொரு பரதத்துவம் இல்லையோ அவ்வாறே பஞ்சாக்ஷரமந்திரத்தைக் காட்டிலும் வேறொரு உயர்ந்த மந்திரம் இல்லை.

மெய்த்த வொண்சிவ தத்துவ மதனினு மேலாந்
தத்து வாந்தர மின்மைபோன் மறைகளின் றலையாய்
வைத்த வைந்தெழுத் தாகிய மந்திர மதனி
லுத்த ரம்பெறு மந்திர மிலையென வுணர்வாய்.

எவ்வாறு சிவதத்துவத்தைக் காட்டிலும் வேறொரு பரதத்துவம் இல்லையோ அவ்வாறே பஞ்சாக்ஷரமந்திரத்தைக் காட்டிலும் வேறொரு உயர்ந்த மந்திரம் இல்லை.

ज्ञाते पञ्चाक्षरीमन्त्रे किं मन्त्रान्तरैः फलम् ।
ज्ञाते शिवे जगन्मूले किं फलं देवतान्तरैः ॥ ३॥

பஞ்சாக்ஷர மந்திரத்தை அறிந்தவனுக்கு வேறு மந்திரங்களால் என்ன பயன்? அகில உலகங்களுக்கும் ஆதாரமான சிவபெருமானை அறிந்தவனுக்கு ஏனைய தெய்வங்களால் என்ன பயன்?

ஆய விவ்வுல கந்தரு மூலகா ரணமாந்
தூய வொண்சிவ முணர்ந்திடின் மற்றுள சுரரான்
மேயு றும்பல னென்கொலைந் தெழுத்தையு முணரிற்
பாய மந்திரப் பரப்பினால் வருவதெப் பயனே.

பஞ்சாக்ஷர மந்திரத்தை அறிந்தவனுக்கு வேறு மந்திரங்களால் என்ன பயன்? அகில உலகங்களுக்கும் ஆதாரமான சிவபெருமானை அறிந்தவனுக்கு ஏனைய தெய்வங்களால் என்ன பயன்?

सप्तकोटिषु मन्त्रेषु मन्त्रः पञ्चाक्षरो महान् ।
ब्रह्मविष्ण्वादिदेवेषु यथा शम्भुर्महत्तरः ॥ ४॥

பிரம்மா, விஷ்ணு போன்ற தேவர்களுள் எவ்வாறு சிவபெருமான் மிக உயர்ந்தவரோ, அவ்வாறே எழுகோடி மந்திரங்களுள் பஞ்சாக்ஷரமந்திரம் ஒப்பற்றது.

வேத னாதியாம் விண்ணவர் குழாத்தினுள் விளங்கும்
பாதி வாண்மதி முடியுடைப் பரமனே போலப்
பேத மாமெழு கோடி மந்திரங்களிற் பெரிதாம்
போத வைந்தெழுத் தாகிய புனிதமந் திரமே.

பிரம்மா, விஷ்ணு போன்ற தேவர்களுள் எவ்வாறு சிவபெருமான் மிக உயர்ந்தவரோ, அவ்வாறே எழுகோடி மந்திரங்களுள் பஞ்சாக்ஷரமந்திரம் ஒப்பற்றது.

अशेषजगतां हेतुः परमात्मा महेश्वरः ।
तस्य वाचकमन्त्रोऽयं सर्वमन्त्रैककारणम् ॥ ५॥

அனைத்துலகங்களுக்கும் ஓரே காரணமானவன் சிவபெருமான் ஒருவரே; அவரைக் குறிக்கும் மந்திரச் சொல்லே பஞ்சாக்ஷரம். அது எல்லா மந்திரங்களுக்கும் மூலமானது.

உலக னைத்தினுக் குந்தனிக் காரண முரைக்குங்
கலைக ளுக் கரி தாகிய பரசிவங் கண்டாய்
பலம நுக்களுக் கேதுவாம் பரமவா சகமா
யிலகு மப்புக ழைந்தெழுத் தெனவுல கிசைக்கும்.

அனைத்துலகங்களுக்கும் ஒரே காரணமானவன் சிவபெருமான் ஒருவரே; அவரைக் குறிக்கும் மந்திரச் சொல்லே பஞ்சாக்ஷரம். அது எல்லா மந்திரங்களுக்கும் மூலமானது.

तस्याभिधानमन्त्रोऽयमभिधेयश्च स स्मृतः ।
अभिधानाभिधेयत्वान्मन्त्रात् सिद्धः परः शिवः ॥ ६॥

சிவபெருமானைக் குறிக்கும் பெயரே பஞ்சாக்ஷர மந்திரம், அம்மந்திரத்தால் குறிக்கப்படுபவன் சிவபெருமான். அம்மந்திரத்தால் அடையப்படுபவன் சிவபெருமான் ஒருவரே.

அஞ்செ ழுத்தெனு மந்திர மப்பர மனுக்கு
விஞ்சு மற்புத நாமமவ் விமலனே நாமி
யெஞ்ச லற்றிடு நாமமு நாமியு மெனலா
னெஞ்ச ழுத்துமம் மந்திரத் தாலிறை நிகழும்.

சிவபெருமானைக் குறிக்கும் பெயரே பஞ்சாக்ஷர மந்திரம், அம்மந்திரத்தால் குறிக்கப்படுபவன் சிவபெருமான். அம்மந்திரத்தால் அடையப்படுபவன் சிவபெருமான் ஒருவரே.

नमः शब्दं वदेत् पूर्वं शिवायेति ततः परम् ।
मन्त्रः पञ्चाक्षरो ह्येष सर्वश्रुतिशिरोगतः ॥ ७॥

முதலில் நம: எனும் சொல்லையும் பின்னர் சிவாய என்பதையும் உச்சரிக்கவும். இதுவே பஞ்சாக்ஷரமந்திரம். இது எல்லா வேதமந்திரங்களுக்கும் தலையாயது.

முன்ன ரோதுக நமவென விளம்புறு மொழியைப்
பின்ன ரோதுக சிவாயவென் றிங்ஙனம் பிறங்கு
மன்ன வஞ்செழுத் தாகிய மந்திர வரசைப்
பன்ன ருஞ்செழு மறைகளின் முடியெலாம் பரிக்கும்.

முதலில் நம: எனும் சொல்லேயும் பின்னர் சிவாய என்பதையும் உச்சரிக்கவும். இதுவே பஞ்சாக்ஷரமந்திரம். இது எல்லா வேதமந்திரங்களுக்கும் தலேயாயது.

आदितः परिशुद्धत्वान्मलत्रयवियोगतः ।
शिव इत्युच्यते शम्भुश्चिदानन्दघनः प्रभुः ॥ ८॥
आस्पदत्वादशेषाणां मङ्गलानां विशेषतः ।
शिवशब्दाभिधेयो हि देवदेवस्त्रियम्बकः ॥ ९॥

எப்போதும் மும்மலங்களும் அற்று பரிசுத்தனுக இருப்பதால் அனேவருக்கும் நலமே விளேவிக்கும் சிதானந்தமயனுன சம்புவானவர் சிவன் என்று அழைக்கப்படுகின்ருர். எல்லா தேவர்களுக்கும் தலேவராகத் திகழும் திரியம்பகர் அனேத்து மங்கலங்களும் கொண்டு விளங்குவதால் சிவன் என்று குறிக்கப்படுகின்ருர்.

முத்த னாகிநின் றநாதியே மும்மலங் களினுஞ்
சுத்த னாதலின் மங்கல முழுவதுந் தோன்றற்
குய்த்த தோரிட மாதலிற் சிவமென வுரைப்பர்
சத்த னாகிய சச்சிதா நந்தசங் கரனை.

எப்போதும் மும்மலங்களும் அற்று பரிசுத்தனுக இருப்பதால் அனேவருக்கும் நலமே விளேவிக்கும் சிதானந்தமயனுன சம்புவானவர் சிவன் என்று அழைக்கப்படுகின்ருர். எல்லா தேவர்களுக்கும் தலேவராகத் திகழும் திரியம்பகர் அனேத்து மங்கலங்களும் கொண்டு விளங்குவதால் சிவன் என்று குறிக்கப்படுகின்ருர்.

शिव इत्यक्षरद्वन्द्वं परब्रह्मप्रकाशकम् ।
मुख्यवृत्त्या तदान्येषां शब्दानां गुणवृत्तयः ॥ १०॥

சிவ எனும் ஈரெழுத்தைக் கொண்ட சொல் சிறப்பாக பரப்பிரம்மத்தைக் குறிப்பது; மற்ற பொருள்களே அது கௌணமாகவே குறிக்கும்.

சிவமெ னுந்திக ழீரெழுத் தொருமொழி சிறப்பாய்ப்
பவம கன்றுள பரப்பிர மந்தனைப் பயக்கு

நவைய கன்றுயர் சிவமெனும் பெயரலா நாம
மெவையு நீக்குறு கவுணமாய் விரியுமென் றிசைப்பர்.

சிவ எனும் ஈரெழுத்தைக் கொண்ட சொல் சிறப்பாக பரப்பிரம்மத்தைக் குறிப்பது; மற்ற பொருள்களை அது கௌணமாகவே குறிக்கும்.

तस्मान्मुख्यतरं नाम शिव इत्यक्षरद्वयम् ।
सच्चिदानन्दरूपस्य शम्भोरमिततेजसः ॥ ११॥

ஆதலால் சிவ எனும் ஈரெழுத்துப் பெயரானது ஸச்சிதானந்த வடிவினனும் அளவற்ற சோதி வடிவானவனுமான சம்புவினுடைய மிகச் சிறப்பான பெயராகும்.

ஆத லாற்சிவ மெனுமிரண் டெழுத்துமே யளவில்
சோதி யாயுறு சச்சிதா நந்தமாய்த் தோன்று
மாதி நாயகன் றனக்கு முக்கியப் பெயராமென்
றோது மாமறை முதலிய கலையெலா முவந்தே.

ஆதலால் சிவ எனும் ஈரெழுத்துப் பெயரானது ஸச்சிதானந்த வடிவினனும் அளவற்ற சோதி வடிவானவனுமான சம்புவினுடைய மிகச் சிறப்பான பெயர்.

एतन्नामावलम्बेन मन्त्रः पञ्चाक्षरः स्मृतः ।
यस्मादतः सदा जप्यो मोक्षकाङ्क्षिभिदरात् ॥ १२॥

இம்மந்திரம் ஐந்தெழுத்து மந்திரமெனச் சிறப்பிக்கப்படுகிறது; மோக்ஷத்தை விரும்புவோர்களால் இதுவே அநுதினமும் பக்தியுடன் ஜபிக்கத்தக்கது.

இனைய நாமமுற் றஞ்செழுத் தென்னுமந் திரமா
மனைய மந்திர முத்தியின் விருப்புள னாகிப்
புனித நெஞ்சின னாயினோ னாதரம் பொங்கத்
தனியி ருந்தநு தினமுமுச் சரித்திடத் தகுமால்.

இம்மந்திரம் ஐந்தெழுத்து மந்திரமெனச் சிறப்பிக்கப்படுகிறது; மோக்ஷத்தை விரும்புவோர்களால் இதுவே அநுதினமும் பக்தியுடன் ஜபிக்கத்தக்கது.

यथानादिर्महादेवः सिद्धः संसारमोचकः ।
तथा पञ्चाक्षरो मन्त्रः संसारक्षयकारकः ॥ १३॥

எவ்வாறு மகாதேவனுகிய சிவபெருமான் அநாதியே சம்சாரத்திலிருந்து காப்பவரோ, அவ்வாறே பஞ்சாக்ஷரமந்திரமும் சம்சாரமென்னும் கொடிய நோயை அழிக்கவல்லது.

பாச மோசக னநாதியாம் பரசிவ மென்னு
மீச னாகுத லுண்மையவ் வாறென வோங்கித்
தேசு லாவிய வஞ்செழுத் துஞ்செறி பாச
நாச காரண மென்பர்மெய் தெரிந்துள நல்லோர்.

எவ்வாறு மகாதேவனுகிய சிவபெருமான் அநாதியே சம்சாரத்திலிருந்து காப்பவரோ, அவ்வாறே பஞ்சாக்ஷரமந்திரமும் சம்சாரமென்னும் கொடிய நோயை அழிக்கவல்லது.

पञ्चभूतानि सर्वाणि पञ्चतन्मात्रकाणि च ।
ज्ञानेन्द्रियाणि पञ्चापि पञ्चकर्मेन्द्रियाणि च ॥ १४॥
पञ्चब्रह्माणि पञ्चापि कृत्यानि सह कारणैः ।
बोध्यानि पञ्चभिर्वर्णैः पञ्चाक्षरमहामनोः ॥ १५॥
पञ्चधा पञ्चधा यानि प्रसिद्धानि विशेषतः ।
तानि सर्वाणि वस्तूनि पञ्चाक्षरमयानि हि ॥ १६॥

ஐம்பூதங்கள், ஐவகைத் தன்மாத்திரைகள், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கருமேந்திரியங்கள், ஈசானம், தத்புருஷம் முதலான ஐந்து பிரம்மங்கள், சிவபெருமான் இயற்றும் படைத்தல், காத்தல் முதலான ஐவகை கிருத்தியங்கள், பிரம்மா, விஷ்ணு முதலான ஐந்து காரணேசுவரர்கள் ஆகியன பஞ்சாக்ஷரமந்திரத்தின் ஐந்தெழுத்துக்களால் குறிக்கப்படுகின்றன; இன்னும் இவ்வுலகில் ஐவகையாகப் பிரசித்தி பெற்றவை எவை உண்டோ அவையனைத்தும் பஞ்சாக்ஷரமந்திரத்தின் வடிவங்களே.

ஐந்து பூதமைம் பொறிகளோ டைம்புல னமர்ந்த
வைந்தெ னுங்கரு மேந்திய மைவர்கா ரணரா
மைந்தெ னுந்தொழி லைம்பெரும் பிரமங்க ளனைத்து
மைந்தெ ழுத்தினா லுணர்த்துவ ரறிவறிந் தவரே.

ஐம்பூதங்கள், ஐவகைத் தன்மாத்திரைகள், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கருமேந்திரியங்கள், ஈசானம், தத்புருஷம் முதலான ஐந்து பிரம்மங்கள், சிவபெருமான் இயற்றும் படைத்தல், காத்தல் முதலான ஐவகை கிருத்தியங்கள், பிரம்மா, விஷ்ணு முதலான ஐந்து காரணேசுவரர்கள் ஆகியன பஞ்சாக்ஷரமந்திரத்தின் ஐந்தெழுத்துக்களால் குறிக்கப்படுகின்றன; இன்னும் இவ்வுலகில் ஐவகையாகப் பிரசித்தி பெற்றவை எவை உண்டோ அவையனைத்தும் பஞ்சாக்ஷரமந்திரத்தின் வடிவங்களே.

ओंकारपूर्वो मन्त्रोऽयं पञ्चाक्षरमयः परः ।
शैवागमेषु वेदेषु षडक्षर इति स्मृतः ॥ १७॥

ஓங்காரத்தைத் தொடக்கத்தில் கொண்ட இந்த பஞ்சாக்ஷரமந்திரம் சைவாகமங்களிலும், வேதங்களிலும் ஆறெழுத்து மந்திரமெனப் போற்றப்படுகின்றது.

ஓது மக்கர மைந்துரு வாமுயர் மநுத்தா
னாதி யிற்பிர ணவந்தனைக் கொண்டிடு மதனால்
வேத முற்றினு மாகம மனைத்தினும் விளங்க
வேத மற்றுயர் சடக்கர மென்றிடப் படுமால்.

ஓங்காரத்தைத் தொடக்கத்தில் கொண்ட இந்த பஞ்சாக்ஷரமந்திரம் சைவாகமங்களிலும், வேதங்களிலும் ஆறெழுத்து மந்திரமெனப் போற்றப்படுகின்றது.

मन्त्रन्यासादिभूतेन प्रणवेन महामनोः ।
प्रबोध्यते महादेवःकेवलश्चित्सुखात्मकः ॥ १८॥
प्रणवेनैकवर्णेन परब्रह्म प्रकाश्यते ।
अद्वितीयं परानन्दं शिवाख्यं निष्प्रपञ्चकम् ॥ १९॥

இம்மந்திரத்தின் முதலில் விளங்கும் [ஓங்காரமாகிய] பிரணவத்தினுல் சிதானந்த வடிவினனும் மஹாதேவனுமாகிய சிவபெருமான் குறிக்கப்படுகிருர். பிரணவமந்திரத்தின் ஓரெழுத்தாலேயே தன்னிகரில்லாததும், மேலான ஆனந்தவடிவமானதும், உலகங்களையெல்லாம் கடந்து விளங்குவதுமாகிய சிவனெனும் பரப்பிரம்மம் விளக்கப்படுகின்றது.

இந்த வஞ்செழுத் தாகிய மந்திர விறைக்கு
முந்து றும்பிர ணவம்பர சிவன்றனை மொழியு
மந்த வக்கர மொன்றினா லகிலகா ரணமாய்
வந்த வச்சிதா நந்தமெய்ப் பரம்பொருள் வயங்கும்.

இம்மந்திரத்தின் முதலில் விளங்கும் [ஓங்காரமாகிய] பிரணவத்தினுல் சிதானந்த வடிவினனும் மஹாதேவனுமாகிய சிவபெருமான் குறிக்கப்படுகிருர். பிரணவமந்திரத்தின் ஓரெழுத்தாலேயே தன்னிகரில்லாததும், மேலான ஆனந்தவடிவமானதும், உலகங்களையெல்லாம் கடந்து விளங்குவதுமாகிய சிவனெனும் பரப்பிரம்மம் விளக்கப்படுகின்றது.

परमात्ममनुर्ज्ञेयः सोऽहंरूपः सनातनः ।
जायते हसयोर्लोपादोमित्येकाक्षरो मनुः ॥ २०॥

ஸோஹமெனும் மந்திரமானது பரமாத்மாவைக் குறிக்கும் மந்திரமாகும்; அதிலிருந்து ஹ மற்றும் ஸ என்னும் எழுத்துக்கள் நீக்கப்பட்டதும் அது ஓமெனும் ஓரெழுத்துப் பிரணவமந்திரமாகிறது.

சோக மென்றுள சொரூபமே தூயமந் திரந்தா
னாக நன்குற வறிகுவா ரஞ்சமென் பனதாம்
போக வந்தமி லோமெனப் புகலுமோ ரெழுத்தா
மேக மந்திர முதிக்குமென் றியம்புவர் பெரியோர்.

ஸோஹமெனும் மந்திரமானது பரமாத்மாவைக் குறிக்கும் மந்திரமாகும்; அதிலிருந்து ஹ மற்றும் ஸ என்னும்

எழுத்துக்கள் நீக்கப்பட்டதும் அது ஓமெனும் ஓரெழுத்துப் பிரணவமந்திரமாகிறது.

प्रणवेनैव मन्त्रेण बोध्यते निष्कलः शिवः ।
पञ्चाक्षरेण मन्त्रेण पञ्चब्रह्मतनुस्तथा ॥ २१॥
निष्कलः संविदाकारः सकलो विश्वमूर्तितः ।
उभयात्मा शिवो मन्त्रे षडक्षरमये स्थितः ॥ २२॥

பிரணவமந்திரத்தால் நிஷ்களனுன சிவபெருமானும், பஞ்சாக்ஷர மந்திரத்தால் பஞ்சபிரம்ம வடிவான சிவபெருமானும் குறிக்கப்படுகின்றனர்; நிஷ்களர் தூய சின்மயரூபமாகவும், ஸகலரான சிவபெருமான் விசுவமூர்த்தியாகவும் விளங்குகின்றனர். இவ்விரண்டு வடிவங்களும் ஆறெழுத்து மந்திரத்தில் திகழ்கின்றனர்.

காட்டு மோமெனு மெழுத்துநிட் களசிவன் றன்னை
யீட்டு மைம்பெரும் பிரமமாந் தநுவுடை யிறையைக்
கூட்டு மஞ்செழுத் துபயமா மொருபொருள் கொடுக்கு
மோட்டு றும்பவப் பிரணவ வஞ்செழுத் தொன்றி.

ஓமெனும் மந்திரத்தால் நிஷ்களனுன சிவபெருமானும், பஞ்சாக்ஷர மந்திரத்தால் பஞ்சபிரம்ம வடிவான சிவபெருமானும் குறிக்கப்படுகின்றனர்; இவ்விரண்டு வடிவங்களும் ஆறெழுத்து மந்திரத்தால் விளக்கமுறுகின்றனர்.

मूलं विद्या शिवः शैवसूत्रं पञ्चाक्षरस्तथा ।
एतानि नामधेयानि कीर्तितानि महामनोः ॥ २३॥
पञ्चाक्षरीमिमां विद्यां प्रणवेन षडक्षरीम् ।
जपेत् समाहितो भूत्वा शिवपूजापरायणः ॥ २४॥

இம்மகாமந்திரம் மூலம், வித்தியை, சிவன், சைவசூத்திரம், பஞ்சாக்ஷரம் என்னும் பெயர்களால் வழங்கப்படுகிறது; ஓமெனும் பிரணவத்துடன் கூடிய இப்பஞ்சாக்ஷர மந்திரத்தை சிவபூஜையை அநுதினமும் இயற்றுவோன் மன ஒருமைப்பாடுடன் ஜபிக்கக்கடவன்.

மூலம் வித்தைநற் சிவஞ்சைவ சூத்திர மொழியின்
மேலு மஞ்செழுத் தெனும்பெயர் மேவுமா மநுவவ்
வேலு மஞ்செழுத் தினைப்பிர ணவம்புணர்த் திசைப்பர்
மாலி லர்ச்சனை புரிபவர் மனமொரு மித்து.

இம்மகாமந்திரம் மூலம், வித்தியை, சிவன், சைவசூத்திரம், பஞ்சாக்ஷரம் என்னும் பெயர்களால் வழங்கப்படுகிறது; ஓமெனும் பிரணவத்துடன் கூடிய இப்பஞ்சாக்ஷர மந்திரத்தை சிவபூஜையை அநுதினமும் இயற்றுவோன் மன ஒருமைப்பாடுடன் ஜபிக்கக்கடவன்.

प्राणायामत्रयं कृत्वा प्राङ्मुखोदङ्मुखोऽपि वा ।
चिन्तयन् हृदयाम्भोजे देवदेवं त्रियम्बकम् ॥ २५॥
सर्वालङ्कारसंयुक्तं साम्बं चन्द्रार्धशेखरम् ।
जपेदेतां महाविद्यां शिवरूपामनन्यधीः ॥ २६॥

மும்முறை பிராணுயாமம் செய்து, கிழக்கு முகமாகவோ அல்லது வடக்கு முகமாகவோ அமர்ந்து, தேவதேவனும் எல்லா அலங்காரத்துடன் கூடியவனுயும், அம்பிகையோடு கூடியிருப்போனும், பிறைச் சந்திரனைத் தலையில் சூடியவனுமான திரியம்பகனை சிவபெருமானை இதயகமலத்தில் தியானித்து இந்த பஞ்சாக்ஷர மந்திரத்தை மனத்தை ஒருமுகப்படுத்தி ஜபிக்க வேண்டும்.

உத்த ரங்குண திசையினு ளொன்றினை நோக்கி
நித்தி யம்பிரா ணாயாம மும்முறை நிகழ்த்தி
யத்த னம்பிகை பாகனை யணியுட னகத்தில்
வைத்தொ ருங்கிய மனத்தொடம் மந்திரஞ் செபிக்க.

மும்முறை பிராணுயாமம் செய்து, கிழக்கு முகமாகவோ அல்லது வடக்கு முகமாகவோ அமர்ந்து, தேவதேவனும் எல்லா அலங்காரத்துடன் கூடியவனுயும், அம்பிகையோடு கூடியிருப்போனும், பிறைச் சந்திரனைத் தலையில் சூடியவனுமான திரியம்பகனை சிவபெருமானை இதயகமலத்தில் தியானித்து இந்த பஞ்சாக்ஷர மந்திரத்தை மனத்தை ஒருமுகப்படுத்தி ஜபிக்க வேண்டும்.

जपस्तु त्रिविधः प्रोक्तो वाचिकोपांशुमानसः ।
श्रूयते यस्तु पार्श्वस्थैर्यथा वर्णसमन्वयः ॥ २७॥
वाचिकः स तु विज्ञेयः सर्वपापप्रभञ्जनः ।

மந்திர ஜபம் மூவகைப்படும்: வாசிகம், உபாம்சு மற்றும் மானசம். அருகிலிருப்போர் மந்திர எழுத்துக்களின் ஒலியைக் கேட்கும்படி ஜபித்தல் வாசிகமெனப்படும். இது அனைத்துப் பாவங்களையும் போக்கவல்லது.

மந்தி ரஞ்செபித் திடும்விதி மூன்றுவா சிகமே
நந்து பாஞ்சுமா நதமென வினையெலா நசிக்கு
முந்து றுந்திரு வாசிக மொழிந்திடி னருகு
வந்தி ருந்துளோர் கேட்டிட வழாதறைந் திடலே.

மந்திர ஜபம் மூவகைப்படும்: வாசிகம், உபாம்சு மற்றும் மானசம். அருகிலிருப்போர் மந்திர எழுத்துக்களின் ஒலியைக் கேட்கும்படி ஜபித்தல் வாசிகமெனப்படும். இது அனைத்துப் பாவங்களையும் போக்கவல்லது.

ईषत्स्पृष्टाधरपुटं यो मन्दमभिधीयते ॥ २८॥
पार्श्वस्थैरश्रुतः सोऽयमुपांशुः परिकीर्तितः ।
अस्पृष्टाधरमस्पन्दि जिह्वाग्रं योऽन्तरात्मना ।
भाव्यते वर्णरूपेण स मानस इति स्मृतः ॥२९॥

அருகிலுள்ளோர் கேட்காதவாறு உதடுகளைச் சிறிது அசைத்து மெதுவாக மந்திரத்தை உச்சரித்தல் உபாம்சு எனப்படும். உதடுகள் ஒன்றோடொன்று தொடாமலும் நுனி நாக்கை அசைக்காமலும் மனதிற்குள்ளேயே மந்திரங்களின் எழுத்துக்களைத் தியானித்தல் மானச ஜபம் என வழங்கப்படுகின்றது.

அருகி லுற்றுளோர் கேட்டிடா தணியிதழ் தீண்டி
விரகின் வித்தையை மந்தமாய் விளம்புத லுபாஞ்சு
திரித லற்றிடு நாநுனி மெல்லிதழ் தீண்டா
தொருமை யுற்றுளத் துன்னுத லுயர்ந்தமா நதமே.

அருகிலுள்ளோர் கேட்காதவாறு உதடுகளைச் சிறிது அசைத்து மெதுவாக மந்திரத்தை உச்சரித்தல் உபாம்சு எனப்படும். உதடுகள் ஒன்றோடொன்று தொடாமலும் நுனி நாக்கை அசைக்காமலும் மனதிற்குள்ளேயே மந்திரங்களின் எழுத்துக்களைத் தியானித்தல் மானச ஜபம் என வழங்கப்படுகின்றது.

यावन्तः कर्मयज्ञाद्या व्रतदानतपांसि च ।
सर्वे ते जपयज्ञस्य कलां नार्हन्ति षोडशीम् ॥ ३०॥

வேள்விகள், கடும் விரதங்கள், மற்றும் தானங்கள் எத்தனை உள்ளனவோ அவை அனைத்தும் ஜப வேள்வியின் பதினாறிலொரு பங்குக்குக் கூட சமமாகா.

**கரும வேள்விநல் விரதந்தா நங்கடுந் தவமாய்**
**மருவும் யாவுமா மந்திர வேள்விமா கலையி**
**னுருவ மோர்பதி னாறிலொன் றினையுமொவ் வாவிவ்**
**விரவு மான்மியம் வாசிக செபத்தினை மேவும்.**

வேள்விகள், கடும் விரதங்கள் மற்றும் தானங்கள் எத்தனை உள்ளனவோ அவை அனைத்தும் ஜப வேள்வியின் பதினாறிலொரு பங்குக்குக் கூட சமமாகா.

माहात्म्यं वाचिकस्यैतज्जपयज्ञस्य कीर्तितम् ।
तस्माच्छतगुणोपांशुः सहस्रो (सहस्रं) मानसः स्मृतः ॥ ३१॥
वाचिकात् तदुपांशोश्च जपादस्य महामनोः ।
मानसो हि जपः श्रेष्ठो घोरसंसारनाशकः ॥ ३२॥

வாசிகமான ஜபத்தின் மஹிமை இவ்வாறு கூறப்பட்டது; அதைப் போல் நூறு மடங்கு மஹிமை பொருந்தியது உபாம்சு ஜபம்; ஆயிரம் மடங்கு மஹிமை உடையது மானச ஜபமாகும். இந்த மஹாமந்திரத்தின் வாசிக ஜபம், உபாம்சு ஜபம் இவ்விரண்டைக் காட்டிலும் மானச ஜபமே சாலச் சிறந்தது; அதுவே கொடிய சம்சார நோயை நீக்க வல்லது.

**வாசி கந்தனிற் சதகுண மடங்குள துபாஞ்சு**
**மாசி லன்னதி னாயிர மடங்குமா நதமாம்**

பேசு றுஞ்செப மிரண்டினும் பெரும்பவ மொழிக்குந்
தேச டைந்துள தாகியே சிறக்குமா நதமே.

வாசிகமான ஜபத்தின் மஹிமை இவ்வாறு கூறப்பட்டது; அதைப் போல் நூறு மடங்கு மஹிமை பொருந்தியது உபாம்சு ஜபம்; ஆயிரம் மடங்கு மஹிமை உடையது மானச ஜபமாகும். இந்த மஹாமந்திரத்தின் வாசிக ஜபம், உபாம்சு ஜபம் இவ்விரண்டைக் காட்டிலும் மானச ஜபமே சாலச் சிறந்தது; அதுவே கொடிய சம்சார நோயை நீக்க வல்லது.

एतेष्वेतेन विधिना यथाभावं यथाक्रमम् ।
जपेत् पञ्चाक्षरीमेतां विद्यां पाशविमुक्तये ॥ ३३॥
अनेन मूलमन्त्रेण शिवलिङ्गं प्रपूजयेत् ।
नित्यं नियमसम्पन्नः प्रयतात्मा शिवात्मकः॥ ३४॥

இந்த வகையில் மேற்கூறியவாறு பஞ்சாக்ஷரமந்திரத்தை முறையாக ஜபம் செய்யவேண்டும்; அவ்வாறே தினமும் முறைப்படி இம்மந்திரத்தால் சிவலிங்கத்தை பூஜை செய்யவேண்டும்.

வாசி காதியின் விதிமுறை வழாதுநன் மனத்தி
லீசன் மேவுற வஞ்செழுத் தெனும்பெரு வித்தை
பாச நாசக னாம்படி செபிக்கமெய்ச் சிவமாந்
தேசு ளான்சிவ பூசனை செய்கவிம் மநுவால்.

இந்த வகையில் மேற்கூறியவாறு பஞ்சாக்ஷரமந்திரத்தை முறையாக ஜபம் செய்யவேண்டும்; அவ்வாறே தினமும் முறைப்படி இம்மந்திரத்தால் சிவலிங்கத்தை பூஜை செய்யவேண்டும்.

भक्त्या पञ्चाक्षरेणैव यः शिवं सकृदर्चयेत्।
सोऽपि गच्छेच्छिवस्थानं मन्त्रस्यास्यैव गौरवात् ॥३५॥
अब्भक्षा वायुभक्षाश्च ये चान्ये व्रतकर्शिताः ।
तेषामेतैर्व्रतैर्नास्ति शिवलोकसमागमः ॥३६॥
तस्मात्तपांसि यज्ञाश्च व्रतानि नियमास्तथा ।
पञ्चाक्षरार्चनस्यैते कोट्यंशेनापि नो समाः ॥ ३७॥

பஞ்சாக்ஷரமந்திரம் கொண்டு எவனொருவன் பக்தியுடன் சிவபிரானை ஒரு முறையாவது அருச்சிக்கிறனே அவன் அம்மந்திரத்தின் மஹிமையால் சிவலோகத்தை அடைவது திண்ணம்.

மேலும், நீரை மட்டுமே அருந்துதல், எதையுமே உண்ணுமல் காற்றை மட்டுமே சுவாசித்து வாழ்தல் போன்ற கடும் விரதங்களால் சிவலோகமடைதல் இயலாது; அத்தகைய விரதங்களும் கடும் தவங்களும் பஞ்சாக்ஷர மந்திரத்தால் அருச்சனை புரிவதற்கு கோடியில் ஒரு பங்கு கூட சமமாகா.

பரம னர்ச்சனை யஞ்செழுத் தறைந்துபத் தியினா
லொருப கற்புரி பவன்சிவ கதியினை யுறுவான்
விரத நற்றவ மகமிவை வித்தைகொண் டியற்று
மொருமை யர்ச்சனை தனிற்கோடி கூற்றிலொன் றொவ்வா.

பஞ்சாக்ஷரமந்திரம் கொண்டு எவனொருவன் பக்தியுடன் சிவபிரானை ஒரு முறையாவது அருச்சிக்கிறனே அவன் அம்மந்திரத்தின் மஹிமையால் சிவலோகத்தை அடைவது திண்ணம்.

अशुद्धो वा विशुद्धो वा सकृत् पञ्चाक्षरेण यः ।
पूजयेत् पतितो वापि मुच्यते नात्र संशयः ॥ ३८॥

தூயவனுயினும் அல்லது அசுத்தனுயினும் அல்லது பாவியாயினும் ஒரு முறையேனும் பஞ்சாக்ஷர மந்திரத்தால் அருச்சனை புரிபவன் மோக்ஷமடைதல் திண்ணம்.

விரத மேவிமெய் யிளைப்பவர் கால்புனன் மிசைவோர்
பரம னொண்பத மடைவுறார் பதிதனே யெனினுந்
திரிவி லஞ்செழுத் தறைந்தொரு காற்சிவ பூசை
புரிப வன்பவ கோடிகள் போக்குமீ துண்மை.

தூயவனுயினும் அல்லது அசுத்தனுயினும் அல்லது பாவியாயினும் ஒரு முறையேனும் பஞ்சாக்ஷர மந்திரத்தால் அருச்சனை புரிபவன் மோக்ஷமடைதல் திண்ணம்.

सकृदुच्चारमात्रेण पञ्चाक्षरमहामनोः ।
सर्वेषामपि जन्तूनां सर्वपापक्षयो भवेत् ॥ ३९॥

பஞ்சாக்ஷர மஹாமந்திரத்தை ஒரு முறை உச்சரிப்பதால் எல்லா உயிரினங்களும் அனைத்துப் பாவங்களிலிருந்தும் விடுபடுகின்றன.

சிறந்த வஞ்செழுத் துயர்மநு வொருசிறி தேனு
மறைந்து ளாரெனி னவர்செயும் பாதக மனைத்து
மிறந்து போமிளங் கதிர்கடன் முகட்டினு ளெழலு
முறிந்து பேரிருட் படலைக ளிரிதரு முறைபோல்.

பஞ்சாக்ஷர மஹாமந்திரத்தை ஒரு முறை உச்சரிப்பதால் சூரியன் உதிப்பதால் காரிருளும் விலகுவது போல் அனைத்துப் பாவங்களும் விலகுகின்றன.

अन्येऽपि बहवो मन्त्रा विद्यन्ते सकलागमे ।
भूयो भूयः समभ्यासात् पुरुषार्थप्रदायिनः ॥४०॥
एष मन्त्रो महाशक्तिरीश्वरप्रतिपादकः ।
सकृदुच्चारणादेव सर्वसिद्धिप्रदायकः ॥ ४१॥

பல ஆகமங்களில் பற்பல மந்திரங்கள் கூறப்படுகின்றன. அவை மீண்டும் மீண்டும் பன்முறை அப்பியாசம் செய்தால் மட்டுமே பயன் தருவன; ஆனால் சக்திவாய்ந்ததும் ஈசுவரனைக் குறிப்பதுமான இப்பஞ்சாக்ஷர மந்திரம் ஒரு முறை உச்சரிப்பதாலேயே எல்லா சித்திகளையும் நல்குகிறது.

எண்ணி லாகமம் புகலயன் மந்திர மெல்லாம்
பண்ணு றும்புரு டார்த்தமே நிரந்தரம் பயிலி
னண்ண லஞ்செழுத் தொருமுறை சிறிதறைந் தவர்க்கு
நண்ண நல்குறுஞ் சித்திக ளனைத்தையு நயந்தே.

பல ஆகமங்களில் பற்பல மந்திரங்கள் கூறப்படுகின்றன. அவை மீண்டும் மீண்டும் பன்முறை அப்பியாசம் செய்தால் மட்டுமே பயன் தருவன; ஆனால் சக்திவாய்ந்ததும் ஈசுவரனைக் குறிப்பதுமான இப்பஞ்சாக்ஷர மந்திரம் ஒரு முறை உச்சரிப்பதாலேயே எல்லா சித்திகளையும் நல்குகிறது.

पञ्चाक्षरीं समुच्चार्य पुष्पं लिङ्गे विनिक्षिपेत् ।
यस्तस्य वाजपेयानां सहस्रफलमिष्यते ॥ ४२॥

பஞ்சாக்ஷர மந்திரத்தை உச்சரித்து ஒரு முறை லிங்கத்தின் மீது பூவை இடுவதால் ஆயிரம் வாஜபேயயாகம் செய்த பலனை அவன் அடைகின்றான்.

போதி லொன்றினை யஞ்செழுத் தினைப்புகன் றமலன்
மீத ணிந்திடின் வாசப வேள்வியா யிரத்தி
னோது றும்பல மனைத்துமங் கவனடைந் துறுவான்
மாத வம்புரிந் துயர்தரு மலயவெற் பமர்வோய்.

பஞ்சாக்ஷர மந்திரத்தை உச்சரித்து ஒரு முறை லிங்கத்தின் மீது பூவை இடுவதால் ஆயிரம் வாஜபேயயாகம் செய்த பலனை அவன் அடைகின்றான்.

अग्निहोत्रं त्रयो वेदा यज्ञाश्च बहुदक्षिणाः ।
पञ्चाक्षरजपस्यैते कोट्यंशेनापि नो समाः ॥ ४३॥

அக்னிஹோத்ரம், மூன்று வேதங்களையும் ஓதுதல், நிறைய தக்ஷிணைகள் கொடுத்து பல வேள்விகளை இயற்றுதல் முதலியன பஞ்சாக்ஷர மந்திர ஜபத்தின் கோடியில் ஒரு பங்குக்குக் கூட சமமாகா.

மறையு ணர்ந்துடன் மகம்பல வியற்றன்மா தாந
மறையு மின்னவை யஞ்செழுத் தருஞ்செபந் தன்னின்
றிறம ணைந்துள கோடிகூற் றொன்றையுஞ் சிவணாப்
பொறையி லங்குறு மந்திரத் தியல்பையார் புகல்வார்.

அக்னிஹோத்ரம், மூன்று வேதங்களையும் ஓதுதல், நிறைய தக்ஷிணைகள் கொடுத்து பல வேள்விகளை இயற்றுதல் முதலியன பஞ்சாக்ஷர மந்திர ஜபத்தின் கோடியில் ஒரு பங்குக்குக் கூட சமமாகா.

पुरा सानन्दयोगीन्द्रः शिवज्ञानपरायणः ।
पञ्चाक्षरं समुच्चार्य नारकानुदतारयत् ॥४४॥

सिद्ध्या पञ्चाक्षरस्यास्य शतानन्दः पुरा मुनिः ।
नरकं स्वर्गमकरोत् सङ्गिरस्यापि पापिनः ॥ ४५॥

முன்பு சிவஞானத்தை நன்கறிந்த ஸானந்த யோகீந்திரர் பஞ்சாக்ஷரமந்திரத்தை உச்சரித்தே நரகத்தில் வீழ்ந்தோரைக் கடைத்தேற்றினர். சதானனந்தரும் பஞ்சாக்ஷர மந்திரத்தின் ஆற்றலால் முன்னொரு கால் ஸங்கிரனென்பானுடைய நரகத்தையே சுவர்க்கமாக்கினர்.

முன்னர் மெய்யறி வறிந்துள சாநந்த முனிவன்
பன்னி யஞ்செழுத் தாகிய பரமமந் திரத்தை
யின்னல் வெந்நர கத்துளோர் தமையெலா மெடுத்து
மன்னு றுந்துறக் கத்துற வைத்தனன் மன்னோ.

முன்பு சிவஞானத்தை நன்கறிந்த ஸானந்த யோகீந்திரர் பஞ்சாக்ஷரமந்திரத்தை உச்சரித்தே நரகத்தில் வீழ்ந்தோரைக் கடைத்தேற்றினர்.

उपमन्युः पुरा योगी मन्त्रेणानेन सिद्धिमान् ।
लब्धवान् परमेशानाच्छैवशास्त्रप्रवक्तृताम् ॥ ४६॥
वसिष्ठवामदेवाद्या मुनयो मुक्तकिल्बिषाः ।
मन्त्रेणानेन संसिद्धा महातेजस्विनोऽभवन् ॥ ४७॥
ब्रह्मादीनां च देवानां जगत्सृष्ट्यादिकर्मणि ।
मन्त्रस्यास्यैव माहात्म्यात् सामर्थ्यमुपजायते ॥ ४८॥

உபமன்யு முனிவரும் முன்னொரு காலத்தில் பஞ்சாக்ஷர மந்திரத்தின் சக்தியால் பரமேசுவரரிடமிருந்து சைவசாத்திரங்களைப் போதிக்கும் வல்லமையைப் பெற்றார். எல்லா மலங்களினின்றும் அறவே நீங்கிய வசிஷ்டர், வாமதேவர் முதலான முனிவர்களும் இம்மந்திரத்தின் ஆற்றலால் மிக்க ஒளிபொருந்தியவர்களானார்கள். பிரம்மா முதலிய தேவர்களுக்கு சிருஷ்டி முதலான தொழில்களை ஆற்றும் வல்லமை இப்பஞ்சாக்ஷர மந்திரத்தின் வாயிலாகவே கிட்டியது.

மாசி லாவசிட் டாதிமா முனிவரிம் மநுவாற்
றேசு மேவினர் சித்திக ளனைத்தையுஞ் செறிந்தே
யாசி லாவய னாதியர் படைப்புமுன் னாகப்
பேசு மாதொழின் மந்திர வலியினாற் பெற்றார்.

எல்லா மலங்களினின்றும் அறவே நீங்கிய வசிஷ்டர், வாமதேவர் முதலான முனிவர்களும் இம்மந்திரத்தின் ஆற்றலால் மிக்க ஒளிபொருந்தியவர்களானுர்கள். பிரம்மா முதலிய தேவர்களுக்கு சிருஷ்டி முதலான தொழில்களை ஆற்றும் வல்லமை இப்பஞ்சாக்ஷர மந்திரத்தின் வாயிலாகவே கிட்டியது.

किमिह बहुभिरुक्तैर्मन्त्रमेवं महात्मा
प्रणवसहितमादौ यस्तु पञ्चाक्षराख्यम् ।
जपति परमभक्त्या पूजयन् देवदेवं
स गतदुरितबन्धो मोक्षलक्ष्मीं प्रयाति ॥ ४९॥

மிகுந்த சொற்களால் என்ன பயன்? எந்த புண்ணிய சீலன் பிரணவ மந்திரத்தை முதலில் சேர்த்து இப்பஞ்சாக்ஷர மந்திரத்தை உச்சரித்து சிவபெருமானைப் பூஜிக்கிருனே அவன் மோக்ஷமெனும் ஒப்பற்ற செல்வத்தை அடைதல் உறுதி.

பரந்த சொற்களி னென்பயன் பத்தியாற் சிவனைத்
திருந்த வர்ச்சனை செய்பவ னாகியே சிறந்த
வரந்த ரும்பிர ணவமுத லாயவிம் மநுவை
நிரந்த ரஞ்செபிப் பவன்பர முத்தியி னிலைப்பான்.

மிகுந்த சொற்களால் என்ன பயன்? எந்த புண்ணிய சீலன் பிரணவ மந்திரத்தை முதலில் சேர்த்து இப்பஞ்சாக்ஷர மந்திரத்தை உச்சரித்து சிவபெருமானைப் பூஜிக்கிருனே அவன் மோக்ஷமெனும் ஒப்பற்ற செல்வத்தை அடைதல் உறுதி.

பஞ்சாக்கரசெபத்தலம் முற்றும்

॥ इति श्रीषट्स्थलब्रह्मिणा शिवयोगिनाम्ना माहेश्वरेण विरचिते
सिद्धान्तशिखामणौ भक्तस्थले पञ्चाक्षरीजपप्रसङ्गो नाम
अष्टमः परिच्छेदः समाप्तः ॥८॥

## ॥ नवमः परिच्छेदः ॥

भूतिरुद्राक्षसंयुक्तो लिङ्गधारी सदाशिवः ।
पञ्चाक्षरजपोद्योगी शिवभक्त इति स्मृतः ॥१॥

விபூதி, ருத்திராக்ஷம், சிவலிங்கம் ஆகியவற்றைத் தரித்தவன் ஸாக்ஷாத் ஸதாசிவனே; அவன் பஞ்சாக்ஷர மந்திரஜபத்தை எப்போதும் மேற்கொள்வானாகில் பக்தன் எனப்படுகிறான்.

நலங்கொள் பூதி நயநத் திருமணி
யலங்கன் மேனிய ணிந்துபு னிதனாய்ப்
புலங்கொ ளஞ்செழுத் தொண்மநுப் போற்றுறு
மிலிங்க தாரணன் பத்த னெனப்படும்.

விபூதி, ருத்திராக்ஷம், சிவலிங்கம் ஆகியவற்றைத் தரித்தவன் ஸாக்ஷாத் ஸதாசிவனே; அவன் பஞ்சாக்ஷர மந்திரஜபத்தை எப்போதும் மேற்கொள்வானாகில் பக்தன் எனப்படுகிறான்.

श्रवणं कीर्तनं शम्भोः स्मरणं पादसेवनम् ।
अर्चनं वन्दनं दास्यं सख्यमात्मनिवेदनम् ॥ २॥

சிவபிரானின் புகழைக் கேட்டல், புகழ் பாடுதல், அவனையே நினைந்திருத்தல், அவன் திருவடிகளை வணங்குதல், வழிபடுதல், துதித்தல், அவனுக்குப் பணிவிடை புரிதல், அவனுடன் நல்ல தோழமையுடன் இருத்தல், அவனுக்குத் தன்னையே அர்ப்பணித்தல்

புகழ்தல் கேட்கை புனிதற் கருதுதன்
மகிழ்குற் றேவ லருச்சனை வந்தனை
தொகுநற் றொண்டொடு தோழமை நற்கொடை
பகரு மற்றிவை நன்னவ பத்தியே.

சிவபிரானின் புகழைக் கேட்டல், புகழ் பாடுதல், அவனையே நினைந்திருத்தல், அவன் திருவடிகளை வணங்குதல், வழிபடுதல், துதித்தல், அவனுக்குப் பணிவிடை புரிதல், அவனுடன் நல்ல தோழமையுடன் இருத்தல், அவனுக்குத் தன்னையே அர்ப்பணித்தல்

एवं नवविधा भक्तिः प्रोक्ता देवेन शम्भुना।
दुर्लभा पापिनां लोके सुलभा पुण्यकर्मणाम् ॥ ३॥

ஆகிய ஒன்பது விதமான பக்தி நெறி சிவபெருமானுல் போதிக்கப்பட்டது. அது பாவிகளுக்கு அரியது, புண்ணிய கருமங்களைச் செய்தவர்களுக்கு எளியது.

கரிய கண்டக் கடவுள் புகன்றிடு
முரிய நன்னவ பத்தி யுலகினி
லரிய பாவத் தவர்கட் கறத்தினாற்
பெரிய வர்க்குப் பெறுதற் கெளியவே.

சிவபெருமானுல் போதிக்கப்பட்ட ஒன்பது விதமான பக்தி நெறி பாவிகளுக்கு அரியது, புண்ணிய கருமங்களைச் செய்தவர்களுக்கு எளியது.

अधमे चोत्तमे वापि यत्र कुत्रचिदूर्जिता ।
वर्तते शाङ्करी भक्तिः स भक्त इति गीयते ॥ ४॥

உயர்ந்தவனுயினும் தாழ்ந்தவனுயினும் எவனிடத்தில் சிவபக்தி மேலோங்கியுள்ளதோ அவன் பக்தனெனப்படுகிறுன்.
உயர்ந்தவனுயினும் தாழ்ந்தவனுயினும் எவனிடத்தில் சிவபக்தி மேலோங்கியுள்ளதோ அவன் பக்தனெனப்படுகிறுன்.

தலைவ னாயினுந் தாழ்ந்தவ னாயினு
மலைவி லாத மலிசிவ பத்திதா
னுலகில் யாரிடத் தொன்று மனையவ
னிலகு பத்த னெனப்படு வானரோ.

உயர்ந்தவனுயினும் தாழ்ந்தவனுயினும் எவனிடத்தில் சிவபக்தி மேலோங்கியுள்ளதோ அவன் பக்தனெனப்படுகிறுன்.

भक्तिः स्थिरीकृता यस्मिन् म्लेच्छे वा द्विजसत्तमे ।
शम्भोः प्रियः स विप्रश्च न प्रियो भक्तिवर्जितः ॥ ५॥

எவனிடத்தில் சிவபக்தி உறுதியாக உள்ளதோ அவன் மிலேச்சனுயினும் சிவபெருமானுக்கு மிக உகந்தவன்;

அத்தகைய பக்தியில்லாதவன் அந்தணனுயினும் சிவபெருமானுக்கு உகந்தவனல்லன்.

வேதி யன்புலைக் கீழென வேறிலை
யோத ருஞ்சிவ பத்தி யுடையனே
யேது மீசற் கினியவ னின்மையோ
னாதி வன்னத்த னாயினு மல்லனே.

சிவபக்தியுடையோனே ஈசனுக்கினியவன்; அதில் வேதியன் புலையனெனும் பாகுபாடு இல்லை.

सा भक्तिर्द्विविधा ज्ञेया बाह्याभ्यन्तरभेदतः ।
बाह्या स्थूलान्तरा सूक्ष्मा वीरमाहेश्वरादृता॥ ६॥

அச்சிவபக்தி வெளிப்புறத்தது, உட்புறத்தது என இரு வகை; வெளிப்புறத்தது தூலம்; சூக்குமம் வீரமாஹேசுவரர்கள் கைக்கொள்வது.

வீர சைவர் விரும்புமப் பத்திதா
னோரி ரண்டிய லாமுட் புறத்தினாற்
சோர்வி லுள்ளது சூக்குமந் தூலமாந்
தேரின் மற்றைப் புறத்தது செப்பினே.

அச்சிவபக்தி வெளிப்புறத்தது, உட்புறத்தது என இரு வகை; வெளிப்புறத்தது தூலம்; சூக்குமம் வீரமாஹேசுவரர்கள் கைக்கொள்வது.

सिंहासने शुद्धदेशे सुरम्ये रत्नचित्रिते ।
शिवलिङ्गस्य पूजा या सा बाह्या भक्तिरुच्यते ॥ ७॥

சுத்தமான அலங்கரிக்கப்பட்ட இடத்தில் சிங்காதனத்தில் சிவலிங்கத்தை வைத்துப் பூஜித்தல் வெளிப்புற பக்தியாகும்.

தூய தாகுமி டத்திற் சுடர்மணிச்
சீய மெல்லணை யாகிய செங்கையி
லாய மெய்ச்சிவ லிங்க வருச்சனை
மாயி ரும்புறப் பத்தி மதிப்பினே.

சுத்தமான அலங்கரிக்கப்பட்ட இடத்தில் சிங்காதனத்தில் சிவலிங்கத்தை வைத்துப் பூஜித்தல் வெளிப்புற பக்தியாகும்.

लिङ्गे प्राणं समाधाय प्राणे लिङ्गं तु शाम्भवम् ।
स्वस्थं मनस्तथा कृत्वा न किञ्चिच्चिन्तयेद् यदि ॥ ८॥
साभ्यन्तरा भक्तिरिति प्रोच्यते शिवयोगिभिः ।
सा यस्मिन् वर्तते तस्य जीवनं भ्रष्टबीजवत् ॥ ९॥

சிவலிங்கத்தில் பிராணனைத் தியானித்து பிராணத்தில் சிவலிங்கத்தை வைத்து மனதை அதில் ஒருமுகப்படுத்தி வேறொன்றையும் நினையாமல் இருத்தலே உட்புறபக்தி எனப்படும்; அத்தகைய பக்தி உள்ளவன் தீயில் நன்கு வறுக்கப்பட்ட விதையினைப் போல்வான்.

உயிரி லீச னுயிரரு ளீசனிற்
பயில வொன்றுபட் டொன்றையும் பற்றுறா
வியல்ப கத்ததி பத்தி யிசைந்துளோன்
செயல்வெ துப்பு விதையெனச் செப்புவார்.

சிவலிங்கத்தில் பிராணனை தியானித்து மனதை அதில் ஒருமுகப்படுத்தி வேறொன்றையும் நினையாமல் இருத்தலே உட்புறபக்தியெனப்படும்; அத்தகைய பக்தி உள்ளவன் தீயில் நன்கு வறுக்கப்பட்ட விதையினைப் போல்வான்.

बहुनात्र किमुक्तेन गुह्याद् गुह्यतरा परा ।
शिवभक्तिर्न सन्देहस्तया युक्तो विमुच्यते ॥ १०॥

நிறைய கூறுவதில் பயன் என்? சிவபக்தி மிகவும் ஆழம் மிக்கது; அப்பக்தி உடையோன் முக்தி அடைதல் திண்ணம்.

பெருகு சொற்கொடென் பேறு பகர்ந்திடி
னுருகு பத்தி யெவற்று முயர்ந்ததா
மருவி மற்றதை மன்னின னேன்மல
விருளி ரிக்கு மிதிலிலை யையமே.

நிறைய கூறுவதில் பயன் என்? சிவபக்தி மிகவும் ஆழம் மிக்கது; அப்பக்தி உடையோன் முக்தி அடைதல் திண்ணம்.

प्रसादादेव सा भक्तिः प्रसादो भक्तिसम्भवः ।
यथैवाङ्कुरतो बीजं बीजतो वा यथाङ्कुरः ॥ ११॥
प्रसादपूर्विका येयं भक्तिर्मुक्तिविधायिनी ।
नैव सा शक्यते प्राप्तुं नरैरेकेन जन्मना॥ १२॥

முளையிலிருந்து விதையும் விதையிலிருந்து முளையும் தோன்றுவது போல் சிவபிரான் அருளால் தானே பக்தியுண்டாகும்; அவ்வருளோ பக்தியின் வாயிலாகவே கிட்டும். சிவனருலால் உண்டாவதும் சம்சார துன்பத்தை அழிக்கவல்லதுமான சிவபக்தி ஒரு சில பிறவிகளிலேயே கிட்டாது.

முளையில் வித்துமவ் வித்தின் முளையும்போற்
றளையில் பத்தி சிவப்பிர சாதமோ
டளவி யொன்றினொன் றாகுமப் பத்திதான்
வளமு றும்பிறப் பொன்றில் வருவதோ.

முளையிலிருந்து விதையும் விதையிலிருந்து முளையும் தோன்றுவது போல் சிவபிரான் அருளால் தானே பக்தியுண்டாகும்; அவ்வருளோ பக்தியின் வாயிலாகவே கிட்டும். சிவனருலால் உண்டாவதும் சம்சார துன்பத்தை அழிக்கவல்லதுமான சிவபக்தி ஒரு சில பிறவிகளிலேயே கிட்டாது.

अनेकजन्मशुद्धानां श्रौतस्मार्तानुवर्तिनाम् ।
विरक्तानां प्रबुद्धानां प्रसीदति महेश्वरः ॥ १३॥
प्रसन्ने सति मुक्तोऽभून्मुक्तः शिवसमो भवेत् ।

முந்தைய பற்பல பிறவிகளில் சிரௌதம், ஸ்மார்த்தம் முதலான விதிக்கப்பட்ட கருமங்களை வழுவாது இயற்றி அதனல் புனிதமடைந்து மனத்தில் வைராக்கியமடைந்து ஞானம் பெற்றவர்களுக்குப் பரமேசுவரன் அருள்புரிகின்ருன்; அவ்வருளாலே முக்திபெற்றவன் சிவபிரானுக்குச் சமமாகிருன்.

எண்ணரும் பிறப்பிற் சுத்த மெய்திநூ னெறிவ ழாமற்
பண்ணுறு மியல்பின் மேவிப் படர்புலன் றுறந்த ஞானிக்
கண்ணறன் னருள்பி றக்கு மாங்குடன் முத்த னாகி
நண்ணருஞ் சிவச மாந நணுகுவ னென்பர் மேலோர்.

முந்தைய பிறவிகளில் சிரௌதம், ஸ்மார்த்தம் முதலான விதிக்கப்பட்ட கருமங்களை வழுவாது இயற்றி அதனுல் புனிதமடைந்து மனத்தில் வைராக்கியமடைந்து ஞானம் பெற்றவர்களுக்குப் பரமேசுவரன் அருள்புரிகின்ருன்; அவ்வருளாலே முக்திபெற்றவன் சிவபிரானுக்குச் சமமாகிருன்.

अल्पभक्त्यापि यो मर्त्यस्तस्य जन्मत्रयात्परम् ॥ १४॥
न योनियन्त्रपीडा वै भवेन्नैवात्र संशयः ।

சிறிதளவு பக்தியுடையோனும் மூன்று பிறவிகளுக்குப் பின்னர் மீண்டும் பிறவித் துன்பமடையான் என்பதில் ஐயமில்லை.

நெளிதிரைக் கடலு டுத்த நிலமிசை மக்க டம்முட்
டெளிசிவ பத்தி தானோர் சிறிதுளோ னெனினு மன்னோ
னெளிதினின் முப்பி றப்பின் மேற்பிறப் பெய்தா வண்ண
மொளியொடு மருவி நிற்கு முண்மையிம் மாற்ற மாதோ.

சிறிதளவு பக்தியுடையோனும் மூன்று பிறவிகளுக்குப் பின்னர் மீண்டும் பிறவித் துன்பமடையான் என்பதில் ஐயமில்லை.

साङ्गाऽन्यूना च या सेवा सा भक्तिरिति कथ्यते ॥ १५॥
सा पुनर्भिद्यते त्रेधा मनोवाक्कायसाधनैः ।
शिवरूपादिचिन्ता या सा सेवा मानसी स्मृता।
जपादि वाचिकी सेवा कर्मपूजा च कायिकी ॥ १६॥

அனைத்து அங்கங்களும் கொண்டதாயும், குறைவற்றதாயுமுள்ளதே பக்தி எனப்படுகிறது; அது மனம், மொழி, மெய், ஆகிய சாதனங்களின் அடிப்படையில் மூவகைப்பட்டது. சிவபெருமானின் திருவுருவம் முதலியவற்றை ஆழ்ந்து சிந்தித்திருத்தல் மானசமாகும்; [மந்திரங்களை] ஜபித்தல் வாசிகமெனப்படும். சிவபெருமானைப் பூஜித்தல் காயிகம் என வழங்கப்படும்.

சாங்கமோ டியற்றி யென்றுந் தாங்கடைப் பிடிக்குஞ் சேவை
யாங்கது பத்தி மூன்றா மகமன மொழிமெய்க் கூற்றா
லீங்கிறை வடிவ மாதி யெண்ணுதன் மனத்த தாகும்
பாங்குறு செபாதி வாக்கின் பணிபூசை யாதி மெய்த்தாம்.

அனைத்து அங்கங்களும் கொண்டதாயும், குறைவற்றதாயுமுள்ளதே பக்தி எனப்படுகிறது; அது மனம், மொழி, மெய், ஆகிய சாதனங்களின் அடிப்படையில் மூவகைப்பட்டது. சிவபெருமானின் திருவுருவம் முதலியவற்றை ஆழ்ந்து சிந்தித்திருத்தல் மானசமாகும்; [மந்திரங்களை] ஜபித்தல் வாசிகமெனப்படும். சிவபெருமானைப் பூஜித்தல் காயிகம் என வழங்கப்படும்.

बाह्यमाभ्यन्तरं चैव बाह्याभ्यन्तरमेव वा।
मनोवाक्कायभेदैश्च त्रिधा तद्भजनं विदुः ॥ १७॥
मनो महेशध्यानाढ्यं नान्यध्यानरतं मनः ।
शिवनामरता वाणी वाङ्मता चैव नेतरा॥ १८॥
लिङ्गैः शिवस्य चोद्दिष्टैस्त्रिपुण्ड्रादिभिरङ्कितः ।
शिवोपचारनिरतः कायः कायो न चेतरः ॥ १९॥

புறம், உட்புறம் மற்றும் வெளிப்புறமுட்புறம் என இம்மனம் மொழி மெய்ச் சாதனங்கள் மூவகைப்படும்: மஹேசுவரனாகிய சிவபெருமானைத் தியானித்திருத்தலே மானச சாதனமாகும்; ஏனையவற்றைத் தியானித்தல் அன்று. சிவநாமங்களை உச்சரித்தல் ஒன்றே மொழி சாதனம், மற்ற சொற்களை உச்சரித்தல் அன்று; திரிபுண்ட்ரம் முதலான வெளிப்புறச் சின்னங்களை முறையே அணிந்து சிவபெருமானை உபசரித்து பூஜிப்பதே காய சதனம், மற்றவை அன்று.

முப்பொறி யியற்ற வந்த முப்பெருஞ் சேவை யென்றும்
பொய்ப்பரும் புறம கம்பின் புறவக மென்ன மூன்றா
மெய்ப்பொரு ணினைத்த னெஞ்சம் விமலன்மெய்ப் பெயர்த்து வாக்கா
மொப்பின்முப் புண்ட ராதி யுளதுமெய் யொழிந்த வல்ல.

புறம், உட்புறம் மற்றும் வெளிப்புறமுட்புறம் என இம்மனம் மொழி மெய்ச் சாதனங்கள் மூவகைப்படும்: மஹேசுவரனாகிய சிவபெருமானைத் தியானித்திருத்தலே மானச சாதனமாகும்; ஏனையவற்றைத் தியானித்தல் அன்று. சிவநாமங்களை உச்சரித்தல் ஒன்றே மொழி சாதனம், மற்ற சொற்களை உச்சரித்தல் அன்று; திரிபுண்ட்ரம் முதலான வெளிப்புறச்

சின்னங்களை முறையே அணிந்து சிவபெருமானை உபசரித்து பூஜிப்பதே காய சதனம், மற்றவை அன்று.

अन्यात्मविदितं बाह्यं शम्भोरभ्यर्चनादिकम्।
तदेव तु स्वसंवेद्यमाभ्यन्तरमुदाहृतम् ।
मनो महेशप्रवणं बाह्याभ्यन्तरमुच्यते॥ २०॥
पञ्चधा कथ्यते सद्भिस्तदेव भजनं पुनः ।

மற்றவர்கள் அறியும்படி சிவபிரானை அருச்சித்தல் முதலியன வெளிப்புறச் சாதனம்; அச்செயல்களையே தான் மட்டும் அறிதல் உட்புறச் சாதனம்; மஹேசுவரனிடத்தில் லயித்திருக்கும் மனமே வெளிப்புறஉட்புறம். அது ஐவகைப்படும்.

புறமுற வியற்றும் பூசை புறமகந் தன்னிற் றானே
யறிவுற வியற்றும் பூசை யகம்பர சிவனைப் போற்றும்
புறமக மடைந்து நிற்கு மனமதே புறவ கந்தான்
மறுவறு பணியோ ரைந்து வகைப்படு மதனை யுங்கேள்.

மற்றவர்கள் அறியும்படி சிவபிரானை அருச்சித்தல் முதலியன வெளிப்புறச் சாதனம்; அச்செயல்களையே தான் மட்டும் அறிதல் உட்புறச் சாதனம்; மஹேசுவரனிடத்தில் லயித்திருக்கும் மனமே வெளிப்புறஉட்புறம். அது ஐவகைப்படும்.

तपः कर्म जपो ध्यानं ज्ञानं चेत्यनुपूर्वकम् ॥ २१॥
शिवार्थे देहसंशोषस्तपः कृच्छ्रादि नो मतम् ।

தவம், கருமம், ஜபம், தியானம், ஞானம் என்பன அவை. சிவபெருமானுக்காக உடலை வருத்துதலே தவம்; கிருச்சிரம் முதலான நோன்புகள் தவமன்று.

வந்துறு தவமே கன்மம் வண்செபந் தியாந ஞான
மைந்திவை முறையி னாகு மருந்தவ மீசற் காக
நொந்துட லிளைத்த லாகு மற்றுள நோன்பி னோதன்
முந்துள தவம தென்று மொழிந்திடப் படாது கண்டாய்.

தவம், கருமம், ஜபம், தியானம், ஞானம் என்பன அவை. சிவபெருமானுக்காக உடலை வருத்துதலே தவம்; கிருச்சிரம் முதலான நோன்புகள் தவமன்று.

शिवार्चा कर्म विज्ञेयं बाह्यं यागादि नोच्यते ॥ २२॥
जपः पञ्चाक्षराभ्यासः प्रणवाभ्यास एव वा ।
रुद्राध्यायादिकाभ्यासो न वेदाध्ययनादिकम् ॥ २३॥

சிவபெருமானைப் பூஜித்தலே கருமமெனப்படும், யாகமியற்றுதல் கருமமன்று. பிரணவமந்திரத்தையோ அல்லது பஞ்சாக்ஷரமந்திரத்தையோ அல்லது ருத்திராத்தியாயத்தையோ ஜபித்தலே ஜபம், ஏனைய வேதமந்திரங்களை ஜபித்தலன்று.

கண்ணுதல் பூசை செய்கை கருமமற் றுள்ள வல்ல
வண்ணறன் பிரண வத்தோ டஞ்செழுத் துருத்தி ராதி
நண்ணுறப் பயிலுந் தன்மை நற்செபம் வேத மாத பண்ணுறப்
பயின்று நிற்கை பகர்தரு செபமா காவால்.

சிவபெருமானைப் பூஜித்தலே கருமமெனப்படும், யாகமியற்றுதல் கருமமன்று. பிரணவமந்திரத்தையோ அல்லது பஞ்சாக்ஷரமந்திரத்தையோ அல்லது ருத்திராத்தியாயத்தையோ ஜபித்தலே ஜபம், ஏனைய வேதமந்திரங்களை ஜபித்தலன்று.

ध्यानं शिवस्य रूपादिचिन्ता नात्मादिचिन्तनम् ।
शिवागमार्थविज्ञानं ज्ञानं नान्यार्थवेदनम् ।

சிவபிரானின் திருவுருவச் சிந்தனையே தியானம், ஆன்மாவைச் சிந்தித்தல் தியானமன்று; சிவாகமங்களை அறிதலே ஞானம், மற்ற நூல்களை அறிதல் ஞானமன்று.

சிவமுறு படிவ மாதி சிந்தனை தியாநமாகு
மவமுறு மான்ம சிந்தை யாதிய தியாந மாகா
நவிறரு சிவாக மத்தி னற்பொரு டெரிதன் ஞானம்
பவமுறு மொழிந்த நூலின் பயனுணர் வன்று ஞானம்.

சிவபிரானின் திருவுருவச் சிந்தனையே தியானம், ஆன்மாவைச் சிந்தித்தல் தியானமன்று; சிவாகமங்களை அறிதலே ஞானம், மற்ற நூல்களை அறிதல் ஞானமன்று.

इति पञ्चप्रकारोऽयं शिवयज्ञः प्रकीर्तितः ॥ २४॥
अनेन पञ्चयज्ञेन यः पूजयति शङ्करम् ।
भक्त्या परमया युक्तः स वै भक्त इतीरितः ॥ २५॥

இவ்வாறு ஐவகைப்பட்டது சிவவழிபாடு; இந்த ஐந்து வகையில் சிவபெருமானை மிகுந்த பக்தியுடன் வழிபடுவோனே பக்தன் எனப்படுகிறான்.

செப்பிய முறையி னின்ன சிவமக மைந்தி னானும்
பைப்பொறி யரவ ணிந்த பரமனை யருச்சிக் கின்ற
மெய்ப்பணி புரியும் பத்தி மேவினோ னியாவ னன்னோ
னொப்பறு பத்த னென்றே யுரைத்திடப் படுவ னன்றே.

மேற்கூறியவாறு ஐவகைப்பட்டது சிவவழிபாடு; இந்த ஐந்து வகையில் சிவபெருமானை மிகுந்த பக்தியுடன் வழிபடுவோனே பக்தன் எனப்படுகிறான்.

पूजनाच्छिवभक्तस्य पुण्या गतिरवाप्यते ।
अवमानान्महाघोरो नरको नात्र संशयः ॥ २६॥

சிவபக்தனை வணங்குவதால் புண்ணிய கதி கிட்டும்; அவனை அவமதிப்பவன் கோரமான நரகத்தையே அடைவான்.

பந்தனை யகன்று நின்ற பரசிவ பத்தன் றன்னை
வந்தனை புரியு நல்லோன் புண்ணிய வழியை நண்ணு
நிந்தனை செய்யுந் தீயோ னினைப்பினு முளந டுங்கும்
வெந்தழ னிரய மெய்தி மெலிகுவ னைய மின்றே.

சிவபக்தனை வணங்குவதால் புண்ணிய கதி கிட்டும்; அவனை அவமதிப்பவன் கோரமான நரகத்தையே அடைவான்.

शिवभक्तो महातेजाः शिवभक्तिपराङ्मुखान् ।
न स्पृशेन्नैव वीक्षेत न तैः सह वसेत् क्वचित् ॥ २७॥

பிரகாசம் பொருந்திய சிவபக்தன் சிவபக்தியற்றவர்களைத் தொடுவதோ, பார்ப்பதோ அல்லது அவர்களுடன் வசிப்பதோ கூடாது.

ஈண்டொளி யமல பத்த னிருஞ்சிவ பத்தி நீத்துக்
கோண்டரு மனத்து வெய்ய கொடியவன் றன்னை நோக்க
றீண்டுதல் புரித லாகா சேர்ந்தவ னுடனி ருத்தல்
வேண்டுவ தன்றெங் கேனும் விடுவதே யியல்பு மாதோ.

பிரகாசம் பொருந்திய சிவபக்தன் சிவபக்தியற்றவர்களைத் தீண்டுதல், பார்த்தல் அல்லது அவர்களுடன் வசித்தல் ஆகியவற்றைத் தவிர்க்கவேண்டும்.

यदा दीक्षाप्रवेशः स्याल्लिङ्गधारणपूर्वकः ।
तदाप्रभृति भक्तोऽसौ पूजयेत् स्वागमस्थितान् ॥ २८॥

இலிங்கதாரணத்துடன் கூடிய சிவதீக்ஷையை அவர்கள் பெற்றவுடனேயே சிவபக்தனுனவன் முறைப்படி பூஜித்து வணங்க வேண்டும்.

என்றுபெற் றண்ண றீக்கை யிலிங்கதா ரணமே யாதி
யன்றுதொட் டமல பத்த னாயினோன் றன்னைப் போல
நின்றநற் சிவாக மத்தி னெறிவழா தொழுகி நீங்கு
புன்றொழிற் பத்தன் றன்னைப் பூசனை புரிக வன்றே.

இலிங்கதாரணத்துடன் கூடிய சிவதீக்ஷையை அவர்கள் பெற்றவுடனேயே சிவபக்தனுனவன் தனது ஆகமத்தைச் சேர்ந்தவர்கள் என்றெண்ணி முறைப்படி பூஜித்து வணங்க வேண்டும்.

स्वमार्गाचारनिरताः सजातीया द्विजास्तु ये ।
तेषां गृहेषु भुञ्जीत नेतरेषां कदाचन ॥ २९॥
स्वमार्गाचारविमुखैर्भविभिः प्राकृतात्मभिः ।
प्रेषितं सकलं द्रव्यमात्मलीनमपि त्यजेत् ॥ ३०॥

சிவதீக்ஷை பெற்றவன் தன்னுடைய ஆகமத்தைச் சேர்ந்த அந்தணர்களின் இல்லத்தில் உண்ணலாம்; மற்றவர்கள்

இல்லங்களில் ஒருபோதும் உண்ணலாகாது. தன்னைச் சேர்ந்தவர்களாயினும் தனது ஆகமத்தைச் சேராதவரெனின் அவர்கள் கொடுக்கும் பொருள்களை அறவே நீக்கவேண்டும்.

> தன்னெறி யொழுகி நிற்குஞ் சங்கர பத்தர் தம்பாற்
> றுன்னுத லவர்தம் மில்லிற் றுய்க்குதல் செய்க பத்த
> னன்னியர் மனையூ ணாகா வருவினைப் பவிக ணல்குங்
> கொன்னிதி தன்வ சத்த தென்னினுங் கொள்ளொ ணாதால்.

சிவதீக்ஷை பெற்றவன் தன்னுடைய ஆகமத்தைச் சேர்ந்த அந்தணர்களின் இல்லத்தில் உண்ணலாம்; மற்றவர்கள் இல்லங்களில் ஒருபோதும் உண்ணலாகாது. தன்னைச் சேர்ந்தவர்களாயினும் தனது ஆகமத்தைச் சேராதவரெனின் அவர்கள் கொடுக்கும் பொருள்களை அறவே நீக்கவேண்டும்.

> नार्चयेदन्यदेवांस्तु न स्मरेन्न च कीर्तयेत् ।
> न तन्निवेद्यमाश्नीयाच्छिवभक्तो दृढव्रतः ॥ ३१॥
> यद्गृहेष्वन्यदेवोऽस्ति तद्गृहाणि परित्यजेत् ।
> नान्यदेवार्चकान् मर्त्यान् पूजाकाले निरीक्षयेत् ॥ ३२॥

சிவபக்தனும், உறுதியான விரதம் பூண்டவனும் மற்ற தெய்வங்களை வணங்குதலோ, நினைத்தலோ, போற்றிப் பாடுதலோ அல்லது அத்தெய்வங்களுக்கு நிவேதனம் செய்யப்பட்ட பொருட்களை உட்கொள்ளுதலோ கூடாது; இதர தெய்வவழிபாடு நடைபெறும் இல்லங்களைத் தவிர்க்கவேண்டும். தான் சிவபூஜை செய்யும் காலங்களில் மற்றத் தெய்வங்களை வழிபடுவோரைப் பார்க்கவும் கூடாது.

> அன்னிய தெய்வ முன்னல் புகழ்தலர்ச் சித்த லாகா
> வன்னிய தெய்வ சேட மருந்தொணா வமல பத்த
> னன்னிய தெய்வ மேவு மகமுறான் பூச னைக்க
> ணன்னிய தெய்வ பூசை யாளியை நோக்கு றானால்.

சிவபக்தனும், உறுதியான விரதம் பூண்டவனும் மற்ற தெய்வங்களை வணங்குதலோ, நினைத்தலோ, போற்றிப் பாடுதலோ அல்லது அத்தெய்வங்களுக்கு நிவேதனம்

செய்யப்பட்ட பொருட்களை உட்கொள்ளுதலோ கூடாது; இதர தெய்வவழிபாடு நடைபெறும் இல்லங்களைத் தவிர்க்கவேண்டும். தான் சிவபூஜை செய்யும் காலங்களில் மற்றத் தெய்வங்களை வழிபடுவோரைப் பார்க்கவும் கூடாது.

सदा शिवैकनिष्ठानां वीरशैवाध्ववर्तिनाम् ।
नहि स्थावरलिङ्गानां निर्माल्याद्युपयुज्यते ॥ ३३॥

சிவபெருமானை மட்டுமே நினைந்து வீரசைவ நெறியொன்றையே பின்பற்றி வாழ்பவர்கள் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்தாவரலிங்கங்களுக்கு அர்ப்பணித்த நிர்மால்யங்களைத் தீண்டார்.

என்றுமெய்ச் சிவலிங் கத்தோ டிசைந்துநல் வீரசைவ
நன்றிகொ ணெறியி னின்ற நற்சிவ பத்த னானோன்
வன்றரை யிடங்கொண் டுற்று வயங்குதா வரலிங் கத்தி
னின்றநின் மாலி யந்தான் கொள்ளுத னெறியன் றாகும்.

சிவபெருமானை மட்டுமே நினைந்து வீரசைவ நெறியொன்றையே பின்பற்றி வாழ்பவர்கள் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்தாவரலிங்கங்களுக்கு அர்ப்பணித்த நிர்மால்யங்களைத் தீண்டார்.

यत्र स्थावरलिङ्गानामपायः परिवर्तते ।
अथवा शिवभक्तानां शिवलाञ्छनधारिणाम् ॥ ३४॥
तत्र प्राणान् विहायापि परिहारं समाचरेत्।
शिवार्थं मुक्तजीवश्चेच्छिवसायुज्तमाप्नुयात् ॥ ३५॥

ஆயினும் ஸ்தாவரலிங்கங்களுக்கேனும், சிவசின்னங்கள் அணிந்த சிவபக்தர்களுக்கேனும் யாதொரு தீங்கு ஏற்பட்டால் வீரசைவனானவன் தனது உயிரைக் கொடுத்தாவது அத்தீங்குகளை நீக்க வேண்டும்; சிவபெருமானுக்காக உயிரை விடுபவன் சிவஸாயுஜ்ஜியமெனும் மிக உயர்ந்த நிலையை அடைகிறான்.

யாண்டொரு தாவரத்திற் கிடையூறு வரினும் பத்தர்க்
கேண்டரு சிவவே டத்தோர்க் கிடர்கள்வந் துறினு நில்லா

தாண்டுயிர் விடுத்தே யேனு மளிக்கமெய்ப் பரன்பொ ருட்டு
மாண்டவன் சிவனோ டொன்றாம் பதத்தினை மருவு மன்றே.

ஆயினும் ஸ்தாவரலிங்கங்களுக்கேனும், சிவசின்னங்கள் அணிந்த சிவபக்தர்களுக்கேனும் யாதொரு தீங்கு ஏற்பட்டால் வீரசைவனுனவன் தனது உயிரைக் கொடுத்தாவது அத்தீங்குகளை நீக்க வேண்டும்; சிவபெருமானுக்காக உயிரை விடுபவன் சிவஸாயுஜ்ஜியமெனும் மிக உயர்ந்த நிலையை அடைகிறுன்.

शिवनिन्दाकरं दृष्ट्वा घातयेदथवा शपेत् ।
स्थानं वा तत्परित्यज्य गच्छेद् यद्यक्षमो भवेत् ॥ ३६॥

சிவநிந்தனை செய்வோனைக் கண்டால் அவனைக் கொல்க; அல்லது அவனுக்குத் தீங்கு நேரும் வண்ணம் சாபம் இடுக; அல்லது இச்செயல்களைச் செய்ய இயலாதாயின் அவ்விடத்தை விட்டு நீங்குக.

கண்டன னாயின் முக்கட் கடவுளை நிந்திப் போனைத்
தண்டனை புரிந்து கொல்க வரிதெனிற் சபிக்க நின்று
மண்டனில் வலிய னன்றேல் வார்செவித் துணைகள் பொத்திக்
கொண்டவ ணகன்று செல்க குலைகுலைந் தமல பத்தன்.

சிவநிந்தனை செய்வோனைக் கண்டால் அவனைக் கொல்க; அல்லது அவனுக்குத் தீங்கு நேரும் வண்ணம் சாபம் இடுக; அல்லது இச்செயல்களைச் செய்ய இயலாதாயின் அவ்விடத்தை விட்டு நீங்குக.

यत्र चाचारनिन्दाऽस्ति कदाचित्तत्र न व्रजेत् ।
यद्गृहे शिवनिन्दाऽस्ति तद्गृहाणि परित्यजेत् ॥ ३७॥
यः सर्वभूताधिपतिं विश्वेशानं विनिन्दति ।
न तस्य निष्कृतिः शक्या कर्तुं वर्षशतैरपि ॥ ३८॥

சைவாசார நிந்தனை செய்யுமிடத்திற்கு ஒருபோதும் செல்லலாகாது. சிவநிந்தனை செய்யும் இல்லங்களை அறவே நீக்க வேண்டும். அனைத்து ஜீவராசிகளுக்குத் தலைவனும், அகில உலகங்களுக்கும் ஒரே நாயகனுமான சிவபெருமானை

இகழ்பவனுக்கு நூற்றுக் கணக்கான ஆண்டுகளாயினும் யாதொரு பிராயச்சித்தமும் செய்ய இயலாது.

> ஏயுமா சார நிந்தை யாண்டுள தவ்வி டத்திற்
> போயுற லொழிக வென்றும் புகல்சிவ நிந்தை செய்வோன்
> றீயக முறாது நிற்க சிவநிந்தை யவர்க்கு நூறாண்
> டாயினும் பரிகா ரஞ்செய் தகற்றிடற் கரிது மாதோ.

சைவாசார நிந்தனை செய்யுமிடத்திற்கு ஒருபோதும் செல்லலாகாது. சிவநிந்தனை செய்யும் இல்லங்களை அறவே நீக்க வேண்டும். அனைத்து ஜீவராசிகளுக்குத் தலைவனும், அகில உலகங்களுக்கும் ஓரே நாயகனுமான சிவபெருமானை இகழ்பவனுக்கு நூற்றுக் கணக்கான ஆண்டுகளாயினும் யாதொரு பிராயச்சித்தமும் இல்லை.

> शिवपूजापरो भूत्वा पूर्वकर्म विसर्जयेत् ।
> अथवा पूर्वकर्म स्यात् सा पूजा निष्फला भवेत् ॥ ३९॥
> उत्तमां गतिमाश्रित्य नीचां वृत्तिं समाश्रितः ।
> आरूढपतितो ज्ञेयः सर्वकर्मबहिष्कृतः ॥ ४०॥

சிவபூஜை செய்பவனாகில் பூருவகருமங்களை அறவே நீக்குக; அவற்றைச் செய்வானாயின் சிவபூஜை பயனளிக்காது. மிக உயர்ந்த நிலையை அடைய விரும்பி மிகத்தாழ்ந்த செயல்களைச் செய்பவன் மேலே சென்று கீழே விழுந்தவன் என்றறிக. அவன் அனைத்துக் கருமங்களினின்றும் நீக்கப்பட்டவன் ஆகிறான்.

> சிற்கன சிவலிங் கத்தைச் சேர்ந்துபூ சனைசெய் கின்றோன்
> முற்கரு மங்கள் செய்யான் முயல்வனே லமல பூசை
> நற்பய னிலையு யர்ந்த நடையினோன் றாழ்ந்த செய்யிற்
> பற்பல கரும மெல்லாம் பயனறப் பதித னாவான்.

சிவபூஜை செய்பவனாகில் பூருவகருமங்களை அறவே நீக்குக; அவற்றைச் செய்வானாயின் சிவபூஜை பயனளிக்காது. மிக உயர்ந்த நிலையை அடைய விரும்பி மிகத்தாழ்ந்த செயல்களை செய்பவன் மேலே சென்று கீழே விழுந்தவன் என்றறிக. அவன் அனைத்துக் கருமங்களினின்றும் நீக்கப்பட்டவன் ஆகிறான்.

पञ्चाक्षरोपदेशी च नरस्तुतिकरो यदि ।
सोऽलिङ्गी स दुराचारी कुकविः स तु विश्रुतः ॥ ४१॥

பஞ்சாக்ஷரமந்திரோபதேசம் பெற்றும் மனிதர்களைத் துதிசெய்பவன் லிங்கதாரி அல்லன்; அவன் தீயநடத்தை கொண்டவன், கெட்ட கவி என்றும் அறியப்படுகிருன்.

அஞ்செழுத் துபதே சங்கொள் பவனரர் தம்மைச் சென்று
நெஞ்சுறத் துதிப்பி னன்னோ னெறியலா நெறியி னின்றோ
னஞ்சுறப் படுமி லிங்கி யறிவில்புன் புலவ னூல்க
ளெஞ்சறக் கற்றோ னேனுங் கற்றில னென்பர் மேலோர்.

பஞ்சாக்ஷரமந்திரோபதேசம் பெற்றும் மனிதர்களைத் துதிசெய்பவன் லிங்கதாரி அல்லன்; அவன் தீயநடத்தை கொண்டவன், கெட்ட கவி என்றும் அறியப்படுகிருன்.

चर्मपात्रे जलं तैलं न ग्राह्यं भक्तितत्परैः ।
गृह्यते यदि भक्तेन रौरवं नरकं व्रजेत् ॥ ४२॥

சிவபக்தியுடையோன் தோலினுல் செய்யப்பட்ட பாத்திரத்தில் நீரையோ எண்ணெயையோ கொள்ளலாகாது; அவ்வாறு கொள்வானுகில் ரௌரவம் முதலான கொடிய நரகங்களைச் சென்றடைவான்.

நீடுயர் பத்திநன் னெறியி னின்றுளோன்
பாடுறு தயிலநீர் சரும பாத்திரங்
கோடனன் றன்றுதான் கொள்வ னேலவன்
வீடுவெந் நிரயமாய் மேவி நையுமே.

சிவபக்தியுடையோன் தோலினுல் செய்யப்பட்ட பாத்திரத்தில் நீரையோ எண்ணெயையோ கொள்ளலாகாது; அவ்வாறு கொள்வானுகில் ரௌரவம் முதலான கொடிய நரகங்களைச் சென்றடைவான்.

न तस्य सूतकं किञ्चित्प्राणलिङ्गसङ्गिनः ।
जन्मनोत्थं मृतोत्थं च विद्यते परमार्थतः ॥ ४३॥

பிராணலிங்கத்தையணிந்தவனுக்குப் பிறப்பினுலோ இறப்பினுலோ உண்டாகும் தீட்டு முதலியன கிடையாது.

இறப்பினு மிருநிலத் தெய்த வந்திடும்
பிறப்பினு மற்றினும் பிறந்த சூதக
மறப்பில தாமிலிங் காங்க மன்னினோற்
குறப்பெறு கிலசிறி தேனு முண்மையே.

பிராணலிங்கத்தையணிந்தவனுக்குப் பிறப்பினுலோ இறப்பினுலோ உண்டாகும் தீட்டு முதலியன கிடையாது.

लिङ्गार्चनरतायाश्च ऋतौ नार्या न सूतकम् ।
तथा प्रसूतिकायाश्च सूतकं नैव विद्यते ॥ ४४॥

அவ்வாறே, சிவலிங்க வழிபாடு செய்யும் பெண்ணுக்கு மாதவிடாய் மற்றும் பிள்ளைப் பேற்றினுலும் தீட்டு எதுவும் விளையாது.

பூப்புறு துடக்கிலை புனிதன் பூசனை
வாய்ப்புறு மடவர றனக்கு மற்றவட்
கேய்ப்புறு புதல்வனை யீன்று போந்துள
நீப்பருஞ் சூதக நிடேத மின்றரோ.

அவ்வாறே, சிவலிங்க வழிபாடு செய்யும் பெண்ணுக்கு மாதவிடாய் மற்றும் பிள்ளைப் பேற்றினுலும் தீட்டு எதுவும் விளையாது.

गृहे यस्मिन् प्रसूता स्त्री सूतकं नात्र विद्यते ।
शिवपादाम्बुसंस्पर्शात् सर्वपापं प्रणश्यति ॥ ४५॥

பிள்ளைப் பேறு நடந்த இல்லத்தில் அப்பெண்ணுக்கோ அல்லது வீட்டிலோ தீட்டு ஏற்படாது; சிவபெருமான் திருவடி நீரைத் தீண்டுவதால் அனைத்துப் பாவங்களும் விலகும்.

பரமனை யருச்சனை பயிலு மங்கைய
ரருமக வுயிர்த்திடு மகத்திற் சூதகம்
பரவுத விலசிவ பாத நீருற
விரிதரு மருவிய பாவம் யாவுமே.

பிள்ளைப் பேறு நடந்த இல்லத்தில் அப்பெண்ணுக்கோ அல்லது வீட்டிலோ தீட்டு ஏற்படாது; சிவபெருமான் திருவடி நீரைத் தீண்டுவதால் அனைத்துப் பாவங்களும் விலகும்.

शिवस्थानानि तीर्थानि विशिष्टानि शिवार्चकः ।
शिवयात्रोत्सवं नित्यं सेवेत परया मुदा ॥ ४६॥
शिवक्षेत्रोत्सवमहायात्रादर्शनकाङ्क्षिणाम् ।
मार्गेऽन्नपानदानं च कुर्यान्माहेश्वरो जनः ॥ ४७॥

சிவபெருமான் விளங்கும் இடமெல்லாம் புண்ணியதீர்த்தங்களே; சிவார்ச்சனை புரிவோன் உற்சவங்களையும் வழிபாடுகளையும் மனமகிழ்ச்சியுடன் செவ்வனே இயற்றுக. அந்த உற்சவங்களைக் காண வரும் யாத்திரிகர்களுக்கு அவர்கள் வரும் வழியில் உணவு, நீர் ஆகியவற்றைச் சிவபக்தர்களாகிய மாஹேசுவரர்கள் வழங்குவார்களாக.

இறையவ னிடங்கொளு மிடங்க டீர்த்தங்கள்
பொறைதரு திருவிழா வணைந்து போற்றுக
வுறுசிவ பத்தரவ் வுழியி னேகுவோர்க்
கறமுட னுதவுக வந்ந பாநமே.

சிவபெருமான் விளங்கும் இடமெல்லாம் புண்ணியதீர்த்தங்களே; சிவார்ச்சனை புரிவோன் உற்சவங்களையும் வழிபாடுகளையும் மனமகிழ்ச்சியுடன் செவ்வனே இயற்றுக. அந்த உற்சவங்களைக் காண வரும் யாத்திரிகர்களுக்கு அவர்கள் வரும் வழியில் உணவு, நீர் ஆகியவற்றைச் சிவபக்தர்களாகிய மாஹேசுவரர்கள் வழங்குவார்களாக.

नान्नतोयसमं दानं न चाहिंसापरं तपः ।
तस्मान्माहेश्वरो नित्यमन्नतोयप्रदो भवेत् ॥ ४८॥

உணவு, நீர் ஆகியவற்றை அளிப்பதினும் மேலான தானம் இல்லை; உயிர்களுக்குத் தீங்கிழைக்காத அஹிம்சையைக் காட்டிலும் மேலான தவமில்லை. எனவே மாஹேசுவரர்கள் எப்போதும் அன்னம் முதலியவற்றை வழங்க வேண்டும்.

அந்நதோ யத்தின்மே லான தாநமு
மன்னுகொல் லாமைமேற் றவமு மற்றிலை
யென்னலா லந்நதோ யத்தை யீத்துறு
நன்னிலை யேசிவ பத்தர் நண்ணுவார்.

உணவு, நீர் ஆகியவற்றை அளிப்பதினும் மேலான தானம் இல்லை; உயிர்களுக்குத் தீங்கிழைக்காத அஹிம்சையைக் காட்டிலும் மேலான தவமில்லை. எனவே மாஹேசுவரர்கள் எப்போதும் அன்னம் முதலியவற்றை வழங்க வேண்டும்.

स्वमार्गाचारवर्तिभ्यः स्वजातिभ्यः सद्व्रती ।
दद्यात् तेभ्यः समादद्यात् कन्यां कुलसमुद्भवाम् ॥ ४९॥

சிவபக்தன் தன் ஜாதியைச் சேர்ந்தவர்களுக்கும், தன்னைப் போல் சிவநெறியைப் பின்பற்றுவோர்க்கும் தனது குலத்தில் பிறந்த கன்னிகையைத் தானமாக நல்கவேண்டும்.

தன்னெறி தன்குலஞ் சார்ந்த வர்க்குமா
நன்னெறி பெறுசிவ பத்த னல்குக
கன்னியை யனையவர் களிப்ப நல்குறு
மின்னனை யார்தமை விரும்பிக் கொள்கவே.

சிவபக்தன் தன் ஜாதியைச் சேர்ந்தவர்களுக்கும், தன்னைப் போல் சிவநெறியைப் பின்பற்றுவோர்க்கும் தனது குலத்தில் பிறந்த கன்னிகையைத் தானமாக நல்கவேண்டும்.

एवमाचारसंयुक्तो वीरशैवो महाव्रती ।
पूजयेत् परया भक्त्या गुरुं लिङ्गं च सन्ततम् ॥ ५०॥

இவ்விதமான நெறியைப் பூண்ட உறுதியான வீரசைவன் மிகுந்த பக்தியுடன் தனது குருவையும் லிங்கத்தையும் எப்போதும் வழிபடவேண்டும்.

விளம்புமிந் நிலைபெறு வீர சைவர்தா
முளங்கொளு மன்புட னுவப்புற் றென்றுமே
கொளுங்குரு வொடுசிவ லிங்கங் கோதிலா
வளந்தரு பூசனை மதித்துச் செய்கவே.

இத்தகைய நெறியைப் பூண்ட உறுதியான வீரசைவன் மிகுந்த பக்தியுடன் தனது குருவையும் லிங்கத்தையும் எப்போதும் வழிபடவேண்டும்.

பத்தித்தலம் முற்றும்

गुरोरभ्यर्चनेनापि साक्षादभ्यर्चितः शिवः ।
तयोर्नास्ति भिदा किञ्चिदेकत्वात् तत्त्वरूपतः ॥ ५१॥

தனது குருவைப் பூஜிப்பதாலும் சிவபெருமான் அர்ச்சிக்கப்படுகிறார்; இருவரும் ஒருவரேயானதால் அவர்களுள் வேறுபாடு இல்லை.

**போற்றுறு குருபரன் பூசை யேயிள**
**வேற்றுயர் கொடியினோன் பூசை யென்பரால்**
**சாற்றுறு மிவரொரு தத்து வப்பொருள்**
**வேற்றுமை யில்லையோ ரிடத்து மெய்ம்மையே.**

தனது குருவைப் பூஜிப்பதாலும் சிவபெருமான் அர்ச்சிக்கப்படுகிறார்; இருவரும் ஒருவரேயானதால் அவர்களுள் வேறுபாடு இல்லை.

यथा देवे जगन्नाथे सर्वानुग्रहकारके ।
तथा गुरुवरे कुर्यादुपचारान् दिने दिने ॥ ५२॥

அனைத்துலகங்களுக்கும் நாதனும் எல்லோருக்கும் அருள்புரிபவனுமான சிவபெருமானுக்குச் செய்யும் உபசாரங்களை தனது குருவுக்குத் தினமும் செய்ய வேண்டும்.

**மூலகா ரணனென முழுத ளித்திடும்**
**பாலலோ சநன்றனைப் பூசை பண்ணல்போல்**
**ஞாலமேல் வருகுரு பரனை நாடொறு**
**மேலவே யருச்சனை யியற்ற வேண்டுமால்.**

அனைத்துலகங்களுக்கும் நாதனும் எல்லோருக்கும் அருள்புரிபவனுமான சிவபெருமானுக்குச் செய்யும் உபசாரங்களை தனது குருவுக்குத் தினமும் செய்ய வேண்டும்.

अप्रत्यक्षो महादेवः सर्वेषामात्ममायया ।
प्रत्यक्षो गुरुरूपेण वर्तते भक्तिसिद्धये ॥ ५३॥

மக்களின் மாயையால் சிவபெருமான் கண்ணெதிரே தெரிவதில்லை; அவரே பக்திகைகூடும் பொருட்டு குருவடிவாகத் திகழ்கிறார்.

தன்னொரு மாயையால் யார்க்குஞ் சங்கரன்
பன்னருங் காட்சியிற் படாதொ ளிக்குமான்
மன்னுறு குருபரன் வடிவந் தாங்கியே
முன்னுறு காட்சியின் முளைக்கு மென்பவே.

மக்களின் மாயையால் சிவபெருமான் கண்ணெதிரே தெரிவதில்லை; அவரே பக்திகைகூடும் பொருட்டு குருவடிவாகத் திகழ்கிறார்.

शिवज्ञानं महाघोरसंसारार्णवतारकम् ।
ध्रि(दी)यते येन स गुरुः कस्य वन्द्यो न जायते ॥ ५४॥

சிவஞானம் மக்களைக் கொடிய சம்சாரக் கடலினின்றும் கரை சேர்க்க வல்லது; அத்தகைய ஞானத்தை வழங்கும் குருவானவர் யாரால்தான் வணங்கப்படார்?

பிறப்பெனுங் கடலினைக் கடக்கும் பெற்றிசேர்
மறப்பரி தாயமெய்ஞ் ஞானமாக் கலஞ்
சிறப்புற வருள்குரு தேவன் வந்தனை
யுறப்பெறு கிலனெனின் வரானு வந்தரோ.

சிவஞானம் மக்களைக் கொடிய சம்சாரக் கடலினின்றும் கரை சேர்க்க வல்லது; அத்தகைய ஞானத்தை வழங்கும் குருவானவர் யாரால்தான் வணங்கப்படார்?

यत्कटाक्षकलामात्रात् परमानन्दलक्षणम् ।
लभ्यते शिवरूपत्वं स गुरुः केन नार्चितः ॥ ५५॥

எவருடைய கடைக்கண் நோக்கால் பரமானந்த சொரூபமான சிவத்துவம் கைவரப்படுகிறதோ அத்தகைய குருவை வணங்காதார் யார்?

எக்குரு பரன்கடைக் கண்ணி லின்பமா
மெய்க்குறி யுடையதோர் விமல மெய்ச்சிவம்
புக்கது வாயுறுந் தன்மை போந்துறு
மக்குரு பரனெ வரருச்சிக் கப்படான்.

எவருடைய கடைக்கண் நோக்கால் பரமானந்த சொரூபமான சிவத்துவம் கைவரப்படுகிறதோ அத்தகைய குருவை வணங்காதார் யார்?

हितमेव चरेन्नित्यं शरीरेण धनेन च ।
आचार्यस्योपशान्तस्य शिवज्ञानमहानिधेः ॥ ५६॥

சிவஞானக்கடலாக விளங்கும் அமைதியான ஆசாரியனுக்கு அநுதினமும் தனது உடலாலும் பொருளாலும் நன்மையையே செய்ய வேண்டும்.

சார்ந்தநல் லுருவமாய்த் தயங்கு பாசநோய்
மாய்ந்திட வருசிவ ஞான மாநிதி
யாந்தகை பெறுகுரு பரனுக் காக்கையா
லேய்ந்துள பொருளினா லிதஞ்செய் கிறகவே.

சிவஞானக்கடலாக விளங்குபவரும் பாசநோயை அழிப்பவருமான ஆசாரியனுக்கு எப்போதும் தனது உடலாலும் பொருளாலும் நன்மையையே செய்ய வேண்டும்.

गुरोराज्ञां न लङ्घेत सिद्धिकामी महामतिः ।
तदाज्ञालङ्घनेनापि शिवाज्ञाच्छेदको भवेत् ॥ ५७॥

நல்லறிவு பொருந்தியவனும் தனது இலக்கான [மோட்சத்தை அடைய விரும்புவோனுமான] சீடன் குருவின் கட்டளையை

மீறலாகாது; குருவின் கட்டளையை மீறுபவன் சிவனது ஆணையை மீறுபவனாவான்.

ஏணுறக் கதிவிழை யியல்பி னோன்குரு
வாணையைக் கடக்கொணா ததைக் கடந்திடிற்
காணுறச் சகமெலாங் காட்டு மீசன
தாணையைக் கடந்தவ னாவ னாணையே.

நல்லறிவு பொருந்தியவனும் தனது இலக்கான மோட்சத்தை அடைய விரும்புவோனுமான சீடன் குருவின் கட்டளையை மீறலாகாது; குருவின் கட்டளையை மீறுபவன் சிவனது ஆணையை மீறுபவனாவான்.

உபயத்தலம் முற்றும்.

यथा गुरौ यथा लिङ्गे भक्तिमान् परिवर्तते ।
जङ्गमे च तथा नित्यं भक्तिं कुर्याद्व विचक्षणः ॥ ५८॥

குருவினிடத்தில் எவ்வாறோ அவ்வாறே சிவலிங்கத்திலும் பக்திமான் நடந்து கொள்வான்; அதே போன்று சிவபக்தர்களாகிய ஜங்கமர்களிடமும் பக்தி பூண்டொழுகுவான்.

செவ்விய குருவிடைச் சிவலிங் கத்திடை
யெவ்வகை யன்புட னினிய செய்துறு
மவ்வகை சங்கமந் தனினு மன்பினை
வெவ்விய வினைதபு விவேகி செய்யுமால்.

குருவினிடத்தில் எவ்வாறோ அவ்வாறே சிவலிங்கத்திலும் பக்திமான் நடந்து கொள்வான்; அதே போன்று சிவபக்தர்களாகிய ஜங்கமர்களிடமும் பக்தி பூண்டொழுகுவான்.

एक एव शिवः साक्षात् सर्वानुग्रहकारकः ।
गुरुजङ्गमलिङ्गात्मा वर्तते भुक्तिमुक्तिदः ॥ ५९॥

சிவபெருமான் ஒருவரே அனைத்து ஜீவராசிகளுக்கும் அருள்புரிகிறார்; அவரே குரு, லிங்கம், ஜங்கமர் என்னும்

வடிவில் நின்று எல்லோருக்கும் உலக இன்பங்களையும் மோட்சத்தையும் வழங்குகிறார்.

அருணிலை நின்றுயி ரளிக்கு மீசனா
மொருவனே போகமும் வீடுமொன் றுறத்
தருவது செயக்குரு லிங்க சங்கம
வுருவுகொண் டுலகினி லுலவு மென்பவே.

சிவபெருமான் ஒருவரே அனைத்து ஜீவராசிகளுக்கும் அருள்புரிகிறார்; அவரே குரு, லிங்கம், ஜங்கமர் என்னும் வடிவில் நின்று எல்லோருக்கும் உலக இன்பங்களையும் மோட்சத்தையும் வழங்குகிறார்.

लिङ्गं च द्विविधं प्रोक्तं जङ्गमाजङ्गमात्मना ।
अजङ्गमे यथा भक्तिर्जङ्गमे च तथा स्मृता ॥ ६० ॥

லிங்கம் ஜங்கமம் அஜங்கமம் என இருவகைப்பட்டது; பிரதிஷ்டை செய்யப்பட்ட அசையாத லிங்கத்தினிடம் எவ்வகைப் பக்தியோ அதே போன்று சிவபக்தர்களாகிய நடமாடும் ஜங்கம லிங்கத்திலும் பக்தி கொள்ளவேண்டும்.

சரத்தொடு திரமெனத் தரித்தி ரண்டுரு
வருட்சிவ னுலகினி லருள்செய் துற்றிடுந்
திரத்தினி லன்புசெய் செய்கை போலவே
சரத்திலு மன்புசெய் தன்மை வேண்டுமால்.

லிங்கம் ஜங்கமம் அஜங்கமம் என இருவகைப்பட்டது; பிரதிஷ்டை செய்யப்பட்ட அசையாத லிங்கத்தினிடம் எவ்வகைப் பக்தியோ அதே போன்று சிவபக்தர்களாகிய நடமாடும் ஜங்கம லிங்கத்திலும் பக்தி கொள்ளவேண்டும்.

अजङ्गमं तु यल्लिङ्गं मृच्छिलादिविनिर्मितम् ।
तद्वरं जङ्गमं लिङ्गं शिवयोगीति विश्रुतम् ॥ ६१ ॥

அசையாத லிங்கமானது கல், மண் முதலியவற்றால் செய்யப்பட்டது; அதைக் காட்டிலும் சிறந்தவர்கள் சிவயோகிகளான ஜங்கமர்கள்.

மண்ணொடு சிலையெழு வாய்கொண் டாற்றிய
வண்ணுரு விலிங்கமா மதனின் மேற்பட
நண்ணிய சங்கம நாம நண்ணுறு
மெண்ணுத லருஞ்சிவ யோகி யென்பவே.

அசையாத லிங்கமானது கல், மண் முதலியவற்ருல் செய்யப்பட்டது; அதைக் காட்டிலும் சிறந்தவர்கள் சிவயோகிகளான ஜங்கமர்கள்.

अचरे मन्त्रसंस्काराल्लिङ्गे वसति शङ्करः ।
सदाकालं वसत्येव चरलिङ्गे महेश्वरः ॥ ६२॥

கல் மற்றும் மண்ணுல் செய்யப்பட்ட அசையாத லிங்கத்தில் மந்திரங்களை ஓதி சடங்குகள் புரிவதால் சிவபெருமான் வாசம் செய்கிருர்; ஆனுல் அசையும் லிங்கமான ஜங்கமர்களில் அவர் எப்போதுமே வாசம் செய்கிருர்.

மந்திரங் கொண்டுற வந்தி ருந்திடு
மெந்தையிங் கசரமா மிலிங்க மேனியி
னிந்தையில் சங்கமந் தன்னி னீக்கற
நந்திநஞ் சங்கர னண்ணு மென்றுமே.

கல் மற்றும் மண்ணுல் செய்யப்பட்ட அசையாத லிங்கத்தில் மந்திரங்களை ஓதி சடங்குகள் புரிவதால் சிவபெருமான் வாசம் செய்கிருர்; ஆனுல் அசையும் லிங்கமான ஜங்கமர்களில் அவர் எப்போதுமே வாசம் செய்கிருர்.

शिवयोगिनि यद्दत्तं तदक्षयफलं भवेत् ।
तस्मात् सर्वप्रयत्नेन तस्मै देवं महात्मने ॥ ६३॥

சிவயோகிகளிடத்தில் எவை கொடுக்கப்படுகின்றனவோ அவற்ருல் அளவிடமுடியாத பயன்கள் விளையும்; எனவே மிக்க முயற்சியுடன் அத்தகைய பெரியோர்களுக்குத் தானம் செய்ய வேண்டும்.

ஒன்றொரு பொருள்சிவ யோகிக் கீந்திடிற்
பொன்றுத றவிர்பல னாகப் போந்துறு

மென்றலி னிவன்றனக் கெத்தி றத்தினு
நன்றுற வளிப்பதே நன்று நன்றரோ.

சிவயோகிகளிடத்தில் எவை கொடுக்கப்படுகின்றனவோ அவற்ருல் அளவிடமுடியாத பயன்கள் விளையும்; எனவே மிக்க முயற்சியுடன் அத்தகைய பெரியோர்களுக்குத் தானம் செய்ய வேண்டும்.

यत्फलं लभते जन्तुः पूजया शिवयोगिनः ।
तदक्षयमिति प्रोक्तं सकलागमपारगैः ॥ ६४॥

சிவயோகிகளைப் போற்றி வழிபடுவதால் என்றுமே அழியாத நன்மை ஏற்படுமென்று எல்லா ஆகமங்களும் கூறுகின்றன.

ஒப்பறு மொருசிவ யோகி பூசையா
லெப்பய னடைகுவ னியாவ னன்னது
தப்பறு பலனெனச் சகல நூலினு
மெய்ப்பொரு ளுணர்ந்தவர் விளம்பு வாரரோ.

சிவயோகிகளைப் போற்றி வழிபடுவதால் என்றுமே அழியாத நன்மை ஏற்படுமென்று எல்லா ஆகமங்களும் கூறுகின்றன.

नावमन्येत कुत्रापि शिवयोगिनमागतम् ।
अवमानाद्भवेत्तस्य दुर्गतिश्च न संशयः ॥ ६५॥
शिवयोगी शिवः साक्षादिति कैंकर्यभक्तितः ।
पूजयेदादरेणैव यथा लिङ्गं यथा गुरुः ॥ ६६॥

வந்தடைந்த சிவயோகியை ஒருபோதும் அவமதிக்கக் கூடாது; அவரை அவமதிப்பதால் நற்கதியே கிட்டாது.
சிவயோகியானவன் சிவபெருமானே என்றெண்ணி பக்தியுடன் லிங்கத்தைப் பூஜிப்பது போல் அவரை வழிபட வேண்டும்.

உகந்துள பரசிவ யோகி வந்துறி
னிகழ்ந்தன னிருந்தவ னெய்துந் தீநெறி
புகழ்ந்தவன் றனைச்சிவன் போலவே யுனி
மகிழ்ந்துயர் பூசனை மதிஞர் செய்வரே.

வந்தடைந்த சிவயோகியை ஒருபோதும் அவமதிக்கலாகாது; அவரை அவமதிப்பதால் தீயகதியே கிட்டும்.
சிவயோகியானவன் சிவபெருமானே என்றெண்ணி பக்தியுடன் லிங்கத்தைப் பூஜிப்பது போல் அவரை வழிபட வேண்டும்.

पादोदकं यथा भक्त्या स्वीकरोति महेशितुः ।
तथा शिवात्मनोर्नित्यं गुरुजङ्गमयोरपि ॥ ६७॥

சிவபெருமானின் திருவடி நீரை எவ்வித பக்தியுடன் கொள்கிறோமோ அவ்வாறே குரு மற்றும் ஜங்கமர்களின் திருவடி நீரையும் கொள்ள வேண்டும்.

பத்தி கொண்டரன் பாதப் புனலெனச்
சத்தெ னுங்குரு சங்கம மெல்லடிக்
குய்த்த வொண்புன லுங்களித் துண்பரா
னித்த லுஞ்சிவ நேச மடைந்துளார்.

சிவபெருமானின் திருவடி நீரை எவ்வித பக்தியுடன் கொள்கிறோமோ அவ்வாறே குரு மற்றும் ஜங்கமர்களின் திருவடி நீரையும் கொள்ள வேண்டும்.

सर्वमङ्गलमाङ्गल्यं सर्वपावनपावनम् ।
सर्वसिद्धिकरं पुंसां शम्भोः पादाम्बुधारणम् ॥ ६८॥

சிவபெருமானின் திருவடி நீர் எல்லா மங்கலங்களுக்கும் மேலான மங்கலமானது, அனைத்துப் பாவங்களையும் அழிக்கவல்லது, எல்லா சித்திகளையும் அளிப்பது.

பொங்கு றும்புனி தத்திற் புனிதமாய்
மங்க லந்தனின் மங்கல மாகியே
சங்க ரன்றிருத் தாட்புனற் றாரண
மிங்க ளித்திடுஞ் சித்திகள் யாவுமே.

சிவபெருமானின் திருவடி நீர் எல்லா மங்கலங்களுக்கும் மேலான மங்கலமானது, அனைத்துப் பாவங்களையும் அழிக்கவல்லது, எல்லா சித்திகளையும் அளிப்பது.

शिरसा धारयेद्यस्तु पत्रं पुष्पं शिवार्पितम् ।
प्रतिक्षणं भवेत् तस्य पौण्डरीकक्रियाफलम् ॥ ६९॥

சிவபெருமானுக்கு அர்ப்பணித்த பத்திரம் புஷ்பம் ஆகியவற்றைத் தனது தலையில் சூடிக்கொள்பவனுக்கு ஒவ்வொரு கணமும் பௌண்டரீகயாகம் செய்த பயன் கிட்டும்.

அத்த னந்தி யணிந்த மலரொடு
பத்தி ரங்க டலையிற் பரித்துள
சுத்த னிங்கோர் கணத்தினிற் றூங்குகை
மத்த வேழ மகம்பய னண்ணுவான்.

சிவபெருமானுக்கு அர்ப்பணித்த பத்திரம் புஷ்பம் ஆகியவற்றைத் தனது தலையில் சூடிக்கொள்பவனுக்கு ஒவ்வொரு கணமும் பௌண்டரீகயாகம் செய்த பயன் கிட்டும்.

भुञ्जीयाद् रुद्रभुक्तान्नं रुद्रपीतं जलं पिबेत् ।
रुद्राघ्रातं सदा जिघ्रेदिति जाबालिकी श्रुतिः ॥ ७०॥

சிவபெருமான் உண்ட உணவையே உண்க, அப்பெருமான் அருந்திய நீரையே பருகுக, சிவபெருமான் முகர்ந்தவற்றையே முகர்க என்று ஜாபாலோபநிஷத் கூறுகிறது.

உருத்தி ரன்கொளு மோதநங் கொள்கமற்
றுருத்தி ரன்பெற் றுயிர்ப்ப துயிர்க்கவோ
ருருத்தி ரன்பரு கொண்புன லுண்கவென்
றுரைத்தி டுங்கொண் டுயர்சொற் சுருதியே.

சிவபெருமான் உண்ட உணவையே உண்க, அப்பெருமான் அருந்திய நீரையே பருகுக, சிவபெருமான் முகர்ந்தவற்றையே முகர்க என்பது வேதத்தின் கூற்று.

अर्पयित्वा निजे लिङ्गे पत्रं पुष्पं फलं जलम् ।
अन्नाद्यं सर्वभोज्यं च स्वीकुर्याद् भक्तिमान्नरः ॥ ७१॥

சிவபக்தியுடையோன் தனது லிங்கத்திற்கு பத்திரம், பூ, பழம், நீர் ஆகியவற்றைச் சமர்ப்பித்த பின்னர் அன்னம் ஆகியவற்றை உண்பானுக.

நற்ப ழங்கடி நாண்மலர் பத்திர
மெற்ப தம்புன லேமுதல் யாவையுந்
தற்பெ ருஞ்சிவ லிங்கந் தனக்கரோ
வர்ப்பி தஞ்செய்து கொள்ளுவ னன்பினோன்.

சிவபக்தியுடையோன் தனது லிங்கத்திற்கு பத்திரம், பூ, பழம், நீர் ஆகியவற்றைச் சமர்ப்பித்த பின்னர் அன்னம் ஆகியவற்றை உண்பானுக.

गुरुत्वात् सर्वभूतानां शम्भोरमिततेजसः ।
तस्मै निवेदितं सर्वं स्वीकार्यं तत्परायणैः ॥ ७२॥

அனைத்துலகங்களுக்கும் குருவானதால் எல்லையற்ற சக்திபடைத்த சிவபெருமானுக்கு நிவேதனம் செய்யப்பட்ட பொருள்கள் அனைத்தும் சிவபக்தர்களால் ஏற்றுக் கொள்ளத்தக்கன.

உலக னைத்தினு மோங்கொளி யாகியே
யிலகு மெய்ச்சிவ லிங்க விறைபெறுந்
தலைமை பெற்றிட லாலவன் றானுகர்
பலவு முற்றிடல் பத்தர்க் கியல்பரோ.

அனைத்துலகங்களுக்கும் குருவானதால் எல்லையற்ற சக்திபடைத்த சிவபெருமானுக்கு நிவேதனம் செய்யப்பட்ட பொருள்கள் அனைத்தும் சிவபக்தர்களால் ஏற்றுக் கொள்ளத்தக்கன.

ये लिङ्गधारिणो लोके ये शिवैकपरायणाः ।
तेषां तु शिवनिर्माल्यमुचितं नान्यजन्तुषु ॥ ७३॥

எவர்கள் லிங்கத்தை அணிந்திருக்கின்றனரோ, எவர்கள் உறுதியான சிவபக்தி உடையவர்களோ அவர்களுக்கு மட்டுமே சிவநிர்மாலியம் உகந்தது; மற்றவர்களுக்கன்று.

தீத கற்றுஞ் சிவனிரு மாலிய
மேதி னிக்கண் விமலற் றரித்துளோ
ராத ரத்தி னடைகுவ தன்றிமேற்
றேதி லர்க்கஃ தெய்த வொணாதரோ.

சிவலிங்கத்தை அணிந்து உறுதியான சிவபக்தி உடையவர்களுக்கு மட்டுமே சிவநிர்மாலியம் உகந்தது; மற்றவர்களுக்கன்று.

अन्नजाते तु भक्तेन भुज्यमाने शिवार्पिते ।
सिक्थे सिक्थेऽश्वमेधस्य यत्फलं तदवाप्यते ॥ ७४॥

சிவபெருமானுக்கு அர்ப்பணம் செய்யப்பட்ட அன்னத்தை உண்பவனுக்கு அதன் ஒவ்வொரு பருக்கைக்கும் அசுவமேதயாகம் செய்த பலன் கிட்டும்.

அண்ண லீசனுக் கர்ப்பிதஞ் செய்துபின்
னுண்ணு மோதநத் தோரவி ழொன்றினுக்
கெண்ணு மாபரி யாக விரும்பய
னண்ணு வார்சிவ பத்தர் நயந்தரோ.

சிவபெருமானுக்கு அர்ப்பணம் செய்யப்பட்ட அன்னத்தை உண்பவனுக்கு அதன் ஒவ்வொரு பருக்கைக்கும் அசுவமேதயாகம் செய்த பலன் கிட்டும்.

निर्माल्यं निर्मलं शुद्धं शिवेन स्वीकृतं यतः ।
निर्मलैस्तत्परैर्धार्यं नान्यैः प्राकृतजन्तुभिः ॥ ७५॥

பரமபுனிதனுன சிவபெருமானுல் ஏற்றுக்கொள்ளப்பட்டதால் நிருமாலியம் மிகவும் புனிதமானது, சுத்தமானது; எனவே அது மலங்கள் நீங்கிய சிவபக்தர்களால் மட்டுமே ஏற்றுக்கொள்ளத் தக்கது; மலம் பொருந்திய மற்றவர்களால் அன்று.

பரம னுண்டு பவித்திர மாயது
நிரும லம்பெற லானிரு மாலியம்
பெருமை தங்கு நிருமலன் பெற்றுணுங்
கருமை தங்கு கயவர்க் கடாதரோ.

பரமபுனிதனுன சிவபெருமாஞல் ஏற்றுக்கொள்ளப்பட்டதால் நிருமாலியம் மிகவும் புனிதமானது, சுத்தமானது; எனவே அது மலங்கள் நீங்கிய சிவபக்தர்களால் மட்டுமே ஏற்றுக்கொள்ளத் தக்கது; மலம் பொருந்திய மற்றவர்களால் அன்று.

शिवभक्तिविहीनानां जन्तूनां पापकर्मणाम् ।
विशुद्धे शिवनिर्माल्ये नाधिकारोऽस्ति कुत्रचित् ॥ ७६॥

பாவகருமங்களையே செய்துழலும் சிவபக்தியற்ற மக்களுக்கு மிகப் புனிதமான சிவநிருமாலியத்தில் ஒருபோதும் அதிகாரம் இல்லை.

சுத்த மாகுஞ் சுடர்சிவ னுண்ணுபு
வைத்த வானிரு மாலியங் கொண்டுறப்
பத்தி யோவிய பாவிக ளாமெனக்
கைத்து ளோரதி காரிக ளல்லரே.

பாவகருமங்களையே செய்துழலும் சிவபக்தியற்ற மக்களுக்கு மிகப் புனிதமான சிவநிருமாலியத்தில் ஒருபோதும் அதிகாரம் இல்லை.

शिवलिङ्गप्रसादस्य स्वीकाराद्यत्फलं भवेत् ।
तथा प्रसादस्वीकाराद् गुरुजङ्गमयोरपि ॥ ७७॥

சிவப்பிரசாதத்தை ஏற்றுக் கொள்வதால் உண்டாகும் அதே பலன் குரு மற்றும் ஜங்கமர்களின் பிரசாதத்தை ஏற்றுக் கொள்வதால் உண்டாகும்.

அருளி லிங்கத் தரும்பிர சாதத்தால்
வருமி ரும்பலன் வண்குரு சங்கமந்
தருமி ரும்பிர சாதமுந் தந்திடு
மொருமை கொண்டுவந் துண்பவர்க் கென்றுமே.

சிவப்பிரசாதத்தை ஏற்றுக் கொள்வதால் உண்டாகும் அதே பலன் குரு மற்றும் ஜங்கமர்களின் பிரசாதத்தை ஏற்றுக் கொள்வதால் உண்டாகும்.

तस्माद् गुरुं महादेवं शिवयोगिनमेव च ।
पूजयेत् तत्प्रसादान्नं भुञ्जीयात् प्रतिवासरम् ॥ ७८॥

எனவே சிவபெருமான், குரு மற்றும் சிவயோகி ஆகியோரைத் தினமும் வழிபட்டு அவர்களுடைய பிரசாதத்தை தினந்தோறும் உண்ணவேண்டும்.

ஆத லானல் லருட்சிவ லிங்கமெய்
நாத னாகிய நற்குரு சங்கமங்
காத லாகிக் கசிந்து தொழுதவர்
சாத மாதர விற்றரித் துண்கவே.

எனவே சிவபெருமான், குரு மற்றும் சிவயோகி ஆகியோரைத் தினமும் வழிபட்டு அவர்களுடைய பிரசாதத்தை தினந்தோறும் உண்ணவேண்டும்.

शिवलिङ्गे शिवाचार्ये शिवयोगिनि भक्तिमान् ।
दानं कुर्याद् यथाशक्ति तत्प्रसादयुतः सदा ॥ ७९॥

சிவபக்தியுடையோன் சிவலிங்கம், சிவாசாரியன், சிவயோகி ஆகியோருக்குத் தன்னாலியன்ற வரை தானம் செய்யவேண்டும்.

தேசி கற்குஞ் சிவலிங்கத் திற்குமா
லாச கற்று மருட்சிவ யோகிக்கும்
பேச லுற்ற வவர்பிர சாதவூ
ணேச முற்றவர் நின்று கொடுக்கவே.

சிவபக்தியுடையோன் சிவலிங்கம், சிவாசாரியன், சிவயோகி ஆகியோருக்குத் தன்னாலியன்ற வரை தானம் செய்யவேண்டும்.

दानं च त्रिविधं प्रोक्तं सोपाधिनिरुपाधिकम् ।
सहजं चेति सर्वेषां सर्वतन्त्रविशारदैः ॥ ८०॥
फलाभिसन्धिसंयुक्तं दानं यद्विहितं भवेत् ।
तत् सोपाधिकमाख्यातं मुमुक्षुभिरनादृतम् ॥ ८१॥

எல்லா தந்திர நூல்களும் தானத்தை சோபாதிகம், நிருபாதிகம், ஸஹஜம் என மூவகையாகக் கூறுகின்றன; தனக்கு ஒரு பிரதிபலனை எதிர்பார்த்து முறைப்படி செய்தல் சோபாதிகமாகும். மோட்சத்தையடைய விரும்புவோர்க்கு அது விலக்கப்பட்டது.

தாந மூவகை தக்கசோ பாதிக
மேனை மாநிரு பாதி சகசமென்
றூன மாம்பல னுன்னி யளித்தலே
ஞான மேவிலர் நச்சுசோ பாதிகம்.

எல்லா தந்திர நூல்களும் தானத்தை சோபாதிகம், நிருபாதிகம், ஸஹஜம் என மூவகையாகக் கூறுகின்றன; தனக்கு ஒரு பிரதிபலனை எதிர்பார்த்து முறைப்படி செய்தல் சோபாதிகமாகும். மோட்சத்தையடைய விரும்புவோர்க்கு அது விலக்கப்பட்டது.

फलाभिसन्धिनिर्मुक्तमीश्वरार्पितकाङ्क्षितम् ।
निरुपाधिकमाख्यातं दानं दानविशारदैः ॥ ८२॥

எவ்வித பலனையும் எதிர்பார்க்கமல் ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்யும் வகையில் செய்யப்படுவது நிருபாதிகதானமாகும்.

விடுத்து நெஞ்சம் பலனை விழைதலை
யடுத்த வீசனுக் கர்ப்பித மென்றுனிக்
கொடுக்கு மந்தக் கொடையை யுரைப்பரிங்
கெடுத்து நன்னிரு பாதிக மென்னவே.

எவ்வித பலனையும் எதிர்பார்க்கமல் ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்யும் வகையில் செய்தல் நிருபாதிகதானமாகும்.

अदातृदातृदेयानां शिवभावं विचिन्तयन् ।
आत्मनोऽकर्तृभावं च यद्दत्तं सहजं भवेत् ॥ ८३॥

வழங்குபவன், வழங்காதவன், ஈயப்படும் பொருள் ஆகியவற்றைச் சிவமாகவே எண்ணி ஈபவன் தன்னை அவ்வாறு எண்ணுமல் கொடுக்கப்படுவதே ஸஹஜமாகும்.

இரத்தல் செய்பவ னீபவ னீத்துறு
மருத்த நின்றவ ருஞ்சிவ மென்றுதான்

கருத்த னென்னுங் கருத்தில னாகியே
தரித்தி டுஞ்செயற் றாநஞ் சகசமே.

வழங்குபவன், வழங்காதவன், ஈயப்படும் பொருள் ஆகியவற்றைச் சிவமாகவே எண்ணி ஈபவன் தன்னை அவ்வாறு எண்ணாமல் கொடுக்கப்படுவதே ஸஹஜமாகும்.

सहजं दानमुत्कृष्टं सर्वदानोत्तमोत्तमम्।
शिवज्ञानप्रदं पुंसां जन्मरोगनिवर्तकम् ॥ ८४॥

ஸஹஜதானம் தானம் தான் அனைத்து தானங்களிலும் மிகச் சிறந்தது; அதுதான் பிறவி நோயை அழிக்கும் சிவஞானத்தை கொடுக்கவல்லது.

இறப்ப நன்கொடை யாவினு மேலதாய்ச்
சிறப்ப டைந்து செயுஞ்சக சக்கொடை
பிறப்பெ னுந்துர்ப் பிணிமருந் தாகிய
மறப்ப ருஞ்சிவ ஞானம் வழங்குமால்.

ஸஹஜதானம் தானம் தான் அனைத்து தானங்களிலும் மிகச் சிறந்தது; அதுதான் பிறவி நோயை அழிக்கும் சிவஞானத்தை கொடுக்கவல்லது.

शिवाय शिवभक्ताय दीयते यदि किञ्चन ।
भक्त्या तदपि विख्यातं सहजं दानमुत्तमम् ॥ ८५॥

சிவபெருமானுக்கும் சிவபக்தனுக்கும் பக்தியுடன் கொடுக்கப்படும் மிகச் சிறிய பொருளும் மிக உத்தமமான ஸஹஜதானமெனக் கருதப்படும்.

பத்த ரோடு பரமனுக் கீத்துறு
மெய்த்த தாநஞ் சகசம் விமலனுக்
குய்த்த போதொன் றுதவுநற் பாத்திரத்
தத்த மாயிர மீயு மரும்பயன்.

சிவபெருமானுக்கும் சிவபக்தனுக்கும் பக்தியுடன் கொடுக்கப்படும் மிகச் சிறிய பொருளும் மிக உத்தமமான ஸஹஜதானமெனக் கருதப்படும்.

दानात् स्वर्णसहस्रस्य सत्पात्रे यत्फलं भवेत् ।
एकपुष्पप्रदानेन शिवे तत्फलमिष्यते ॥ ८६॥

தகுதியுள்ளவனுக்கு ஆயிரம் பொன்ஊனத் தானமாகக் கொடுப்பதால் விளையும் பயன் சிவபெருமானுக்குப் பக்தியுடன் ஒரு புஷ்பத்தை அளிப்பதால் பெறப்படும்.

பாத்தி ரஞ்சிவ னுங்கன பாத்திரஞ்
சாத்தி ரந்தெரி தக்க குரவனு
மேத்தி யொன்றவர்க் கீயு மரும்பலன்
மூத்து நிற்கு முடிவில தாகியே.

தகுதியுள்ளவனுக்கு ஆயிரம் பொன்ஊனத் தானமாகக் கொடுப்பதால் விளையும் பயன் சிவபெருமானுக்குப் பக்தியுடன் ஒரு புஷ்பத்தை அளிப்பதால் பெறப்படும்.

शिव एव परं पात्रं सर्वविद्यानिधिर्गुरुः ।
तस्मै दत्तं तु यत्किञ्चित्तदनन्तफलं भवेत् ॥ ८७॥
शिवयोगी शिवः साक्षाच्छिवज्ञानमहोदधिः ।
यत्किञ्चिद् दीयते तस्मै तद्दानं परमार्थिकम् ॥ ८८॥

அனைத்து வித்தியைகளுக்கும் நிதியான சிவபெருமான் ஒருவரே மிகச் சிறந்த பாத்திரமாகும்; ஏதேனும் சிறிய பொருளை அவருக்கு அளிப்பதால் எல்லையற்ற பலனைப் பெறலாம். சிவயோகி ஸாக்ஷாத் சிவபெருமானே; அவரும் சிவஞானக் கடலே; அவருக்கு அளிக்கப்படும் சிறிய பொருளும் ஒப்பற்ற தானமாகக் கருதப்படும்.

காணு றுஞ்சிவ னாகிக் கருநெறி
நாணு றுஞ்சிவ ஞான மருவியே
யேணு றுஞ்சிவ யோகிக் கிடும்பொருண்
மாணு றும்பர மார்த்த மெனப்படும்.

சிவயோகி ஸாக்ஷாத் சிவபெருமானே; அவரும் சிவஞானக் கடலே; அவருக்கு அளிக்கப்படும் சிறிய பொருளும் ஒப்பற்ற தானமாகக் கருதப்படும்.

शिवयोगी महत्पात्रं सर्वेषां दानकर्मणि ।
तस्मान्नास्ति परं किञ्चित्पात्रं शास्त्रविचारतः ॥ ८९॥

எல்லா தானங்களுக்கும் ஒப்பற்ற ஒரே பாத்திரம் சிவயோகி ஒருவரே; சாத்திரங்களை ஆய்ந்து பார்க்கினும் அவரைத் தவிர தகுதி படைத்த வேறு பாத்திரமில்லை.

எக்கொ டைக்குமெ டுத்தசற் பாத்திர
மிக்க மெய்ச்சிவ யோகி மிகையென
வொக்க வொன்றிங் குரைப்பதி லையிலை
பக்க நூல்கள் பலவினு மென்பவே.

எல்லா தானங்களுக்கும் ஒப்பற்ற ஒரே பாத்திரம் சிவயோகி ஒருவரே; சாத்திரங்களை ஆய்ந்து பார்க்கினும் அவரைத் தவிர தகுதி படைத்த வேறு பாத்திரமில்லை.

भिक्षामात्रप्रदानेन शान्ताय शिवयोगिने ।
यत्फलं लभ्यते नैतद् यज्ञकोटिशतैरपि ॥ ९०॥

அமைதியான சிவயோகிக்கு பிக்ஷைப் பாத்திரத்தை தானமாக அளிப்பதால் கிட்டும் பலன் கோடிக்கணக்கன யாகங்களைச் செய்வதால் கூட கிட்டாது.

சாந்த மாய தனிச்சிவ யோகிகை
யேய்ந்த வோர்பிடி பிச்சை யிடும்பலன்
கூர்ந்த வோர்சத கோடி மகஞ்செயு
மாந்த ரானு மருவுத லன்றரோ.

அமைதியான சிவயோகிக்கு பிக்ஷைப் பாத்திரத்தை தானமாக அளிப்பதால் கிட்டும் பலன் கோடிக்கணக்கன யாகங்களைச் செய்வதால் கூட கிட்டாது.

शिवयोगिनि सन्तृप्ते तृप्तो भवति शङ्करः ।
तत्तृप्त्या तन्मयं विश्वं तृप्तिमेति चराचरम् ॥ ९१॥

சிவயோகி திருப்தி அடைவதால் சிவபெருமான் திருப்தி அடைகிறார்; அவருடைய திருப்தியால் அனைத்துலகங்களும் சிவமயமானதால் திருப்தியடைகின்றன.

திருத்தி யொண்சிவ யோகி பெறிற்சிவன்
றிருத்தி யெய்துவ னச்சிவ னெய்திய
திருத்தி கொண்டு செறியு முலகெலாந்
திருத்தி யெய்துஞ் சிவமய மாதலால்.

சிவயோகி திருப்தி அடைவதால் சிவபெருமான் திருப்தி அடைகிறார்; அவருடைய திருப்தியால் அனைத்துலகங்களும் சிவமயமானதால் திருப்தியடைகின்றன.

तस्मात् सर्वप्रयत्नेन येन केनापि कर्मणा ।
तृप्तिं कुर्यात् सदाकालमन्नाद्यैः शिवयोगिनः ॥ ९२॥

எனவே ஏதாகிலும் ஒரு செயலை முயன்று செய்தோ, அன்னம் முதலியவற்றை அளித்தோ சிவயோகியைத் திருப்தியடையச் செய்யவேண்டும்.

ஆத லாற்சிவ யோகிக் கநுதிநங்
காத லாலெக் கருமத்தி னானுமே
யோத நாதியி லொன்றுங் குறைவறத்
தீதி லாது திருத்திசெய் கிற்பரே.

எனவே ஏதாகிலும் ஒரு செயலை முயன்று செய்தோ, அன்னம் முதலியவற்றை அளித்தோ சிவயோகியைத் திருப்தியடையச் செய்யவேண்டும்.

निरुपाधिकचिद्रूपपरानन्दात्मवस्तुनि ।
समाप्तं सकलं यस्य स दानी शङ्करः स्वयम् ॥ ९३॥

எவ்வித உபாதியுமற்று சித்ரூபமான பரானந்த வடிவாய் விளங்கும் சிவபெருமானுக்கு அனைத்தையும் நல்கும் பக்தன் சிவபெருமானே ஆவான்.

தாவி லாதுயர் சச்சிதா நந்தமாய்
மேவு மீசனுக் காக விரும்பியே

யாவு நல்குவன் யாவ னனையனே
யோவி லாத வொருபெருஞ் சங்கரன்.

எவ்வித உபாதியுமற்று சித்ரூபமான பரானந்த வடிவாய் விளங்கும் சிவபெருமானுக்கு அனைத்தையும் நல்கும் பக்தன் சிவபெருமானே ஆவான்.

उक्ताखिलाचारपरायणोऽसौ
सदा वितन्वन् सहजं तु दानम् ।
ब्रह्मादिसम्पत्सु विरक्तचित्तो
भक्तो हि माहेश्वरतामुपैति ॥ ९४॥

மேற்சொன்ன எல்லா ஆசாரங்களையும் வழுவாமல் கடைப்பிடித்து தன்னுலியன்ற தானங்கள் அனைத்தையும் செய்து கொண்டு பிரம்மா முதலான தேவர்களுடைய ஐசுவரியங்களையும் ஒரு பொருட்டாக எண்ணுமல் இருக்கும் பக்தனே மாஹேசுவரன் என்னும் தகுதியை அடைகிருன்.

உரைத்த நன்னெறி யுற்றுயர் தாநியா
யருத்த மாமய னாதியர் வாழ்வினில்
விரத்த னாகும் விழுமிய பத்தனே
தரித்து நிற்குமா கேசத் தகைமையே.

மேற்சொன்ன எல்லா ஆசாரங்களையும் வழுவாமல் கடைப்பிடித்து தன்னுலியன்ற தானங்கள் அனைத்தையும் செய்து கொண்டு பிரம்மா முதலான தேவர்களுடைய ஐசுவரியங்களையும் ஒரு பொருட்டாக எண்ணுமல் இருக்கும் பக்தனே மாஹேசுவரன் என்னும் தகுதியை அடைகிருன்.

சகசதாநத்தலம் முற்றும்

॥ इति श्रीषट्स्थलब्रह्मिणा शिवयोगिनाम्ना रेणुकाचार्येण विरचिते सिद्धान्तशिखामणौ माहेश्वरस्य नवविधस्थलप्रसङ्गो नाम नवमः परिच्छेदः ॥

## ॥ दशमः परिच्छेदः ॥

भक्तस्थलं समाख्यातं भवता गणनायक ।
केन वा धर्मभेदेन भक्तो माहेश्वरो भवेत्॥ १॥

ஓ கணநாயகனே! தங்களால் பக்தஸ்தலம் விரிவாக உரைக்கப்பட்டது; எந்தெந்த தருமங்களால் அந்த பக்தன் மாஹேசுவரனுகிருன்?

சாற்றினை யுவந்துபத் தத்த லத்தினைப்
பாற்றிய வினைநெறிப் பத்த னிங்ஙனெவ்
வாற்றினி லடைவன்மா கேசத் தன்மையை
மாற்றிரி கணேசநீ வகுத்துக் கூறுவாய்.

ஓ கணநாயகனே! தங்களால் பக்தஸ்தலம் விரிவாக உரைக்கப்பட்டது; எந்தெந்த தருமங்களால் அந்த பக்தன் மாஹேசுவரனுகிருன் என்பதைக் கூறுவாயாக.

केवले सहजे दाने निष्णातः शिवतत्परः ।
ब्रह्मादिस्थानविमुखो भक्तो माहेश्वरः स्मृतः ॥ २॥
भक्तेर्यदा समुत्कर्षो भवेद् वैराग्यगौरवात् ।
तदा माहेश्वरः प्रोक्तो भक्तः स्थिरविवेकवान् ॥ ३॥

தனக்கே உரிய ஸஹஜமான தானம் செய்வதிலேயே நிலேத்து நின்று சிவபெருமானேயே நினேந்து பிரம்மா முதலான தேவர்களின் உயர்ந்த நிலேயையும் துச்சமாக எண்ணுபவனே மாஹேசுவரன் எனப்படுகிருன். தீவிர வைராக்கியத்தாலும் உண்மை நிலேயைப் பகுத்து அறிவதாலும் சிவபக்தியின் மிக உயர்ந்த நிலேயிலிருப்பவனே பக்தனுவான்.

மாசறு சகசநற் றானம் வல்லனாய்
வாசவ னாதியர் பதத்தின் மாற்றிய
நேசமோ டொருபெரு நேசத் துற்றவ
னீசனை யிணையின்மா கேசத் தன்மையான்.

தனக்கே உரிய ஸஹஜமான தானம் செய்வதிலேயே நிலைத்து நின்று சிவபெருமானையே நினைந்து இந்திரன் முதலான தேவர்களின் உயர்ந்த நிலையையும் துச்சமாக எண்ணி சிவபக்தியின் மிக உயர்ந்த நிலையிலிருப்பவனே மாஹேசுவரன் எனப்படுகிறான்.

माहेश्वरस्थलं वक्ष्ये यथोक्तं शम्भुना पुरा ।
माहेश्वरप्रशंसादौ लिङ्गनिष्ठा ततः परम् ॥ ४॥

முன்னர் சிவபெருமான் உரைத்தவாறு மாஹேசுவரஸ்தலத்தை விரித்துக் கூறுவேன்; முதலில் மாஹேசுவரனின் பெருமையும், அதையடுத்து சிவலிங்கத்தின் மீது உறுதியான பக்தியும் கூறப்படும்.

முன்னர்நஞ் சங்கரன் மொழிந்த வாறிவண்
பன்னுவன் மகேசநற் றலத்தின் பான்மையுந்
தன்னிகர் மகேச்சுரன் றன்மை யங்கதன்
பின்னர்வந் திலிங்கநன் னிட்டை பெற்றிடும்.

முன்னர் சிவபெருமான் உரைத்தவாறு மாஹேசுவரஸ்தலத்தை விரித்துக் கூறுவேன்; முதலில் மாஹேசுவரனின் பெருமையும், அதையடுத்து சிவலிங்கத்தின் மீது உறுதியான பக்தியும் கூறப்படும்.

पूर्वाश्रयनिरासश्च तथाद्वैतनिराकृतिः ।
आह्वानवर्जनं पश्चादष्टमूर्तिनिराकृतिः ॥ ५॥
सर्वगत्वनिरासश्च शिवत्वं शिवभक्तयोः ।
एवं नवविधं प्रोक्तं माहेश्वरमहास्थलम् । ६॥

பூருவாசிரயத்தை மறுத்தல், அத்துவைதமறுப்பு, ஆவாஹன மறுப்பு, பின்னர் அஷ்டமூர்த்தி மறுப்பு, ஸர்வவியாபகத்துவ மறுப்பு, சிவனுக்கும் பக்தர்களுக்குமுள்ள சிவத்துவம், என மாஹேசுவர பக்தஸ்தலம் ஒன்பது வகைப்படும்.

பூருவாச் சிரயமத் துவிதம் போந்துபி
னாருமா வாகந மட்ட மூர்த்திபின்

சாருமியாண் டினுநிலை தடுத்தல் பின்சிவம்
பாரமா வுலகொடுபத்த னாந்தலம்.

பூருவாசிரயத்தை மறுத்தல், அத்துவைதமறுப்பு, ஆவாஹன மறுப்பு, பின்னர் அஷ்டமூர்த்தி மறுப்பு, ஸர்வவியாபகத்துவ மறுப்பு, சிவனுக்கும் பக்தர்களுக்குமுள்ள சிவத்துவம், என மாஹேசுவர பக்தஸ்தலம் ஒன்பது வகைப்படும்.

आदितः क्रमशो वक्ष्ये स्थलभेदस्य लक्षणम् ।
समाहितेन मनसा श्रूयतां भवता मुने ॥ ७॥

இந்த முறையில் தொடக்கத்திலிருந்து இவற்றின் இலக்கணங்களை விளக்கிக் கூறுவேன். ஓ முனிவரே! கவனமாகக் கேள்.

இம்முறை நவவித மெய்தி நின்றுள
மெய்ம்மலி மகேசநற் றலம்வி ளம்புதுஞ்
செம்மையோ டொருங்கிய சித்த னாகியே
யெம்முனி வரவிருந் தினிது கேட்கவே.

இந்த முறையில் தொடக்கத்திலிருந்து இவற்றின் இலக்கணங்களை விளக்கிக் கூறுவேன். ஓ முனிவரே! கவனமாகக் கேள்.

विश्वस्मादधिको रुद्रो विश्वानुग्रहकारकः ।
इति यस्य स्थिरा बुद्धिः स वै माहेश्वरः स्मृतः ॥ ८॥

சிவபெருமான் உலகங்களனைத்தைக் காட்டிலும் மேலானவர் என்றும் அவர் ஒருவரே அனைத்துலகங்களுக்கும் அருள்புரிபவரென்றும் எவனுக்கு திடமான நம்பிக்கை உளதோ அவனே மாஹேசுவரனெனக் கருதப்படுகிறுன்.

உலகினை யளித்தரு ளுருத்தி ரன்மிகு
முலகினை யுண்டிடு மொருவன் றன்னினுந்
தலைமைய னென்றெவன் றுணியுந் தன்மையா
னிலகுறு மனையன்மா கேச னென்பவே.

சிவபெருமான் உலகங்களனைத்தைக் காட்டிலும் மேலானவர் என்றும் அவர் ஒருவரே அனைத்துலகங்களுக்கும் அருள்புரிபவரென்றும் எவனுக்கு திடமான நம்பிக்கை உளதோ அவனே மாஹேசுவரனெனக் கருதப்படுகிறான்.

ब्रह्माद्यैर्मलिनप्रायैर्निर्मले परमेश्वरे ।
साम्योक्तिं यो न सहते स वै माहेश्वराभिधः ॥ ९॥

பிரம்மா முதலான கீழ்நிலையிலுள்ள தேவர்களுக்குச் சமமாக அகில உலகங்களுக்கும் ஈசுவரனான சிவபிரானை ஒப்பிடுதலை எவன் பொறுக்கமாட்டானோ அவனே மாஹேசுவரன் ஆவான்.

விமலனா கியநுதல் விழியி னோனொடு
சமவரா கியநிலைச் சதுமுகப் பெருங்
கமலனா தியர்தமை யொப்புக் காண்குறு
மமைவிலா னரியமா கேச னாகுவான்.

பிரம்மா முதலான கீழ்நிலையிலுள்ள தேவர்களுக்குச் சமமாக அகில உலகங்களுக்கும் ஈசுவரனான சிவபிரானை ஒப்பிடுதலை எவன் பொறுக்கமாட்டானோ அவனே மாஹேசுவரன் ஆவான்.

ईश्वरः सर्वभूतानां ब्रह्मादीनां महानिति ।
बुद्धियोगात् तदासक्तो भक्तो माहेश्वरः स्मृतः ॥ १०॥

சிவபெருமான் எல்லா உயிர்களுக்கும் மற்றும் பிரம்மா முதலான தேவர்களுக்கும் மேலானவர் என்ற உறுதியான எண்ணத்துடன் எவன் அவரிடத்திலேயே முழுவதும் ஈடுபட்டிருக்கின்றானோ அவனே மாஹேசுவரன்.

பங்கய னாதிய பசுக்கட் கென்றுமே
யிங்கிறை யாகிய வீசன் றன்னையே
துங்கனென் றுணர்தரு துணிவுபெற்றுளோன்
மங்கல நெறியுடை மகேச னாகுவான்.

சிவபெருமான் எல்லா உயிர்களுக்கும் மற்றும் பிரம்மா முதலான தேவர்களுக்கும் மேலானவர் என்ற உறுதியான எண்ணத்துடன்

எவன் அவரிடத்திலேயே முழுவதும் ஈடுபட்டிருக்கின்றுனே அவனே மாஹேசுவரன்.

ब्रह्मादिदेवताजालं मोहितं मायया सदा ।
अशक्तं मुक्तिदाने तु क्षयातिशयसंयुतम् ॥ ११॥
अनादिमुक्तो भगवानेक एव महेश्वरः ।
मुक्तिदश्चेति यो वेद स वै माहेश्वरः स्मृतः ॥ १२॥

பிரம்மா முதலான எல்லா தேவர்களும் மாயையினுல் மோஹிக்கப்பட்டவர்கள், நிறை, குறை முதலான குற்றங்களையுடையவர்கள்; எனவே அவர்கள் முக்தியளிக்கும் தகுதியற்றவர்கள். தொடக்கமில் காலம்தொட்டே முக்தனுக விளங்குபவர் மஹேசுவரன் ஒருவரே, அவரே முக்தியளிப்பதற்குத் தகுதி வாய்ந்தவர் என்று அறிந்தவனே மாஹேசுவரனுவான்,

பெருமல முற்றிடு பிரம னாதியர்
தரும்வலி யிலர்தனி முத்தி நல்குவோ
நிருமல மகேசனே யென்னு நெஞ்சினோன்
மருவரு நிலையுடை மகேச னாகுவான்.

மலங்களுக்குட்பட்ட பிரம்மா முதலிய தேவர்கள் முக்தி தருவதற்கான வலிமையற்றவர்கள்; எப்போதும் முக்தனுக விளங்கும் சிவபெருமான் ஒருவரே முக்தியளிக்கும் வல்லமை வாய்ந்தவர் என்று அறிந்தவனே மாஹேசுவரனுவான்.

क्षयातिशयसंयुक्ता ब्रह्मविष्ण्वादिसम्पदः ।
तृणवन्मन्यते युक्त्या वीरमाहेश्वरः सदा ॥ १३॥
शब्दस्पर्शादिसम्पन्ने सुखलेशे तु निःस्पृहः ।
शिवानन्दे समुत्कण्ठो वीरमाहेश्वरो भवेत् ॥ १४॥

பிரம்மா விஷ்ணு போன்ற தேவர்களின் ஐசுவரியங்களும் குறையத்தக்கன; எனவே அவற்றை ஒரு துரும்பாக எண்ணுபவனே வீரமாஹேசுவரன்.

ஐம்புலன்களின் வாயிலாக அடையும் திவலை போன்ற சிறிய சுகங்களில் நாட்டம் கொள்ளாமல் சிவானந்தானுபவம் ஒன்றையே விரும்புபவன் வீரமாஹேசுவரனுவான்.

மாலய னாதியர் மருவு வாழ்வெலாஞ்
சால வோர்து ரும்பெனத் தள்ளி யைம்புல
னாலுறு சுகங்களை மகேச னாற்றியே
சீலமோ டவன்சிவா நந்தத் தெய்துவான்.

பிரம்மா விஷ்ணு போன்ற தேவர்களின் ஐசுவரியங்களும் குறையத்தக்கன; எனவே அவற்றை ஒரு துரும்பாக எண்ணுபவனே வீரமாஹேசுவரன்.

ஐம்புலன்களின் வாயிலாக அடையும் திவலை போன்ற சிறிய சுகங்களில் நாட்டம் கொள்ளாமல் சிவானந்தானுபவம் ஒன்றையே விரும்புபவன் வீரமாஹேசுவரனுவான்.

परस्त्रीसङ्गनिर्मुक्तः परद्रव्यपराङ्मुखः ।
शिवार्थकार्यसम्पन्नः शिवागमपरायणः ॥ १५॥

பிறர் மனைவி, பிறர் பொருள் முதலியவற்றை ஒரு போதும் விரும்பாதவனும், சிவபெருமானுக்காகவே செயல்படுபவனும், சிவாகமங்களையே ஓதுபவனும்,

பிறர்மனை பிறர்பொருள் பெறல வாச்சின
மறுபகை முதனவை யனைத்து நீக்கியே
பொறையொடு பரனது புகழ்வி ரும்பிநன்
னெறிதரு சிவாகம நேய முள்ளனாய்.

பிறர் மனைவி, பிறர் பொருள் முதலியவற்றை ஒரு போதும் விரும்பாதவனும், சிவபெருமானுக்காகவே செயல்படுபவனும், சிவாகமங்களையே ஓதுபவனும், நான், எனது என்னும் எண்ணமற்றவனும், வருத்தமற்றவனும், செறுக்கற்றவனும், பொருமை முதலான தீயகுணங்களற்றவனும், காமமற்றவனும், கோபமே கொள்ளாதவனும், எப்போதும் மனமகிழ்ச்சியுடையவனும், எல்லா உயிர்களிடத்தும் அன்பு கொண்டவனும்,

शिवस्तुतिरसास्वादमोदमानमनाः शुचिः ।
शिवोत्कर्षप्रमाणानां सम्पादनसमुद्यतः ॥ १६॥
निर्ममो निरहङ्कारो निरस्तक्लेशपञ्जरः ।
अस्पृष्टमदसम्बन्धो मात्सर्यावेशवर्जितः ॥ १७॥
निरस्तमदनोन्मेषो निर्धूतक्रोधविप्लवः ।
सदा सन्तुष्टहृदयः सर्वप्राणिहिते रतः ॥ १८॥

சிவபெருமானைத் துதிப்பதிலேயே மகிழ்பவனும், சுத்தமானவனும், சிவபெருமானின் உயர்வை நிலைநிறுத்தும் நூற்பிரமாணங்களைத் திரட்டுவதில் ஈடுபடுபவனும், நான், எனது என்னும் எண்ணமற்றவனும், வருத்தமற்றவனும், செறுக்கற்றவனும், பொருமை முதலான தீயகுணங்களற்றவனும், காமமற்றவனும், கோபமே கொள்ளாதவனும், எப்போதும் மனமகிழ்ச்சியுடையவனும், எல்லா உயிர்களிடத்திலும் அன்பு கொண்டவனும்,

அரற்குயர் வளித்திடு மளவை கொண்டுதான்
பரற்கிதஞ் செய்துநம் பரம்பொ ருட்டவாய்த்
திரத்தொழில் புரிந்துமெய்ச் சிவநிந் தைக்கணே
மரித்திடு நிலையினும் வலிய னாகியே.

சிவபெருமானைத் துதிப்பதிலேயே மகிழ்பவனும், சுத்தமானவனும், சிவபெருமானின் உயர்வை நிலைநிறுத்தும் நூற்பிரமாணங்களைத் திரட்டுவதில் ஈடுபடுபவனும்,

निवारणसमुद्योगी शिवकार्यविरोधिनाम् ।
सहचारी सदाकालं शिवोत्कर्षाभिधायिभिः ॥ १९॥
शिवापकर्षसम्प्राप्तौ प्राणत्यागेऽप्यशङ्कितः ।
शिवैकनिष्ठः सर्वात्मा वीरमाहेश्वरो भवेत् ॥ २०॥

சிவபெருமானின் இச்சைக்கெதிராகச் செயல்படுவோரை விலக்குபவனும், சிவபெருமானைப் போற்றுபவர்களுடன் எப்போதும் நட்புகொண்டவனும், சிவபெருமானுக்கு இகழ்ச்சி ஏற்படின் தனது உயிரையே தியாகம் செய்யத் தயங்காதவனும்,

சிவபெருமான் ஒருவரிடத்திலேயே நிலைத்திருப்பவனுமான மனிதனே வீரமாஹேசுவரனாவான்.

நிந்தனை யுடையரை நீக்கி யோர்சிவ
வந்தனை யுடையரை மருவி யென்றுமே
புந்தியின் மகிழ்பெறீஇப் புனித னாயுறு
மைந்துடை யவனரு மகேச னாகுவான்.

சிவபெருமானை இகழ்வோரை விலக்குபவனும், சிவபெருமானைப் போற்றுபவர்களுடன் எப்போதும் நட்புகொண்டவனும், சிவபெருமானுக்கு இகழ்ச்சி ஏற்படின் தனது உயிரையே தியாகம் செய்யத் தயங்காதவனும், சிவபெருமான் ஒருவரிடத்திலேயே நிலைத்திருப்பவனுமான மனிதனே வீரமாஹேசுவரனாவான்.

अस्य माहेश्वरस्योक्तं लिङ्गनिष्ठामहास्थलम् ।
प्राणात्ययेऽपि सम्पन्ने यदत्याज्यं विधीयते ॥ २१॥

மாஹேசுவரனுக்கு லிங்கநிட்டைஸ்தலம் கூறப்பட்டது; அவனது உயிரே நீங்கினாலும் அவ்வொழுக்கத்திலிருந்து அவன் தவறக்கூடாது.

ஆவி மாளினுஞ் சிவலிங்க நிட்டையை யடைந்தோ
னோவி லாநெறி நிற்கவொன் றுணர்தர வுணர்த்துந்
தாவி லாதவிச் சிவலிங்க நிட்டையந் தலந்தான்
றேவ தேவனைப் பொருளெனு மகேசனைச் செறியும்.

மாஹேசுவரனுக்கு லிங்கநிட்டைஸ்தலம் கூறப்பட்டது; அவனது உயிரே நீங்கினாலும் அவ்வொழுக்கத்திலிருந்து அவன் தவறக்கூடாது.

अपगच्छतु सर्वस्वं शिरश्छेदनमस्तु वा ।
माहेश्वरो न मुञ्चेत लिङ्गपूजामहाव्रतम् ॥ २२॥
लिङ्गपूजामकृत्वा तु ये न भुञ्जन्ति मानवाः ।
तेषां महात्मनां हस्ते मोक्षलक्ष्मीरुपस्थिता ॥ २३॥

அவனுடைய பொருள்கள் அனைத்தும் நீங்கினாலும், அவனுடைய தலையே அறுந்தாலும் மாஹேசுவரன் லிங்கபூஜை செய்யாமல் உணவருந்துதல் கூடாது. லிங்கபூஜை செய்யாமல் உணவு உட்கொள்ளாத விரதத்தை ஏற்றுக் கொண்ட மஹான்களின் கைத்தலத்தில் மோக்ஷலக்ஷ்மியானவள் குடிகொண்டுள்ளாள்.

பொருளெ லாஞ்சிதைந் துயர்தலை யற்றுவீழ் பொழுது
மருளு லாஞ்சிவ லிங்கபூ சனைவிட லாகா
தெருளி னாலரன் பூசனை செய்திடா துண்ணு
மருளி லான்கரத் துற்றிடு முத்திமா நிதியம்.

பொருள்கள் அனைத்தும் நீங்கினாலும், அவனுடைய தலையே அறுந்தாலும் மாஹேசுவரன் லிங்கபூஜை செய்யாமல் உணவருந்துதல் கூடாது. லிங்கபூஜை செய்யாமல் உணவு உட்கொள்ளாத விரதத்தை ஏற்றுக் கொண்ட மஹான்களின் கைத்தலத்தில் மோக்ஷமெனும் பெருநிதி குடிகொண்டுள்ளது.

किमन्यैर्धर्मकलिलैः कीकषार्थप्रदायिभिः ।
साक्षान्मोक्षप्रदः शम्भोर्धर्मो लिङ्गार्चनात्मकः ॥ २४॥

மோக்ஷத்தை நேரடியாக அளிக்கவல்ல சிவபூஜை எனும் உயர்ந்த தருமம் இருக்கையில் சிறிய பயன்களை அளிக்கும் மற்ற தருமங்களால் யாது பயன்?

சம்பு பூசனை யாகிய தக்கதோர் தரும
மிம்பர் வீடுற வளித்திடு மினையதை யன்றி
நம்பு மேனைய சிறுபய னல்குறு தருமங்
கும்ப மாமுனி செய்வதென் பெறுவது கொண்டு.

மோக்ஷத்தை நேரடியாக அளிக்கவல்ல சிவபூஜை எனும் உயர்ந்த தருமம் இருக்கையில் சிறிய பயன்களை அளிக்கும் மற்ற தருமங்களால் யாது பயன்?

अर्पितेनान्नपानेन लिङ्गे नियमपूजिते ।
ये देहवृत्तिं कुर्वन्ति महामाहेश्वरा हि ते ॥ २५॥

சிவலிங்கத்திற்கு அன்னம், பானம் முதலியவற்றை அர்ப்பித்து முறையாக பூஜை செய்து வாழ்பவர்கள் உண்மையிலேயே மஹாமாஹேசுவரர்களே.

நியமங் கொண்டுபூ சனைசெயு நிமலலிங் கத்திற்
செயலி லன்புட னர்ப்பிதஞ் செய்தசே டத்தை
யயில்பு மெய்வளர்ப் பவனெவ னனையதன் மையனே
மயல கன்றுயர் தருதனி வீரமா மகேசன்.

சிவலிங்கத்திற்கு அன்னம், பானம் முதலியவற்றை அர்ப்பித்து முறையாக பூஜை செய்து வாழ்பவர்கள் உண்மையிலேயே வீரமாஹேசுவரர்களே.

चिन्मये शाङ्करे लिङ्गे स्थिरं येषां मनः सदा ।
विमुक्तेतरसर्वार्थं ते शिवा नात्र संशयः ॥ २६॥
लिङ्गे यस्य मनो लीनं लिङ्गस्तुतिपरा च वाक् ।
लिङ्गार्चनपरौ हस्तौ स रुद्रो नात्र संशयः ॥ २७॥

மற்ற சிந்தனை யாதுமின்றி சின்மயமான சிவலிங்கத்தின் மீதே எவர்களுடைய மனது உறுதியாக நிலைபெற்றிருக்கின்றதோ அவர்கள் சிவபெருமானே என்பதில் ஐயமில்லை; எவனுடைய மனது சிவலிங்கத்தின் மீதே லயித்திருக்கிறதோ, எவனுடைய வாக்கு எப்போதும் சிவலிங்கத்துதியையே பாடுகிறதோ, எவனுடைய இருகைகளும் சிவலிங்க வழிபாட்டிலேயே ஈடுபட்டிருக்கின்றதோ அவன் ருத்திரனே என்பதில் ஐயமில்லை.

விடுத்து மற்றுள பயனெலாம் விமலலிங் கத்தி
லடுத்த நெஞ்சமும் பரமலிங் கத்தரும் புகழே
யெடுத்த றைந்திடு வாயுமர்ச் சனைசெய வென்றும்
படைத்த கைகளு முடையனே யுருத்திரன் பகரின்.

மற்ற சிந்தனை யாதுமின்றி சின்மயமான சிவலிங்கத்தின் மீதே எவர்களுடைய மனது உறுதியாக நிலைபெற்றிருக்கின்றதோ அவர்கள் சிவபெருமானே என்பதில் ஐயமில்லை; எவனுடைய மனது சிவலிங்கத்தின் மீதே லயித்திருக்கிறதோ, எவனுடைய

வாக்கு எப்போதும் சிவலிங்கத்துதியையே பாடுகிறதோ, எவனுடைய இருகைகளும் சிவலிங்க வழிபாட்டிலேயே ஈடுபட்டிருக்கின்றதோ அவன் ருத்திரனே என்பதில் ஐயமில்லை.

लिङ्गनिष्ठस्य किं तस्य कर्मणा स्वर्गहेतुना ।
नित्यानन्दशिवप्राप्तिर्यस्य शास्त्रेषु निश्चिता ॥ २८॥

சிவலிங்கத்திலேயே மனம் லயித்து அதனுல் நித்தியானந்தம் அடைவது உறுதி எனச் சாத்திரங்கள் கூறும்போது அவனுக்கு சுவர்க்கம் முதலியவற்றை அளிக்கும் ஏனைய செயல்களால் யாது பயன்?

பரம லிங்கநன் னிட்டையை யுளன்பரா நந்த
வொருபெ ருஞ்சிவ மதனையே யடைவனென் றுரைக்கு
மிருள றுங்கலை யாவுமற் றவன்றனக் கென்னாந்
திரமி ழந்துறு துறக்ககா ரணமெனுஞ் செயல்கள்.

சிவலிங்கத்திலேயே மனம் லயித்து அதனுல் நித்தியானந்தம் அடைவது உறுதி எனச் சாத்திரங்கள் கூறும்போது அவனுக்கு சுவர்க்கம் முதலியவற்றை அளிக்கும் ஏனைய செயல்களால் யாது பயன்?

लिङ्गनिष्ठापरं शान्तं भूतिरुद्राक्षसंयुतम् ।
प्रशंसन्ति सदाकालं ब्रह्माद्या देवता मुदा॥ २९॥

எப்போதும் திருநீறு ருத்திராக்ஷம் ஆகியவற்றை அணிந்து சிவலிங்கத்திலேயே மனம் உறுதியாக லயித்திருப்போனை பிரம்மா முதலான தேவர்கள் இடையருது மகிழ்ச்சியுடன் புகழ்கின்றனர்.

நீறு கண்டிகை புனைந்துநன் னெறியிடை நின்று
தேறு மஞ்சிவ லிங்கமா நிட்டையிற் சிறந்த
பேற டைந்தவன் றன்னையப் பிரமனே முதலோர்
மாற ருந்துதி செய்துநின் றிறைஞ்சுவர் மன்னோ.

எப்போதும் திருநீறு ருத்திராக்ஷம் ஆகியவற்றை அணிந்து சிவலிங்கத்திலேயே மனம் உறுதியாக லயித்திருப்போனை பிரம்மா முதலான தேவர்கள் இடையருது மகிழ்ச்சியுடன் புகழ்கின்றனர்.

लिङ्गैकनिष्ठहृदयः सदा माहेश्वरो जनः ।
पूर्वाश्रयगतान् धर्मांस्त्यज्येत् स्वाचाररोधकान् ॥ ३०॥

எப்போதும் சிவலிங்கத்திலேயே லயித்திருக்கும் மாஹேசுவரன் சைவாசாரங்களுக்கு இடையூருன முந்தைய ஆசாரங்களை அறவே நீக்க வேண்டும்.

கொண்டு றுஞ்சிவ லிங்கநன் னிட்டையைக் கொண்டு
விண்டு றும்பவ நெறியடை வீரமா மகேசன்
கண்ட ருஞ்சிவ நெறிவிலக் காயிவண் கலந்த
பண்டு றுங்கரு மங்களோ விடுத்திடப் படுமால்.

எப்போதும் சிவலிங்கத்திலேயே லயித்திருக்கும் வீரமாஹேசுவரன் சிவநெறிக்கு இடையூருன முந்தைய ஆசாரங்களை அறவே நீக்க வேண்டும்.

स्वजातिकुलजान् धर्मान् लिङ्गनिष्ठाविरोधिनः ।
त्यजन् माहेश्वरो ज्ञेयः पूर्वाश्रयनिरासकः ॥ ३१॥

லிங்கத்தில் ஒருமுகமாக லயித்திருப்பதற்கு இடையூருன தனது ஜாதி மற்றும் குலாசாரங்களை அறவே நீக்கும் மாஹேசுவரன் பூருவாசிரமநிராஸகன் எனப்படுகிருன்.

சோதி லிங்கநன் னிட்டையின் விலக்கெனத் தோன்றுஞ்
சாதி தன்குல தருமங்க ளனைத்தையுந் தணந்த
நீதி யொன்றுள னாகிய நிலைபெறு மகேசன்
றீத டைந்துள தொல்லையாச் சிரயத்திற் றீர்ந்தோன்.

லிங்கத்தில் ஒருமுகமாக லயித்திருப்பதற்கு இடையூருன தனது ஜாதி மற்றும் குலாசாரங்களை அறவே நீக்கும் மாஹேசுவரன் பூருவாசிரமநிராஸகன் எனப்படுகிருன்.

शिवसंस्कारयोगेन विशुद्धानां महात्मनाम् ।
किं पूर्वकालिकैर्धर्मैः प्राकृतानां हि ते मताः ॥ ३२॥
शिवसंस्कारयोगेन शिवधर्मानुषङ्गिणाम् ।
प्राकृतानां न धर्मेषु प्रवृत्तिरुपपद्यते ॥ ३३॥

சிவதீக்ஷையினுல் பரிசுத்தமாக்கப்பட்ட மஹாத்மாக்களுக்கு அவர்களுடைய பூருவகால தருமங்களால் யாது பயன்? அவை அறிவற்றவர்களுக்கே பொருந்தும். சிவதீக்ஷை பெற்று சிவதருமங்களை அனுஷ்டிப்பவர்களுக்கு மூடர்களுடைய தருமங்களில் மனம் நாடாது.

பற்று றுஞ்சிவ தீக்கையிற் பவித்திரன் றனக்கு
முற்ற ருங்கரு மங்களி னென்பயன் மூடம்
பெற்று றும்பவப் பிணியின ரேயவை பெறுவா
ருற்றி டுஞ்சிவ தீக்கையி னோனவை யொழியும்.

சிவதீக்ஷையினுல் பரிசுத்தமாக்கப்பட்ட மஹாத்மாக்களுக்கு அவர்களுடைய பூருவகால தருமங்களால் யாது பயன்? அவை அறிவற்றவர்களுக்கே பொருந்தும். சிவதீக்ஷை பெற்று சிவதருமங்களை அனுஷ்டிப்பவர்களுக்கு மூடர்களுடைய தருமங்களில் மனம் நாடாது.

विशुद्धाः प्राकृताश्चेति द्विविधा मानुषाः स्मृताः ।
शिवसंस्कारिणः शुद्धा प्राकृता इतरे मताः ॥ ३४॥

மனிதர்கள் சுத்தர்கள், பாமரர்கள் என இருவகைப்படுவர்; சிவதீக்ஷை பெற்றவர்கள் சுத்தர்கள், ஏனையோர் பாமரர்கள்.

மனிதர் சுத்தரு மசுத்தரு மெனவிரு வகையர்
புனிதர் மெய்ச்சிவ தீக்கையைப் பொருந்தின ரொழிந்தோ
ரினிதெ னுஞ்சிவ தீக்கையை யிலாதவ ரென்ப
வனிதை பங்குடை யமலனூற் பெருநெறி வல்லோர்.

மனிதர்கள் சுத்தர்கள், அசுத்தர்கள் என இருவகைப்படுவர்; சிவதீக்ஷை பெற்றவர்கள் சுத்தர்கள், சிவதீக்ஷை பெருதவர்கள் மற்றவர்கள்.

वर्णाश्रमादिधर्माणां व्यवस्था हि द्विधा मता ।
एका शिवेन निर्दिष्टा ब्रह्मणा कथिताऽपरा ॥ ३५॥
शिवोक्तधर्मनिष्ठा तु शिवाश्रमनिषेविणाम् ।
शिवसंस्कारहीनानां धर्मः पैतामहः स्मृतः ॥ ३६॥

வருணுசிரம தருமங்கள் இருவகை: முதலாவது சிவபெருமானுல் தோற்றுவிக்கப்பட்டது, மற்ருென்று பிரம்மாவினுல் உண்டாக்கப்பட்டது. சிவாசிரமத்தைச் சேர்ந்தவர்கள் அனுஷ்டிப்பது சிவதருமங்கள்; சிவதோக்ஷையற்றவர்கள் அனுஷ்டிப்பது பிரம்மா தோற்றுவித்தது.

வருண நன்னிலைத் தருமங்க ளிருவகைப் படுமொன்
றரன றைந்தது மற்றைய தயனறைந் ததுவாம்
பரன றைந்தது பயிலுவர் சிவாச்சிர யத்தர்
பிரம னல்கிய தருமமே பிராகிரு தர்க்கு.

வருணுசிரம தருமங்கள் இருவகை: முதலாவது சிவபெருமானுல் தோற்றுவிக்கப்பட்டது, மற்ருென்று பிரம்மாவினுல் உண்டாக்கப்பட்டது. சிவாசிரமத்தைச் சேர்ந்தவர்கள் அனுஷ்டிப்பது சிவதருமங்கள்; சிவதோக்ஷையற்றவர்கள் அனுஷ்டிப்பது பிரம்மா தோற்றுவித்தது.

முந்தை யுற்றுள விந்தநத் துருவங்கண் மூண்ட
வெந்த ழற்கவர்ந் துண்ணுற விரவுறா வாபோ
னந்து றச்சிவ தீக்கையை நண்ணினோர் தமக்குட்
பந்த முற்றுள சாதிவேற் றுமையிலை பகரின்.

பாச மற்றுயர் தீக்கையிற் சிறந்துள பத்த
ரீச னைப்பெறு பத்தர்பா லோரிடத் தெனினும்
பேசி லுற்றிடு சாதியுன் னுதன்மிகப் பிழையென்
றூச லொத்துழல் பிறப்பிறப் பகன்றவ ருரைப்பார்.

பல வகையான விறகுகள் தீயிலிட்ட பின்னர் தத்தம் உருவங்கள் நீங்கி வெண்ணீருக ஆவது போல் சிவதீக்ஷை

பெற்றவர்கள் தத்தம் பூருவ குலாசாரங்கள் அனைத்தும் நீங்கப் பெற்று சாதி வேற்றுமைகள் அகன்று நிற்பர். அவர்களின் முந்தைய குலங்களைப் பற்றியோ ஆசாரங்களைப் பற்றியோ பேசுதல் கூடாது.

पूज्यपूजकयोर्लिङ्गजीवयोर्भेदवर्जने ।
पूजाकर्माद्यसम्पत्तेर्लिङ्गनिष्ठाविरोधतः ॥ ३७॥
सर्वाद्वैतविचारस्य ज्ञानाभावो व्यवस्थितेः ।
भवेन्माहेश्वरः कर्मी सर्वाद्वैतनिरासकः ॥ ३८॥

பூஜை செய்வோனுன ஜீவன் பூஜை செய்யப்படும் லிங்கம் ஆகியவற்றுக்குள்ள பேதம் நீங்கப் பெறின் பூஜை எனும் செயல் நிகழாததாலும், அந்த பேதநீக்கம் லிங்க நிட்டைக்கு விரோதமாதலாலும், அத்துவைத பாவனையால் ஞானம் நிகழாததாலும் மாஹேசுவரன் பூஜை முதலான செயல்களில் அத்துவைத பாவனையை நீக்குவான்.

பூசனை செய்வோன் கொள்வோன் பேதமென் றுறலாற் போற்றும்
பூசனை யாதி கன்மம் பொன்றலா லிலிங்க நிட்டை
நாசம துறலா லெங்கும் பெறஞான மிலாமை தன்னா
லீசனை வந்திக் கின்றோ னெங்குமத் துவிதஞ் செய்யான்.

பூஜை செய்வோனுன ஜீவன் பூஜை செய்யப்படும் லிங்கம் ஆகியவற்றுக்குள்ள பேதம் நீங்கப் பெறின் பூஜை எனும் செயல் நிகழாததாலும், அந்த பேதநீக்கம் லிங்க நிட்டைக்கு விரோதமாதலாலும், அத்துவைத பாவனையால் ஞானம் நிகழாததாலும் மாஹேசுவரன் பூஜை முதலான செயல்களில் அத்துவைத பாவனையை நீக்குவான்.

प्रेरकं शङ्करं बुद्ध्वा प्रेर्यमात्मानमेव च ।
भेदात् तं पूजयेन्नित्यं न चाद्वैतपरो भवेत्॥३९॥

சிவபெருமானே தன்னை இயக்குபவன், தான் சிவபெருமானுல் இயக்கப்படுபவன் என்னும் பேதபாவனையுடனேயே பூஜையைச்

செய்யவேண்டும்; ஒருபோதும் அத்துவைத பாவனை
கொள்ளக்கூடாது.

இறையவ னியக்கு கின்றோ னியங்குறப் பட்டு நிற்போ
னறைதரு முயிரென் றெண்ணி யாயவிவ் வேறு பாடு
பெறுமுறை யதனா லந்தப் பிரேரகன் றனையர்ச் சித்த
னெறியோடு புரிக செய்யே னிகழ்த்துமத் துவிதந் தன்னை.

சிவபெருமானே தன்னை இயக்குபவன், தான் சிவபெருமானால்
இயக்கப்படுபவன் என்னும் பேதபாவனையுடனேயே பூஜையைச்
செய்யவேண்டும்; ஒருபோதும் அத்துவைத பாவனை
கொள்ளக்கூடாது.

पतिः साक्षान्महादेवः पशुरेष तदाश्रयः ।
अनयोः स्वामिभृत्यत्वमभेदे कथमिष्यते ॥ ४०॥

உலகிற்குப் பதியானவர் ஸாக்ஷாத் சிவபெருமானே;
பசுக்களாகிய அனைவரும் அவரை அண்டியிருப்பவர்கள்.
இத்தகைய தலவன்-தொண்டன் எனும் நிலை
அத்துவைதநிலையில் எவ்வாறு பொருந்தும்?

பராபரன் பதியா மந்தப் பதிதொடர் பசுவா மான்மா
விராவிவர் தம்மி லென்றும் வேறுபா டிலரே யாயிற்
றராதல மதனி லீசத் தன்மையோ டடிமைத் தன்மை
வராவென வுரைப்பர் மிக்க மறைகளா கமங்கள் வல்லோர்.

உலகிற்குப் பதியானவர் ஸாக்ஷாத் சிவபெருமானே;
பசுக்களாகிய அனைவரும் அவரை அண்டியிருப்பவர்கள்.
இத்தகைய தலவன்-அடிமை எனும் நிலை வேறுபாடற்ற
அத்துவைதநிலையில் எவ்வாறு பொருந்தும்?

साक्षात्कृतं परं तत्त्वं यदा भवति बोधतः ।
तदाद्वैतसमापत्तिर्ज्ञानहीनस्य न क्वचित् ॥ ४१॥

பரதத்துவத்தை நேரிடையாக உணரும் போது அந்த ஞானிக்கு
அத்துவித அனுபவம் கிட்டும்; மற்றவர்களுக்கு அவ்வாறு
கிட்டாது.

எம்முறை பராப ரன்றா னிலங்குறு போத கத்தான்
மெய்ம்மலி காட்சி யுற்று விளக்கமோ டெய்தி நிற்கு
மம்முறை பெறவ டைந்த வத்துவி தப்பேர் வாழ்க்கை
யிம்மையின் ஞான மில்லோர்க் கென்றுமின் றாகு மன்றே.

பரதத்துவத்தை நேரிடையாக உணரும் போது அந்த ஞானிக்கு அத்துவித அனுபவம் கிட்டும்; மற்றவர்களுக்கு அவ்வாறு கிட்டாது.

भेदस्य कर्महेतुत्वाद् व्यवहारः प्रवर्तते ।
लिङ्गपूजादिकर्मस्थो न चाद्वैतं समाचरेत् ॥ ४२॥
पूजादिव्यवहारः स्याद्भेदाश्रयतया सदा ।
लिङ्गपूजापरस्तस्मान्नाद्वैते निरतो भवेत् ॥ ४३॥

சிவபெருமானுக்கும் பசுக்களுக்களுக்குமுள்ள வேறுபாடே பூஜை முதலான கருமங்களுக்கு அடிப்படைக் காரணம்; எனவே லிங்கபூஜை முதலியன செய்வோன் அத்துவித பாவனையை ஒருபோதும் கைக்கொள்ளக் கூடாது.

கருமவே துவினைக் கொண்டு காண்குறும் வேறு பாடு
மருவுறு மதனாலென்றும் வளங்கெழு மருச்ச நாதி
புரிதரு நெறியி னின்றோன் பொருந்துநற் கரும மெல்லா
மொருவவந் தெய்து மத்து விதத்தினை யுற்றி டானால்.

சிவபெருமானுக்கும் பசுக்களுக்களுக்குமுள்ள வேறுபாடே பூஜை முதலான கருமங்களுக்கு அடிப்படைக் காரணம்; எனவே லிங்கபூஜை முதலியன செய்வோன் அத்துவித பாவனையை ஒருபோதும் கைக்கொள்ளக் கூடாது.

அத்துவிதநிரசநத்தலம் முற்றும்

लिङ्गार्चनपरः शुद्धः सर्वाद्वैतनिरासकः ।
स्वेष्टलिङ्गे शिवाकारे न तमावाहयेच्छिवम् ॥ ४४॥

அத்துவித பாவனையை அறவே நீக்கி லிங்கபூஜையை இயற்றுபவன் சிவவடிவமுடைய தனது இஷ்டலிங்கத்தில் சிவபெருமானை ஆவாஹநம் செய்ய வேண்டியதில்லை.

அச்சிவ லிங்கம் வந்தித் தத்துவி தத்தை நீத்தோன்
மெய்ச்சிவ மயமாய் நின்று விளங்குதன் னிட்ட லிங்கத்
திச்சையி னரனை யாவா கநித்திட லியல்பன் றென்பர்
பொய்ச்செயல் கடந்து மிக்க புலக்குறும் பெறிந்த வீரர்.

அத்துவித பாவனையை அறவே நீக்கி லிங்கபூஜையை இயற்றுபவன் சிவவடிவமுடைய தனது இஷ்டலிங்கத்தில் சிவபெருமானை ஆவாஹநம் செய்ய வேண்டியதில்லை.

यदा शिवकलायुक्तं लिङ्गं दद्यान्महागुरुः ।
तदारभ्य शिवस्तत्र तिष्ठत्याह्वानमत्र किम् ॥ ४५॥

சிவகலைகளைக் கொண்ட லிங்கத்தை குருவானர் சீடனுக்குக் கொடுக்கையிலேயே சிவபெருமான் அந்த லிங்கத்தில் எழுந்தருளுகிறார்; எனவே ஆவாஹநம் செய்தல் இங்கு யாது பயன்?

சிற்கலை யொடுதி கழ்ந்த சிவலிங்கந் தீக்கை தன்னா
னற்குரு வளித்த வன்றே நண்ணுறு மமல னென்றும்
பொற்புறு முணர்வின் மாறாய்ப் பொருந்துமா வாகநந் தான்
பிற்பெறு தினங்க டோறும் பேணுத லாலென் பேறே.

சிவகலைகளைக் கொண்ட லிங்கத்தை குருவானர் சீடனுக்குக் கொடுக்கையிலேயே சிவபெருமான் அந்த லிங்கத்தில் எழுந்தருளுகிறார்; எனவே ஆவாஹநம் செய்தல் இங்கு யாது பயன்?

ससंस्कारेषु लिङ्गेषु सदा सन्निहितः शिवः ।
तत्राह्वानं न कर्तव्यं प्रतिपत्तिविरोधकम् ॥ ४६॥
नाह्वानं न विसर्गं च स्वेष्टलिङ्गे तु कारयेत् ।
लिङ्गनिष्ठापरो नित्यमिति शास्त्रस्य निश्चयः ॥ ४७॥

ஸம்ஸ்காரங்கள் செய்யப்பட்ட லிங்கத்தில் எப்போதும் சிவபெருமான் விளங்குகிறுர்; அதில் ஆவாஹநம் முதலியன செய்தல் கூடாது. ஏனெனில் அது உண்மைக்குப் புறம்பானது. எனவே லிங்கபூஜையில் நாட்டமுடையோன் ஆவாஹநம், விஸர்ஜநம் ஆகியவற்றை ஒருபோதும் செய்யக் கூடாது.

என்றுநல் லிட்ட லிங்கத் திசைந்துநன் னிட்டை பெற்றோன்
றன்றனி யிலிங்கந் தன்னிற் சங்கரன் றன்னை வைத்துப்
பின்றனி விடுக்க லாகா துணிவிது பெருநூற் கென்று
தென்றமிழ் மலயத் துற்ற சிவமுனி யறிந்து கொள்ளே.

ஸம்ஸ்காரங்கள் செய்யப்பட்ட லிங்கத்தில் எப்போதும் சிவபெருமான் விளங்குவதால் அதில் ஆவாஹநம் முதலியன செய்தல் கூடாது. எனவே லிங்கபூஜையில் நாட்டமுடையோன் ஆவாஹநம், விஸர்ஜநம் ஆகியவற்றை ஒருபோதும் செய்யக் கூடாது. இதுவே சாத்திரங்களின் துணிபு.

यथात्मशिवयोरैक्यं न मतं कर्मसङ्गिनः ।
तथा शिवात् पृथिव्यादेरद्वैतमपि नेष्यते ॥ ४८॥
पृथिव्याद्यष्टमूर्तित्वमीश्वरस्य प्रकीर्तितम् ।
तदधिष्ठातृ भावेन न साक्षादेकभावतः ॥ ४९॥

எவ்வாறு ஆன்மாவுக்கும் சிவபெருமானுக்கும் ஐக்கியம் ஒவ்வாதோ அவ்வாறே பிருதிவீ முதலானவற்றிற்கும் சிவபெருமானுக்கும் அத்துவிதம் கிடையாது; சிவபெருமான் பிருதிவீ முதலிய அஷ்டமூர்த்தி உருவம் கொண்டதாகக் கூறுதல் அந்தந்த தத்துவங்களின் அதிபதியாகக் கூறுதலேயன்றி அவற்றுடன் வேற்றுமையற்று இருத்தல் அன்று.

அத்தனோ டுயிர்க்கிங் கெவ்வா றயிக்கவத் துவித மாகா
தத்திற மிறைவ னுக்கு மம்புவி யாதி கட்கு
முய்த்துண ரட்ட மூர்த்தித் தன்மையவ் வொருவற் கென்றும்
வைத்தது மதிட்டா நத்தால் வயங்கொரு மையினா லன்றால்.

எவ்வாறு ஆன்மாவுக்கும் சிவபெருமானுக்கும் ஐக்கியம் ஒவ்வாதோ அவ்வாறே பிருதிவீ முதலானவற்றிற்கும்

சிவபெருமானுக்கும் அத்துவிதம் கிடையாது; சிவபெருமான் பிருதிவீ முதலிய அஷ்டமூர்த்தி உருவம் கொண்டதாகக் கூறுதல் அந்தந்த தத்துவங்களின் அதிபதியாகக் கூறுதலேயன்றி அவற்றுடன் வேற்றுமையற்று இருத்தல் அன்று.

पृथ्व्यादिकमिदं सर्वं कार्यं कर्ता महेश्वरः ।
नैतत्साक्षान्महेशोऽयं कुलालो मृत्तिका यथा ॥ ५०॥
पृथिव्याद्यात्मपर्यन्तप्रपञ्चो ह्यष्टधा स्थितः ।
तनुरीशस्य चात्मायं सर्वतत्त्वनियामकः ॥ ५१॥

பிருதிவீ முதலான இவையனைத்தும் காரியங்களே; கர்த்தா மஹேசுவரன் ஒருவனே. எவ்வகையில் குயவன் களிமண் அல்லனோ அவ்வாறே, பிருதிவீ முதலியவை ஸாக்ஷாத் மஹேசுவரன் அல்ல. சிவபெருமானின் திருமேனி பிருதிவீ முதலான எண்வகை வடிவங்களேயன்றி அவற்றின் ஆன்மா அனைத்துத் தத்துவங்களுக்குமதிபதியான மஹேசுவரனே.

காரிய ஞால மாதி கருத்தனொண் மகேச னாகுஞ்
சீரிய குலால னாகா செய்கட மதுபோ லீசன்
பாரிய வுலக மாகான் பராபர னான்மா வென்ப
ரேரிய நிலமுன் பாய வெண்வகை யுடம்பி னுக்கும்.

பிருதிவீ முதலான இவையனைத்தும் காரியங்களே; கர்த்தா மஹேசுவரன் ஒருவனே. எவ்வகையில் குயவன் குடமல்லவோ அவ்வாறே, பிருதிவீ முதலியவை ஸாக்ஷாத் மஹேசுவரன் அல்ல. சிவபெருமானின் திருமேனி பிருதிவீ முதலான எண்வகை வடிவங்களேயன்றி அவற்றின் ஆன்மா அனைத்துத் தத்துவங்களுக்குமதிபதியான மஹேசுவரனே.

शरीरभूतादेतस्मात् प्रपञ्चात् परमेष्ठिनः ।
आत्मभूतस्य देवस्य नाभेदो न पृथक् स्थितिः ॥ ५२॥
अचेतनत्वात् पृथ्व्यादेरज्ञत्वादात्मनस्तथा ।
सर्वज्ञस्य महेशस्य नैकरूपत्वमिष्यते ॥ ५३॥

பரமசிவனின் திருமேனியாகத் திகழும் இந்தப் பிரபஞ்சத்திற்கும், அதன் ஆன்மாவான மஹேசுவரனுக்கும்

எவ்வித ஐக்கியமோ அல்லது தனித்த நிலேயோ இல்லே;
பிருதிவீ முதலானவை உயிரற்ற அறிவற்ற ஜடமாதலால்
அவற்றின் ஆன்மாவான முற்றுமுணர்ந்த மஹேசுவரனுடன்
யாதொரு ஒற்றுமையுமில்லே.

நிலமுத லாய வெல்லா மசேதந நின்ற வான்மா
மலமுறு மூட னாகு மாதலால் வயங்கு மீச
னலவகை யட்ட மூர்த்த மாகிய வுடம்பி னுக்கு
மிலகுறு மான்மா வாகு மீசற்கும் பேத முண்டோ.

பிருதிவீ முதலானவை உயிரற்ற அறிவற்ற ஜடமாதலால்
அவற்றுக்கும் அவற்றின் ஆன்மாவான முற்றுமுணர்ந்த
மஹேசுவரனுடன் யாதொரு ஒற்றுமையுமில்லே.

इति यश्चिन्तयेन्नित्यं पृथ्व्यादेरष्टमूर्तितः ।
विलक्षणं महादेवं सोऽष्टमूर्तिनिरासकः ॥ ५४॥

இவ்வாறு பிருதிவீ முதலான எண்வகை வடிவங்களுக்கும்
அவற்றினின்றும் வேறுபட்டு விளங்கும் மஹாதேவனுக்கும்
இடையேயான வேற்றுமையை எப்போதும் சிந்திப்பவன்
அஷ்டமூர்த்தி நிராஸகனெனப்படுகின்ருன்.

பார்புன லங்கி வங்கூழ் விசும்பொடு பரிதி திங்க
ளார்தரு மான்மா வென்னு மட்டமூர்த் தங்க டம்மிற்
சீர்கெழு பரமன் றன்னை வேறுறத் தெரிந்து காண்போ
னேர்தரு மட்ட மூர்த்தி நிராசக னாகு மன்றே.

இவ்வாறு பிருதிவீ முதலான எண்வகை வடிவங்களுக்கும்
அவற்றினின்றும் வேறுபட்டு விளங்கும் மஹாதேவனுக்கும்
இடையேயான வேற்றுமையை எப்போதும் சிந்திப்பவன்
அஷ்டமூர்த்தி நிராஸகனெனப்படுகின்ருன்.

அட்டமூர்த்திநிரசநத்தலம் முற்றும்

सर्वगत्वे महेशस्य सर्वत्राराधनं भवेत् ।
न लिङ्गमात्रे तन्निष्ठो न शिवं सर्वगं स्मरेत् ॥ ५५॥

சிவபெருமான் எங்கும் நிறைந்தவனெனில் அவனுக்கு லிங்கத்தில் மட்டுமின்றி எல்லாவிடத்தும் பூஜை நடைபெற வேண்டும்; எனவே லிங்கத்தில் உறுதியான பக்தியுடையோன் சிவபெருமானை எங்கும் நிறைந்தவனாக நினைத்தல் கூடாது.

இருந்திடு மிறைவ னெங்கு மென்றிடி னிறைவற் கெங்கும்
வரந்தரு பூசை யாகுஞ் சிவலிங்க மாத்தி ரத்தி
லரந்தையி னிட்டை கூடா தாதலா லமல னெங்கும்
பரந்தவ னென்று கூறப் படானென வறிந்து கொள்ளே.

சிவபெருமான் எங்கும் நிறைந்தவனெனில் அவனுக்கு லிங்கத்தில் மட்டுமின்றி எல்லாவிடத்தும் பூஜை நடைபெற வேண்டும்; எனவே லிங்கத்தில் உறுதியான பக்தியுடையோன் சிவபெருமானை எங்கும் நிறைந்தவனாக நினைத்தல் கூடாது.

सर्वगोऽपि स्थितः शम्भुः स्वाधारे हि विशेषतः ।
तस्मादन्यत्र विमुखः स्वेष्टलिङ्गे यजेच्छिवम् ॥ ५६॥
शिवः सर्वगतश्चापि स्वाधारे व्यज्यते भृशम् ।
शमीगर्भे यथा वह्निर्विशेषेण विभाव्यते ॥ ५७॥

எங்கும் நிறைந்தவனாயினும் சிவபெருமான் இஷ்டலிங்கத்தில் சிறப்பாக விளங்குகிறான்; எனவே ஏனைய இடங்களினின்றும் மனதை நீக்கி தனது இஷ்டலிங்கத்திலேயே சிவபெருமானை வழிபடல் வேண்டும். சமீ மரக்கட்டையில் சிறப்பாக நெருப்பு விளங்குவது போல் எங்கும் நிறைந்த சிவபெருமான் தனது ஆதாரமான லிங்கத்தில் சிறப்பாக விளங்குகிறார்.

நிறைந்தவ னெங்குமேனு நிமலன்ற னாத ரத்திற்
சிறந்துறு நிறைந்த வன்னி தன்மரஞ் செறித லேபோ
லறிந்திதை யமலன் றன்னை யனைத்தையும் விடுத்துத் தன்பா
லுறைந்திடு மிட்ட லிங்கத் துவந்தருச் சிக்க மாதோ.

எங்கும் நிறைந்தவனாயினும் சிவபெருமான் இஷ்டலிங்கத்தில் சிறப்பாக விளங்குகிறான்; எனவே ஏனைய இடங்களினின்றும் மனதை நீக்கி தனது இஷ்டலிங்கத்திலேயே சிவபெருமானை

வழிபடல் வேண்டும். சமீ மரக்கட்டையில் சிறப்பாக நெருப்பு விளங்குவது போல் எங்கும் நிறைந்த சிவபெருமான் தனது ஆதாரமான லிங்கத்தில் சிறப்பாக விளங்குகிறார்.

सर्वगत्वं महेशस्य सर्वशास्त्रविनिश्चितम् ।
तथाप्याश्रयलिङ्गेन पूजार्थमधिका स्थितिः ॥ ५८॥

சிவபெருமான் எங்கும் நிறைந்தவன் என்பது எல்லா சாத்திரங்களிலும் கூறப்படுகிறது; எனினும் பூஜையின் பொருட்டு லிங்கத்தில் அதிகமாக நிறைந்து விளங்குகிறார்.

எங்கணு நிறைவோ னாக வியம்பினு மமலன் றன்னைத்
தங்குறு நூல்க ளெல்லாந் தனதுபற் றாகி நின்ற
மங்கல மாமி லிங்க மாதிய வடிவி லென்று
மங்கண னதிக மாக வமர்வன்பூ சனைப்பொ ருட்டு.

சிவபெருமான் எங்கும் நிறைந்தவன் என்பது எல்லா சாத்திரங்களிலும் கூறப்படுகிறது; எனினும் பூஜையின் பொருட்டு லிங்கத்தில் அதிகமாக நிறைந்து விளங்குகிறார்.

नित्यं भासि तदीयस्त्वं या ते रुद्र शिवा तनूः
अघोराऽपापकाशीति श्रुतिराह सनातनी ॥ ५९॥

ஓ ருத்திரனே! உனது மங்கலமான திருமேனியில் நீ எப்போதும் பிரகாசிக்கிறாய் என்று அநாதிகாலமாக வேதங்கள் புகழ்கின்றன.

உருத்திர நினது மெய்யே துற்றநன் மங்க லத்தைப்
பரித்திடு மகோர மாகிப் பாவத்தி னகன்று நிற்கு
முரைத்ததி லுறைவோ னாகி யொளிர்வைநீ யென்று மிக்க
கருத்தொடு மறையா நிற்குங் கடிவருஞ் சுருதி யன்றே.

ஓ ருத்திரனே! உனது மங்கலமான திருமேனியில் நீ எப்போதும் பிரகாசிக்கிறாய் என்று அநாதியான வேதங்கள் புகழ்கின்றன.

तस्मात् सर्वप्रयत्नेन सर्वस्थानपराङ्मुखः ।
स्वेष्टलिङ्गे महादेवं पूजयेत् पूजकोत्तमः ॥ ६०॥
शिवस्य सर्वगत्वेऽपि सर्वत्र रतिवर्जितः ।
स्वेष्टलिङ्गे यजन् देवं सर्वगत्वनिरासकः ॥ ६१॥

எனவே வேறென்றையும் நோக்காமல் முழுமுயற்சியுடன் தனது இஷ்டலிங்கத்தில் பரமேசுவரனை வழிபடவேண்டும்; சிவபெருமான் எங்குமிருப்பினும் தனது இஷ்டலிங்கத்திலேயே அவனை வழிபடுதலே சிறந்தது.

ஆதலா லருச்ச னைக்க ணுயர்ந்தவ னனைத்தும் விட்டுக்
காதலாற் சிறந்து மூல காரணன் விளங்கா நின்ற
சோதியா மிட்ட லிங்கந் துணிவொடு பூசை செய்க
நீதியா மனைய னெங்கு நிறைதலை விலக்கினானே.

எனவே வேறென்றையும் நோக்காமல் முழுமுயற்சியுடன் தனது இஷ்டலிங்கத்தில் பரமேசுவரனை வழிபடவேண்டும்; சிவபெருமான் எங்குமிருப்பினும் தனது இஷ்டலிங்கத்திலேயே அவனை வழிபடுதலே சிறந்தது.

சர்வகதநிரசநத்தலம் முற்றும்.

पूजाविधौ नियम्यत्वाल्लिङ्गमात्रे स्थितं शिवम् ।
पूजयन्नपि देवस्य सर्वगत्वं विभावयेत् ॥ ६२॥

பூஜைவிதிகளுக்குட்பட்டு லிங்கத்தில் மட்டுமே சிவபெருமான் விளங்குவதாக எண்ணி பூஜை செய்தாலும் சிவபெருமான் எங்கும் நிறைந்தவன் என மனதில் பாவிக்கவேண்டும்.

பூசனை நியமந் தன்னாற் பொருந்திலிங் கத்தின் கண்ணே
தேசுற விலங்கா நின்ற சிவன்றனை யருச்சிப் போனு
மீசனை யுலக மெல்லாம் வியாபக னென்னக் கொண்டு
பாசமதகல நின்று பாவிக்க வேண்டு மன்றே.

பூஜைவிதிகளுக்குட்பட்டு லிங்கத்தில் மட்டுமே சிவபெருமான் விளங்குவதாக எண்ணி பூஜை செய்தாலும் சிவபெருமான் எங்கும் நிறைந்தவன் என மனதில் பாவிக்கவேண்டும்.

यस्मादेतत् समुत्पन्नं महादेवाच्चराचरम् ।
तस्मादेतन्न भिद्येत यथा कुम्भादिकं मृदः ॥ ६३॥
शिवतत्त्वात् समुत्पन्नं जगदस्मान्न भिद्यते ।
फेनोर्मिबुद्बुदाकारं यथा सिन्धोर्न भिद्यते ॥ ६४॥

கும்பம் முதலானவை எவ்வாறு மண்ணிலிருந்து வேறுபட்டன அல்லவோ, சிற்றலைகளும், நுரை போன்றவையும் கடலிலிருந்து எவ்வாறு வேறுபட்டவை அல்லவோ அவ்வாறே இவ்வுலகங்களெல்லாம் மஹாதேவனை சிவபெருமானிடமிருந்து தோன்றியதால் அவனிடமிருந்து வேறுபட்டனவன்று.

மண்ணினிற் றோன்றுங் கும்ப மண்ணின்வே றாமோ
வேலைக்
கண்ணினிற் றோன்று மொக்கு ணுரைதிரை கடலின் வேறோ
வெண்ணிடிற் பரனாற் றோன்று மிருஞ்சரா சரமே யாகப்
பண்ணுறுத் துலகமெல்லாம் பரனில்வே றாமோ வாகா.

கும்பம் முதலானவை எவ்வாறு மண்ணிலிருந்து வேறுபட்டன அல்லவோ, சிற்றலைகளும், நுரை போன்றவையும் கடலிலிருந்து எவ்வாறு வேறுபட்டதல்லவோ அவ்வாறே இவ்வுலகங்களெல்லாம் மஹாதேவனுன சிவபெருமானிடமிருந்து தோன்றியதால் அவனிடமிருந்து வேறுபட்டனவன்று.

यथा तन्तुभिरुत्पन्नः पटस्तन्तुमयः स्मृतः ।
तथा शिवात् समुत्पन्नं शिव एव चराचरम् ॥ ६५॥

நூலிலிருந்து தோன்றிய துணி அதிலிருந்து எவ்வாறு வேறுபட்டதல்லவோ அதைப் போன்றே சிவபெருமானிடத்திலிருந்து தோன்றிய உலகம் அவனின் வேறுபட்டதன்று.

ஒண்டளிர் முதலா யுள்ள வுருவொடு மரநின் றாங்கு
மண்டல முதலா யுள்ள வடிவொடு பரம னிற்குங்
கண்டுறு மிழையி னாய காழக நூலா மாபோற்
பண்டுள வுலக மெல்லாம் பரன்மய மாகு மன்றே.

நூலிலிருந்து தோன்றிய துணி அதிலிருந்து எவ்வாறு வேறுபட்டதன்ருே அதைப் போன்றே சிவபெருமானிடத்திலிருந்து தோன்றிய உலகம் அவனின் வேறுபட்டதன்று.

आत्मशक्तिविकासेन शिवो विश्वात्मना स्थितः ।
कुटीभावाद् यथा भाति पटः स्वस्य प्रसारणात् ॥ ६६॥
तस्माच्छिवमयं सर्वं जगदेतच्चराचरम् ।
तदभिन्नतया भाति सर्पत्वमिव रज्जुतः ॥ ६७॥

சுருட்டிவைக்கப்பட்ட பாய் விரிக்கப்பட்டது போல் சிவபெருமான் தனது சிற்சக்தியினுல் பரந்த உலகங்களாகக் காட்சியளிக்கிருர்; கயிற்றில் தோன்றும் பாம்பு அதனின் வேருனதன்று; அவ்வாறே, இவ்வுலகங்கள் யாவும் சிவமயமே.

தன்னொரு சத்தி கொண்ட மலர்ச்சியாற் சகங்க ளாகி
மன்னுறு மிறைவி ரிந்து படங்குடி வடிவா மாபோ

லிந்நிலை யதனா லெல்லா மிறைமயங் கயிற்றிற் றோன்றும்
பந்நகம் வேறி லாத பான்மைபோற் பரனி லொன்றும்.

சுருட்டிவைக்கப்பட்ட பாய் விரிக்கப்பட்டது போல் சிவபெருமான் தனது சிற்சக்தியினால் பரந்த உலகங்களாகக் காட்சியளிக்கிறார்; கயிற்றில் தோன்றும் பாம்பு அதனின் வேறானதன்று; அவ்வாறே, இவ்வுலகங்கள் யாவும் சிவமயமே.

रज्जौ सर्पत्ववद् भाति शुक्तौ च रजतत्ववत् ।
चोरत्ववदपि स्थाणौ मरीच्यां च जलत्ववत् ॥ ६८॥
गन्धर्वपुरवद्व्योम्नि सच्चिदानन्दलक्षणे ।
निरस्तभेदसद्भावे शिवे विश्वं विराजते ॥ ६९॥
पत्रशाखादिरूपेण यथा तिष्ठति पादपः ।
तथा भूम्यादिरूपेण शिव एको विराजते ॥ ७०॥

கயிற்றில் பாம்பும், இப்பியில் வெள்ளியும், மரக்கம்பத்தில் மனிதனும், கானல் நீரில் நீரும், ஆகாயத்தில் கந்தருவ நகரமும் தோன்றுவது போல் ஸச்சிதானந்த மயமான சிவபெருமானிடத்து இவ்வுலகம் தோன்றி பிரகாசிக்கிறது; மரமானது கிளை, இலகள் எனப் பல்வகையாக விளங்குவது போல் இவ்வுலக வடிவாகச் சிவபெருமான் விளங்குகிறார்.

கயிற்றர விப்பி வெள்ளி குற்றியிற் கள்வன் மிக்க
வெயிற்படு கானற் றெண்ணீர் விண்ணிற்கந் தர்வ வூர்போற்
பயிர்ப்பறு நித்த சச்சி தாநந்த சிவத்தின் கண்ணே
செயப்படு பொருளாய்த் தோன்றுஞ் செப்பிய வுலக மன்றே.

கயிற்றில் பாம்பும், இப்பியில் வெள்ளியும், மரக்கம்பத்தில் மனிதனும், கானல் நீரில் நீரும், ஆகாயத்தில் கந்தருவ நகரமும் தோன்றுவது போல் ஸச்சிதானந்த மயமான சிவபெருமானிடத்து இவ்வுலகம் தோன்றி பிரகாசிக்கிறது; மரமானது கிளை, இலகள் எனப் பல்வகையாக விளங்குவது போல் இவ்வுலக வடிவாகச் சிவபெருமான் விளங்குகிறார்.

समस्तजगदात्माऽपि शङ्करः परमेश्वरः ।
भक्तानां हृदयाम्भोजे विशेषेण विराजते ॥ ७१॥
कैलासे मन्दरे चैव हिमाद्रौ कनकाचले ।
हृदयेषु च भक्तानां विशेषेण व्यवस्थितः ॥ ७२॥

அனைத்துலகங்களுக்கும் ஆன்மாவாகத் திகழும் பரமேசுவரன் கைலாஸம், மந்தரமலை, இமயமலை, மேருமலை ஆகியவற்றிலும், குறிப்பாக பக்தர்களின் இதயகமலத்திலும் எப்போதும் விளங்குகிறார்.

சங்கர னாகு மீசன் சகமய மெனினு முள்ளப்
பங்கய மலரி லென்றும் பத்தர்பாற் சிறந்து தோன்றும்
பொங்குறு கயிலை பொன்னம் பொருப்பொடு மந்த ரத்து
மங்கது போல்வி சேடித் தமர்தரு மிறைவ னன்றே.

அனைத்துலகங்களுக்கும் ஆன்மாவாகத் திகழும் பரமேசுவரன் கைலாஸம், மந்தரமலை, இமயமலை, மேருமலை ஆகியவற்றிலும், குறிப்பாக பக்தர்களின் இதயகமலத்திலும் எப்போதும் விளங்குகிறார்.

सर्वात्मापि परिच्छिन्नो यथा देहेषु वर्तते ।
तथा स्वकीयभक्तेषु शङ्करो भासते सदा ॥ ७३॥
नित्यं भाति त्वदीयेषु या ते रुद्र शिवा तनूः ।
अघोराऽपापकाशीति श्रुतिराह सनातनी ॥ ७४॥

எங்கும் நிறைந்த ஆன்மா அளவு குன்றி உடலில் விளங்குவது போல் சிவபெருமான் தனது பக்தர்களிடத்தில் விளங்குகிறார்; ஓ ருத்திரனே! உனது மங்களமயமான சரீரம் மிக அழகானது, குற்றங்கள் அற்றது என்று வேதங்கள் உரைக்கின்றன.

அலர்கதிர் நிறைந்து விம்பத் தளவுபட் டமர்தல் போல
வுலகுரு வாய்நி றைந்த வொருவனும் பத்தர் நெஞ்ச
மலர்மிசை யிலகு முன்றன் வடிவெனு மிலிங்க மீச
பலர்புகழ் பத்தர் தம்பாற் பதியுமென் றுரைக்கும் வேதம்.

எங்கும் நிறைந்த ஆன்மா அளவு குன்றி உடலில் விளங்குவது போல் சிவபெருமான் தனது பக்தர்களிடத்தில் விளங்குகிறுர்; ஓ ருத்திரனே! உனது மங்களமயமான சரீரம் மிக அழகானது, குற்றங்கள் அற்றது என்று வேதங்கள் உரைக்கின்றன.

विशुद्धेषु विरक्तेषु विवेकिषु महात्मसु ।
शिवस्तिष्ठति सर्वात्मा शिवलाञ्छनधारिषु ॥ ७५॥
नित्यं सन्तोषयुक्तानां ज्ञाननिर्धूतकर्मणाम् ।
माहेश्वराणामन्तःस्थो विभाति परमेश्वरः ॥ ७६॥

புனிதமானவர்களிடத்தும், வைராக்கியமுடையோரிடத்தும், பகுத்தறிவுடைய விவேகஞானிகளிடத்தும், மஹான்களிடத்தும், சிவசின்னங்களைத் தரித்தவர்களிடத்தும், ஞானம் பெற்றதால் வேருெரு செயல் இல்லாதவர்களிடத்தும், மனதில் எப்போதும் முழுநிறைவு பெற்றவர்களிடத்தும் சிவபெருமான் எப்போதும் விளங்குகிறுர்.

சுத்தர்க ளிடத்துந் தீர்ந்த துறவின ரிடத்து ஞானச்
சித்தர்க ளிடத்து மிக்க சிவவேடத் தவரி டத்து
முத்தம ரிடத்தும் பாச முதறுமா கேச ராகும்
பத்தர்க ளிடத்து மென்றும் பரசிவம் விளங்கு மன்றே.

புனிதமானவர்களிடத்தும், வைராக்கியமுடையோரிடத்தும், பகுத்தறிவுடைய விவேகஞானிகளிடத்தும், மஹான்களிடத்தும், சிவசின்னங்களைத் தரித்தவர்களிடத்தும், ஞானம் பெற்றதால் வேருெரு செயல் இல்லாதவர்களிடத்தும், மனதில் எப்போதும் முழுநிறைவு பெற்றவர்களிடத்தும் சிவபெருமான் எப்போதும் விளங்குகிறுர்.

अन्यत्र शम्भो रतिमात्रशून्यो
निजेष्टलिङ्गे नियतान्तरात्मा ।
शिवात्मकं विश्वमिदं विबुध्यन्
माहेश्वरोऽसौ भवति प्रसादी ॥ ७७॥

சிவபெருமானைத் தவிர ஏனையவற்றில் எவ்வித பற்றுமில்லாது தனது இஷ்டலிங்கத்தில் ஆழ்ந்த பக்தி கொண்டு இந்தப்

பரந்த உலகத்தைச் சிவவடிவமாகவே நினைந்து வாழும் மாஹேசுவரன் பிரசாதி எனப்படுவான்.

இந்நிலை மகேச னென்போ னேதில ரிடத்திற் றீர்ந்த
தன்னக விழைவி னோனாய்த் தனாதிட்ட லிங்கந் தன்னின்
மன்னிய மனத்த னாகிச் சகஞ்சிவ மயமாய்க் கண்டு
பின்னமி னிலையி னின்ற பெயர்ப்பிர சாதி யாவான்.

சிவபெருமானைத் தவிர ஏனையவற்றில் எவ்வித பற்றுமில்லாது தனது இஷ்டலிங்கத்தில் ஆழ்ந்த பக்தி கொண்டு இந்தப் பரந்த உலகத்தைச் சிவவடிவமாகவே நினைந்து வாழும் மாஹேசுவரன் பிரசாதி எனப்படுவான்.

பத்ததேகிகதேவத்தலம் முற்றும்
2 வது மாகேசத்தலம் முற்றிற்று

॥ इति श्रीषट्स्थलब्रह्मिणा शिवयोगिनाम्ना रेणुकाचार्येण विरचिते सिद्धान्तशिखामणौ माहेश्वरस्य नवविधस्थलप्रसङ्गो नाम दशमः परिच्छेदः ॥१०॥

## एकादशःपरिच्छेदः

## अथ प्रसादिस्थलम्

### अगस्त्य उवाच

उक्तो माहेश्वरःसाक्षाल्लिङ्गनिष्ठादि धर्मवान् ।
कथमेष प्रसादीति कथ्यते गणनायक॥१॥

ஓ கணநாயகரே! மாஹேசுவரத்தலம் லிங்கம், நிஷ்டை முதலியவற்றுடன் விரித்துரைக்கப்பட்டது; அவர் எங்ஙனம் கருணை புரிகிருர் என்பதை உரைக்கவேண்டுகிறேன்.

உரைத்தனை மகேசனல் லொழுக்க முற்றுநீ
கருத்துறு மிரேணுக கணேசப் பேரினோ
யருத்திகொண் மகேசனா மனைய னெங்ஙனம்
வரப்பிர சாதிதா னாகும் வண்ணமே.

ஓ கணநாயகரே! மாஹேசுவரத்தலம் லிங்கம், நிஷ்டை முதலியவற்றுடன் விரித்துரைக்கப்பட்டது; அவர் எங்ஙனம் கருணை புரிகிருர் என்பதை உரைக்கவேண்டுகிறேன்.

रेणुक उवाच
लिङ्गनिष्ठादिभावेन ध्वस्तपापनिबन्धनः।
मनःप्रसादयोगेन प्रसादीत्येष कथ्यते ॥२॥

லிங்கத்தில் நிஷ்டை முதலியவற்ருல் எல்லாப் பாவங்களும் நீங்கப் பெற்ற மனம் பிரசாதயோகத்தினுல் சுத்தமடைக்கிறது.

தனக்குறு மிலிங்கநிட் டாதி சார்பினால்
வினைப்பகை கடந்துள விறன்ம கேசனொண்
மனப்பிர சாதமே வருவு மாற்றினாற்
கனப்பிர சாதியா மென்பர் கற்றுளோர்.

லிங்கத்தில் நிஷ்டை முதலியவற்ருல் எல்லாப் பாவங்களும் நீங்கப் பெற்ற மனம் பிரசாதயோகத்தினுல் சுத்தமடைக்கிறது.

अथैतत्स्थलं कीदृग्विधमित्यत्राह-
प्रसादिस्थलमित्येतदस्य माहात्म्यबोधकम्।
अन्तरस्थलभेदेन सप्तधा परिकीर्तितम्॥३॥

இந்த பிரசாதித் தலம் எத்தகையது எனப் பின்வருமாறு கூறுகிறார்: பிரசாதித்தலத்தின் பெருமை எத்தகையதெனில் அது மேலும் ஏழு வகைப்படும்.

சாற்றுறு புகழ்ப்பிர சாதி யின்றல
வேற்றுமை யேழ்வகைப் படும்வி ளம்புறிற்
றோற்றுறு மியற்பிர சாதித் தூய்த்தலம்
போற்றுற வாதியிற் பொருந்து மென்பவே.

இந்த பிரசாதித் தலம் எத்தகையது எனப் பின்வருமாறு கூறுகிறார்: பிரசாதித்தலத்தின் பெருமை எத்தகையதெனில் அது மேலும் ஏழு வகைப்படும்.

अथ तत्कथमित्यत्रोद्दिशति-
प्रसादिस्थलमदौ तु गुरुमाहात्म्यकं ततः।
ततो लिङ्ग प्रशंसा च ततो जङ्गमगौरवम्॥४॥
ततो भक्तस्य माहात्म्यं ततः शरणकीर्तनम्।
शिवप्रसादमाहात्म्यमिति सप्तप्रकरकम्॥५॥

அவை யாவை என்ன விளக்குகிறார்:
முதலில் பிரசாதித்தலம், பின்னர் குருமாஹத்மியம், லிங்கமஹிமை, ஜங்கமமஹிமை, பக்தர்களின் மஹிமை, சரணர்களின் மஹிமை, இறுதியில் சிவப்பிரசாத மாஹாத்மியம் என்பன.

சற்குரு லிங்கசங் கமநற் பத்தர்பின்
சிற்பர சரணரொண் சேட மேயென
நிற்பவர் மான்மியம் யாம்நி கழ்த்துதும்
பொற்புறு முனிவர புகன்ற வாறரோ.

முதலில் பிரசாதித்தலம், பின்னர் குருமாஹத்மியம், லிங்கமஹிமை, ஜங்கமமஹிமை, பக்தர்களின் மஹிமை,

சரணர்களின் மஹிமை, இறுதியில் சிவப்பிரசாத மாஹாத்மியம் என்பன.

अथोद्दिष्टानां स्थलानां क्रमाल्लक्षणमुच्यत इत्यत्राह-

क्रमाल्लक्षणमेतेषां कथयामि महामुने।
नैर्मल्यं मनसो लिङ्गं प्रसाद इति कथ्यते।
शिवस्य लिङ्गरूपस्य प्रसादादेव सिध्यति॥ ६॥

ஓ மஹாமுனிவரே! அவற்றின் இலக்கணங்களைக் கூறுகின்றேன்: மனத்தில் தூய்மையுடன் இருத்தலே பிரசாதமெனப்படும்; லிங்கவடிவினனான சிவபெருமான் அருளால் தான் அது கைகூடும்.

சிந்தனை நிருமலஞ் செறியு மக்குறி
சந்தத முயர்பிர சாத மென்பரால்
வந்துறு மதுசிவ லிங்க மாவுரு
வெந்தைத னருட்பிர சாதத் தெய்துமே.

மனத்தில் தூய்மையுடன் இருத்தலே பிரசாதமெனப்படும்; லிங்கவடிவினனான சிவபெருமான் அருளால் தான் அது கைகூடும்.

ननु कोऽयं चित्तनैर्मल्यलक्षणप्रसादकारणीभूतशिवप्रसाद इत्यत्राह-

शिवप्रसादं यद्द्रव्यं शिवाय विनिवेदितम्।
निर्माल्यं तत्तु शैवानां मनोनैर्मल्यकारणम्॥ ७॥

சிவபெருமானுக்கு அர்ப்பணிக்கப்பட்ட பொருள் யாவும் நிர்மாலியம் எனப்படும்; அதுவே சைவர்களின் மனத்தூய்மைக்குக் காரணமாகத் திகழ்கிறது.

நிருமலன் றனக்குற நிவேதி தஞ்செயு
மருநிரு மாலிய மரிய சைவர்தம்
பெருமன நிருமலம் பெறவ ளித்திடற்
கொருபெருங் காரண மென்ப ரோர்ந்துளார்.

சிவபெருமானுக்கு அர்ப்பணிக்கப்பட்ட பொருள் யாவும் நிர்மாலியம் எனப்படும்; அதுவே சைவர்களின் மனத்தூய்மைக்குக் காரணமாகத் திகழ்கிறது.

अथैवंरूपशिवप्रसादस्वीकारवान् प्रसादीत्याह-

मनःप्रसादसिद्ध्यर्थं निर्मलज्ञानकारणम्।
शिवप्रसादं स्वीकुर्वन् प्रसादीत्येष कथ्यते॥८॥

மனத்தில் தூய்மையடைந்து பிரசாதம் கைகூடுவதற்காக சிவப்பிரசாதத்தை உட்கொள்பவன் பிரசாதி எனப்படுகிருன்.

போதகா ரணமெனும் புனித னற்பிர
சாதமா கியநிரு மாலி யந்தனைத்
தீதிலா மனப்பிர சாதத் திற்குணு
மீதுளா னற்பிர சாதி யென்பவே.

மனத்தில் தூய்மையடைந்து பிரசாதம் கைகூடுவதற்காக சிவப்பிரசாதத்தை உட்கொள்பவன் பிரசாதி எனப்படுகிருன்.

अन्नशुद्ध्या हि सर्वेषां तत्त्वशुद्धिरुदाहृता।
विशुद्धमन्नजातं हि यच्छिवाय समर्पितम्॥९॥
तदेव सर्वकालं तु भुञ्जानो लिङ्गतत्परः।
मनःप्रसादमतुलं लभते ज्ञानकारणम्॥१०॥

உண்ணும் அன்னத்திஞல் தான் எல்லாத் தத்துவங்களும் சுத்தமடைகின்றன; சிவபெருமானுக்கு அர்ப்பணிக்கப்பட்ட பரிசுத்தமான அன்னத்தையே எப்போதும் உட்கொள்கிறவன் அளவற்ற மனத்தூய்மையும் அதஞல் பிரசாதத்தையும் அடைகின்ருன்.

தத்துவ சுத்தியே யந்ந சுத்திதா
னத்தனுண் டொழிபிர சாத மாயின
தொத்திட வரியதோ ருணர்விற் கேதுவாஞ்
சித்தநின் மலந்தனைச் செய்யு மென்பவே.

உண்ணும் அன்னத்தினால் தான் எல்லாத் தத்துவங்களும் சுத்தமடைகின்றன; சிவபெருமானுக்கு அர்ப்பணிக்கப்பட்ட பரிசுத்தமான அன்னத்தையே எப்போதும் உட்கொள்கிறவன் அளவற்ற மனத்தூய்மையும் அதனால் பிரசாதத்தையும் அடைகின்றான்.

तस्मादात्मभोगार्थं नियमितं सद् यद्यद् द्रव्यं प्राप्तं भवति, तत्सर्वं ‘यद्यदात्महितं वस्तु . . . शिवार्पितम्’ इति शिवरहस्यवचनानुसारेण शिवाय समर्प्य भुञ्जीयादित्याह-

आत्मभोगाय नियतं यद्यद् द्रव्यं समाहितम्।
तत्तत् समर्प्य देवाय भुञ्जीतात्मविशुद्धये॥ ११॥

தனக்கென எடுத்து வைத்த அனத்து திரவியத்தையும் முதலில் சிவபெருமானுக்கு அர்ப்பணம் செய்து பின்னர் அவற்றைப் புசித்தல் ஆன்மசுத்தியை அளிக்கும்.

தனக்கென வீட்டுபு தந்த யாவையு
நினைப்பரி தாகிய நிமலற் காக்கியே
மனப்பிர சாதமே மருவ வுண்கவென்
றனைத்தயு முணர்ந்தவ ரறைகு வாரரோ.

தனக்கென எடுத்து வைத்த அனத்து திரவியத்தையும் முதலில் சிவபெருமானுக்கு அர்ப்பணம் செய்து பின்னர் அவற்றைப் புசித்தல் ஆன்மசுத்தியை அளிக்கும்.

अथास्य महत्त्वं प्रतिपादयति-

नित्यसिद्धेन देवेन भिषजा जन्मरोगिणाम्।
यद्यत् प्रसादितं भुक्त्वा तत्तज्जन्मरसायनम्॥ १२॥

अथ ऐहिकारोग्यादिकारणं चेत्याह-

आरोग्यकारणं पुंसामन्तःकरणशुद्धिदम्।
तापत्रयमहारोगसमुद्धरणभेषजम्॥ १३॥
विद्यावैशद्यकरणं विनिपातविघातनम्।
द्वारं ज्ञानावतारस्य मोहोच्छेदस्य कारणम्॥ १४॥

वैराग्यसम्पदो मूलं महानन्दप्रवर्धनम्।
दुर्लभं पापचित्तानां सुलभं शुद्धकर्मणाम्॥ १५॥
आदृतं ब्रह्मविष्ण्वाद्यैर्वसिष्ठाद्यैश्च तापसैः।
शिवस्वीकृतमन्नाद्यं स्वीकार्यं सिद्धिकाङ्क्षिभिः॥ १६॥

என்றும் நிலைத்த பரம்பொருளான சிவபெருமானே அனைத்து நோய்களையும் தீர்க்கும் வைத்தியன்; அவனால் அருளப்பட்டதை உண்பதால் பிறவிப் பிணியிலிருந்து விடுபடலாம். சிவப்பிரசாதம் உடல் நோய், மன நோய், மற்றும் ஆத்தியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் எனும் மூவகைத் துன்பங்களையும் அழிக்க வல்லது; அதுவே வைராக்கியம் எனும் ஒப்பற்ற செல்வத்தை நல்கி சிவஞானம் அடைதற்கு வழிவகுக்கும்; சிவப் பிரசாதத்தை அடைதல் புண்ணியகருமங்களைச் செய்வோருக்கு எளிது, அதுவே பாவகருகமங்களைச் செய்வோர்க்கு மிகவும் அரிது; பிரம்மா, விஷ்ணு போன்ற தேவர்களாலும் வஸிஷ்டர் முதலான முனிவர்களாலும் பெரிதும் வணங்கிப் போற்றப்படுகிறது. ஸித்திகளை அடைய விரும்புவோர் சிவபெருமானுக்கு நிவேதனம் செய்த அன்னத்தை உட்கொள்ளுதல் சாலச் சிறந்தது.

பரனிரு மாலியம் பவம ருந்துநல்
குரவுட னிடரிடை யூறு கொல்வது
திரமுற வாயுளைச் செய்வ தின்பமே
தருவது முத்தியுந் தருவ தாகுமால்.

என்றும் நிலைத்த பரம்பொருளான சிவபெருமானே அனைத்து நோய்களையும் தீர்க்கும் வைத்தியன்; அவனால் அருளப்பட்டதை உண்பதால் பிறவிப் பிணியிலிருந்து விடுபடலாம். என்றும் நிலைத்த பரம்பொருளான சிவபெருமானே அனைத்து நோய்களையும் தீர்க்கும் வைத்தியன்; அவனால் அருளப்பட்டதை உண்பதால் பிறவிப் பிணியிலிருந்து விடுபடலாம்.

अथैतत्प्रसादस्वीकारेण सर्वपापक्षयश्च भवतीत्याह-

पत्रं पुष्पं फलं तोयं यच्छिवाय निवेदितम्।
तत्तत्स्वीकारयोगेन सर्वपापक्षयो भवेत्॥ १७॥

பத்திரம், புஷ்பம், பழம், நீர் ஆகியன சிவபெருமானுக்கு நிவேதனம் செய்யப்பட்டதை உட்கொள்வதால் எல்லாப் பாவங்களினின்றும் விடுபடலாம்.

பத்திர மலரொடு பலாதி யாவையும்
வத்திர மைந்துடை வள்ளற் காக்கியே
துய்த்துறு நிலையினோர் தொன்மை பாதக்
கொத்தினை யடியொடுங் கொல்வா ரென்பரே.

பத்திரம், புஷ்பம், பழம், நீர் ஆகியன சிவபெருமானுக்கு நிவேதனம் செய்யப்பட்டதை உட்கொள்வதால் எல்லாப் பாவங்களினின்றும் விடுபடலாம் எனப் பெரியோர் கூறுவர்.

**अथ शिवलिङ्गप्रसादवदेव श्रीगुरुशिवयोगिनोरपि प्रसादः स्वीकार्य इत्युक्त्वा प्रसदिस्थलं समापयति-**

**यथा शिवप्रसादान्नं स्वीकार्यं लिङ्गतत्परैः।**
**तथा गुरोः प्रसादान्नं तथैव शिवयोगिनाम्॥ १८॥**

**इति प्रसादिस्थलम्**

சிவப்பிரசாதமான அன்னம் சிவலிங்கத்தில் நாட்டமுடையோரால் கொள்ளப்படுவது போல், குருவினது பிரசாதமும் சிவயோகிகளால் கொள்ளத்தக்கது.

சம்புவி னருட்பிர சாத மென்னவே
நம்புறு குருவொடு ஞான சங்கமர்
தம்பிர சாதமுந் தானு கர்ந்திடும்
வெம்புறு பவமெறி வீர சைவனே.

சிவப்பிரசாதமான அன்னம் சிவலிங்கத்தில் நாட்டமுடையோரால் கொள்ளப்படுவது போல், குருவினது பிரசாதமும் சிவயோகிகளால் கொள்ளத்தக்கது.

பிரசாதித்தலம் முற்றும்

## अथ गुरुमाहात्म्यस्थलम्

अथ प्रसादनिष्ठेन ज्ञातव्यं गुरुमाहात्म्यस्थलं निरूपयति-

गुरुरेवात्र सर्वेषां कारणं सिद्धिकर्मणाम्।
गुरुरूपो महादेवो यतः साक्षादुपस्थितः॥ १९॥

எல்லா ஸித்திகளுக்கும் காரணமாகத் திகழ்பவர் குருவே; மஹாதேவரான சிவபெருமானே குருவடிவத்தில் விளங்குகிறார்.

சீரணி தருமெலாச் சித்தி கட்குமோர்
காரண வுயர்குரு வாகுங் கண்ணுத
றாரணி தனிற்குரு வடிவஞ் சார்ந்தருட்
பேரணி கலமொடு பிறங்கு மென்பவே.

எல்லா ஸித்திகளுக்கும் காரணமாகத் திகழ்பவர் குருவே; மஹாதேவரான சிவபெருமானே குருவடிவத்தில் விளங்குகிறார்.

ननु निष्कलः शिवः किमर्थं सकलगुरुरूपेण प्रकाशत इत्यत्राह-

निष्कलो हि महादेवो नित्यज्ञानमहोदधिः।
सकलो गुरुरूपेण सर्वानुग्राहको भवेत्॥ २०॥

அளவற்ற பரிபூரணனும் எல்லையற்ற ஞானக் கடலுமான மஹாதேவனே குருவடிவம் தாங்கி அனைவருக்கும் அருள்புரிகிறார்.

நிட்கள வுணர்வுரு நித்த னாஞ்சிவன்
வட்கறு குருபர வடிவி னாலொரு
பெட்புறு சகளனாய்ப் பெரிது யிர்க்கெலாந்
தட்கரு மருள்செயச் சரிக்கு மென்பவே

அளவற்ற பரிபூரணனும் எல்லையற்ற ஞானக் கடலுமான மஹாதேவனே குருவடிவம் தாங்கி அனைவருக்கும் அருள்புரிகிறார்.

तस्माद् गुरुशिवयोर्भेदो नास्तीत्याह-

यः शिवः स गुरुर्ज्ञेयो यो गुरुः शिवः स्मृतः।
न तयोरन्तरं कुर्याद् ज्ञानावाप्तौ महामतिः॥ २१॥

சிவபெருமானேதான் குரு; குருதான் சிவபெருமான்; அறிவுள்ளவன் அவர்களுக்குள் எவ்வித வேற்றுமையையும் காணக்கூடாது.

பரசிவ னுயர்குரு பரம சற்குரு
வரமுறு பரசிவ னென்ன வைப்பரிவ்
விருவரும் வேறென வெண்ணு றான்பவம்
வெருவுற வருசிவ ஞானம் வேட்டுளான்.

சிவபெருமானேதான் குரு; குருதான் சிவபெருமான்; அறிவுள்ளவன் அவர்களுக்குள் எவ்வித வேற்றுமையையும் காணக்கூடாது.

'यथाहं सर्वलोकानां गुरुरम्बिकया सह' इत्यागमोक्तेः शिवसदृशं श्रीगुरुं प्राकृतैः सदृशमनुक्त्वा पूजयेदित्याह-

हस्तपादादिसाम्येन नेतरैः सदृशं वदेत्।
आचार्यं ज्ञानदं शुद्धं शिवरूपतया स्थितम्॥ २२॥

கைகால்கள் முதலியன பொருந்தியிருப்பதால் குருவானவர் ஏனைய மனிதர்களுக்கொப்பானவரல்லர்; ஆசாரியன் சிவஞானத்தை வழங்கும் சிவபெருமானே என எண்ணவேண்டும்.

கரசர ணாதிகள் கடுக்குந் தன்மையா
னரரொடு குரவனை யொப்பு நாடுறா
ருரமுறு குரவனை யுவந்து போற்றியே
பரகதி வேண்டுநர் பணிதல் வேண்டுமே.

கைகால்கள் முதலியன பொருந்தியிருப்பதால் குருவானவர் ஏனைய மனிதர்களுக்கொப்பானவரல்லர்; ஆசாரியன் சிவஞானத்தை வழங்கும் சிவபெருமானே என எண்ணவேண்டும்.

तेन किं भवतीत्यत्राह-

आचार्यस्यावमानेन श्रेयः प्राप्तिर्विहन्यते।

तस्मान्निश्रेयसप्राप्त्यै पूजयेत् तं समाहितः॥२३॥
गुरुभक्तिविहीनस्य शिवभक्तिर्न जायते।
ततः शिवे यथा भक्तिस्तथा भक्तिर्गुरावपि॥२४॥
इति गुरुमहत्त्वस्थलम्

ஆசாரியனை அவமதிப்பதால் தலையாய நன்மையான மோட்ச கிட்டாது; எனவே அத்தகைய நன்மையடைதல் கருதி தனது குருவை வழிபடவேண்டும். குருபக்தியில்லாதவனுக்குச் சிவபக்தியுண்டாகாது; ஆதலின் சிவபெருமானிடத்தில் எத்தகைய பக்தி உளதோ அதே போல் குருவினிடத்திலும் பக்தி கொள்ளவேண்டும்.

நற்குரு பத்தியில் லார்க்கு நாடுறிற்
றற்சிவ பத்தியுஞ் சனித்தி டாதொரு
சிற்கன சிவனிடை செய்யும் பத்திபோற்
சற்குரு பத்தியுஞ் செய்யத் தக்கதால்.

குருபக்தியில்லாதவனுக்குச் சிவபக்தியுண்டாகாது; ஆதலின் சிவபெருமானிடத்தில் எத்தகைய பக்தி உளதோ அதே போல் குருவினிடத்திலும் பக்தி கொள்ளவேண்டும்.

குருமான்மியத்தலம் முற்றும்.

## अथ लिङ्गमाहात्म्यस्थलम्

अथ गुरुकृपाप्रकाश्यलिङ्गमहत्त्वस्थलं निरूपयति-

गुरुमाहात्म्ययोगेन निजज्ञानातिरेकतः।
लिङ्गस्यापि च माहात्म्यं सर्वोत्कृष्टं विभाव्यते॥ २५॥

ननु लिङ्गज्ञानव्यतिरेकेण तन्माहात्म्यज्ञानासम्भवाद् लिङ्गस्वरूपं केन ज्ञापितमित्यत्राह-

शिवस्य बोधलिङ्गं यद् गुरुबोधितचेतसा।
तदेव लिङ्गं विज्ञेयं शाङ्करं सर्वकारणम्॥ २६॥

குருவினது மஹிமையினுலும் சீடனுடைய சொந்த ஞானத்தினுலும் சிவலிங்கத்தின் அளவற்ற மஹிமையானது தெரியவருகின்றது. குரு போதித்த ஞானத்தால் எல்லாவற்றுக்கும் காரணமான சிவலிங்கத்தை உணர்கிருன்.

அருட்குரு மான்மிய வறிவின் மேன்மையான்
மருட்கழி பரசிவ லிங்க மான்மியம்
பொருட்பட வறிகுவன் புகழி லிங்கமே
தெருட்சக காரண மென்னத் தேர்கவே.

குருவினது மஹிமையினுலும் சீடனுடைய சொந்த ஞானத்தினுலும் சிவலிங்கத்தின் அளவற்ற மஹிமையானது தெரியவருகின்றது. குரு போதித்த ஞானத்தால் எல்லாவற்றுக்கும் காரணமான சிவலிங்கத்தை உணர்கிருன்.

अथ तत्कीदृशमित्यत्राह-

परं पवित्रममलं लिङ्गं ब्रह्म सनातनम्।
शिवाभिधानं चिन्मात्रं सदानन्दं निरङ्कुशम्॥ २७॥
कारणं सर्वलोकानां वेदानामपि कारणम्।
पूरणं सर्वतत्त्वस्य तारणं जन्मवारिधेः॥ २८॥
ज्योतिर्मयमनिर्देश्यं योगिनामात्मनि स्थितम्।
कथं विज्ञायते लोके महागुरुदयां विना॥ २९॥

அந்த லிங்கமானது அனைத்துக்கும் மேலானது; புனிதமானது; அதுவே என்றும் அழிவற்ற பிரம்மம்; அது சிவனெனும் பெயருடையது; சின்மயமாய் எல்லா உலகங்களுக்கும் வேதங்களுக்கும் மூலகாரணமாய்த் திகழ்வது; அனத்துத் தத்துவங்களுக்கும் பூரணமாயும், சம்சாரக் கடலைக் கடக்க உதவும் தோணிபோன்றும் அது விளங்குகிறது. பரஞ்சோதி வடிவாயும், யோகிகளால் கூட இத்தகையது என அறியவொண்ணாததாயும் விளங்கும் அந்த லிங்கத்தைக் குருவருளின்றி எவ்வாறு அறிய இயலும்?

ஆதியாய்ச் சச்சிதா நந்த மாகிவான்
சோதியாய்த் தலையிலாச் சுத்த வாழ்வதாய்
வேதகா ரணமெனும் விமல லிங்கமோர்
நாதனாங் குருவலா னணுக லாகுமோ.

மூலகாரணமாயும், நிர்மலமாயும், சின்மயமாயும் எல்லா உலகங்களுக்கும் வேதங்களுக்கும் மூலகாரணமாயும் திகழும் அந்த லிங்கத்தைக் குருவருளின்றி எவ்வாறு அறிய இயலும்?

ब्रह्मणा विष्णुना पूर्वं यल्लिङ्गं ज्योतिरात्मकम्।
अपरिच्छेद्यमभवत् केन वा परिचोद्यते॥ २०॥

முன்பு பிரம்மா விஷ்ணு முதலிய தேவர்களாலும் இத்தன்மையது என அறியவொண்ணாத சோதிமயமாய்த் தோன்றிய அந்த லிங்கத்தை யார் தான் அறிவர்?

வேதனா ரணருமவ் விசும்பிற் றோன்றிய
சோதியா மிலிங்கமுன் தொடர்ந்து காண்கில
ராதலா லியாவரே யறிவர் மாதுமை
பாதியா மிளிர்தரு பரம லிங்கமே.

முன்பு பிரம்மா விஷ்ணு முதலிய தேவர்களாலும் இத்தன்மையது என அறியவொண்ணாத சோதிமயமாய்த் தோன்றிய அந்த லிங்கத்தை யார் தான் அறிவர்?

नन्वु ब्रह्माद्यगम्यं लिङ्गं कीदृशमित्यत्राह –

बहुनात्र किमुक्तेन लिङ्गं ब्रह्म सनातनम्।
योगिनो यत्र लीयन्ते मुक्तपाशनिबन्धनाः॥ ३१॥

சுருங்கக் கூறின் பாசத் தளைகள் நீங்கிய யோகிகள் எதில் முழுதும் லயித்திருக்கின்றனரோ அதுவே எப்போதும் நிலைபெற்ற பிரம்மமான சிவலிங்கமாகும்.

பற்பல மொழிகொடென் பயன்வன் பாசமோ
டுற்பவ மறுசிவ யோகி கண்மன
நிற்பதெவ் விடத்திலவ் விமல லிங்கமே
யற்புத முறுபரப் பிரம மாகுமால்.

சுருங்கக் கூறின் பாசத் தளைகள் நீங்கிய யோகிகள் எதில் முழுதும் லயித்திருக்கின்றனரோ அதுவே எப்போதும் நிலைபெற்ற பிரம்மமான சிவலிங்கமாகும்.

பிறகட வுளர்நிக ராத பேருல
கிறைமைகொள் பவனெனு மியல்பை யென்றுமே
முறைதரு பரசிவ லிங்க மூர்த்தியா
யுறைபர மன்றனக் கோதும் வேதமே.

பிற கடவுளர்களைக் காட்டினும் மேலானவரும் அனைத்துலகங்களுக்கும் ஒப்பற்ற இறைவனுகவும் விளங்குபவர் சிவபெருமான் ஒருவரே என வேதங்கள் முழங்குகின்றன.

ननु ब्रह्मैव लिङ्गं चेत् किमस्य पीठमित्यत्राह-

पीठिका परमा शक्तिर्लिङ्गं साक्षात् परः शिवः।
शिवशक्तिसमायोगं विश्वं लिङ्गं तदुच्यते॥ ३२॥

லிங்கம் பரசிவனுகும், அதன் பீடம் பராசக்தி; சிவனும் சக்தியும் ஒன்ருய்த் திகழும் இந்த உலகமே லிங்கமாகும்.

பெரிதுயர் தருபர சத்தி பீடிகை
தெரிதர வருர சிவமி லிங்கமவ்
வரிதுணர் வுறுசிவ சத்தி யாகிய
வொருதனி யிலிங்கமே யுலகம் யாவுமே.

லிங்கம் பரசிவனுகும், அதன் பீடம் பராசக்தி; சிவனும் சக்தியும் ஒன்ருய்த் திகழும் இந்த உலகமே லிங்கமாகும்.

अथैवं रूपं लिङ्गं ब्रह्मादयः संपूज्य महदैश्वर्यं प्राप्तवन्त इत्याह-

ब्रह्मादयः सुराः सर्वे मुनयः सनकादयः।
शिवलिङ्गार्चनादेव स्वं स्वं पदमवाप्नुयुः॥ ३३॥

பிரம்மா முதலிய தேவர்களும் சனகர் போன்ற முனிவர்களும் சிவலிங்கத்தை முறையாக வழிபட்டதாலேயே தங்களுடைய சிறந்த நிலையை அடைந்தனர்.

ननु शिवस्यापि विश्वाधिकत्वादिमहदैश्वर्यं कस्यचिदुपासनया समागतं किमित्यत्राह-

विश्वाधिपत्वमीशस्य लिङ्गमूर्तेः स्वभावजम्।
अनन्यदेवसादृश्यं श्रुतिराह सनातनी॥ ३४॥

ஆனுல் அனைத்துலகங்களுக்கும் ஒப்பற்ற ஓரே ஈசுவரனுக விளங்கும் தன்மை லிங்க வடிவம் கொண்ட சிவபெருமானுக்கு இயற்கையாக அமைந்தது; அது எந்த தேவர்களுக்கும் சமமாகாது என வேதம் முழங்குகிறது.

इति लिङ्गमहत्त्वस्थलम्

தாமரை மலர்மிசைத் தலைவ னாதியாங்
காமரு கடவுளர் சநக னாதியர்
மாமுனி வரர்சிவ லிங்கம் வந்தியாத்
தாமுறு நிலையினைத் தான டைந்தனர்.

பிரம்மா முதலிய தேவர்களும் சனகர் போன்ற முனிவர்களும் சிவலிங்கத்தை முறையாக வழிபட்டதாலேயே தங்களுடைய சிறந்த நிலையை அடைந்தனர்.

இலிங்கமான்மியத்தலம் முற்றும்.

## अथ जङ्गममाहात्म्यस्थलम्

अथ गुरुलिङ्गमहत्त्वात् संवेद्यं जङ्गमस्थलं प्रकाशयति-

गुरुशिष्यसमारूढलिङ्गमाहात्म्यसम्पदः।
सर्वं चिद्रूपविज्ञानाज्जङ्गमाधिक्यमुच्यते॥ ३५॥

குரு சிஷ்யன் ஆகியோரது பெருமைகளேயும் சிவலிங்கத்தினது மஹிமையையும் நன்குணர்ந்த பின்னர் எல்லாம் சின்மயமென அறிந்ததால் ஜங்கமனுடைய பெருமைகளே அடுத்து விளக்குகிறுர்.

ஆரிய னருளினா லறிந்த டைந்துள
பேரிய லிலிங்கநற் பெருமை கொண்டுதான்
சீரிய வுலகெலாஞ் சிவமெ னத்தெரிந்
தோரியல் கொடுசரத் துயர்ச்சி கூறுவார் .

சிவபெருமான் அருளால் சிவலிங்கத்தினது மஹிமையையும் நன்குணர்ந்த பின்னர் எல்லாம் சின்மயமென அறிந்ததால் ஜங்கமனுடைய பெருமைகளே அடுத்து விளக்குகிறுர்.

உலகுரு வாகிய வொருத னிச்சிவ
மிலகுறு தன்வடி வாக வென்றுமே
மலைவற வுணர்பவ னியாவன் மற்றவ
னலைவறு சங்கம மாகு மென்பவே.

எல்லாம் சிவமயமென்றும் தானும் சிவவடிவம் கொண்டவனென்றும் நன்குணர்ந்தவனே ஜங்கமனுவான்.

अथ के ते जङ्गमा इत्यत्राह-

जानन्त्यतिशयाद् ये तु शिवं विश्वप्रकाशकम्।
स्वस्वरूपतया ते तु जङ्गमा इति कीर्तिताः॥ ३६॥

உலகங்களெல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் சிவபெருமானே தனது உண்மைச் சொரூபம் என நன்குணர்ந்தவனே ஜங்கமெனனப்படுவான்.

சிவமய மெனச்சக மியாவுந் தேர்பவ
னெவனவன் மலவிரு ளிரிக்குஞ் சோதியா
யவிருணர் வுடையவ னெவன வன்றொட
ருவமையி லொருசிவ யோகி யென்பவே.

உலகங்களெல்லாம் சிவபெருமானே என்றும், யாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் சிவபெருமானே தனது உண்மைச் சொரூபம் எனவும் நன்குணர்ந்தவனே சிவயோகியாவான்.

अथ शिवयोगित्वेन प्रसिद्धजङ्गममहत्त्वं पञ्चभिः सूत्रैः प्रतिपादयति-

ये पश्यन्ति जगज्जालं चिद्रूपं शिवयोगतः।
निर्धूतमलसंस्पर्शास्ते स्मृताः शिवयोगिनः॥ ३७॥
घोरसंसारतिमिरपरिध्वंसनकारणम्।
येषामस्ति शिवज्ञानं ते मताः शिवयोगिनः॥ ३८॥

சிவயோகத்திஞல் அனைத்துலகங்களையும் சின்மயமாய்க்கண்டு எல்லா மலங்களினின்றும் நீங்கியவர்களே சிவயோகிகள்; கொடிய சம்சாரக்கடலைக் கடக்க உதவும் சிவஞானமுடையவர்களே சிவயோகிகள்.

நந்துறு மரியமெய்ஞ் ஞான மெய்ச்சிவ
சிந்தனை யுடையனாய்த் தீர்ந்த வெண்பவப்
பந்தனை யொருவிய பரம யோகியே
வந்துறு பரசிவ மயனெ னப்படும்.

சிவபெருமான் மீதே சிந்தனை உடையவர்களாயும், கொடிய சம்சாரக்கடலைக் கடக்க உதவும் சிவஞானமும் உடையவர்களே சிவயோகிகள்.

अथ ते कीदृशाः कथं तिष्ठन्तीत्यत्राह-

जितकामा जितक्रोधा मोहग्रन्थिविभेदिनः।
समलोष्टाश्मकनकाः साधवः शिवयोगिनः॥ ३९॥
समाः शत्रौ च मित्रे च साक्षात्कृतशिवात्मकाः।
निस्पृहा निरहङ्कारा वर्तन्ते शिवयोगिनः॥ ४०॥

காமம், கோபம் முதலியவற்றை வென்றவர்களும், மோகமற்றவர்களாயும், கல், ஓடு மற்றும் பொன் ஆகியவற்றை ஒன்றாகவே நோக்குபவர்களாயும், பகைவனையும் நண்பனையும் சமமாகவே நோக்குபவர்களாயும், பற்றற்றவர்களாயும், சிவபெருமானை நேரில் கண்டவர்களாயும், அகங்காரம் அறவே நீங்கியவர்களாயும் இருப்பவர்களே சிவயோகிகள்.

முற்றுறு காமமுஞ் சினமு மோகமு
மற்றவ னுறவொடு பகையு மற்றவ
னுற்றிடு பசும்பொனோ டோடு மொன்றெனப்
பெற்றவ னுயர்சிவ யோகிப் பேரினோன்.

காமம், கோபம் முதலியவற்றை வென்றவர்களும், மோகமற்றவர்களாயும், கல், ஓடு மற்றும் பொன் ஆகியவற்றை ஒன்றாகவே நோக்குபவர்களாயும், பகைவனையும் நண்பனயும் சமமாகவே நோக்குபவர்களாயும், பற்றற்றவர்களாயும், சிவபெருமானை நேரில் கண்டவர்களாயும், அகங்காரம் அறவே நீங்கியவர்களாயும் இருப்பவர்களே சிவயோகிகள்.

एवमुक्तलक्षणज्ञानसम्पन्नाः साक्षाच्छिवा एवेत्याह-

दुर्लभं हि शिवज्ञानं दुर्लभं शिवचिन्तनम्।
येषामेतद् द्वयं चास्ति ते हि साक्षाच्छिवात्मकाः ॥ ४१ ॥

अथ पुनस्तेषां महत्त्वं श्लोकद्वयेनाह-

पादाग्ररेणवो यत्र पतन्ति शिवयोगिनाम्।
तदेव सदनं पुण्यं पावनं गृहमेधिनाम् ॥ ४२ ॥

சிவஞானமும் சிவசிந்தனையும் மிக அரியன; இவை இரண்டையுமுடையோர்கள் ஸாக்ஷாத் சிவபெருமானே. இத்தகைய சிவயோகிகளின் திருவடிப் பொடி எங்கெல்லாம் விழுகின்றதோ அதுவே புனிதமானது, இல்லறத்தத்தோர்களுக்கு அதுவே புண்ணிய பூமி.

ஓங்குறு புகழ்ச்சிவ யோகி தன்றுணைப்
பூங்கம லத்திரு வடியிற் பூந்துக
ளீங்கெவர் மனையிடை யிசைந்து வீழ்தரு
மாங்கது புண்ணியத் தலம தாகுமால்.

சிவயோகிகளின் திருவடிப் பொடி எங்கெல்லாம் விழுகின்றதோ அதுவே புனிதமானது, இல்லறத்தத்தோர்களுக்கு அதுவே புண்ணிய பூமி.

सर्वसिद्धिकरं पुंसां दर्शनं शिवयोगिनाम्।
स्पर्शनं पापशमनं पूजनं मुक्तिसाधनम्॥४३॥

சிவயோகிகளைக் காணுதல் அனைத்து சித்திகளையும் நல்கும்; அவர்களைத் தொடுவதால் எல்லாப் பாவங்களும் நீங்கும்; அவர்களைப் பூசித்தல் முக்திக்கு சாதனம்.

தரிசந மளித்திடுஞ் சகல சித்தியும்
பரிசன மழித்திடும் பாவ மியாவையும்
பரிசுறு மலிபுகழ்ப் பரம யோகியின்
கரிசறு பூசனை முத்தி காரணம்.

சிவயோகிகளைக் காணுதல் அனைத்து சித்திகளையும் நல்கும்; அவர்களைத் தொடுவதால் எல்லாப் பாவங்களும் நீங்கும்; அவர்களைப் பூசித்தல் முக்திக்கு சாதனம்.

अथैवं तादृशशिवयोगिनां सम्पर्कात् सर्वेप्सितार्थसिद्धिरित्याह-

महतां शिवतात्पर्यवेदिनामनुमोदिनाम्।
किं वा फलं न सिद्ध्येत सम्पर्काच्छिवयोगिनाम्॥४४॥

इति जङ्गममहत्त्वस्थलम्

சிவசாத்திரங்களின் உட்பொருளை அறிந்த சிவயோகிகளின் தொடர்பினுல் என்ன நன்மைதான் கிட்டாது? அனைத்தும் கிட்டும்.

மெய்ப்பர சிவனது மெய்ம்மை யுற்றுணர்ந்
தப்பர சிவசுகத் தழுந்து மேன்மையா
லொப்பறு மொருசிவ யோகி சங்கமிங்
கெப்பய னுதவிடா தியம்புங் காலையே.

சிவசாத்திரங்களின் உட்பொருளை அறிந்த சிவயோகிகளின் தொடர்பினால் என்ன நன்மைதான் கிட்டாது? அனைத்தும் கிட்டும்.

சங்கமமான்மியத்தலம் முற்றும்.

## अथ भक्तमाहात्म्यस्थलम्

अथ गुरुलिङ्गजङ्गममहत्त्वलम्पटस्य भक्तस्य महत्त्वं द्वादशसूत्रैः प्रतिपादयति-

> गुरोर्लिङ्गस्य माहात्म्यकथनाच्छिवयोगिनाम्।
> सिद्धं भक्तस्य माहात्म्यं तथाप्येष प्रशस्तये॥ ४५॥

குரு மற்றும் லிங்கம் ஆகியவற்றின் மஹிமையைக் கூறியதால் அடுத்து சிவயோகியாகிய சிவபக்தனின் மஹிமையையும் விளக்கிக் கூறுவோம்.

> குருவொடு மெய்ச்சிவ லிங்கங் கோதறு
> சரமுறு புகழினைச் சாற்றுந் தன்மையாற்
> பரவைதூ ழுலகினிற் பத்தன் றானுமவ்
> வரமுறு துதியையவ் வாறு மன்னுமே.

குரு மற்றும் லிங்கம் ஆகியவற்றின் மஹிமையைக் கூறியதால் அடுத்து சிவயோகியாகிய சிவபக்தனின் மஹிமையையும் விளக்கிக் கூறுவோம்.

अथ के भक्ता इत्यत्र- 'यद्धि मनसा ध्यायति तद्वाचा वदति तत्कर्मणा करोति' इति श्रुत्यर्थानुसारेण भक्तस्वरूपमाह-

> ये भजन्ति महादेवं परमात्मानमव्ययम्।
> कर्मणा मनसा वाचा ते भक्ता इति कीर्तिताः॥ ४६॥

பரம்பொருளான சிவபெருமானை மனம் மெய் மொழிகளால் பக்தியுடன் வழிபடுவோர்கள் பக்தர்கள் எனப்படுவர்.

> சந்திர சேகரன் றன்னை நல்லர
> விந்தமென் மனமொழி மெய்யி னாற்றினம்

வந்தனை புரிபவன் யாவன் மற்றவன்
பந்தம தறுசிவ பத்த னாகுவான்.

பரம்பொருளான சிவபெருமானை மனம் மெய் மொழிகளால் பக்தியுடன் வழிபடுவோர்கள் பக்தர்கள் எனப்படுவர்.

शिवभक्तेर्जातिभेदोऽस्ति किमित्यत्राह-

दुर्लभा हि शिवे भक्तिः संसारभयतारिणी।
सा यत्र वर्तते साक्षात् स भक्तः परिगीयते॥ ४७॥

சம்சாரக் கடலைக் கடக்க உதவும் சிவபக்தி மிக அரிதானது; அது எவனிடத்தில் உள்ளதோ அவன் பக்தனெனப்படுவான்.

பாவமா யுறுசிவ பத்தி யென்பதி
யாவரா யினும்பெறற் கரிய திங்கது
மேவினா னியாவன்மற் றவன் விளம்புறிற்
றாவிலா துயர்சிவ பத்தன் றானரோ.

சம்சாரக் கடலைக் கடக்க உதவும் சிவபக்தி மிக அரிதானது; அது எவனிடத்தில் உள்ளதோ அவன் பக்தனெனப்படுவான்.

तस्माज्जननमरणपरिपीडितानां जनानां शिवभक्तिव्यतिरेकेण केनापि सत्कर्मणा प्रयोजनं नास्तीत्याह-

किं वेदैः किं ततः शास्त्रैः किं यज्ञैः किं तपोव्रतैः।
नास्ति चेच्छाङ्करी भक्तिर्देहिनां जन्मरोगिणाम्॥ ४८॥

பிறவி நோயால் வாடும் மனிதர்களிடத்தில் சிவபக்தியில்லையெனில் வேதம், சாத்திரம், யாகம், தவம், விரதம் ஆகியவற்றால் யாது பயன்?

பவப்பிணி யுளர்க்கிறை பத்தி யின்றெனிற்
றவப்பல வேதமுஞ் சாத்திரங்களு
முவப்புறு விரதமு மொண்ம கங்களு
மவர்க்குத வுறுவவென் றறிந்தி லோமரோ.

பிறவி நோயால் வாடும் மனிதர்களிடத்தில்
சிவபக்தியில்லையெனில் வேதம், சாத்திரம், யாகம், தவம்,
விரதம் ஆகியவற்றால் யாதொரு பயனுமில்லை.

**अथ शिवभक्तिव्यतिरेकेण विधीयमानं सत्कर्म विफलं विपरीतफलं चेति दृष्टान्तपूर्वकमाह-**

**शिवभक्तिविहीनस्य सुकृतं चापि निष्फलम्।**
**विपरीतफलं च स्याद् दक्षस्यापि महाध्वरे॥ ४९॥**

சிவபக்தியற்றவன் புண்ணிய கருமங்களைச் செயினும் அவை
பயனற்றவையே; மேலும் அவை எதிர்மறையான பயனையே
விளவிக்கும்; எடுத்துக் காட்டாக தக்ஷப் பிரஜாபதி செய்த
யாகத்தைப் போல.

உறுதிகொள் பரசிவ பத்தி யுற்றிடார்க்
கறவினை யெனினுமே யவம தாகுமாற்
சிறுவிதி தனக்குமுன் செய்த வேள்விதான்
மறுதலை யுறுபயன் வழங்கிற் றென்பவே.

சிவபக்தியற்றவன் புண்ணிய கருமங்களைச் செயினும் அவை
பயனற்றவையே; மேலும் அவை தக்ஷப் பிரஜாபதி செய்த
யாகத்தைப் போல எதிர்மறையான பயனையே விளவிக்கும்.

**अथ शिवभक्तस्य दुष्कर्मापि सत्कर्म भवेदिति दृष्टान्तपूर्वकमाह-**

**अत्यन्तपापकर्माऽपि शिवभक्तस्य विशुध्यति।**
**चण्डो यथा पुरा भक्त्या पितृहाऽपि शिवोऽभवत्॥ ५०॥**

சிவபக்தன் பாவச் செயலைச் செயினும் அது நற்கருமமாகவே
முடியும்; முன்பு சண்டன் சிவபக்தி மிகுதியால் தனது
தந்தையைக் கொன்றாலும் அவன் சிறந்த சைவனாகக்
கருதப்படுகின்றான்.

மிக்குறு பாவவல் வினைய னாயினும்
புக்கர பத்தியாற் புனித னாகுவான்
றக்கதன் றந்தையைக் கொன்ற தண்டிதான்
சிக்குறு பத்தியாற் சிவம தாயினான்.

சிவபக்தன் பாவச் செயலைச் செயினும் அது நற்கருமமாகவே முடியும்; முன்பு சண்டன் சிவபக்தி மிகுதியால் தனது தந்தையைக் கொன்றாலும் அவன் சிறந்த சைவனாகக் கருதப்படுகின்றான்.

नन्वेवं चेत्, शिवभक्तानां पुण्यपापसम्बन्धोऽस्ति वा न वेत्यत्राह-

सुकृतं दुष्कृतं चापि शिवभक्तस्य नास्ति हि।
शिवभक्तिविहीनानां कर्म पाशनिबन्धनम्॥५१॥

சிவபக்தனுக்கு நல்வினை தீவினை என்பதில்லை; ஆனால் சிவபக்தியற்றவர்களுக்கு அவர்கள் செய்யும் செயல்கள் பாசக் கட்டுகளையே விளைவிக்கும்.

அறமொடு பாவமு மமல பத்தியா
னிறைபவர் தமக்கிலை நித்த பத்திதா
னறுபவர் தமையடைந் தார்த்துக் கொண்டுபோய்ப்
பிறவியாங் கடலினுட் பெரித ழுத்துமால்.

சிவபக்தனுக்கு நல்வினை தீவினை என்பதில்லை; ஆனால் சிவபக்தியற்றவர்களுக்கு அவர்கள் செய்யும் செயல்கள் பாசக் கட்டுகளையே விளைவிக்கும்.

तत्कथमित्यत्र दृष्टान्तपूर्वकं सूत्रद्वयेनाह-

शिवाश्रितानां जन्तूनां कर्मणा नास्ति सङ्गमः।
वाजिनां दिननाथस्य कथं तिमिरजं भयम्॥५२॥

சிவபெருமானைச் சரணடைந்தவர்களுக்கு கருமவினைகளினால் யாதொரு பயமுமில்லை; கதிரவனது தேரில் பூட்டப்பட்ட குதிரைகளுக்கு இருட்டினால் யாதொரு பயமுமில்லையன்றோ?

அரவணி கடவுளை யடைந்த பத்தர்கட்
கிருவினை செயுமிட ரில்லைப் பொங்கொலிப்
பரவையின் முகட்டெழும் பரிதி வானவன்
புரவிக டமையிருட் டுயர்பொருந்துமோ.

சிவபெருமானைச் சரணடைந்தவர்களுக்கு கருமவினைகளினால் யாதொரு பயமுமில்லை; கதிரவனது தேரில் பூட்டப்பட்ட குதிரைகளுக்கு இருட்டினால் பயமுண்டோ?

निरोद्धुं न क्षमं कर्म शिवभक्तान् विश्रृङ्खलान्।
कथं मत्तगजान् रुन्धेच्छृङ्खला बिसतन्तुजा॥५३॥

பாசக்கட்டுகளினின்றும் நீங்கிய சிவபக்தர்களைக் கரும வினைகள் கட்ட இயலாதன; மதம் பொருந்திய யானைகளைத் தாமரைத் தண்டுகளின் உள்ளிருக்கும் மிக நுண்ணிய நூலிழைகளால் செய்த கயிறுகள் எவ்வாறு கட்ட இயலும்?

பந்தனை வினைசிவ பத்தர் தங்களை
வந்தணை வுறுகில மரைமுட் டாட்சிறு
தந்துவி னாகிய சங்கிலித் தொடர்
கந்தொடி மதமுமிழ் களிற்றைக் கட்டுமோ.

பாசக்கட்டுகளினின்று நீங்கிய சிவபக்தர்களைக் கரும வினைகள் கட்ட இயலாதன; மதம் பொருந்திய யானைகளைத் தாமரைத் தண்டுகளின் உள்ளிருக்கும் மிக நுண்ணிய நூலிழைகளால் செய்த கயிறுகள் கட்டுமோ?

तस्माच्छिवभक्त एव पूज्य इत्याह-

ब्राह्मणः क्षत्रियो वाऽपि वैश्यो वा शूद्र एव वा।
अन्त्यजो वा शिवे भक्तः शिववन्मान्य एव सः॥५४॥

சிவபக்தன் பிராமணனாயினும், க்ஷத்திரியனாயினும், வணிகனாயினும் சூத்திரனாயினும் கீழ்க் குடிப்பிறப்பாளனாயினும் சிவபெருமானைப் போல் வணங்கத்தக்கவனே.

மறையவ னரசனல் வணிகன் சூத்திரன்
பிறனென விலைசிவ பத்தி பெற்றுளா
னிறையவ னெனவுல கெங்கும் வந்தனை
பெறுபவ னவனெனப் பேசும் வேதமே.

சிவபக்தன் பிராமணனுயினும், க்ஷத்திரியனுயினும், வணிகனுயினும் சூத்திரனுயினும் கீழ்க் குடிப்பிறப்பாளனுயினும் சிவபெருமானைப் போல் வணங்கத்தக்கவனே என வேதங்கள் கூறும்.

ननु शूद्रादीनां ब्राह्मणाद्यपेक्षया निकृष्टत्वात् कथं तेषां तत्समानत्वमित्यत्राह-

शिवभक्तिसमावेशे क्व जातिपरिकल्पना।
इन्धनेष्वग्निदग्धेषु को वा भेदः प्रकीर्त्यते॥५५॥

तस्माच्छिवभक्ता एव गणेश्वरा इत्युक्त्वा भक्तमाहात्म्यं समापयति-

शुद्धा नियमसंयुक्ताः शिवार्पितफलागमाः।
अर्चयन्ति शिवं लोके विज्ञास्यन्ते गणेश्वराः॥५६॥

சிவபக்தியை முழுதும் அடைந்தோர்கள் மத்தியில் ஜாதிகளைப் பற்றிய வேற்றுமை ஏது? நெருப்பிஞல் பொசுக்கப்பட்ட விறகுகளினிடையே வேற்றுமை ஏது? நியமங்களைக் கடைப்பிடித்து சுத்தமான மனத்துடன் தங்களது கருமபலன்களைச் சிவபெருமானுக்கே அர்ப்பணித்து ஒழுகுபவர்கள் உலகில் கணேசுவரர்கள் என வழங்கப்படுகின்றனர்.

## इति भक्तमाहात्म्यस्थलम्

இறைவனை யடைந்தவர்க் கில்லைச் சாதியின்
றிறமெரி தழலிடைச் சேரிற் பேதமெவ்
விறகுள வுயர்சிவ பூசை வேட்டுளோர்
கறைதவிர் நிலமிசைக் கணங்க ளல்லரோ.

சிவபக்தியை முழுதும் அடைந்தோர் மத்தியில் ஜாதிகளைப் பற்றிய வேற்றுமை ஏது? நெருப்பிஞல் பொசுக்கப்பட்ட விறகுகளினிடையே வேற்றுமை ஏது? நியமங்களைக் கடைப்பிடித்து சுத்தமான மனத்துடன் தங்களது கருமபலன்களைச் சிவபெருமானுக்கே அர்ப்பணித்து ஒழுகுபவர்கள் உலகில் கணேசுவரர்கள் என வழங்கப்படுகின்றனர்.

பத்தமான்மியத்தலம் முற்றும்.

## अथ शरणमहत्त्वस्थलम्

अथ गुरुलिङ्गादिमहत्त्वं ज्ञात्वा शिव एक एव रक्षक इति प्रपद्यमानस्य शरणस्य महत्त्वं प्रतिपादयति-

गुरुलिङ्गादिमाहात्म्यबोधान्वेषणसङ्गतः।
सर्वात्मना शिवापत्तिः शरणस्थानमुच्यते॥५७॥

குரு, லிங்கம் ஆகியவற்றின் மாஹாத்மியத்தை அறிந்ததால் சிவபெருமானையே பதியென முற்றுமுணர்தலே சரணத்தலமெனப்படும்.

அணங்கறு குருபர னாதி மான்மிய
மிணங்குற வுணர்த்துறு செயலெ லாங்கொடு
பணிந்திட வருசிவன் பதியெ னத்தெரிந்
துணர்ந்திடல் சரணநற் றலமென் றோதுவார்.

குரு, லிங்கம் ஆகியவற்றின் மாஹாத்மியத்தை அறிந்ததால் சிவபெருமானையே பதியென முற்றுமுணர்தலே சரணத்தலமெனப்படும்.

अथ तदेव विशदयति-

ब्रह्मादिविबुधान् सर्वान् मत्वा प्राकृतवैभवान्।
प्रपद्यते शिवं यत्तु शरणं तदुदाहृतम्॥५८॥

பிரம்மா முதலான தேவர்களும் மாயைக்குட்பட்டவர்களே என்றுணர்ந்து சிவபெருமான் ஒருவரே கதியென்று அடைதலே சரணமெனப்படும்.

மாயையால் வருமொரு வாழ்வு பெற்றுள
சேயநான் முகன்முதற் றெய்வம் விட்டொரு
தூயனா கியபர சிவனைத் துன்னுத
லாயினா கமமது சரண மாகுமால்.

பிரம்மா முதலான தேவர்களும் மாயைக்குட்பட்டவர்களே என்றுணர்ந்து சிவபெருமான் ஒருவரே கதியென்று அடைதலே சரணமெனப்படும்.

अथ शरणागतस्य स्वरूपं विशदयति-

शरण्यः सर्वभूतानां शङ्करः शशिशेखरः।
सर्वात्मना प्रपन्नस्तं शरणागत उच्यते॥५९॥

அனைத்துயிர்களுக்கும் கதியானவர் பிறைச் சந்திரனைத்தலையில் தரித்த சிவபெருமான் ஒருவரே என்று முழுவதுமாகத் தஞ்சமடைபவனே சரணாகதன் எனப்படுவான்.

முக்கண னேயுயிர் முழுது மாள்பவ
னக்கட வுளையரு ளெனவ டைக்கலம்
புக்கவன் புகல்சர ணாக தப்பெயர்
தக்கவ னெனவுரை தருவர் மேலையோர்.

அனைத்துயிர்களுக்கும் கதியானவர் முக்கண்ணனாகிய சிவபெருமான் ஒருவரே என்று முழுவதுமாக அடைக்கலம் புகுபவனே சரணாகதன் எனப்படுவான்.

अथ शरणार्थिस्वरूपं कथयति-

विमुक्तभोगलालस्यो देवतान्तरनिस्पृहः।
शिवमभ्यर्थयन् मोक्षं शरणार्थीति गीयते॥६०॥

உலகபோகங்களை அறவே வெறுத்து ஏனைய தேவர்களைச் சிறிதும் நினையாமல் சிவபெருமான் ஒருவரிடம் மட்டுமே மோக்ஷத்தை வேண்டுபவன் சரணார்த்தி எனப்படுகின்றான்.

விடுத்துறு புலன்வழி விண்ணு ளோர்பதத்
தெடுத்துள வவாவகன் றிறையை முத்திவேட்
டடுத்தவ னேசர ணார்த்தி யென்பவன்
குடத்தினி லுதித்துயர் குவட்டி லுற்றுளோய்.

குடத்தில் தோன்றிய அகத்தியனே! ஐம்புல இன்பங்களை அறவே வெறுத்து ஏனைய தேவர்களைச் சிறிதும் நினையாமல் சிவபெருமான் ஒருவரிடம் மட்டுமே மோக்ஷத்தை வேண்டுபவன் சரணார்த்தி எனப்படுகின்றான்.

एवं शिवं प्रपन्नानां किमपि सत्कर्म मास्त्वित्याह-

ये प्रपन्ना महादेवं मनोवाक्कायकर्मभिः।
तेषां तु कर्मजातेन किं वा देवतादितर्पणैः ॥ ६१ ॥

மஹாதேவனுன சிவபெருமான் ஒருவரையே மனம், மெய், மொழிகளால் சரணடைந்தவர்களுக்கு கருமபலன்களாலும், மற்ற தேவர்களே வணங்குவதாலும் யாது பயன்?

மனமொழி மெய்வினை கொண்டு வாண்மதி
புனைமுடி யிறைவனைப் புகலென் றெய்தினோர்க்
கினைவுறு செயன்மலி யாக மாதியாம்
வினைகொடு பெறுபய னியாது வேண்டியே.

இளமதியைச் சூடிய சிவபெருமான் ஒருவரையே மனம், மெய், மொழிகளால் சரணடைந்தவர்களுக்கு யாகம் முதலிய கருமபலன்களால் யாது பயன்?

कुत इत्यत्र तदर्थं सूत्रद्वयेन प्रतिपादयति-

सर्वेषामपि यज्ञानां क्षयः स्वर्गः फलायते।
अक्षयं फलमाप्नोति प्रपन्नः परमेश्वरम् ॥ ६२ ॥

யாகம் முதலான எல்லாக் கருமங்களுக்கும் அழியக்கூடிய சுவர்க்கம் ஒன்றே பயன்; ஆனுல் சிவபெருமானேச் சரணடைந்தோர்க்கு அழிவற்ற மோக்ஷமே கிட்டும்.

பண்ணிய மகவினை பலவினாற் கெடும்
விண்ணுறு பதமலால் வேறுண் டாகுமோ
கண்ணுதல் சரண்புகுங் கருத்தின் மேன்மையோ
னண்ணுவ தழிவுறா ஞான விடரோ.

யாகம் முதலான எல்லாக் கருமங்களுக்கும் அழியக்கூடிய சுவர்க்கம் ஒன்றே பயன்; ஆனுல் சிவபெருமானேச் சரணடைந்தோர்க்கு அழிவற்ற மோக்ஷமே கிட்டும்.

पापिनां कथमित्यत्राह-

प्रपन्नपारिजातस्य भवस्य परमात्मनः।
प्रपत्त्या किं न जायेत पापिनामपि देहिनाम्॥ ६३॥

சரணடைந்தோர்க்கு எல்லாவற்றையும் அளிக்கும் பாரிஜாதக் கொடியான சிவபெருமானைச் சரணடைவதால் கொடிய பாவிகளுக்குக் கூட எல்லா நலன்களும் உண்டாகும்.

தனையடை பவர்க்குத்தண் ணளிசெய் கற்பக
மெனுமர னிணையடி புகலென் றெய்துறி
னினைவரும் பாதக நீச ராயினும்
பினையவர் பெறாதபே றேது பேசினே.

சரணடைந்தோர்க்கு எல்லாவற்றையும் அளிக்கும் கற்பகமான சிவபெருமானைச் சரணடைவதால் கொடிய பாவிகளுக்குக் கூட எல்லா நலன்களும் உண்டாகும்.

तस्मात् शिवप्रपन्ना एव श्रेष्ठा इत्याह-

प्रपन्नानां महादेवं परिपक्वान्तरात्मनाम्।
जन्मैव जन्म नान्येषां वृथा जननसङ्गिनाम्॥ ६४॥

மனப்பக்குவத்துடன் சிவபெருமான் ஒருவரையே முற்றிலும் சரணடைந்தோர்களின் பிறப்பே பயனுள்ள பிறப்பு; மற்றவர்களின் பிறவி வீணே.

பரமனை யடைதரும் பாச நெஞ்சினோன்
பெருமைகொள் பிறவியே பிறவி யன்னவன்
றிருமல ரடியிணை சேர்ந்தி டாதவர்
வருமவப் பிறப்பினைப் பிறப்பில் வைத்திடார்.

மனப்பக்குவத்துடன் சிவபெருமான் ஒருவரையே முற்றிலும் சரணடைந்தோர்களின் பிறப்பே பயனுள்ள பிறப்பு; மற்றவர்களின் பிறவி வீணே.

अथ तदेव विशदयति-

दुर्लभं मानुषं प्राप्य जननं ज्ञानसाधनम्।
ये न जानन्ति देवेशं तेषामात्मा निरर्थकः॥ ६५॥

உயர்ந்த ஞானத்தை அடைவதற்குச் சாதனமான இம்மானுடப் பிறவியையடைந்தும் தேவதேவனுன சிவபெருமானே உணராதவர்களின் ஆன்மா பயனற்றது.

பெறலரு மானிடப் பிறவி பெற்றுமோ
ரறிவுரு வாகிய வவிர்ச டைப்பிரான்
றிறமுணர் குறுநெறி சேர்ந்தி டாரெனின்
வறிதவ ருயிரொடு வாழு நாளரோ.

உயர்ந்த ஞானத்தை அடைவதற்குச் சாதனமான இம்மானுடப் பிறவியையடைந்தும் தேவதேவனுன சிவபெருமானே உணராதவர்களின் ஆன்மா பயனற்றது.

अथ 'कुलं पवित्रं जननी कृतार्था' इति सूतसंहितानुसारेण शरणमहत्त्वं प्रकाश्य तत्स्थलं समापयति-

तत्कुलं हि सदा शुद्धं सफलं तस्य जीवितम्।
यस्य चित्तं शिवे साक्षाद् विलीनमबहिर्मुखम्॥ ६६॥

எவனுடைய சித்தமானது வெளி விஷயங்களில் செல்லாமல் எப்போதும் சிவபெருமானிடத்திலேயே நாட்டம் கொள்கிறதோ அவனுடைய குலமே சுத்தமானது, அவனுடைய வாழ்வே பயனுடையது.

## इति शरणमहत्त्वस्थलम्

புறந்திரி யாதுளம் புராரி தன்கணே
செறிந்திடு மொருபெருஞ் சிறப்புப் பெற்றுளோன்
பிறந்திடு குலமதே பெருமை பெற்றிடு
முறைந்தவன் வாழுநாள் பயனொ டொன்றுமால்.

எவனுடைய சித்தமானது வெளி விஷயங்களில் செல்லாமல் எப்போதும் சிவபெருமானிடத்திலேயே நாட்டம் கொள்கிறதோ

அவனுடைய குலமே சுத்தமானது, அவனுடைய வாழ்வே பயனுடையது.

சரணமான்மியத்தலம் முற்றும்.

## अथ प्रसादमहत्त्वस्थलम्

अथ पूर्वोक्तगुरुलिङ्गादिमहत्त्वानुभवस्थितेः शिवप्रसादलभ्यत्वात् तत्प्रसादमहत्त्वं कथयति-

गुरुलिङ्गादिमाहात्म्यविशेषानुभवस्थितिः।
यस्माच्छिवप्रसादात् स्यात्तादस्य महिमोच्यते॥ ६७॥

குரு, லிங்கம் முதலியவற்றின் அரிய பெருமைகளை எந்த சிவப்பிரஸாதத்தின் வாயிலாக உணர்கின்றுனே அதுவே அதன் மஹிமையாகும்.

குருபரன் முதலியோர் பெருமை கூட்டுணத்
தருவது சிவப்பிர சாத மாதலா
லுரைசெயு மதனது பெருமை யோதுவ
ரிருவினை யெனும்பகை யெறிந்து ளோர்களே.

குரு, லிங்கம் முதலியவற்றின் அரிய பெருமைகளை எந்த சிவப்பிரஸாதத்தின் வாயிலாக உணர்கின்றுனே அந்த மஹிமையை அறிதல் நலம் பயக்கும்.

ननु शिवप्रसादः कथं गुरुलिङ्गादिमहत्त्वविशेषानुभवस्थितिहेतुरित्यत्राह-

सदा लिङ्गैकनिष्ठानां गुरुपूजानुषङ्गिणाम्।
प्रपन्नानां विशुद्धानां प्रसीदति महेश्वरः॥ ६८॥

எப்போதும் லிங்கத்திலேயே நாட்டமும், குருபூஜையில் விருப்பமும் கொண்டவனுயும், சிவபெருமானையே சரணடைந்தவனுயும், தூய்மையானவனுயும் விளங்குபவனுக்கு மஹேசுவரன் அருள் புரிகிறுர்.

புகலெனச் சிவபிரான் றனைப்பொ ருந்தினோர்க்
கிகலறு சிவப்பிர சாத மெய்துறு

மிகுபவப் பகையென விளம்பு மன்னதிவ்
வகலிடத் தரிதரி தயல வர்க்கரோ.

எப்போதும் லிங்கத்திலேயே நாட்டமும், குருபூஜையில் விருப்பமும் கொண்டவனும், சிவபெருமானையே சரணடைந்தவனும், தூய்மையானவனும் விளங்குபவனுக்கு மஹேசுவரன் அருள் புரிகிறார்.

स च शिवप्रसादः कीदृशस्तेन किं भवतीत्यत्राह-

प्रसादोऽपि महेशस्य दुर्लभः परिकीर्त्यते।
घोरसंसारसन्तापनिवृत्तिर्येन जायते॥ ६९॥
यज्ञास्तपांसि मन्त्राणां जपश्चिन्ता प्रबोधनम्।
प्रसादार्थं महेशस्य कीर्तितानि न संशयः॥ ७०॥

கொடிய சம்சார நோயை நீக்கும் சிவபிரானின் பிரஸாதம் கிடைத்தற்கரியது; யாகங்கள், கடும் தவம், மந்திரஜபம், சைவ நூல்களைக் கற்றல் ஆகியன மஹேசுவரனின் பிரஸாதத்தைப் பெறுவதற்கான உபாயங்களே.

மந்திர மகந்தவந் தியாந மற்றுள
தந்திர மறிவிவை யாவுந் தண்கதிர்ச்
சந்திர முடிபிர சாத மெய்துற
வந்தன வெனவறி மனந்து ணிந்தரோ.

கொடிய சம்சார நோயை நீக்கும் சிவபிரானின் பிரஸாதம் கிடைத்தற்கரியது; யாகங்கள், கடும் தவம், மந்திரஜபம், சைவ நூல்களைக் கற்றல் ஆகியன மஹேசுவரனின் பிரஸாதத்தைப் பெறுவதற்கான உபாயங்களே.

ननु मोक्षस्य भक्तिमूलकत्वात् किं प्रसादेनेत्यत्राह-

प्रसादमूला सर्वेषां भक्तिरव्यभिचारिणी।
शिवप्रसादहीनस्य भक्तिश्चापि न सिद्ध्यति॥ ७१॥

சிவப்பிரஸாதத்தின் வாயிலாகவே அனவருக்கும் சிவபக்தி கிட்டுகிறது; அது இல்லையெனில் சிவபக்தியும் கைகூடாது.

तस्मात्-

गर्भस्थो जायमानो वा जातो वा ब्राह्मणोऽथवा।
अन्त्यजो वापि मुच्येत प्रसादे सति शाङ्करे॥ ७२॥

கருப்பையிலிருக்கும் கருவோ, பிறந்த சிசுவோ, அந்தணனே அல்லது கடைசி வருணத்தில் பிறந்தவனே யாராயினும் சிவப்பிரஸாதத்தினால் தான் முக்தியடைகின்றான்.

மொழிதரு சிவப்பிர சாத மூலத்த
தொழிவறும் பத்திதா னோதும் வேதிய
ரிழிவின ரெனவிலை யாரு முய்குவர்
விழிநுத லினன்பிர சாத மேவினே.

கருப்பையிலிருக்கும் கருவோ, பிறந்த சிசுவோ, அந்தணனே அல்லது கடைசி வருணத்தில் பிறந்தவனே யாராயினும் சிவப்பிரஸாதத்தினால் தான் முக்தியடைகின்றான்.

अथ ब्रह्मादयोऽपि शिवप्रसादेनैव नित्यसिद्धा इत्याह-

ब्रह्माद्या विबुधाः सर्वे स्वस्वस्थाननिवासिनः।
नित्यसिद्धा भवन्त्येव प्रसादात् परमेश्वरात्॥ ७३॥

பிரம்மா முதலான தேவர்களும் சிவபெருமான் திருவருளால் தான் தத்தம் உயர்ந்த நிலையை அடைந்திருக்கின்றனர்.

பங்கய மலரவ னாதிப் பண்ணவர்
சங்கர னருட்பிர சாதங் கொண்டுதம்
மங்கல பதங்களின் வாழ்வு மன்னியே
சிங்கலி னித்திய சித்த ராயினார்.

பிரம்மா முதலான தேவர்களும் சிவபெருமான் திருவருளால் தான் தத்தம் உயர்ந்த நிலையை அடைந்திருக்கின்றனர்.

इति सूतसंहितावचनानुसारेणाह-

प्रसादे शाम्भवे सिद्धे परमानन्दकारणे।
सर्वं शिवमयं विश्वं दृश्यते नात्र संशयः॥ ७४॥

மிக உயர்ந்த ஆனந்த நிலைக்குக் காரணமான சிவபிரான் திருவருள் கைகூடினால் எல்லாம் சிவமயமாகக் காட்சியளிக்கும் என்பது உறுதி.

தவநிகழ் சிவப்பிர சாத மெய்துறிற்
சிவமய மாகியே திகழும் யாவையும்
பவவலை யறவரு பான்மை யுண்டுகொ
லவமறு மரன்பிர சாத மன்றியே.

மிக உயர்ந்த ஆனந்த நிலைக்குக் காரணமான சிவபிரான் திருவருள் கைகூடினால் எல்லாம் சிவமயமாகக் காட்சியளிக்கும் என்பது உறுதி.

பலமொழி பகர்தலாற் பயனென் மூன்றெனு
முலகினு ளொத்தது முயர்வு கண்டது
மிலையிலை யிவ்வுரை யுண்மை யீர்ஞ்சடைத்
தலைவன தருட்பிர சாதத் திற்கரோ.

சுருங்கக் கூறின் செஞ்சடையணிந்த சிவபெருமான் திருவருளுக்கீடாக மூவுலகிலும் யாதும் இல்லை.

யோகம்வேண் டுறும்பிர சாத முற்றிட
வேகமாஞ் சிவமய மாகு மியாவையு
மாகையாற் சிவமெனு மாவி யோனிவன்
பேர்கிலா நிலையுடைப் பிராண லிங்கியாம்.

சிவபெருமானருள் பெற்றவன் அனைத்தையும் சிவமயமாகக் காண்பதால் அவன் பிராணலிங்கியெனப்படுகின்றான்.

பிரசாதமான்மியத்தலம் முற்றும்

## द्वादशः परिच्छेदः
## अथ प्राणलिङ्गिस्थलम्

अगस्त्य उवाच
भक्तो माहेश्वरश्चेति प्रसादीति नो बोधितः।
एक एव कथं चैष प्राणलिङ्गीति कथ्यते॥१॥

அகத்தியர் கூறுகிருர்:
பக்தனென்றும், மாஹேசுவரனென்றும் பிரஸாதி என்றும் பிராணலிங்கி ஒருவனே எவ்வாறு அழைக்கப்படுகின்ருன் என்பதை எனக்கு விளக்குவாயாக.

பத்தனோ டொண்ம கேசன் பகர்பிர சாதி யென்றிங்
கொத்தனே வருவ னென்ன வுரைத்தனை பிராணலிங்கி
யெத்திற மதனா லாவ னிவனிது தனையுங் கூறாய்
கைத்தல மழுவி னோன்வாழ் கைலையங் கணங்கள் வேந்தே.

அகத்தியர் கூறுகிருர்:
பக்தனென்றும், மாஹேசுவரனென்றும் பிரஸாதி என்றும் பிராணலிங்கி ஒருவனே எவ்வாறு அழைக்கப்படுகின்ருன் என்பதை எனக்கு விளக்குவாயாக.

श्रीरेणुक उवाच
भक्तो माहेश्वरश्चैष प्रसादीति च कीर्तितः।
कर्मप्राधान्ययोगेन ज्ञानयोगोऽस्य कथ्यते॥२॥

இரேணுகர் கூறுகிருர்
கருமயோக அப்பியாசத்திஞல் அவ்வாறு பக்தன் மாஹேச்வரன் என அழைக்கப்படுகிருன்; அவனுடைய ஞானயோகப் பயிற்சியைக் குறித்து இப்போது கூறுவோம்.

ஒப்பறு கரும யோகத் துயர்ச்சியாற் பத்த னாதி
முப்பெயர் புனைந்து நின்றான் மொழிதரு மிவனி வற்குத்
தப்பறு ஞான யோகஞ் சாற்றிடத் தக்க தீங்குத்

துப்புறழ் சடிலக் கற்றைத் துகளின்மா முனிவ ரேறே.

இரேணுகர் கூறுகிருர்
கருமயோக அப்பியாசத்திஞல் அவ்வாறு பக்தன் மாஹேச்வரன் என அழைக்கப்படுகிருன்; அவனுடைய ஞானயோகப் பயிற்சியைக் குறித்து இப்போது கூறுவோம்.

इति वीरागमोक्तरूपप्राणलिङ्गवान् प्राणलिङ्गीत्याह-

लिङ्गं चिदात्मकं ब्रह्म तच्छक्तिः प्राणरूपिणी।
तद्रूपलिङ्गविज्ञानी प्राणलिङ्गीति कथ्यते॥ ३॥

சின்மயவடிவான பிரம்மமே லிங்கமாகும்; அதன் சக்தியே பிராணவடிவானது. இவ்வாறு லிங்கவடிவத்தை நன்குணர்ந்தவனே பிராணலிங்கியெனப்படுகின்ருன்.

பேரறி வுருவாய் நின்ற பிரமமே யிலிங்க மாமவ்
வோருறு மிலிங்க சத்தி பிராணநல் லுருவாய் நிற்குந்
தேருறு மினைய வாறாஞ் சிவலிங்கந் தனையு ணர்ந்தோ
னேருறு பிராண லிங்கி யென்பவ னென்பர் மேலோர்.

சின்மயவடிவான பிரம்மமே லிங்கமாகும்; அதன் சக்தியே பிராணவடிவானது. இவ்வாறு லிங்கவடிவத்தை நன்குணர்ந்தவனே பிராணலிங்கியெனப்படுகின்ருன்.

अथास्यापि स्थलभेदाः सन्ति किमित्यत्राह-

प्राणलिङ्गस्थलं चैतत् पञ्चस्थलसमन्वितम्।
प्राणलिङ्गिस्थलं चादौ प्राणलिङ्गार्चनं ततः॥ ४॥
शिवयोगसमाधिश्च ततो लिङ्गनिजस्थलम्।
अङ्गलिङ्गिस्थलं चाथ क्रमादेषां भिदोच्यते॥ ५॥

பிராணலிங்கஸ்தலம் ஐந்து ஸ்தலங்களைத் தன்னகத்தே கொண்டது: முதலில் பிராணலிங்கி ஸ்தலம், பின்னர் முறையே பிராணலிங்கார்ச்சனம், சிவயோகஸமாதி[ஸ்தலம்], லிங்கநிஜஸ்தலம், அங்கலிங்கிஸ்தலம் என்பன. இவற்றின் வேறுபாடுகள் விளக்கப்படும்.

ஆசறு பிராண லிங்கித் தலமொரைந் தாகு முன்னர்ப்
பேசுறு பிராண லிங்கித் தலமொடு பிராண லிங்க
பூசனை யதன்பின் மிக்க சிவயோக சமாதி பெற்று
நேசம துறுமி லிங்க நிசமங்க லிங்க மென்றே.

பிராணலிங்கஸ்தலம் ஐந்து ஸ்தலங்களைத் தன்னகத்தே கொண்டது: முதலில் பிராணலிங்கி ஸ்தலம், பின்னர் முறையே பிராணலிங்கார்ச்சனம், சிவயோகஸமாதி[ஸ்தலம்], லிங்கநிஜஸ்தலம், அங்கலிங்கிஸ்தலம் என்பன. இவற்றின் வேறுபாடுகள் விளக்கப்படும்.

प्राणापानसमाघातात् कन्दमध्यात्तदुत्थितम्।
प्राणलिङ्गं तदाख्यातं प्राणापाननिरोधिभिः॥ ६॥

மூலாதாரத்தில் பிராணன் அபானன் ஆகியவற்றின் சமநிலையில் தோன்றும் உயர்ந்த சோதிதான் பிராணலிங்கமென யோகிகளால் கூறப்படுகிறது.

தயங்குறு பிராணா பாந சமநிலை பெறலான் மூலத்
துயர்ந்தெழு சோதி யாதவ் வொளிமிகு சோதி தானே
வயங்குறு பிராண லிங்க மென்னவே வகுக்கப் பட்ட
தியங்குறு பிராணா பாந நிரோதிக ளென்போர் தம்மால்.

மூலாதாரத்தில் பிராணன் அபானன் ஆகியவற்றின் சமநிலையில் தோன்றும் உயர்ந்த சோதிதான் பிராணலிங்கமென யோகிகளால் கூறப்படுகிறது.

नन्विदं केन विज्ञातमित्यत्राह-

प्राणो यत्र लयं याति भास्करो तुहिनं यथा।
तत्प्राणलिङ्गमुद्दिष्टं तद्धारी स्यात् तदाकृतिः॥ ७॥

சூரியனில் பனியடங்குவது போல் பிராணன் எங்கு ஒடுங்குமோ அதுவே பிராணலிங்கமெனப்படும்; அதைத் தரித்தவன் அவ்வுருவமே பெறுவான்.

பரிதியு ளடங்கு மெய்கூர் பனியென யாதன் கண்ணே
திரிதரு பிராண னொன்றிச் செறிந்திடு மதுவே கூறி
னரிதெனும் பிராண லிங்க மென்பரங் கதுத ரித்தோ
னுரைதரு பிராண லிங்க வுரையுடை யோனா மன்றே.

சூரியனில் பனியடங்குவது போல் பிராணன் எங்கு ஒடுங்குமோ அதுவே பிராணலிங்கமெனப்படும்; அதைத் தரித்தவன் அவ்வுருவமே பெறுவான்.

अथ तल्लिङ्गं केषां स्फुरतीत्यत्राह-

ज्ञानिनां योगयुक्तानामन्तः स्फुरति दीपवत्।
चिदाकारं परब्रह्मलिङ्गमज्ञैर्न भाव्यते॥८॥

யோகசித்திபெற்ற ஞானிகளின் உள்மனதில் பரப்பிரம்மலிங்கமானது அறிவொளியாய் எப்போதும் பிரகாசிக்கின்றது; அறிவற்றவர்களுக்கு அது விளங்காது.

அறிவுருவாகி யெங்கு மமர்பரப் பிரம மாகுங்
குறியுய ரிலிங்க ஞான யோகுடைக் குணத்தா னெஞ்சி
லெரிசுட ராகி நின்றே யிலங்குறு மறிவி லாராற்
செறிவுறு பொருளன் றாகு மென்றுரை செய்வர் மேலோர்.

யோகசித்திபெற்ற ஞானிகளின் உள்மனதில் பரப்பிரம்மலிங்கமானது அறிவொளியாய் எப்போதும் பிரகாசிக்கின்றது; அறிவற்றவர்களுக்கு அது விளங்காது.

अथैतादृशप्राणलिङ्गं विहाय बाह्यलिङ्गनिष्ठा मूढा इत्याह-

अन्तःस्थितं परं लिङ्गं ज्योतीरूपं शिवात्मकम्।
विहाय बाह्यलिङ्गस्था विमूढा इति कीर्तिताः॥९॥

மனதினுள் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் சோதிவடிவான சிவலிங்கத்தை விட்டு வெளியே இருக்கும் லிங்கத்தை நாடுபவன் மூடனே.

இலங்கொளி யாகி யென்று மிதயநன் மலரிற் றோன்றி

நலந்தரு பரமாநந்த ஞானலிங் கத்தை நீங்கிக்

கலந்துள புறத்தி லிங்கக் கருத்துள னாகி யுற்றோன்
மலங்குறு பரம மூட னென்னவே மதிக்கப் பட்டான்.

மனதினுள் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் ஆனந்த சோதிவடிவான சிவலிங்கத்தை விட்டு வெளியே இருக்கும் லிங்கத்தை நாடுபவன் மூடனே.

तस्माद् बाह्यलिङ्गविमुखः सन् चिल्लिङ्गपरमार्श्यैव प्राणलिङ्गीत्याह-

संविल्लिङ्गपरामर्शी बाह्यवस्तुपराङ्मुखः।
यः सदा वर्तते योगी प्राणलिङ्गी स उच्यते॥ १०॥

பேரறிவு வடிவான லிங்கத்தையே எப்போதும் தியானிப்பவனுயும், புற உலக நாட்டத்தினின்றும் மனத்தை அறவே நீக்கியவனுமான யோகியே பிராணலிங்கி எனப்படுகின்ருன்.

புறப்பொரு ளிதன்கட் செல்லும் புத்திவிட் டகத்தி லென்றுஞ்
சிறப்புறு மொளியாய்த் தோன்றுஞ் சிந்மய லிங்கந் தன்னைக்
குறித்துணர் கருத்தின் றிட்பங் கொண்டுற நின்று ளோனே
மறப்பறு பிராண லிங்கி யென்குவர் மதியின் மிக்கோர்.

பேரறிவு வடிவான லிங்கத்தையே எப்போதும் தியானிப்பவனுயும், புற உலக நாட்டத்தினின்றும் மனத்தை அறவே நீக்கியவனுமான யோகியே பிராணலிங்கி எனப்படுகின்ருன்.

ननु बाह्यलिङ्गादौ वैमुख्यं किंनिबन्धनमित्यत्राह-

मायाविकल्पजं विश्वं हेयं संचिन्त्य नित्यशः।
चिदानन्दमये लिङ्गे विलीनः प्राणलिङ्गवान्॥ ११॥

மாயையின் வெளித்தோற்றமான இவ்வுலகம் நீக்கப்படவேண்டியது என உறுதியாக எண்ணி எப்போதும் சிதானந்தவடிவான லிங்கத்திலேயே ஒடுங்கியிருப்பவன் பிராணலிங்கமுடையவன் எனப்படுகிறுன்.

மாயையின் விகற்பந் தன்னால் வந்துள சகந்தோன் றாமற்

போயொழிந் திடுமா றென்றும் பொருந்துபு சிந்தை செய்து

பாயொளி யறிவாநந்த பராபர லிங்கந் தன்னிற்
றூயநெஞ் சடங்க வல்லோன் றுகளறு பிராண லிங்கி.

மாயையின் வெளித்தோற்றமான இவ்வுலகம் நீக்கப்படவேண்டியது என உறுதியாக எண்ணி எப்போதும் சிதானந்தவடிவான லிங்கத்திலேயே ஒடுங்கியிருப்பவன் பிராணலிங்கமுடையவன் எனப்படுகிறான்.

ननु चिल्लिङ्गस्य नादबिन्दुकलातीतत्वात् प्राणस्य नादबिन्दुकलारूपत्वात् कथं तस्य पीठरूपत्वं सम्भवतीति शङ्कां प्राणलिङ्गिस्थलं समापयति-

सत्ता प्राणमयी शक्तिः सद्रूपं प्राणलिङ्गकम्।
तत्सामरस्यविज्ञानात् प्राणलिङ्गीति कथ्यते॥ १२॥

என்றுமழியாத உள்பொருளே பிராணலிங்கம்; அதன் சக்தியே பிராணசக்தியாம். இவ்விரண்டின் சமநிலையை உணர்ந்தவனே பிராணலிங்கியாவான்.

इति प्राणलिङ्गिस्थलम्

சத்தையாஞ் சத்தி தானே தக்கதோர் பிsராண னாகுஞ்
சத்ததாம் பிராண லிங்கந் தற்சம ரசஞா னத்தால்
வைத்ததாம் பிராண லிங்கி யெனும்பெய ரெனவ குப்பர்
தத்துவா தீத மாய தனிநிலை யுணர்ந்த நல்லோர்.

என்றுமழியாத உள்பொருளே பிராணலிங்கம்; அதன் சக்தியே பிராணசக்தியாம். இவ்விரண்டின் சமநிலையை உணர்ந்தவனே பிராணலிங்கியாவான்.

பிராணலிங்கித்தலம் முற்றும்

अथ प्राणलिङ्गार्चनस्थलम्

अथ प्राणलिङ्गिना विधीयमानसकलयोगशास्त्रसिद्धप्राणलिङ्गार्चनप्रकारं सप्तभिः सूत्रैः प्रतिपादयति-

अन्तर्गतं चिदाकारं लिङ्गं शिवमयं परम्।

पूज्यते भावपुष्पैर्यत् प्राणलिङ्गार्चनं हि तत्॥ १३॥

அகத்தில் விளங்கும் சின்மயமான சிவலிங்கத்தை பாவபுஷ்பங்களால் அருச்சிப்பதே பிராணலிங்கார்ச்சனம் எனப்படும்.

நன்றுறு மிதயந் தன்னின் ஞானலிங் கத்தை யெய்தி
நின்றெழு மன்பி னாலே நினைவெனு மலர்கள் கொண்டு
புன்றொழி லிலாது செய்யும் பூசனை யதுவே கண்டா
யொன்றொரு பிராணலிங்க பூசையென் றுரைப்ப தன்றே.

அகத்தில் விளங்கும் சின்மயமான சிவலிங்கத்தை உள்ளத்தில் தோன்றும் அன்பெனும் மலர்களால் அருச்சிப்பதே பிராணலிங்கார்ச்சனம் எனப்படும்.

अथ कुत्र पूजनीयमित्यत्र प्राणलिङ्गाश्रयभूतोर्ध्वहृत्कमलं वर्णयित्वा भावपुष्पैः पूजनीयमित्याह-

अन्तः पवनसंपृष्टे सुसूक्ष्माम्बरशोभिते।
मूर्धन्यचन्द्रविगलत्सुधासेकातिशीतले॥ १४॥
बद्धेन्द्रियनवद्वारे बोधदीपे हृदालये।
पद्मपीठे समासीनं चिल्लिङ्गं शिवविग्रहम्।
भावयित्वा सदाकालं पूजयेद् भाववस्तुभिः॥ १५॥

மிக சூக்குமமான உட்புற ஆகாசத்தில் இதமான உள்காற்றினுல் வருடப்பட்டு உச்சந்தலையில் பொங்கிப் பெருகும் குளிர்ந்த அமிர்தத்தால் நீராட்டப்பட்டு உடலின் ஒன்பது துவாரங்களும் தத்தம் காரியத்திலிருந்து அடைக்கப்பட்டதாய் ஞான ஒளிச்சுடரில் இலங்கும் இதயக் கோயிலில் பத்மபீடத்தில் அமர்ந்துள்ள சின்மயமான லிங்கத்தை இடையருது அகத்தில் தோன்றும் பூ முதலிய பொருட்களால் வழிபடவேண்டும்.

அகத்துறு பவநந் தன்னை யடைத்துநுண் விசும்பு பூத்து
மிகத்தலை மதியு குப்ப வீழமு தினிற்கு ளிர்ந்து
தகைக்குமொன் பதுவா யுற்றுத் தனியறி வெனும்வி ளக்கிட்
டுகப்புறு மிதயத் தீசற் குஞற்றுக பாவ பூசை.

உட்புற ஆகாசத்தில் இதமான உள்காற்றினால் வருடப்பட்டு உச்சந்தலையில் பொங்கிப் பெருகும் குளிர்ந்த அமிர்தத்தால் நீராட்டப்பட்டு உடலின் ஒன்பது துவாரங்களும் தத்தம் காரியத்திலிருந்து அடைக்கப்பட்டதாய் ஞான ஒளிச்சுடரில் இலங்கும் இதயக் கோயிலில் பத்மபீடத்தில் அமர்ந்துள்ள சின்மயமான லிங்கத்தை இடையறுது அகத்தில் தோன்றும் பூ முதலிய பொருட்களால் வழிபடவேண்டும்.

अथ तानि वस्तूनि कानीत्यत्राह-
क्षमाऽभिषेकसलिलं विवेको वस्त्रमुच्यते।
सत्यमाभरणं प्रोक्तं वैराग्यं पुष्पमालिका॥ १६॥
गन्धः समाधिसम्पत्तिरक्षता निरहङ्कृतिः।
श्रद्धा धूपो महाज्ञानं जगद्भासि प्रदीपिका॥ १७॥
भ्रान्तिमूलप्रपञ्चस्य निवेद्यं तन्निवेदनम्।
मौनं घण्टापरिस्पन्दस्ताम्बूलं विषयार्पणम्॥ १८॥

எல்லையற்ற பொறுமையே சிவபெருமானின் அபிஷேகஜலம், பகுத்தறிவே பெருமானுக்கு அணிவிக்கும் ஆடை, ஆழ்நிலை தியானமே சந்தனம், தான் தனது எனும் அஹங்காரமில்லாமையே பூஜிக்கும் அக்ஷதை, சிரத்தையே தூபம், உலகங்களைப் பிரகாசிக்கும் பேரறிவே தீபம், குழப்பத்தில் தோன்றிய இப்பிரபஞ்சத்தைப் பெருமானுக்குச் சமர்ப்பித்தலே நிவேதனம், மௌனமே பூஜையின் போது ஒலிக்கும் மணியோசை, அனைத்துப் பொருள்களையும் சமர்ப்பித்தலே தாம்பூலமாகும்.

ஆடறல் பொறைவி வேக மாடைபூண் வாய்மை மாலை
தாடரு துறவு கந்தஞ் சமாதியக் கதையாங் கார
வீடெழு தூபந் தூய்மை விளக்கறி வுலக மெல்லாம்
பீடுறு நிவேத நந்தம் பிராற்கொலி மணிநன் மோனம்.

எல்லையற்ற பொறுமையே சிவபெருமானின் அபிஷேகஜலம், பகுத்தறிவே பெருமானுக்கு அணிவிக்கும் ஆடை, ஆழ்நிலை தியானமே சந்தனம், தான் தனது எனும் அஹங்காரமில்லாமையே பூஜிக்கும் அக்ஷதை, சிரத்தையே

தூபம், உலகங்களைப் பிரகாசிக்கும் பேரறிவே தீபம், குழப்பத்தில் தோன்றிய இப்பிரபஞ்சத்தைப் பெருமானுக்குச் சமர்ப்பித்தலே நிவேதனம், மௌனமே பூஜையின் போது ஒலிக்கும் மணியோசை.

विषयभ्रान्तिराहित्यं तत्प्रदक्षिणकल्पना।
बुद्धेस्तदात्मिका शक्तिर्नमस्कारक्रिया मता॥१९॥
एवंविधैर्भावशुद्धैरुपचारैरदूषितैः।
प्रत्युन्मुखमना भूत्वा पूजयेल्लिङ्गमान्तरम्॥२०॥

इति प्राणलिङ्गार्चनस्थलम्

உலகியல் பொருட்களின்கண் மயங்காமலிருத்தலே சிவபெருமானைப் பிரதக்ஷிணம் செய்தல், தனது புத்தியை சிவசக்தியாகவே பாவித்தல் நமஸ்காரம். இவ்வாருக சுத்தமான மனதால் உண்டாக்கப்பட்ட உபசாரங்களினுல் மனத்தை உள்ளே திருப்பி உள்மனத்திலேயே சிவபெருமானைப் பூஜிக்கவேண்டும்.

பொறிவிட யார்ப்பி தந்தாம் பூலமவ் விடயத் தோய்த
லறுமது வலம திக்கிங் கதன்வடி வாகுஞ் சத்தி
பெறுமது வணக்க மாமிப் பெற்றியின் மனலிங் கத்தை
மறுவறு மனத்தர்ச் சிக்க வாலிய பொருள்கள் கொண்டே.

உலகியல் பொருட்களின்கண் மயங்காமலிருத்தலே சிவபெருமானைப் பிரதக்ஷிணம் செய்தல், தனது புத்தியில் சிவசக்தியாகவே பாவித்தல் நமஸ்காரம். இவ்வாருக சுத்தமான மனதால் உண்டாக்கப்பட்ட உபசாரங்களினுல் மனதை உள்ளே திருப்பி உள்மனத்திலேயே சிவபெருமானைப் பூஜிக்கவேண்டும்.

பிராணலிங்கார்ச்சநத்தலம் முற்றும்.

## अथ शिवयोगसमाधिस्थलम्

अन्तः क्रियारतस्यास्य प्राणलिङ्गार्चनक्रमैः।
शिवात्मध्यानसम्पत्तिः समाधिरिति कथ्यते॥२१॥

பிராணலிங்கத்தை உள்மனதில் எப்போதும் அருச்சனை செய்து கொண்டே இருப்பவனின் சிவத்தியானமே ஸமாதி எனப்படும்.

புகன்றுள பிராண லிங்க பூசனைத் தொழிலின் கண்ணே
யுகந்துள விவர்க்கு மிக்க வொருசிவ ரூப மாகத்
திகழ்ந்துள தியாநந் தன்னைச் செப்புறுஞ் சமாதி யென்ன
வகன்றறி பரந்த வொண்க ணரிவைபங் கினனூ லன்றே.

பிராணலிங்கத்தை உள்மனதில் எப்போதும் அருச்சனை செய்து கொண்டே இருப்பவனின் சிவத்தியானமே ஸமாதி எனப்படும்.

सर्वतत्त्वोपरिगतं सच्चिदानन्दभासुरम्।
स्वप्रकाशमनिर्देश्यमवाङ्मानसगोचरम्॥२२॥
उमाख्यया महाशक्त्या दीपितं चित्स्वरूपया।
हंसरूपं परात्मानं सोऽहंभावेन भावयेत्।
तदेकतानतासिद्धिः समाधिः परमो मतः॥२३॥

எல்லாத் தத்துவங்களுக்கும் மேலாய் ஸச்சிதனந்த வடிவாய் சுயம்பிரகாசமாய் வாக்கு மற்றும் மனத்திற்கும் எட்டாததாய் இத்தகையது எனச் சொல்லொணுததாய் சின்மயமான உமாதேவியுடன் கூடிப் பிரகாசிப்பதாய் ஹம்ஸவடிவானதாய் விளங்கும் பரமாத்மாவை ஸோஹம் என்று எப்போதும் தியானம் செய்தல் வேண்டும்; அப்போது விளையும் பரமாத்மாவுடனுன ஐக்கியமே உயர்ந்த ஸமாதியாககக் கருதப்படும்.

உரைமன மிறந்த சச்சி தாநந்த வொளியாய் மேலாய்ப்
பரவுதத் துவங்கட் கெல்லாம் பரமசிற் சத்தி தன்னா
லுரமுற வொளிரு மஞ்ச வுருவமாம் பரமான் மாவைத்
திரமொடு பாவ கஞ்செய் திகழ்சோக பாவங் கொண்டு.

எல்லாத் தத்துவங்களுக்கும் மேலானதாய் ஸச்சிதனந்த வடிவாய் சின்மயமான உமாதேவியுடன் கூடிப் பிரகாசிப்பதாய் ஹம்ஸவடிவானதாய் விளங்கும் பரமாத்மாவை ஸோஹம் என்று எப்போதும் தியானம் செய்தல் வேண்டும்.

परब्रह्म महालिङ्गं प्राणो जीवः प्रकीर्तितः।
तदेकभावमननात् समाधिस्थः प्रकीर्तितः॥२४॥

பரப்பிரம்மமே மஹாலிங்கம், பிராணனே ஜீவன்; இவ்விரண்டின் ஐக்கியத்தைத் தியானிப்பதே ஸமாதியாகும்.

பிறங்கொளி மாலிங் கந்தான் பிரமமென் றுரைப்ப நிற்குஞ்
சிறந்துள பிராணன் றன்னைச் செப்புவர் சீவ னென்ன
வறைந்துள வவற்றி னேக பாவமா மனத்தி னானே
யுறுஞ்சிவ சமாதி யோக முற்றவ னென்பர் மேலோர்.

பரப்பிரம்மமே மஹாலிங்கம், பிராணனே ஜீவன்; இவ்விரண்டின் ஐக்கியத்தைத் தியானிப்பதே ஸமாதியாகும்.

अन्तःषट्चक्ररूढानि पङ्कजानि विभावयेत्।
ब्रह्मादिस्थानभूतानि भ्रूमध्यान्तानि मूलतः॥२५॥
भ्रूमध्यादूर्ध्वभागे तु सहस्रदलमम्बुजम्।
भावयेत्तत्र विमलं चन्द्रबिम्बं तदन्तरे॥२६॥

உள்மனத்தில் மூலாதாரத்திலிருந்து நெற்றி நடுவரையிலுள்ள ஆறு சக்கரங்களிலும் பிரம்மா முதலானோர்களின் இருப்பிடமாக ஆறு தாமரைப் பூக்களையும், நெற்றிக்கு மேல் ஆயிரயிதழ்த் தாமரைப்பூவையும், அத்தாமரையின் நடுவில் ஒளிபொருந்திய நிர்மலமான சந்திரனையும் தியானிக்க வேண்டும்.

அகமுறு சக்க ரங்க ளாறினு முற்ற கஞ்சஞ்
சகமருள் பிரம னாதி தானமென் றுன்னி யப்பால்
வகையிதழ் பத்து நூறு மருவுபங் கயம தன்கண்
மிகநிறை விமல விந்து விம்பமொன் றுளது மாதோ.

உள்மனத்தில் மூலாதாரத்திலிருந்து நெற்றி நடுவரையிலுள்ள ஆறு சக்கரங்களிலும் பிரம்மா முதலானோர்களின் இருப்பிடமாக

ஆறு தாமரைப் பூக்களையும், நெற்றிக்கு மேல் ஆயிரயிதழ்த் தாமரைப்பூவையும், அத்தாமரையின் நடுவில் ஒளிபொருந்திய நிர்மலமான சந்திரனையும் தியானிக்க வேண்டும்.

सूक्ष्मरन्ध्रं विजानीयात् तत्कैलासपदं विदुः।
तत्रस्थं भावयेच्छम्भुं सर्वकारणकारणम्॥ २७॥

மிகசூக்குமமான துளையுடையதாய் அந்த சந்திரபிம்பத்தைத் தியானித்து அதைக் கைலாஸமாக எண்ணி அங்கு அனைத்துக்கும் காரணமான சிவபெருமான் வீற்றிருப்பதாகத் தியானிக்க வேண்டும்.

அத்தட மதியி னுட்ப மாம்புழை யொன்று காண்க
வத்தொளை கயிலை யாக வறிந்தவண் வீற்றி ருந்த
சத்திய ஞானா நந்த சங்கரன் றனைப்பா விக்க
வெய்த்தகா ரணங்கட் கெல்லாங் காரண னென்ன வன்றே.

மிகசூக்குமமான துளையுடையதாய் அச்சந்திரபிம்பத்தைத் தியானித்து அதைக் கைலாஸமாக எண்ணி அங்கு அனைத்துக்கும் காரணமான சிவபெருமான் வீற்றிருப்பதாகத் தியானிக்க வேண்டும்.

बहिर्वासनया विश्वं विकल्पार्थं प्रकाशते।
अन्तर्वासितचित्तानामात्मानन्दः प्रकाशते॥ २८॥
आत्मारणिसमुत्थेन प्रमोदमथनात् सुधीः।
ज्ञानाग्निना दहेत् पाशजालं जगन्मयम्॥ २९॥

வெளிப்புறத்திலேயே உழல்வதால் இப்பரந்த வெளியுலகமானது தோற்றமளிக்கின்றது; உட்புறத்தில் பிரகாசிக்கும் ஆன்மாவையே சிந்தித்திருப்பதால் ஆன்மானந்தம் வெளிப்படும். ஆன்மாவெனும் அரணிக்கட்டையால் ஆனந்தத்தைக் கடைவதால் விளையும் ஞானக்கினியால் இவ்வுலகமெனும் பாசவலையைப் பொசுக்க வேண்டும்.

புறந்திரி வதனாற் றோன்றும் புகல்சக விகற்ப முள்ளிற்
செறிந்திடு மனத்தி னோர்க்குத் திகழ்ந்திடு மான்மா நந்த

முறுங்கடை யுவகை தன்னா லுயிரெனு மரணி தன்னிற்
பிறந்துள ஞானத் தீயாற் பெரும்பவஞ் சுடுவ னன்றே.

வெளிப்புறத்திலேயே உழல்வதால் இப்பரந்த வெளியுலகமானது தோற்றமளிக்கின்றது; உட்புறத்தில் பிரகாசிக்கும் ஆன்மாவையே சிந்தித்திருப்பதால் ஆன்மானந்தம் வெளிப்படும்.
ஆன்மாவெனும் அரணிக்கட்டையால் ஆனந்தத்தைக் கடைவதால் விளையும் ஞானக்கினியால் இவ்வுலகமெனும் பாசவலையைப் பொசுக்க வேண்டும்.

संसारविषवृक्षस्य पञ्चक्लेशपलाशिनः।
छेदने कर्ममूलस्य परशुः शिवभावना॥३०॥
अज्ञानराक्षसोन्मेषकारिणः संहृतात्मनः।
शिवध्यानं तु संसारतमसश्चण्डभास्करः॥३१॥
इति शिवयोगसमाधिस्थलम्

ஐவகைத் துன்பங்களைக் கொண்டதும் கருமவினையெனும் ஆணிவேரைக் கொண்டதுமான சம்சாரமெனும் கொடிய விஷமரத்தை வெட்டி அழிப்பதற்கான கோடரி சிவத்தியானமேயாகும்; அஞ்ஞானமெனும் அரக்கர்களால் தோற்றுவிக்கப்படும் சம்சார இருளை அழிப்பது சிவத்தியானமெனும் சூரியனே.

கருமவேர் செறிந்து துன்பப் பாசிலை காட்டி நிற்கு
மொருபெரும் பவம ரத்திற் குற்றவெம் பரசு தானாம்
பெருமல விருளி னுக்குப் பிறங்கொளி யிரவி யாகுந்
தெருமரு மனம டக்குஞ் சிவனுருத் தியாந மன்றே.

ஐவகைத் துன்பங்களைக் கொண்டதும் கருமவினையெனும் ஆணிவேரைக் கொண்டதுமான சம்சாரமெனும் கொடிய விஷமரத்தை வெட்டி அழிப்பதற்கான கோடரி சிவத்தியானமேயாகும்; அஞ்ஞானமெனும் அரக்கர்களால் தோற்றுவிக்கப்படும் சம்சார இருளை அழிப்பது சிவத்தியானமெனும் சூரியனே.

## अथ लिङ्गनिजस्थलम्

स्वान्तस्थशिवलिङ्गस्य प्रत्यक्षानुभवस्थितिः।
यस्यैव परलिङ्गस्य निजमित्युच्यते बुधैः॥३२॥

எவனுக்குத் தனது இதயகமலத்தில் விளங்கும் மேலான சிவலிங்கத்தின் உணர்வு எப்போதும் உள்ளதோ அவனே லிங்கநிஜன் எனப்படுகின்ருன்.

பொருந்துறு மிதய மென்னும் புனிதநன் முளரி சேர்ந்த
வருஞ்சிவ லிங்க மெய்ம்மை யநுபவ சித்தி தானே
பரஞ்சு ட ராமி லிங்க நிசமெனப் பகரா நிற்பர்
திருந்திய கலைகள் யாவுந் தெரிபெரும் புலவரன்றே.

எவனுக்குத் தனது இதயகமலத்தில் விளங்கும் மேலான சிவலிங்கத்தின் உணர்வு எப்போதும் உள்ளதோ அவனே லிங்கநிஜன் எனப்படுகின்ருன்.

ब्रह्मविष्ण्वादयो देवाः सर्वे वेदादयस्तथा।
लीयन्ते यत्र गम्यन्ते तल्लिङ्गं ब्रह्मकेवलम्॥३३॥
चिदानन्दमयः साक्षाच्छिव एव निरञ्जनः।
लिङ्गमित्युच्यते नान्यद् यतः स्याद्विश्वसम्भवः॥३४॥

பிரம்மா, விஷ்ணு முதலான அனைத்துத் தேவர்களும், எல்லா வேதங்களும் எங்கு சென்று ஒடுங்கி மீண்டும் தோன்றுகின்றனவோ அந்த பரப்பிரம்மமே சிதானந்தமயமானதும் எல்லாவற்றிற்கும் பிறப்பிடமுமான மாசற்ற சிவலிங்கமெனப்படுகிறது, மற்றவை அல்ல.

வேதனா தியராந் தேவர் வேதமா தியவா நூல்க
ளியாதினி லடங்கித் தோற்ற மெய்துறு மவ்வி லிங்க
மோதரும் பிரம மேயா முலகுதிக் குறுமி லிங்கந்
தீதறு ஞானா நந்த சிவமேமற் றொழிந்த வல்ல.

பிரம்மா, விஷ்ணு முதலான அனைத்துத் தேவர்களும், எல்லா வேதங்களும் எங்கு சென்று ஒடுங்கி மீண்டும்

தோன்றுகின்றனவோ அந்த பரப்பிரம்மமே சிதானந்தமயமானதும் எல்லாவற்றிற்கும் பிறப்பிடமானதுமான மாசற்ற சிவலிங்கமெனப்படுகிறது, மற்றவை அல்ல. அந்த பரப்பிரமமே சிதானந்தமயமான எல்லாவற்றிற்கும் பிறப்பிடமான மாசற்ற சிவலிங்கமெனப்படுகிறது, மற்றவை அல்ல.

बहुनात्र किमुक्तेन लिङ्गमित्युच्यते बुधैः।
शिवाभिधं परं ब्रह्म चिद्रूपं जगदास्पदम्॥३५॥

அதிகமாகக் கூறுவதில் யாது பயன்? சின்மயனும் உலகங்களெல்லாம் தோன்ருவதற்குக் காரணமானவனும் பரப்பிரம்மனுமான சிவபெருமான் ஒருவரே லிங்கமெனப்படுகிருர்.

உரைப்பதென் பலமாற் றங்க ளுலகுதித் தொடுங்கும் வண்ணந்
தரித்திடு மிடம தாகுஞ் சச்சிதா நந்த மேனிப்
பரப்பிர மந்தா னேகாண் பரசிவ னாமங் கொண்டே
தெரிப்பறு மிலிங்க மென்று செப்புறப் பட்ட தன்றே.

அதிகமாகக் கூறுவதில் யாது பயன்? சின்மயனும் உலகங்களெல்லாம் தோன்ருவதற்குக் காரணமானவனும் பரப்பிரம்மனுமான சிவபெருமான் ஒருவரே லிங்கமெனப்படுகிருர்.

वेदान्तवाक्यजां विद्यां लिङ्गमाहुस्तथाऽपरे।
तदसज्ज्ञेयरूपत्वाल्लिङ्गस्य ब्रह्मरूपिणः॥३६॥

வேதாந்தவாக்கியங்களின் வாயிலாகத் தோன்றும் ஞானமே லிங்கமென்பர் சிலர்; அது உண்மையன்று. பரப்பிரம்மமாகிய லிங்கம் தனது உள்ளுணர்வால் அறியப்படுகிறது.

மாசறு நிகழ்வே தாந்த வாக்கியத் துதிக்கு ஞான
மாசறு மிலிங்க மென்ன வறைதரு கிற்பர் சில்லோர்
பேசுறு மதுதான் மிக்கப் பிரமமா மிலிங்கந் தன்னாற்
றேசுற வறிவ தாகுஞ் செய்கையாற் பிறிதொன் றாமல்.

வேதாந்தவாக்கியங்களின் வாயிலாகத் தோன்றும் ஞானமே லிங்கமென்பர் சிலர்; அது உண்மையன்று. பரப்பிரம்மமாகிய லிங்கம் தனது உள்ளுணர்வால் அறியப்படுகிறது.

अव्यक्तं लिङ्गमित्याहुर्जगतां मूलकारणम्।
लिङ्गी महेश्वरश्चेति मतमेतदसङ्गतम्॥३७॥

சிலர் உலகங்களுக்கு மூலகாரணமான அவியக்தமே லிங்கமெனவும், அதையுடையவனான மஹேசுவரனே லிங்கியெனவும் கூறுவர். இக்கருத்து சரியன்று.

உலகெலாந் தருவ தற்கிங் கொருதனி மூல மாகி
யிலகுறு மவ்வி யத்த மிலிங்கமென் றிசைப்பர் மிக்க
தலைமைகொ ளிலிங்கி யீசன் றானென வகுத்துச் சொல்வர்
நிலவுமிம் மதம்பொ ருத்த மன்றென நிகழ்த்து நூலே.

சிலர் உலகங்களுக்கு மூலகாரணமான அவியக்தமே லிங்கமெனவும், அதையுடையவனான மஹேசுவரனே லிங்கியெனவும் கூறுவர். இக்கருத்து சரியன்று.

न सूर्यो भाति तत्रेन्दुर्न विद्युन्न च पावकः।
न तारका महलिङ्गे द्योतमाने परात्मनि॥३८॥
ज्योतिर्मयं परं लिङ्गं श्रुतिराह शिवात्मकम्।
तस्य भासा सर्वमिदं प्रतिभाति न संशयः॥३९॥

அங்கு சூரியனோ, சந்திரனோ, மின்னலோ தீயோ, நட்சத்திரங்களோ பிரகாசிப்பதில்லை; பரமான்மாவான அந்த பரஞ்சோதியே எப்போதும் பிரகாசிக்கின்றது. அதன் ஒளியால் தான் ஏனைய அனைத்தும் ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்றன என்று வேதங்கள் கூறுகின்றன.

விரவுறு மாலிங் கந்தான் மிளிர்தலு மதியு மீனு
மிரவியு மழலு மின்னு மிலங்குறா விலங்கு சோதி
யுருவமா மவ்வி லிங்கத் தொளியினா லவைய னைத்துந்
திரிவற விலங்கு முண்மை செப்புமிம் மாற்ற மன்றே.

அங்கு சூரியனோ, சந்திரனோ, மின்னலோ தீயோ, நட்சத்திரங்களோ பிரகாசிப்பதில்லை; பரமான்மாவான அந்த பரஞ்சோதியே எப்போதும் பிரகாசிக்கின்றது. அதன் ஒளியால் தான் ஏனைய அனைத்தும் ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்றன என்று வேதங்கள் கூறுகின்றன.

लिङ्गान्नास्ति परं तत्त्वं यदस्माज्जायते जगत्।
यदेतद्रूपतां धत्ते यदत्र लयमश्नुते॥४०॥
तस्माल्लिङ्गं परं ब्रह्म सच्चिदानन्दलक्षणम्।
निजरूपमिति ध्यानात् तदवस्था प्रजायते॥४१॥

லிங்கத்தைத் தவிர உலகங்களைத் தோற்றுவிக்கும் வேறு பரதத்துவம் இல்லை; அது ஒன்றே உருவத்தை அடைகிறது, அதில் தான் அனைத்தும் ஒடுங்குகின்றன. எனவே அந்த ஸச்சிதானந்த வடிவான பரப்பிரமமே தனது உண்மைச் சொரூபமென தியானம் செய்வதால் அந்நிலையை அடையலாம்.

உலகெலாந் தோன்றி நின்றங் கொடுங்குதற் கிடந்தா னாகி
யிலகுமா விலிங்கந் தன்னி னிலைபர மதனான் ஞான
நிலையில்வாழ் பிரம மேயந் நிசலிங்க மென்று கொள்ளிற்
றொலைவிலா விலிங்க வுண்மை தோன்றிடு மைய மின்றி.

லிங்கத்தைத் தவிர உலகங்களைத் தோற்றுவிக்கும் வேறு பரதத்துவம் இல்லை; அது ஒன்றே உருவத்தை அடைகிறது, அதில் தான் அனைத்தும் ஒடுங்குகின்றன. எனவே அந்த ஸச்சிதானந்த வடிவான பரப்பிரமமே தனது உண்மைச் சொரூபமென தியானம் செய்வதால் அந்நிலையை அடையலாம்.

ज्ञानमङ्गमिति प्राहुर्ज्ञेयं लिङ्गं सनातनम्।
विद्यते तद्द्वयं यस्य सोऽङ्गलिङ्गीति कीर्तितः॥४२॥

ஞானம் அங்கமெனவும் அறியப்படும் பொருள் லிங்கமெனவும் கூறப்படுகின்றன; இவ்விரண்டும் எவனிடத்தில் உளவோ அவனே அங்கலிங்கி எனப்படுகிறான்.

ஞானநல் லங்க மென்பர் நாசமி லிலிங்க ஞேயந்
தானென வறைவ ரிங்ஙன் சாற்றிய விரண்டும் யாவன்

பானிகழ் வுறுமிங் கன்னோன் பகரங்க லிங்கி யென்று
நூனிலை யுணர்ந்த மேலோர் நுவன்றிடப் படுவ னன்றே.

ஞானம் அங்கமெனவும் அறியப்படும் பொருள் லிங்கமெனவும் கூறப்படுகின்றன; இவ்விரண்டும் எவனிடத்தில் உளவோ அவனே அங்கலிங்கி எனப்படுகிறுன்.

अङ्गे लिङ्गं समारूढं लिङ्गे चाङ्गमुपस्थितम्।
एतदस्ति द्वयं यस्य स भवेदङ्गलिङ्गवान्॥ ४३॥
ज्ञात्वा यः सततं लिङ्गं स्वान्तःस्थं ज्योतिरात्मकम्।
पूजयेद् भावयेन्नित्यं तं विन्द्यादङ्गलिङ्गिनम्॥ ४४॥

அங்கத்தில் லிங்கமும் லிங்கத்தில் அங்கமும் விளங்குகின்றன; இவ்விரண்டையும் உடையவனே அங்கலிங்கமுடையவன் ஆவான். தன்னுள்ளே எப்போதும் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் லிங்கத்தையே எப்போதும் தியானித்துப் பூஜிப்பவனே அங்கலிங்கமுடையவன்.

அங்கத்தி லிலிங்க மொன்றி யவ்விலிங் கத்தி லங்கந்
தங்குற்று நிகழ்வோ னியாவன் றானவ னங்க லிங்கி
பொங்குற்ற மனத்தி லிங்க முணர்ந்துழிப் பூசை செய்யுந்
துங்கத்தன் யாவ னன்னோன் றுகளறு மங்க லிங்கி.

அங்கத்தில் லிங்கமும் லிங்கத்தில் அங்கமும் விளங்குகின்றன; உடையவனே அங்கலிங்கமுடையவன் ஆவான். தன்னுள்ளே எப்போதும் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் லிங்கத்தையே எப்போதும் தியானித்துப் பூஜிப்பவனே அங்கலிங்கமுடையவன்.

ज्ञायते लिङ्गमेवैकं सर्वैः शास्त्रैः सनातनैः।
ब्रह्मेति विश्वधामेति विमुक्तेः परमित्यपि॥ ४५॥

எல்லா சாத்திரங்களிலும் லிங்கமொன்றே பிரம்மமென்றும் அனைத்துலகங்களுக்கும் இருப்பிடமென்றும் முத்திநிலையென்றும் போற்றப்படுகிறது.

ஒருதனி யிலிங்கந் தானே யொளிர்தரும் பிரம மென்றும்
வருசக மூல மென்றும் வான்முத்தி வைப்ப தென்றுஞ்

சுருதிகண் முதலா யுள்ள தொல்லைய கலைக டம்மாற்
பெரிதுணர்ந் திடப்பட் டோங்கு மென்றறி பெருந்த வத்தோய்.

எல்லா சாத்திரங்களிலும் லிங்கமொன்றே பிரம்மமென்றும் அனைத்துலகங்களுக்கும் இருப்பிடமென்றும் முத்திநிலையென்றும் போற்றப்படுகிறது.

मुक्तिरूपमिदं लिङ्गमिति यस्य मनःस्थितिः।
स मुक्तो देहयोगेऽपि स ज्ञानी महागुरुः॥४६॥
अनादिनिधनं लिङ्गं कारणं जगतामिति।
ये न जानन्ति ते मूढा मोक्षमार्गबहिष्कृताः॥४७॥

இந்த லிங்கமொன்றே முத்திநிலையென்று எவனுக்கு உறுதியான எண்ணமுள்ளதோ அவன் இவ்வுடலில் வாழ்ந்திருக்கும் போதே முத்தியடைந்தவனுவான்; எல்லா உலகங்களுக்கும் காரணமானது அழிவற்ற லிங்கமொன்றே என அறியாத மூடர்கள் மோட்சமடைவதற்குத் தகுதியற்றவர்கள்.

பகர்ந்திடு மினைய லிங்கம் பரமுத்தி யுருவ மென்ன
வுகந்துள வுளத்தன் மெய்யோ டுறினுமே முத்த னாவன்
சகந்தரு மூல மென்னச் சம்புவா மிலிங்கந் தன்னை
யகங்கொளு நிலையி லாதா னருங்கதி யிலாத மூடன்.

இந்த லிங்கமொன்றே முத்திநிலையென்று எவனுக்கு உறுதியான எண்ணமுள்ளதோ அவன் இவ்வுடலில் வாழ்ந்திருக்கும் போதே முத்தியடைந்தவனுவான்; எல்லா உலகங்களுக்கும் காரணமானது அழிவற்ற லிங்கமொன்றே என அறியாத மூடர்கள் மோட்சமடைவதற்குத் தகுதியற்றவர்கள்.

यः प्राणलिङ्गार्चनभावपूर्वैर्धर्मैरुपेतः शिवभावितात्मा।
स एव तुर्यः परिकीर्तितोऽसौ संविद्विपाकाच्छरणाभिधानः॥४८॥

इति श्रीमत्षट्स्थलब्रह्मिणा शिवयोगिनाम्ना रेणुकाचार्येण
विरचिते सिद्धान्तशिखामणौ प्राणलिङ्गिनः पञ्चस्थलप्रसङ्गो नाम
द्वादशः परिच्छेदः॥

எவன் பிராணலிங்கத்தை அருச்சிப்பதையே தனது தருமமாகக் கொண்டு எப்போதும் சிவத்தியானத்தையே செய்பவனே அவனே ஞானபரிபாகத்தால் சரணன் எனப் போற்றப்படுகின்றான்.

யாவனற் பிராண லிங்க பூசனை யெழுவாய் மேவிப்
பாவுறு சிவமாய்த் தன்னைப் பாவிக்கு மறிஞ னன்னோன்
மேவுறு ஞான பாக விளைவினாற் சரண னாமந்
தாவறு முலக மெல்லாஞ் சாற்றிடப் படுவ னன்றே.

எவன் பிராணலிங்கத்தை அருச்சிப்பதையே தனது தருமமாகக் கொண்டு எப்போதும் சிவத்தியானத்தையே செய்பவனே அவனே ஞானபரிபாகத்தால் சரணன் எனப் போற்றப்படுகின்றான்.

அங்கலிங்கத்தலம் முற்றும்.

பிராணலிங்கித்தலம் முற்றிற்று.

## त्रयोदशः परिच्छेदः
## अथ शरणस्थलम्

माहेश्वरः प्रसादीति प्राणलिङ्गीति बोधितः।
कथमेष समादिष्टः पुनः शरणसंज्ञकः॥१॥

மாஹேசுவரன், பிரஸாதி, பிராணலிங்கி எனப்பட்டவன் எவ்வாறு சரணன் எனப்படுகின்ருன்?

பின்ன ரந்தப் பிராணலிங் கிப்பெயர்
மன்னி னோனெவ் வகைச்சர ணப்பெயர்
தன்னை யெய்துவன் சாற்றிது தன்னையு
மன்னை போலு மருட்கண நாதனே.

மாஹேசுவரன், பிரஸாதி, பிராணலிங்கி எனப்பட்டவன் எவ்வாறு சரணன் எனப்படுகின்ருன்?

अङ्गलिङ्गी ज्ञानरूपः सती ज्ञेयः शिवः पतिः।
यत्सौख्यं तत्समावेशो तद्वान् शरणनामवान्॥२॥

அங்கலிங்கி ஞானவடிவினருய் ஸதி என்றும் அனவர்க்கும் பதியான சிவபிரான் அழைக்கபடுகிருர்; அவரிடம் நீங்காத தொடர்பு கொள்வதில் பிரியமுடையவன் சரணன் ஆவான்.

அங்க லிங்கி யரிய சதியெனத்
துங்க லிங்கம் பதியெனச் சொல்வரிச்
சங்க மெய்துந் தனிச்சுக மெய்தினோற்
கிங்கு வந்துறு மின்சர ணப்பெயர்.

அங்கலிங்கி ஞானவடிவினருய் ஸதி என்றும் அனைவர்க்கும் பதியான சிவபிரான் அழைக்கப்படுகிருர்; அவரிடம் நீங்காத தொடர்பு கொள்வதில் பிரியமுடையவன் சரணன் ஆவான்.

स्थलमेतत्समाख्यातं चतुर्धा धर्मभेदतः।
आदौ शरणमाख्यातं ततस्तामसवर्जनम्॥३॥

ततो निर्देशमुद्दिष्टं शीलसम्पादनं ततः।
क्रमाल्लक्षणमेतेषां कथयामि निशाम्यताम्॥४॥

இந்த ஸ்தலம் நால்வகைப்படும்: அவை சரணம், தாமஸவர்ஜனம், நிர்தேசம், சீலஸம்பாதனம் என்பன. அவற்றின் இலக்கணங்களைக் கூறக்கேள்.

இத்த லத்திற மீரிரண் டாகுமுன்
வைத்தி டுஞ்சர ணத்தல மற்றுறுஞ்
சித்த தாமத நீக்கநிர்த் தேசமோ
டெய்த்த சீலசம் பாதந மென்னவே.

இந்த ஸ்தலம் நால்வகைப்படும்: அவை சரணம், தாமஸவர்ஜனம், நிர்தேசம், சீலஸம்பாதனம் என்பன.

இனைய நான்கு தலத்தினி லக்கணந்
தனையு மிங்கு முறைதரச் சாற்றுது
நினையு நெஞ்ச மொருக்கி நிலையொடு
சினம விழ்ந்த முனிவ செவிக்கொளே.

அவற்றின் இலக்கணங்களைக் கூறுகிறேன், கவனமாகக் கேள்.

सतीव रमणे यस्तु शिवे शक्तिं विभावयन्।
तदन्यविमुखः सोऽयं ज्ञातः शरणनामवान्॥५॥

ஒரு உண்மையான ஸதியைப் போல் சிவபெருமானுடைய சக்தியாகத் தன்னை நினந்து எப்போதும் மகிழ்ச்சி கொண்டு ஏனைய விஷயங்களில் எவ்வித நாட்டமுமில்லாதவன் சரணன் எனப்படுகின்றான்.

காந்த னைக்கொள் கனங்குழை போலவே
சாந்த மெய்ச்சிவ னுக்கொரு சத்தியா
யாந்த னைக்கொண் டயன்முக நோக்குறா
னேய்ந்த நற்சர ணத்தல மெய்தினோன்.

ஒரு உண்மையான ஸதியைப் போல் சிவபெருமானுடைய சக்தியாகத் தன்னை நினந்து எப்போதும் மகிழ்ச்சி கொண்டு

ஏனைய விஷயங்களில் எவ்வித நாட்டமுமில்லாதவன் சரணன் எனப்படுகின்றான்.

परिज्ञाते शिवे साक्षात् को वान्यमभिकाङ्क्षति।
निधाने महति प्राप्ते कः काचं याचतेऽन्यतः॥६॥

சிவபெருமானை நேரடியாக உணர்ந்தவன் வேறு எந்தப் பொருளை விரும்புவான்? அளவற்ற நிதியத்தை அடைந்தவன் மண்ணை விரும்புவானோ?

புரக்கு மீசன் புலப்படி னியாவர்தாம்
விருப்ப மெய்துவர் வேறுளர் தம்மிடை
வரப்பெ றிற்பெரு மாநிதி யாவர்போ
யிரப்பர் மண்ணை யிடுகெனத் தேடியே.

சிவபெருமானை நேரடியாக உணர்ந்தவன் வேறு எந்தப் பொருளை விரும்புவான்? அளவற்ற நிதியத்தை அடைந்தவன் மண்ணை விரும்புவானோ?

शिवानन्दं समासाद्य को वान्यमुपतिष्ठते।
गङ्गामृतं परित्यज्य कः काङ्क्षेन्मृगतृष्णिकाम्॥७॥

சிவானந்தத்தை அனுபவித்தவன் வேறு எதை நெருங்குவான்? கங்கை நீரமுதை விட்டுக் கானல் நீரை எவன் தான் விரும்புவான்?

பற்றெ னுஞ்சிவா நந்தம் படைத்துளோன்
மற்றும் வேறு மனத்தின் விழையுமோ
பெற்ற வன்பெருங் கங்கைப் பெருக்கினை
யுற்றி டுங்கொல் வெங்கானலை யோடியே.

சிவானந்தத்தை அனுபவித்தவன் வேறு எதை நெருங்குவான்? கங்கை நீரமுதை விட்டுக் கானல் நீரை எவன் தான் விரும்புவான்?

संसारतिमिरच्छेदे विना शङ्करभास्करम्।
प्रभवन्ति कथं देवाः खद्योता इव देहिनाम्॥८॥

சம்சார இருளை அழிப்பதற்கு சிவபிரான் எனும் சூரியன் ஒருவரே வல்லவர்; ஏனைய தேவர்கள் மின்மினிப் பூச்சிகளைப் போல் சக்தியற்றவர்கள்.

துன்னும் வெம்பவ மாகிய தொல்லிரு
டன்னை வென்று துரந்திடிற் சங்கர
னென்னும் வெங்கதி ரன்றி யெழுந்தழி
மின்னெ னுஞ்சுரர் வென்றிட வல்லரோ.

சம்சார இருளை அழிப்பதற்கு சிவபிரான் எனும் சூரியன் ஒருவரே வல்லவர்; ஏனைய தேவர்கள் மின்மினிப் பூச்சிகளைப் போல் சக்தியற்றவர்கள்.

संसारार्तः शिवं यायाद् ब्रह्माद्यैः किं फलं सुरैः।
चकोरस्तृषितः पश्येच्चन्द्रं किं तारका अपि॥९॥

சம்சார வெப்பத்தால் தாக்கப்பட்டவன் சிவபெருமான் ஒருவனையே சரணடைவான்; பிரம்மா முதலான தேவர்களால் யாது பயன்? நீர் வேட்கை கொண்ட சகோர பட்சி சந்திரனை விட்டு ஏனைய நட்சத்திரங்களை நோக்குமோ?

பிறவி நோயினன் பிஞ்ஞகன் றன்னையே
யுறுவ தன்றி யுறான்பிற தேவரை
நிறைவு றுஞ்சசி நிற்க வுடுவுறா
தறவ ருந்தவ வாவு சகோரமே.

சம்சார வெப்பத்தால் தாக்கப்பட்டவன் சிவபெருமான் ஒருவனையே சரணடைவான்; பிரம்மா முதலான தேவர்களால் யாது பயன்? நீர் வேட்கை கொண்ட சகோரபட்சி சந்திரனை விட்டு ஏனைய நட்சத்திரங்களை நோக்குமோ?

शिव एव समस्तानां शरण्यः शरणार्थिनाम्।
संसाररोगदष्टानां सर्वज्ञः सर्वदोषहा॥१०॥

சம்சார நோயால் தாக்கப்பட்டவர்களுக்குப் பேரறிவு கொண்டவரும் எல்லாப் பாவங்களையும் நீக்கவல்லவருமான சிவபெருமான் ஒருவரே சரணம்,

பவமெ னுங்கடும் பாம்பினை மீட்பவ
னெவையு நன்குண ரீச னலாலிலை
சிவமு ணர்ந்துதெ ளிபெறும் யோகிதா
னவைத ரும்பிறி தொன்றினை நண்ணுறான்.

சம்சார நோயான பாம்பிலிருந்து மீட்பவன் சிவபிரானைத் தவிர வேறெவருமில்லை; சிவபெருமானை உணர்ந்த யோகியானவன் வேறொன்றையும் அணுகமாட்டான்.

शिवज्ञाने समुत्पन्ने परानन्दः प्रकाशते।
तदासक्तमना योगी नान्यत्र रमते सुधीः॥११॥
तस्मात् सर्वप्रयत्नेन शङ्करं शरणं गतः।
तदनन्तसुखं प्राप्य मोदते नान्यचिन्तया॥१२॥

சிவஞானம் கைவரப்பெற்றவுடன் பேரானந்தம் பிரகாசிக்கும்; அதில் திளைக்கும் யோகி வேறொன்றையும் விரும்பமாட்டான். எனவே சங்கரனை முழுமுயற்சியுடன் சரணடைந்தவன் வேறெதையும் நினையாமல் அந்த எல்லையற்ற ஆனந்தத்திலேயே திளைப்பான்.

முற்று மேவெம் முயற்சியி னானுமிங்
குற்ற வன்சிவன் றன்னை யுவகையே
பெற்றி டும்பர மாநந்தப் பேற்றினான்
மற்ற வும்பர்க ளான்மகிழ் வுற்றிடான்.

சங்கரனை முழுமுயற்சியுடன் சரணடைந்தவன் வேறெதையும் நினையாமல் அந்த எல்லையற்ற ஆனந்தத்திலேயே திளைப்பான்.

சரணத்தலம் முற்றும்.

शिवासक्तपरानन्दमोदिना गुरुणा यतः।
निरस्यन्ते तमोभावाः स तामसनिरासकः॥१३॥

சிவபெருமானிடத்திலேயே மனம் எப்போதும் நாட்டம் கொண்டதால் சிவானந்தத்தை அனுபவிக்கும் குருவினால் மன

இருள் எப்போதும் நீக்கப்படுவதால் அவன் தாமஸநிராஸகன் எனப்படுகின்ருன்.

பராப ரற்பெற் றுவகை படைத்துளோன்
விராவு மத்தமோ பாவம் விடுத்தலாற்
றாராத லத்திற் றனைநிகர் தாமத
நிராச கப்பெய ரோடு நிலாவுவான்.

சிவபெருமானிடத்திலேயே மனம் எப்போதும் நாட்டம் கொண்டதால் சிவானந்தத்தை அனுபவிக்கும் குருவினுல் மன இருள் எப்போதும் நீக்கப்படுவதால் அவன் தாமஸநிராஸகன் எனப்படுகின்ருன்.

यस्य ज्ञानं तमोमिश्रं न तस्य गतिरिष्यते।
सत्त्वं हि ज्ञानयोगस्य नैर्मल्यं विदुरुत्तमाः॥ १४॥

இருளாகிய தமோகுணத்துடன் கூடிய ஞானத்தால் பயனில்லை; சுத்தசத்துவகுணத்துடன் கூடிய ஞானமே சிறந்தது.

இருட ருந்தம மெய்து மறிவினோர்க்
கருட ருங்கதி யில்லை யறிவினுக்
கொருபெ ருந்தனிக் காரண மொண்கதி
தருமி ருங்குண சத்துவ மென்பவே.

இருளாகிய தமோகுணத்துடன் கூடிய ஞானத்தால் பயனில்லை; சுத்தசத்துவகுணத்துடன் கூடிய ஞானமே சிறந்தது.

शमो दमो विवेकश्च वैराग्यं पूर्णभावना।
क्षान्तिः कारुण्यसंपत्तिः श्रद्धा सत्यसमुद्भवा॥ १५॥
शिवभक्तिः परो धर्मः शिवज्ञानस्य बान्धवाः।
एतैर्युक्तो महायोगी सात्त्विकः परिकीर्तितः॥ १६॥

மனம், மற்றும் ஐம்பொறிகள் ஆகியவற்றின் அடக்கம், பகுத்தறிவு, வைராக்கியம், பொறுமை, கருணை, உண்மையின் பேரில் சிரத்தை, உயர்ந்த சிவபக்தி ஆகியன சிவஞானத்தின் துணைவர்கள்; இந்நற்குணங்களையுடையோன் சாத்துவிகன் ஆவான்.

மெய்ம்மை சாந்தி தமைவி வேகம்பொறை
செம்மை நல்லொழுக் கஞ்சிவ பத்திதா
னம்ம பூரண பாவ மருடுற
விம்மை யுள்ளவன் சத்துவ மெய்தினோன்.

மனம், மற்றும் ஐம்பொறிகள் ஆகியவற்றின் அடக்கம், பகுத்தறிவு, வைராக்கியம், பொறுமை, கருணை, உண்மையின் பேரில் சிரத்தை, உயர்ந்த சிவபக்தி ஆகியன சிவஞானத்தின் துணைவர்கள்; இந்நற்குணங்களையுடையோன் சாத்துவிகன் ஆவான்.

कामक्रोधमहामोहमदमात्सर्यवारणाः।
शिवज्ञानमृगेन्द्रस्य कथं तिष्ठन्ति सन्निधौ॥१७॥

காமம், கோபம், மயக்கம், தானெனும் அகந்தை, பொறாமை போன்ற மதயானைகள் சிவஞானமெனும் சிங்கத்தின் முன் எவ்வாறு நிற்கும்?

வெய்ய காம வெகுளி மயக்கமா
மையு லாமத யானை வளர்ந்தெழு
செய்ய மாசிவ ஞான மடங்கல்முன்
னுய்யு மோநின் றொருகண மேனுமே.

காமம், கோபம், மயக்கம், தானெனும் அகந்தை, பொறாமை போன்ற மதயானைகள் சிவஞானமெனும் சிங்கத்தின் முன் எவ்வாறு நிற்கும்?

यत्र कुत्रापि वा द्वेष्टि प्रपञ्चे शिवरूपिणि।
शिवद्वेषी स विज्ञेयो रजसाविष्टमानसः॥१८॥

சிவவடிவான இப்பிரபஞ்சத்தில் எந்தப் பொருளை வெறுத்தாலும் அவன் ரஜோகுணம் பொருந்தியவனுயும் சிவத்துவேஷியாயும் கருதப்படுகிறுன்.

மாசி ராசத மன்னிய நெஞ்சினோ
னீச னாரிடத் தெங்கும் வெறுப்பினோன்

பேசி லன்னவற் காணிற் பெரியவர்
கூசி நிற்பர் குலைகு லைந்துள்ளமே.

சிவவடிவான இப்பிரபஞ்சத்தில் எந்தப் பொருளை வெறுத்தாலும் அவன் ரஜோகுணம் பொருந்தியவனுயும் சிவத்துவேஷியாயும் கருதப்படுகிருன்.

यो द्वेष्टि सकलान् लोकान् यो वाऽहङ्कुरुते सदा।
योऽसत्यभावनायुक्तः स तामस इति स्मृतः॥१९॥

எவன் எல்லோரிடத்திலும் பகை கொள்கிருனே எவன் எப்போதும் நான் எனும் அகந்தையுடன் இருக்கின்ருனே எவன் பொய்யான எண்ணங்களுடையவனே அவனே தாமஸன் எனப்படுகிருன்.

யாவ ரோடு மிகல்புரி கிற்பவன்
பாவ மாகும் படிற்றுரை கூறுவோன்
காவி லாதவாங் கார மருவினோன்
யாவ னன்னவன் றாமசி யென்பவே.

எவன் எல்லோரிடத்திலும் பகை கொள்கிருனே எவன் எப்போதும் நான் எனும் அகந்தையுடன் இருக்கின்ருனே எவன் பொய்யான எண்ணங்களுடையவனே அவனே தாமஸன் எனப்படுகிருன்.

तमोमूला हि संजाता रागद्वेषादिपादपाः।
शिवज्ञानकुठारेण छेद्यन्ते हि निरन्तरम्॥२०॥

விருப்பு, வெறுப்பு ஆகியவற்றிற்குத் தமோகுணமே ஆணிவேர்; சிவஞானமெனும் கோடரியால் அவை நிரந்தரமாக வெட்டியெறியப்படும்.

மூல மாகத்த மோகுண முற்றிய
மேலு லாவும் விருப்பு வெறுப்பெனுங்
கோல மாமரங் கூர்சிவ ஞானமா
மேலு மாமழு வாலெறி யப்படும்.

விருப்பு, வெறுப்பு ஆகியவற்றிற்குத் தமோகுணமே ஆணிவேர்; சிவஞானமெனும் கோடரியால் அவை நிரந்தரமாக வெட்டியெறியப்படும்.

शिवज्ञाने समुत्पन्ने सहस्रादित्यसन्निभे।
कुतस्तमोविकाराः स्युर्महतां शिवयोगिनाम्॥२१॥

इति तामसनिरसनस्थलम्

ஓராயிரம் சூரிய ஒளியையொத்த சிவஞானம் பிரகாசிக்கும் போது சிவயோகிகளுக்குத் தமோகுணங்களின் எந்தவிதமான தோற்றமும் இராது.

இரவி யாயிரம் போல விலங்குறும்
பொருவில் வான்சிவ ஞானம் பொருந்துறிற்
பரவு மொண்சிவ ஞான பதத்தர்முன்
மருவு மோதம மாகிய வல்லிருள்.

ஓராயிரம் சூரிய ஒளியையொத்த சிவஞானம் பிரகாசிக்கும் போது சிவயோகிகளுக்குத் தமோகுணங்களின் எந்தவிதமான தோற்றமும் இராது.

தாமசநிரசநத்தலம் முற்றும்

## अथ निर्देशस्थलम्

निराकृत्य तमोभागं संसारस्य प्रवर्तकम्।
निर्दिश्यन्ते तु यज्ज्ञानं स निर्देश इति स्मृतः॥२२॥

சம்சாரத்தைத் தோற்றுவிக்கும் தமோகுணத்தைச் சுட்டி அதை நீக்கும் ஞானமே நிர்தேசம் எனப்படுகிறது.

பிறப்பு மூலப் பெருந்தம நீக்கியே
சிறப்ப ஞான நிர்த்தேசப் படினதை
யிறுப்பர் நின்றநிர்த் தேச மெனக்குறித்
தொறுப்பு றும்புலத் தொட்டறு நெஞ்சினோர்.

சம்சாரத்தைத் தோற்றுவிக்கும் தமோகுணத்தைச் சுட்டி அதை நீக்கும் ஞானமே நிர்தேசம் எனப்படுகிறது.

गुरुरेव परं तत्त्वं प्रकाशयति देहिनाम्।
को वा सूर्यं विना लोके तमसो विनिवर्तकः॥२३॥

பரதத்துவத்தைக் காட்டுபவர் குரு ஒருவரே; சூரியனைத் தவிர வேறு எவர்தான் உலக இருளை நீக்கவல்லார்?

குரவ னேபர தத்துவங் கூட்டுவோன்
பருவ மேவினர் பால்வந் திலகுற
விரவி நின்ற விருளை விளங்கிய
விரவி யன்றி யிரிப்பவ ரியாவரோ.

பரதத்துவத்தைக் காட்டுபவர் குரு ஒருவரே; சூரியனைத் தவிர வேறு எவர்தான் உலக இருளை நீக்கவல்லார்?

अन्तरेण गुरुं सिद्धं कथं संसारनिष्कृतिः।
निदानज्ञं विना वैद्यं किं वा रोगो निवर्तते॥२४॥

சம்சாரத்தினின்றும் விடுவிப்பதற்குக் குரு ஒருவரைத் தவிர வேறு எவர்தான் வல்லவர்?
நோயின் காரணத்தையறிந்த வைத்தியரைத் தவிர வேறு எவர்தான் நோயை நீக்கவல்லார்?

பிறவி காமப் பெரும்பிணி நல்லறி
வறிவு றுங்குரு வன்றி யகலுமோ
மறையு ணர்ந்த மருத்துவ னன்றியே
செறிவு றும்பிணி யாது சிதைவதே.

பிறவி, காமம் முதலான நோய்களினின்றும் விடுவிப்பதற்கு குரு ஒருவரைத் தவிர வேறு எவர்தான் வல்லவர்?
நோயின் காரணத்தையறிந்த வைத்தியரைத் தவிர வேறு எவர்தான் நோயை நீக்கவல்லார்?

अज्ञानमलिनं चित्तदर्पणं यो विशोधयेत्।
प्रज्ञाविभूतियोगेन तमाहुर्गुरुसत्तमम्॥ २५॥

அஞ்ஞானமெனும் மாசினுல் மறைக்கப்பட்டுள்ள மனமெனும் கண்ணுடியை உயர்ந்த அறிவெனும் நீற்றினுல் தேய்த்து நீக்குபவரே மேலான குரு.

மூட மாசின் முழுகு மனமெனு
மாடி தன்னை யறிவெனும் பூதியா
னீட நின்று நிகழ விளக்குவோன்
பீடு றுங்குரு வென்பர் பெருமையோர்.

அஞ்ஞானமெனும் மாசினுல் மறைக்கப்பட்டுள்ள மனமெனும் கண்ணுடியை உயர்ந்த அறிவெனும் நீற்றினுல் தேய்த்து நீக்குபவரே மேலான குரு.

अपरोक्षिततत्त्वस्य जीवन्मुक्तस्वभाविनः।
गुरोः कटाक्षे संसिद्धे को वा लोकेषु दुर्लभः॥ २६॥

பரதத்துவத்தை நேரடியாக உணர்ந்தவரும் வாழும் போதே முத்திநிலையிலிருப்பவருமான குருவின் கடைக்கண் பார்வை கிட்டியவர்களுக்கு இவ்வுலகில் வேறு என்னதான் அரிது?

தாவி லாவப ரோட்சி ததத்துவ
சீவன் முத்தத் தியல்புறு தேசிகன்
மேவு மின்ப விழிக்கடை நோக்குறி
னியாவை யெய்தற் கரியன வென்பவே.

பரதத்துவத்தை நேரடியாக உணர்ந்தவரும் வாழும் போதே முத்திநிலையிலிருப்பவருமான குருவின் கடைக்கண் பார்வை கிட்டியவர்களுக்கு இவ்வுலகில் வேறு என்னதான் அரிது?

कैवल्यकल्पतरवो गुरवः करुणालयाः।
दुर्लभा हि जगत्यस्मिन् शिवाद्वैतपरायणाः॥२७॥

கைவல்லியமெனும் முத்தியை வாரி வழங்கவல்லவர்களாயும் கருணைக்கடலாயும் சிவாத்துவைதநிலையை அனுபவித்தவர்களுமான குருமார்கள் இவ்வுலகில் அரிதானவர்களே.

நீங்க ருங்கரு ணைக்கு நிலையராய்த்
தீங்கி லாத சிவாத்து விதத்தரா
யோங்கு முத்தி யுதவுங் குரவர்தா
மீங்க டைந்திடற் கென்று மரியரே.

கைவல்லியமெனும் முத்தியை வாரி வழங்கவல்லவர்களாயும் கருணைக்கடலாயும் சிவாத்துவைதநிலையை அனுபவித்தவர்களுமான குருமார்கள் இவ்வுலகில் அரிதானவர்களே.

क्षीराब्धिरिव सिन्धूनां सुमेरुरिव भूभृताम्।
ग्रहाणामिव तिग्मांशुर्मणीनामिव कौस्तुभः॥२८॥
द्रुमाणामिव भद्रश्रीर्देवानामिव शङ्करः।
गुरुः शिवः परः श्लाघ्यो गुरूणां प्राकृतात्मनाम्॥२९॥

इति निर्देशस्थलम्

கடல்களுள் பாற்கடல் போலும், மலைகளுள் மேருமலை போலும், கிரஹங்களுள் சூரியன் போலும், மணிகளுள் கௌஸ்துபம் போலும், மரங்களுள் ஸ்ரீபத்திரம் போலும், தேவர்களுள் சங்கரன் போலும் எல்லா குரவர்களுள் சிவபெருமான் ஒருவரே மேலானவர்.

பொருப்பின் மேரு புணரி யிற்பாற்கட
லருக்கன் கோளி லமரரிற் சங்கரன்

மரத்தி லார மெனப்புகழ் வாய்த்தவன்
குருக்க ளிற்சிவ நண்ணுங் குரவனே.

கடல்களுள் பாற்கடல் போலும், மலைகளுள் மேருமலை போலும், கிரஹங்களுள் சூரியன் போலும், மணிகளுள் கௌஸ்துபம் போலும், மரங்களுள் ஸ்ரீபத்திரம் போலும், தேவர்களுள் சங்கரன் போலும் எல்லா குரவர்களுள் சிவபெருமான் ஒருவரே மேலானவர்.

நிர்த்தேசத்தலம் முற்றும்.

## अथ शीलसम्पादनस्थलम्

जिज्ञासा शिवतत्त्वस्य शीलमित्युच्यते बुधैः।
निर्देश्ययोगादार्याणां तद्वान् शीलीति कथ्यते॥ ३०॥

சிவதத்துவத்தை அறியும் விருப்பமே சீலமாகும்; குருவினால் இவ்வாறு சுட்டியுணர்த்தப்படுவதால் அந்த விருப்பமுடையோன் சீலீ எனப்படுகின்றான்.

குரவ னுற்றுநிர்த் தேசித்த கொள்கையா
லொருமை யிற்சிவ தத்துவ மோர்ந்திடு
மருவி ருப்பது சீல மஃதுளோன்
றிருமி குத்துயர் சீலி யெனப்படும்.

சிவதத்துவத்தை அறியும் விருப்பமே சீலமாகும்; குருவினால் இவ்வாறு சுட்டியுணர்த்தப்படுவதால் அந்த விருப்பமுடையோன் சீலீ எனப்படுகின்றான்.

प्रपन्नार्तिहरे देवे परमात्मनि शङ्करे।
भावस्य स्थिरतायोगः शीलमित्युच्यते बुधैः॥ ३१॥

தன்னைச் சரணடைந்தவர்களின் துன்பத்தை நீக்கும் பரமாத்மாவான சிவபெருமானிடம் ஆழ்ந்த உறுதியான பக்தியுள்ளம் கொள்வதே சீலமென்று அறிஞர் கூறுவர்.

சரண டைந்தவர் தங்களைக் காத்திடும்
பரனை நெஞ்சுறப் பாவிக்குந் தன்மையே
திரமு றும்பெருஞ் சீலமென் றோதுவா
ருரமு ணர்ந்த வுரனுடை யாளரே.

தன்னைச் சரணடைந்தவர்களின் துன்பத்தை நீக்கும் பரமாத்மாவான சிவபெருமானிடம் ஆழ்ந்த உறுதியான பக்தியுள்ளம் கொள்வதே சீலமென்று அறிஞர் கூறுவர்.

शीलं शिवैकविज्ञानं शिवध्यानैकतानता।
शिवप्राप्तिसमुत्कण्ठा तद्योगी शीलवान् स्मृतः॥३२॥

சிவபெருமான் ஒருவரையே அறிதல், சிவத்தியானத்திலேயே கருத்தாயிருத்தல், சிவபெருமானை அடைவதொன்றே நோக்கமாயிருத்தல் ஆகியவற்றையுடையோன் சீலவான் ஆவான்.

சிவனை யெய்தியொன் றாந்திறத் தோன்றனை
யவனை யன்பொ டறிந்தவ னைச்செறிந்
துவகை யொன்று முளத்தனைச் சீலவா
னிவனெ னுங்கலை யின்றிறம் யாவுமே.

சிவபெருமான் ஒருவரையே அறிதல், சிவத்தியானத்திலேயே கருத்தாயிருத்தல், சிவபெருமானை அடைவதொன்றே நோக்கமாயிருத்தல் ஆகியவற்றையுடையோன் சீலவான் ஆவான்.

शिवादन्यत्र विज्ञाने वैमुख्यं यस्य सुस्थिरम्।
तदासक्तमनोवृत्तिस्तमाहुः शीलभाजनम्॥३३॥

சிவபெருமானைத் தவிர வேறென்றிலும் நாட்டமில்லாமல், சிவபிரானிடத்திலேயே எப்போதும் மனநாட்டம் கொண்டவனே அனைத்து ஒழுக்கங்களும் நிரம்பியவன்.

பற்று றும்பதி ராகப் பயத்தினாற்
பொற்றி ருந்திழை சீலம் பொலிதல்போற்
பெற்று றுஞ் சிவ ராகப் பெருமையோ
டுற்ற வன்றிதழ் சீல முளானரோ.

சிவபெருமானை தவிர வேறென்றிலும் நாட்டமில்லாமல், சிவபிரானிடத்திலேயே எப்போதும் மனநாட்டம் கொண்டவனே அனைத்து ஒழுக்கங்களும் நிரம்பியவன்.

पतिव्रताया यच्छीलं पतिरागात् प्रशस्यते।
तथा शिवानुरागेण सुशीलोऽभक्त उच्यते॥३४॥
पतिं विना यथा स्त्रीणां सेवाऽन्यस्य तु गर्हणा।
शिवं विना तथान्येषां सेवा निन्द्या कृतात्मनाम्॥३५॥

கற்புடைப் பெண்டிரின் ஒழுக்கம் கணவனின்பால் அவள் கொண்ட அன்பினால் விளங்கும்; அவ்வாறே சிவபிரானிடத்தில் கொண்ட பக்தியின் ஆழத்தால் அவன் பக்தனாகிறான். கணவனைத் தவிர வேறு ஆண்களிடத்தில் சேவை செய்தல் கற்புக்கரசிக்கு இழுக்காதல் போல் சிவபெருமானைத் தவிர மற்றவர்களிடம் சேவை செய்தல் பக்தனுக்கு இழுக்கு.

மாதர் கட்கு மகிணன் பணியல
தேத முற்றிடு மிங்கிது போலவே
சோதி மெய்ச்சிவ மன்றித் துளங்குறு
மேதி லர்க்குறு சேவை யிகழ்வுறும்.

கணவனைத் தவிர வேறு ஆண்களிடத்தில் சேவை செய்தல் கற்புக்கரசிக்கு இழுக்காதல் போல் சிவபெருமானைத் தவிர மற்றவர்களிடம் சேவை செய்தல் பக்தனுக்கு இழுக்கு.

बहुनात्र किमुक्तेन शिवज्ञानैकनिष्ठता।
शीलमित्युच्यते सद्भिः शीलवांस्तत्परो मतः॥३६॥

சுருங்கக் கூறின் சிவஞானம் ஒன்றில் மட்டுமே நாட்டம் கொள்ளுதல் சீலமாகும்; சீலமுடையோன் சிவபிரானிடம் பக்தியுடையவனாவான்.

நட்டு றுஞ்சிவ ஞானிக டம்மிடை
நிட்டை கொள்ளு நிலையது சீலமவ்
வொட்டு றுந்தனிச் சீல முடையனே
சிட்ட ரெண்ணுநற் சீல முளானரோ.

சுருங்கக் கூறின் சிவஞானம் ஒன்றில் மட்டுமே நாட்டம் கொள்ளுதல் சீலமாகும்; சீலமுடையோன் சிவபிரானிடம் பக்தியுடையவனுவான்.

शिवात्मबोधैकरतः स्थिराशयः
शिवं प्रपन्नो जगतामधीशम्।
शिवैकनिष्ठाहितशीलभूषणः
शिवैक्यवानेष हि कथ्यते बुधैः॥३७॥

சிவபிரானை ஆன்மாவினுள் அறிவதிலேயே எப்போதும் எண்ணம் கொண்டவனுய், உறுதியான மனநிலையுடையோனுய், அனைத்துலகங்களுக்கும் ஒரே தலைவனுன சிவபிரானையே சரணடைந்தவனுய், சிவபிரானிடத்தில் மனநாட்டம் கொள்வதென்னும் சீலமே அணிகலனுயுடையவனுய் விளங்குபவனே சிவைக்கியமுடையவன் எனப்படுகின்ருன்.

அங்க லிங்க வறிஞரை வேட்டுளஞ்
சங்க ரன்றனைத் தான்சர ணென்றுபோ
யிங்க டைந்த விவனல் லயிக்கிய
மங்க லந்தரு நாம மருவுவான்.

சிவபிரான் ஒருவரையே சரணடைந்தவனுய், சிவபிரானிடத்தில் மனநாட்டம் கொள்வதென்னும் சீலமே அணிகலனுயுடையவனுய் விளங்குபவனே சிவைக்கியமுடையவன் எனப்படுகின்ருன்.

சீலசம்பாதநத்தலம் முற்றும்.

इति श्रीमत्षट्स्थलब्रह्मिण शिवयोगिनाम्ना रेणुकाचार्येण विरचिते सिद्धान्तशिखामणौ शरणस्य चतुःस्थलप्रसङ्गो नाम त्रयोदशः परिच्छेदः॥

## चतुर्दशः परिच्छेदः
## अथ ऐक्यस्थलम्

तामसत्यागसम्बन्धान्निर्देशाच्छीलतस्तथा।
शरणाख्यस्य भूयोऽस्य कथमैक्यनिरूपणम्॥ १॥

தாமஸத்தை நீங்கியிருப்பதாலும் நிர்தேசனுனதாலும் சீலமுடையோனுயிருப்பதாலும் சரணனுக்கு ஐக்கியம் என எவ்வாறு கூறப்படுகிருன்?

தாமத நிரசந மாதி சார்வினா
லேமுறு சரணனா மிவன யிக்கிய
நாமமெவ் வகையினா னண்ணு மிங்கது
காமரு மிரேணுக கணேச கூறுவாய்.

தாமஸத்தை நீங்கியிருப்பதாலும் நிர்தேசனுனதாலும் சீலமுடையோனுயிருப்பதாலும் சரணனுக்கு ஐக்கியம் என எவ்வாறு கூறப்படுகிருன்?

प्राणलिङ्गादियोगेन सुखातिशयमेयिवान्।
शरणाख्यः शिवेनैक्यभावनादैक्यवान् भवेत्॥ २॥

பிராணலிங்கத்துடன் எப்போதும் தொடர்புடையவனுதலாலும் அளவற்ற ஆனந்தமுடையோனுதலாலும் சிவபிரானுடைக்கியமுடைய சரணன் ஐக்கியவான் ஆகிருன்.

மலிதரு சிவசுக வாரி மூழ்குபு
நலமுறு சிவமுட னயிக்க நாடுறு
நிலையுற வயிக்கனாம் பிராண லிங்கமுன்
றலைமைகொ ளியல்பினாற் சரண னாயினோன்.

பிராணலிங்கத்துடன் எப்போதும் தொடர்புடையவனுதலாலும் அளவற்ற ஆனந்தமுடையோனுதலாலும் சிவபிரானுடைக்கிய முடைய சரணன் ஐக்கியவான் ஆகிருன்.

ऐक्यस्थलमिदं प्रोक्तं चतुर्धा मुनिपुङ्गव।
ऐक्यमाचारसम्पत्तिरेकभाजनमेव च।
सहभोजनमित्येषां क्रमाल्लक्षणमुच्यते॥ ३॥

முனிவரில் சிறந்தவனே! இந்த ஐக்கியத்தலம் நால்வகைப்பட்டது: ஐக்கியம், ஆசாரஸம்பத்தி, ஏகபாஜனம், ஸஹபோஜனம் என்பன அவை.

மனுந்தல மிஃதுநால் வகைய யிக்கமோ
டினங்கொ ளாசார சம்பத்தி யேகபா
சனஞ்சக போசனத் தலமெ னப்புலன்
முனிந்துள முனியிவை முறையிற் கூறுவாம்.

முனிவரில் சிறந்தவனே! இந்த ஐக்கியத்தலம் நால்வகைப்பட்டது: ஐக்கியம், ஆசாரஸம்பத்தி, ஏகபாஜனம், ஸஹபோஜனம் என்பன அவை.

विषयानन्दकणिकानिस्पृहो निर्मलाशयः।
शिवानन्दमहासिन्धुमज्जनादैक्यमुच्यते॥ ४॥

உலக இன்பங்களெனும் சிறுதுளிகளில் நாட்டமேதுமின்றி தூயமனத்துடன் சிவானந்தப் பெருங்கடலில் மூழ்கியிருப்பதே ஐக்கியமாகும்.

அழிதரு நிலைவிட யாநந் தத்துளி
விழைதலை விடுத்துள விமல நெஞ்சினோ
னெழுதரு சிவாநந்த மென்னும் வேலையுண்
முழுகுத லயிக்கமென் றுரைப்பர் முன்னையோர்.

உலக இன்பங்களெனும் சிறுதுளிகளில் நாட்டமேதுமின்றி தூயமனத்துடன் சிவானந்தப் பெருங்கடலில் மூழ்கியிருப்பதே ஐக்கியமாகும்.

निर्धूतमलसम्बन्धो निष्कलङ्कमनोगतः।
शिवोऽहमिति भावेन निरूढो हि शिवैक्यताम्॥ ५॥

எவ்வித மலங்களின் தொடர்புமின்றி தூய்மையான மனத்துடன் சிவோஹம் எனும் சிந்தனையில் எப்போதும் இருப்பதே சிவைக்கியமாகும்.

தளைந்துள தளைவலி தணந்து மாசறத்
தெளிந்துள நெஞ்சினாற் சிவோகம் பாவனை
யுளங்கொளு நிலையுடை யொருவ னேகலை
யளந்தறி முனிவர வயிக்கிய னாகுவான்.

எவ்வித மலங்களின் தொடர்புமின்றி தூய்மையான மனத்துடன் சிவோஹம் எனும் சிந்தனையில் எப்போதும் இருப்பதே சிவைக்கியமாகும்.

शिवेनैक्यं समापन्नश्चिदानन्दस्वरूपिणा।
न पश्यति जगज्जालं मायाकल्पितवैभवम्॥ ६॥

பேரறிவானந்த வடிவினனுன சிவபெருமானுடன் ஒன்றறக் கலந்து மாயையின் தோற்றமான இவ்வுலகை அவன் காண்பதில்லை.

செயலறு சிதாநந்த சிவமொ டொன்றிய
வியலுறு மயிக்கிய னென்னப் பட்டவன்
மயலுறு மாயையின் வயிறு தந்துள
துயருறு முலகத்தின் றோற்றங் காணுறான்.

பேரறிவானந்த வடிவினனுன சிவபெருமானுடன் ஒன்றறக் கலந்து மாயையின் தோற்றமான இவ்வுலகை அவன் காண்பதில்லை.

ब्रह्माण्डबुद्बुदोद्भेदविजृम्भी तत्त्ववीचिमान्।
मायासिन्धुर्लयं याति शिवैक्यवडवानले॥ ७॥

சிவைக்கியமெனும் பெரும் கடல்தீயினுள் பிரம்மாண்டமெனும் குமிழிகளை உடையதும், தத்துவங்களெனும் சிற்றலைகளையுடையதுமான மாயை எனும் கடல் சென்று ஒடுங்குகின்றது.

தத்துவ மாந்திரை சார்ந்து பல்வகைப்
புத்தய னண்டமாம் புற்பு தஞ்செறி
மைத்தனி மாயையாம் வாரி வற்றுமான்
மெய்த்துள வயிக்கியமாம் வடவை மேவவே.

சிவைக்கியமெனும் பெரும் கடல்தீயினுள் பிரம்மாண்டமெனும் குமிழிகளை உடையதும், தத்துவங்களெனும் சிற்றலைகளையுடையதுமான மாயை எனும் கடல் சென்று ஓடுங்குகின்றது.

मायाशक्तितिरोधानाच्छिवे भेदविकल्पना।
आत्मनस्तद्विनाशे तु नाद्वैतात्किञ्चिदिष्यते॥८॥

மாயாசக்தியின் மறைப்பினால் தான் சிவபெருமானிடத்தில் பற்பல வேற்றுமைகள் தோற்றமளிக்கின்றன; ஆன்மாவிற்கு மாயை நீங்கினால் அத்துவிதபாவனையைத் தவிர வேறொன்றும் வேண்டாது.

மறைப்புறு மாயையின் வலியி னாலுயிர்க்
குறப்பெறு வேறுபா டுயர்சி வத்துட
னிறப்புறி னனையதிங் கேக மன்றியே
பெறப்படு குவதிலை பேத மென்பதே.

மாயாசக்தியின் மறைப்பினால் தான் சிவபெருமானிடத்தில் பற்பல வேற்றுமைகள் தோற்றமளிக்கின்றன; ஆன்மாவிற்கு மாயை நீங்கினால் அத்துவிதபாவனையைத் தவிர வேறொன்றும் வேண்டாது.

पशुत्वं च पतित्वं च मायामोहविकल्पितम्।
तस्मिन् प्रलयमापन्ने कः पशुः को नु वा पतिः॥९॥

பசுத்துவமும் பதித்துவமும் மாயையினால் தோற்றுவிக்கப்படுகின்றன; அது நீங்கினால் யார் பசு, யார் தான் பதி?

பசுத்துவ மொடுபதித் துவம்ப கர்ந்திடின்
முசிப்புறு மாயையா மோக கற்பித

நசித்திடி னதுபசு யார்சொ னன்றுற
விசைப்பறு நற்பதி யார்சொ லிங்கரோ.

பசுத்துவமும் பதித்துவமும் மாயையினுல் தோற்றுவிக்கப்படுகின்றன; அது நீங்கினுல் யார் பசு, யார் தான் பதி?

घोरसंसारसर्पस्य भेदवल्मीकशायिनः।
बाधकं परमाद्वैतभावना परमौषधम्॥१०॥

வேற்றுமை எனும் புற்றில் இடங்கொண்டுள்ள சம்சாரமெனும் கொடிய பாம்பை அழிக்கவல்லது அத்துவைத பாவனே ஒன்றே; அதுவே சிறந்த மருந்துமாகும்.

சாருறு பேதவன் மீகந் தங்கிய
கோரசம் சாரமாங் கொடிய பாம்பினுக்
காருறு பரமவத் துவித பாவனை
நேருறு மருந்ததாய் நிற்கு மென்பவே.

வேற்றுமை எனும் புற்றில் இடங்கொண்டுள்ள சம்சாரமெனும் கொடிய பாம்பை அழிக்கவல்லது அத்துவைத பாவனே ஒன்றே; அதுவே சிறந்த மருந்துமாகும்.

भेदबुद्धिसमुत्पन्नमहासंसारसागरम्।
अद्वैतबुद्धिपोतेन समुत्तरति देशिकः॥११॥

பேதபுத்தியினுல் தோன்றிய சம்சாரமென்னும் பெருங்கடலே அத்துவைத பாவனே எனும் ஓடத்தால் கடக்கின்றுன்.

நந்துறு பேதபுத் தியினி னண்ணியே
வந்துறு பவக்கட றன்னை மன்னிய
சிந்தனை யறுசிவாத் துவித புத்தியாஞ்
சுந்தர வம்பியாற் கடக்குந் தோமிலான்.

பேதபுத்தியினுல் தோன்றிய சம்சாரமென்னும் பெருங்கடலே அத்துவைத பாவனே எனும் ஓடத்தால் கடக்கின்றுன்.

अज्ञानतिमिरोद्रिक्ता कामरक्षःक्रियाकरी।
संसारकालरात्रिस्तु नश्येदद्वैतभानुना॥ १२॥

அஞ்ஞானமெனும் காரிருளில் தோன்றுவதும் காம அரக்கர்களுக்குப் பற்பல செயல்களைச் செய்வதுமான சம்சாரமெனும் நீண்ட இரவு அத்துவைதபாவனை எனும் சூரியனால் நீக்கப் பெறும்.

மயங்குமஞ் ஞானவல் லிருளொ டொன்றியே
யயர்ந்துள காமமா மரக்கர் செய்கையின்
முயங்குறு பவமெனு மூடு கங்குறான்
பயந்திரி தருநலத் துவித பானுவால்.

அஞ்ஞானமெனும் காரிருளில் தோன்றுவதும் காம அரக்கர்களுக்குப் பற்பல செயல்களைச் செய்வதுமான சம்சாரமெனும் நீண்ட இரவு அத்துவைதபாவனை எனும் சூரியனால் நீக்கப் பெறும்.

तस्मादद्वैतभावस्य सदृशो नास्ति योगिनाम्।
उपायो घोरसंसारमहातापनिवृत्तये॥ १३॥

எனவே யோகிகளுக்கு அத்துவைத பாவனையைத் தவிர கொடிய சம்சார வெப்பத்தைத் தீர்க்கும் உபாயம் வேறொன்றில்லை.

மிக்குறு பவத்துயர் விட்டு நீங்குறத்
தக்குறும் யோகிக டங்கட் கிவ்விடை
பக்கொழி வருசிவாத் துவித பாவனை
யொக்குறு முபாயமிங் கொன்று மில்லையே.

எனவே யோகிகளுக்கு அத்துவைத பாவனையைத் தவிர கொடிய சம்சார வெப்பத்தைத் தீர்க்கும் உபாயம் வேறொன்றில்லை.

अद्वैतभावनाजातं क्षणमात्रेऽपि यत्सुखम्।
तत्सुखं कोटिवर्षेण प्राप्यते नैव भोगिभिः॥ १४॥

அத்துவைத பாவனையினுல் உண்டாகும் கணநேர சுகத்தைக் கோடி ஆண்டுகள் பற்பல உலக இன்பங்களை அனுபவித்தாலும் பெற இயலாது.

ஒருகண முயர்சிவாத் துவித பாவனை
தருசுக மியாதது தக்க போகமிங்
கரிதுறு பவர்களாற் கோடி யாண்டினும்
பருகுற வருமொரு பான்மைத் தன்றரோ.

அத்துவைத பாவனையினுல் உண்டாகும் கணநேர சுகத்தைக் கோடி ஆண்டுகள் பற்பல உலக இன்பங்களை அனுபவித்தாலும் பெற இயலாது.

चित्तवृत्तिसमालीनजगतः शिवयोगिनः।
शिवानन्दपरिस्फूर्तिर्मुक्तिरित्यभिधीयते॥ १५॥

इत्यैक्यस्थलम्

மனத்தின் கணக்கற்ற நிலைகளிலேயே இந்த உலகத் தோற்றத்தை அடக்கிய யோகிகளுக்குச் சிவானந்தானுபவமே முக்தியாகும்.

சென்றுறு சகமடங் கியநற் சித்தமோ
டொன்றிய பரசிவ யோகிக் கோய்வற
நின்றுயர் சிவாநந்த நிறைவ தேபர
மென்றுரை தருந்தனி முத்தி யென்பதே.

மனத்தின் கணக்கற்ற நிலைகளிலேயே இந்த உலகத் தோற்றத்தை அடக்கிய யோகிகளுக்குச் சிவானந்தானுபவமே முக்தியாகும்.

அயிக்கியத்தலம் முற்றும்

## अथ आचारसम्पत्तिस्थलम्

शिवैकभावनापन्नशिवत्वो देहवानपि।
देशिको हि न लिप्येत स्वाचारैः सूतकादिभिः॥ १६॥

शिवाद्वैतपरिज्ञाने स्थिते सति मनस्विनाम्।
कर्मणां किं नु भाव्यं स्यादकृतेन कृतेन वा॥ १७॥

சிவைக்கிய பாவனையால் சிவத்துவத்தை அடைந்த தேசிகன் இவ்வுடலில் வாழ்ந்தாலும் பிறப்பு மற்றும் இறப்பினால் விளையும் தீட்டினால் தீண்டப்படான்; சிவாத்துவைதஞானம் கைவரப்பெற்றவனுக்கு செய்த கருமத்தாலோ செய்யப்படாத கருமத்தாலோ யாதொரு பயனுமில்லை.

உடம்பொடு மருவினு மொருமைப் பாறுளை
தொடங்குறு மவர்க்கிலைச் சூத காதியத்
திடம்பெறு மொரு சிவாத் துவித தேசிகற்
கடைந்துள விருவினைப் பயனு மாகுறா.

சிவைக்கிய பாவனையால் சிவத்துவத்தை அடைந்த தேசிகன் இவ்வுடலில் வாழ்ந்தாலும் பிறப்பு மற்றும் இறப்பினால் விளையும் தீட்டினால் தீண்டப்படான்; சிவாத்துவைதஞானம் கைவரப்பெற்றவனுக்கு செய்த கருமத்தாலோ செய்யப்படாத கருமத்தாலோ யாதொரு பயனுமில்லை.

शम्भोरेकत्वभावेन सर्वत्र समदर्शनः।
कुर्वन्नपि महाकर्म न तत्फलमवाप्नुयात्॥ १८॥

சிவபெருமானுடன் தான் அடைந்த ஐக்கிய ஞானத்தால் அனைத்தையும் சமமாக நோக்குபவன் கருமங்களை இடையறாது செய்திடினும் அவற்றின் பயனை அடைவதில்லை.

சமதரி சநனெனுந் தகுதி பெற்றுளோ
னமைவுறு சிவனுட னயிக்க பாவமோ
டிமைபெற மாவினை யியற்று மாயினுஞ்
சமையுமவ் வினைப்பய னவனைச் சார்ந்திடா.

சிவபெருமானுடன் தான் அடைந்த ஐக்கிய ஞானத்தால் அனைத்தையும் சமமாக நோக்குபவன் கருமங்களை இடையறாது செய்திடினும் அவற்றின் பயனை அடைவதில்லை.

सुकृती दुष्कृती वापि ब्राह्मणो वान्त्यजोऽपि वा।
शिवैकभावयुक्तानां सदृशो भवति ध्रुवम्॥१९॥

சிவைக்கிய பாவனே கொண்டவனுக்கு நல்லவனும் தீயவனும் அந்தணனும் இழிபிறப்பாளனும் ஒக்கவே தோன்றுவர்.

அந்தண னாயினும் புலைய னாயினும்
பந்தனை வினையுடைப் பாவி யாயினு
முந்துறு புண்ணிய னெனினு மொக்குமா
னந்துறு மயிக்கிய நண்ணி னற்கரோ.

சிவைக்கிய பாவனே கொண்டவனுக்கு நல்லவனும் தீயவனும் அந்தணனும் இழிபிறப்பாளனும் ஒக்கவே தோன்றுவர்.

वर्णाश्रमसदाचारैर्ज्ञानिनां किं प्रयोजनम्।
लौकिकस्तु सदाचारः फलाभावेऽपि भाव्यते॥२०॥

வருணுசிரம் ஸதாசாரம் ஆகியவற்ருல் ஞானிகளுக்கென்ன பயன்? ஸதாசாரமென்பது உலகவாழ்விற்கே உகந்தது.

வன்னமோ டுறுநிலை வழியொ ழுக்கினா
லென்னுறு பயன்சிவ ஞான மெய்தினோற்
கன்னிய வுலகவா சார மென்பது
தன்னிக ரவற்கிலை யென்று சாற்றுவார்.

வருணுசிரம் ஸதாசாரம் ஆகியவற்ருல் ஞானிகளுக்கென்ன பயன்? ஸதாசாரமென்பது உலகவாழ்விற்கே உகந்தது.

निर्दग्धकर्मबीजस्य निर्मलज्ञानवह्निना।
देहिवद् भासमानस्य देहयात्रा तु लौकिकी॥२१॥

எவனுடைய கருமவினேகள் நிர்மலமான ஞானமெனும் தீயினுல் பொசுக்கப்பட்டனவோ அவன் வெளித் தோற்றத்திற்கு ஏனேய மக்களேப் போல் தனது உலக வாழ்வை நடத்துவான்.

இலகுறு ஞானவங் கியினி லிட்டயல்
விலகற வறுத்துள வினைவித் தோடுதா

னிலைவுறு தேகிபோ லமர்ந்த ஞானிமெய்
யுலகின ருடலினை யொத்தி யங்குமால்.

எவனுடைய கருமவினைகள் நிர்மலமான ஞானமெனும் தீயினுல் பொசுக்கப்பட்டனவோ அவன் வெளித் தோற்றத்திற்கு ஏனைய மக்களைப் போல் தனது உலக வாழ்வை நடத்துவான்.

शिवज्ञानसमापन्नस्थिरवैराग्यलक्षणः।
स्वकर्मणा न लिप्येत पद्मपत्रमिवाम्भसा॥२२॥
गच्छंस्तिष्ठन् स्वपन् वापि जाग्रन् वापि महामतिः।
शिवज्ञानसमायोगाच्छिवपूजापरः सदा॥२३॥

சிவஞானத்தால் உறுதியான வைராக்கியத்துடன் சிவபூஜையொன்றே குறிக்கோளாகக் கொண்டவனைத் தாமரையிலையில் நீர் ஒட்டாதிருத்தல் போல் நடத்தல் நிற்றல் கண்விழித்தல் உறங்குதல் முதலான கருமவினைப் பயன்கள் அவனை அடைவதில்லை.

புனலுறு மரையிலை போல ஞானி தான்
வினையொடு புணர்கிலன் வேறி லாவவன்
கனவிலு நனவிலுங் கதியி ருப்பினுந்
தனைநிகர் சங்கரன் பூசை சார்ந்துளான்.

சிவஞானத்தால் உறுதியாக்கப்பட்ட வைராக்கியத்துடன் சிவபூஜையொன்றே குறிக்கோளாகக் கொண்டவனைத் தாமரையிலையில் நீர் ஒட்டாதிருத்தல் போல் நடத்தல் நிற்றல் கண்விழித்தல் உறங்குதல் முதலான கருமவினைப் பயன்கள் அவனை அடைவதில்லை.

यद्यत्पश्यति सामोदं वस्तु लोकेषु देशिकः।
शिवदर्शनसम्पत्तिस्तत्र तत्र महात्मनः॥२४॥
यद्यच्चिन्तयते योगी मनसा शुद्धभावनः।
तत्तच्छिवमयत्वेन शिवध्यानमुदाहृतम्॥२५॥
यत्किञ्चिद् भाषितं लोके स्वेच्छया शिवयोगिना।
शिवस्तोत्रमिदं सर्वं यस्मात् सर्वात्मकः शिवः॥२६॥

या या चेष्टा समुत्पन्ना जायते शिवयोगिनाम्।
सा सा पूजा महेशस्य सर्वदा तद्गतात्मनाम्॥२७॥

इत्याचारसम्पतिस्थलम्

அந்த யோகி எவற்றையெல்லாம் காண்கிருனே அவை சிவதரிசனமே; சுத்தமனத்துடன் அவன் சிந்திப்பதெல்லாம் சிவதியானமே; மாசற்ற மனத்துடன் அவன் சொல்வதெல்லாம் சிவத்தோத்திரங்களே; அவன் செய்யும் அனைத்துச் செயல்களுமே சிவபூஜைதான்.

காண்பன பரசிவ காட்சி யுன்னுவ
மாண்படு தியாநம்வாய் வார்த்தை நற்றுதி
யேண்படு தொழில்சிவ பூசை யேவினை
நாண்பரி யயிக்கிய ஞானி கட்கரோ.

அந்த யோகி எவற்றையெல்லாம் காண்கிருனே அவை சிவதரிசனமே; சுத்தமனத்துடன் அவன் சிந்திப்பதெல்லாம் சிவதியானமே; மாசற்ற மனத்துடன் அவன் சொல்வதெல்லாம் சிவத்தோத்திரங்களே; அவன் செய்யும் அனைத்துச் செயல்களுமே சிவபூஜைதான்.

ஆசாரசம்பத்தித்தலம் முற்றும்.

अथैकभाजनस्थलम्

विश्वं शिवमयं चेति सदा भावयतो धिया।
शिवैकभाजनात्मत्वादेकभाजनमुच्यते॥२८॥

உலகமனைத்தும் சிவமே என்று எந்நேரமும் பாவிப்பதால் அந்நிலை ஏகபாஜனம் எனப்படுகின்றது.

அகிலமுஞ் சிவமென வறிந்த பாவனை
நிகழ்வுறு நிலையினோற் கென்று நீள்சிவ
மகிழொரு பாசந வடிவ மாதலா
லிகலற வியம்புவ ரேக பாசநம்.

உலகமனைத்தும் சிவமே என்று எந்நேரமும் பாவிப்பதால் அந்நிலை ஏகபாஜனம் எனப்படுகின்றது.

स्वस्य सर्वस्य लोकस्य शिवस्याद्वैतदर्शनात्।
एकभाजनयोगेन प्रसादैक्यमतिर्भवेत्॥ २९॥

தன்னையும் அனைத்துலகங்களையும் சிவாத்துவைதமாக நோக்குவதால் ஏற்படும் ஏகபாஜனத்தால் பிரசாதைக்கியமதி ஏற்படுகிறது.

சகந்தனக் கொருதனக் குயர்ப ரற்கிவண்
மிகுந்திடு மத்து விதநற் காட்சியா
னிகழ்ந்திடு மேக பாசந நிலைத்தலாற்
புகும்பிர சாதத்து மேக புத்தியே.

தன்னையும் அனைத்துலகங்களையும் சிவாத்துவைதமாக நோக்குவதால் ஏற்படும் ஏகபாஜனத்தால் பிரசாதைக்கியமதி ஏற்படுகிறது.

शिवे विश्वमिदं सर्वं शिवः सर्वत्र भासते।
आधाराधेयभावेन शिवस्य जगतः स्थितिः॥ ३०॥

சிவபெருமானே இவ்வுலகமாகவும், உலகமே சிவமயமாகவும் ஆதாரம் ஆதேயம் எனும் நிலை நிலவுகிறது.

இச்சகஞ் சிவத்திடை யெய்தி நின்றிடு
மச்சிவஞ் சகத்திடை யமர்ந்தி லங்குறு
முச்செய லாலிவை யொன்றிற் கொன்றுதான்
வைச்சவா தாரவா தேய மன்னுமால்.

சிவபெருமானே இவ்வுலகமாகவும், உலகமே சிவமயமாகவும் ஆதாரம் ஆதேயம் எனும் நிலை நிலவுகிறது.

चिदेकभाजनं यस्य चित्तवृत्तेः शिवात्मकम्।
नान्यत् तस्य किमेतेन मायामूलेन वस्तुना॥ ३१॥

எவனுடைய மனநிலைகளெல்லாம் சிவமயமாயுள்ளதோ அவனுக்கு மாயையின் தோற்றங்களான மற்ற பொருட்களால் யாது பயன்?

அறிவொரு சிவமய மாகும் பாசந
மறியுல கெலாமுமா மறிவை யன்றியே
யறிவுறு பொருளிலை யாத லான்மிகு
மறிவினை யுடையவர்க் ககில மில்லையே.

எவனுடைய மனநிலைகளெல்லாம் சிவமயமாயுள்ளதோ அவனுக்கு மாயையின் தோற்றங்களான மற்ற பொருட்களால் யாது பயன்?

चित्प्रकाशयते विश्वं तद्विना नास्ति वस्तु हि।
चिदेकनिष्ठचित्तानां किं मायापरिकल्पितैः॥३२॥
वृत्तिशून्ये स्वहृदये शिवलीने निराकुले।
यः सदा वर्तते योगी स मुक्तो नात्र संशयः॥३३॥

## इत्येकभाजनस्थलम्

சித் ஒன்றுதான் அனைத்தையும் பிரகாசிக்கச் செய்கின்றது; அதைத் தவிர வேறென்றுமில்லை. அந்த சித்தில் எப்போதும் லயித்திருப்போர்க்கு மாயைத் தோற்றங்களால் என்ன பயன்? எந்த யோகியின் மனம் எவ்வித சலனமுமின்றி சிவபெருமானிடத்திலேயே லயித்திருக்கிறதோ அவன் முத்தியடைந்தவன் என்பதில் ஐயமில்லை.

தன்னுள விருத்திபோய்த் தனிச்சி வத்தினுண்
மன்னுற வாகுல மழிந்து பெற்றுள
செந்நெறி யோகியே சீவன் முத்தனென்
றுன்னரு மறிவுடை யுலக மோதுமே.

சித் ஒன்றுதான் அனைத்தையும் பிரகாசிக்கச் செய்கின்றது; அதைத் தவிர வேறென்றுமில்லை. அந்த சித்தில் எப்போதும் லயித்திருப்போர்க்கு மாயைத் தோற்றங்களால் என்ன பயன்? எந்த யோகியின் மனம் எவ்வித சலனமுமின்றி சிவபெருமானிடத்திலேயே லயித்திருக்கிறதோ அவன் முத்தியடைந்தவன் என்பதில் ஐயமில்லை.

ஏகபாசநத்தலம் முற்றும்.

## अथ सहभोजनस्थलम्

गुरोः शिवस्य शिष्यस्य स्वस्वरूपतया स्मृतिः।
सहभोजनमाख्यातं सर्वग्रासात्मभावतः॥ ३४॥

குரு, சிவபிரான், சீடன் ஆகியோரை ஒரே வடிவமாக உணர்தல் ஸஹபோஜனத்தலமாகும்; அது அனைத்தையும் விழுங்கிவிடுவதால் அவ்வாறு கருதப்படுகிறது.

மன்னிய சிவன்றனைக் குருவை மைந்தனைத்
தன்னொரு வடிவென வுணருந் தன்மைதா
னுன்னரு முலகெலா முண்ட லாதலாற்
பன்னுற வருசக போச நத்தலம்.

குரு, சிவபிரான், சீடன் ஆகியோரை ஒரே வடிவமாக உணர்தல் ஸஹபோஜனத்தலமாகும்; அது அனைத்தையும் விழுங்கிவிடுவதால் அவ்வாறு கருதப்படுகிறது.

शिवं विश्वं गुरुं साक्षाद् योजयेन्नित्यमात्मनि।
एकत्वेन चिदाकारे तदिदं सहभोजनम्॥ ३५॥

சிவபெருமான், உலகம், குரு ஆகியோரை எப்போதும் தனது ஆன்மாவிலே சித் வடிவமாய் நிலைநிறுத்துதல் ஸஹபோஜனம்.

அறிவுரு வாந்தனி லகிலந் தன்னையுஞ்
செறிவுறு குருவையுஞ் சிவபி ரானையும்
பிறிவற வேகமாய்க் காணும் பெற்றியே
குறிசக போசந மென்னக் கூறுவார்.

சிவபெருமான், உலகம், குரு ஆகியோரை எப்போதும் தனது ஆன்மாவிலே சித் வடிவமாய் நிலைநிறுத்துதல் ஸஹபோஜனம்.

अयं शिवो गुरुश्चैष जगदेतच्चराचरम्।
अहं चेति मतिर्यस्य नास्त्यसौ विश्वभोजकः॥ ३६॥

சிவபெருமான் இவர், இவர் குரு, இது உலகம், இது நான் என்னும் எண்ணமுடையவன் விசுவபோஜகனல்லன்.

குருவிவன் சிவனிவன் கூறப் பட்டிடுஞ்
சரமுட னசரமாஞ் சகம திங்கிது
திரமுறு மினையனா னென்னுஞ் சிந்தனை
யொரு வினோன் யாரவ னுலக முண்பவன்.

சிவபெருமான் இவர், இவர் குரு, இது உலகம், இது நான் என்னும் எண்ணமுடையவன் விசுவபோஜகனல்லன்.

अहं भृत्यः शिवः स्वामी शिष्योऽहं गुरुरेव वै।
इति यस्य मतिर्नास्ति स चाद्वैतपदे स्थितः॥ ३७॥

சிவன் இறைவன், நான் அடிமை, நான் சீடன், இவர் குரு என்ற எண்ணமில்லாதவனே அத்துவைத நிலையிலுள்ளவன்.

இறைசிவ னடிமைநா னிவன ருட்குரு
வுறுமக னானெனு முளமி லாதவன்
மறுவறு மொருசிவாத் துவித வான்பதம்
பெறுதவ னெனமறை பெரிதி யம்புமே.

சிவன் இறைவன், நான் அடிமை, நான் சீடன், இவர் குரு என்ற எண்ணமில்லாதவனே அத்துவைத நிலையிலுள்ளவன்.

पराहन्तामये स्वात्मपावके विश्वभास्वति।
इदन्ताहव्यहोमेन विश्वहोमीति कथ्यते॥ ३८॥

அனைத்துலகங்களையும் பிரகாசிக்கச் செய்யும் பராஹந்தாமயமான தனது ஆன்மத்தீயில் ஆன்மாவைத் தவிர்த்த அனைத்துப் பொருட்களையும் ஹோமம் செய்வதால் விசுவஹோமி எனப்படுகின்றான்.

அனைத்தினு மிலங்குபூ ரணவ கந்தையாய்
மனிப்பொலி தருபர மான வங்கியிற்
றனித்திடு துவிதநற் சமிதை வேள்வியா
னினைப்பறு மகிலவோ மத்த னென்பவே.

அனைத்துலகங்களையும் பிரகாசிக்கச் செய்யும் பராஹந்தாமயமான தனது ஆன்மத்தீயில் ஆன்மாவைத்

தவிர்த்த அனைத்துப் பொருட்களையும் ஹோமம் செய்வதால் விசுவஹோமி எனப்படுகின்றான்.

अहं शिवो गुरुश्चाहमहं विश्वं चराचरम्।
यया विज्ञायते सम्यक् पूर्णाहन्तेति सा स्मृता॥३९॥

நானே சிவபிரான், நானே குரு, நானே அனைத்துலகங்களும் என்று உணர்தலே பூர்ணாஹந்தா எனப்படுகிறது.

குருவுநா னுலகுநான் கூறு தற்கரும்
பரமுநா னெனவொரு பரி சறிந்திட
லிருளறு பூரண வகந்தை யென்னவே
திரிவறு மறிவினோர் தெரிந்து கூறுவார்.

நானே சிவபிரான், நானே குரு, நானே அனைத்துலகங்களும் என்று உணர்தலே பூர்ணாஹந்தா எனப்படுகிறது.

आधारवह्नौ चिद्रूपे भेदजातं जगद्धविः।
जुहोति ज्ञानयज्वा यः स ज्ञेयो विश्वहव्यभुक्॥४०॥

சின்மயமான மூலாதாரத் தீயில் வேற்றுமைப்பட்ட உலகங்களையெல்லாம் ஹோமம் செய்யும் ஞானவேள்வியோன் விசுவஹவ்யபுக் எனப்படுகிறான்.

போதமென் றிடுமொரா தாரப் பூந்தழற்
பேதமொன் றுலகவி பெய்து வேட்பவ
னோதுறு சகவவி யுண்டுநின்றிடு
மேதமொன் றுறாதுயர் ஞான யோகியே.

சின்மயமான மூலாதாரத் தீயில் வேற்றுமைப்பட்ட உலகங்களையெல்லாம் ஹோமம் செய்யும் ஞானவேள்வியோன் விசுவஹவ்யபுக் எனப்படுகிறான்.

चिदाकारे पराकाशे परमानन्दभास्वति।
विलीनचित्तवृत्तीनां का वा विश्वक्रमस्थितिः॥४१॥

சின்மயமானதும் பேரானந்த ஒளிவீசுவதுமான பராகாசத்தில் ஒடுங்கிய மனத்தவர்களுக்கு இந்த உலகம் முதலானவற்ருல் யாதொரு பயனுமில்லை.

அறிவுரு வாம்பரா காசத் தாசற
நிறைதரு பராநந்த மென்ன நின்றுள
செறிகதி ரிடைவிரி சித்த மொன்றினோர்க்
குறுசக நிலைமைகண் ணுறுவ தின்றரோ.

சின்மயமானதும் பேரானந்த ஒளிவீசுவதுமான பராகாசத்தில் ஒடுங்கிய மனத்தவர்களுக்கு இந்த உலகம் முதலானவற்ருல் யாதொரு பயனுமில்லை.

निरस्तविश्वसम्बन्धे निष्कलङ्के चिदम्बरे।
भावयेल्लीनमात्मानं सामरस्यस्वभावतः॥४२॥

எல்லாவற்றுக்கும் மேலானதும் மாசற்றதுமான சிதம்பரமெனும் வெட்டவெளியில் எல்லாம் ஒடுங்கிய ஸமரஸ பாவத்தால் தனது ஆன்மாவை ஒடுக்கவேண்டும்.

ஆசறு சிதம்பர மதனிற் றன்னையே
பாசமில் சமரச பாவத் தொன்றிய
தேசுள னாகவே சிந்தை செய்திடின்
மாசறு வித்தையென் றுரைப்பர் மாதவர்.

எல்லாவற்றுக்கும் மேலானதும் மாசற்றதுமான சிதம்பரமெனும் வெட்டவெளியில் எல்லாம் ஒடுங்கிய ஸமரஸ பாவத்தால் தனது ஆன்மாவை ஒடுக்கவேண்டும்.

सैषा विद्या परा ज्ञेया सत्तानन्दप्रकाशिनी।
मुक्तिरित्युच्यते सद्भिर्जन्ममोहनिवर्तिनी॥४३॥
भक्तादिधामार्पितधर्मयोगात् प्राप्तैकभावः परमाद्भुतेन।
शिवेन चिद्व्योममयेन साक्षान्मोक्षश्रियो भाजनतामुपैति॥४४॥

इति श्रीमत्षट्स्थलब्रह्मिण शिवयोगिनाम्ना रेणुकाचार्येण विरचिते सिद्धान्तशिखामणौ शिवलिङ्गैक्यस्य चतुर्विधस्थलप्रसङ्गो नाम चतुर्दशः परिच्छेदः ॥ १४ ॥

உண்மையான நிலையையும் பேரானந்தத்தையும் பிரகாசிக்கச் செய்யுமிந்த வித்தையே எல்லாவற்றிலும் சிறந்ததாகக் கருதப்படுகின்றது; இந்நிலையே முக்திநிலை. பிறவி நோயிலிருந்து விடுவிப்பது இதுதான். ஒப்பற்ற பக்தியினால் சிவபெருமானுடன் ஒன்றறக் கலந்து நிற்கும் நிலையை அடைந்த இச்சிறந்த பக்தன் சிதம்பரமெனப்படும் சிவபிரானருளால் மோக்ஷமெனும் ஒப்பற்ற செல்வத்தை அடைகின்றான்.

சிதம்பர வொளிநிகழ் சிவனொ டொன்றுற
விதந்தரு மயிக்கிய பாவத்தை யெய்தினோன்
மதஞ்செய் பத்தாதி நன்மார்க்க நண்ணலாற்
பதந்தனி முத்தியே யாகப் பற்றுவான்.

ஒப்பற்ற பக்தியினால் சிவபெருமானுடன் ஒன்றறக்கலந்து நிற்கும் நிலையை அடைந்த இச்சிறந்த பக்தன் சிதம்பரமெனப்படும் சிவபிரானருளால் மோக்ஷமெனும் ஒப்பற்ற செல்வத்தை அடைகின்றான்.

சகபோசநத்தலம் முற்றும்

அயிக்கியத்தலம் முற்றிற்று

ப்ரதமபரிச்சேதமாகிய அங்கஸ்தலம் ஸம்பூர்ணம்.

## पञ्चदशः परिच्छेदः
## अथ लिङ्गस्थलानि, दीक्षागुरुस्थलम्

षट्स्थलोक्तसदाचारसम्पन्नस्य यथाक्रमम्।
लिङ्गस्थलानि कथ्यन्ते जीवन्मुक्तिपराणि च॥ १॥

ஷட்ஸ்தலங்களில் கூறப்பட்ட ஸதாசாரங்களைக் கடைப்பிடிப்பவனுக்கு ஜீவன்முக்தியை அளிக்கவல்ல லிங்கஸ்தலங்கள் விளக்கிக் கூறப்படுகின்றன.

ஆறெ னுந்தலங் களின்முறை யறிந்தவா சாரப்
பேற டைந்தவன் றனக்கிலிங் கத்தலம் பிறங்கக்
கூறி டுஞ்சிவ பிரா னரு ளாகமங் குறித்து
மாறொ ழிந்திடு சீவன்முத் தியில்வழங் குவவாய்.

ஷட்ஸ்தலங்களில் கூறப்பட்ட ஸதாசாரங்களைக் கடைப்பிடிப்பவனுக்கு ஜீவன்முக்தியை அளிக்கவல்ல லிங்கஸ்தலங்கள் விளக்கிக் கூறப்படுகின்றன.

भक्ताद्यैक्यावसानानि षडुक्तानि स्थलानि च।
लिङ्गस्थलानि कानीह कथ्यन्ते कति वा पुनः॥२॥

பக்தன் முதல் ஐக்கியம் ஈறாக ஆறு லிங்கஸ்தலங்கள் கூறப்பட்டன; இன்னும் எத்தனை ஸ்தலங்கள் உள்ளன?

பத்த னேமுத லயிக்கனீ றாகவே பகர்ந்த
வத்த லங்களின் றிறமுரைத் தருளினை யைய
சத்த தென்றுரை செயுமிலிங் கத்தலந் தானியா
தெத்தி றங்களி னுரைத்திடப் படுமஃ தியம்பாய் .

பக்தன் முதல் ஐக்கியம் ஈறாக ஆறு லிங்கஸ்தலங்கள் கூறப்பட்டன; இன்னும் எத்தனை ஸ்தலங்கள் உள்ளன?

श्रीरेणुक उवाच
गुर्वादिज्ञानशून्यान्ता भक्तादिस्थलसंश्रिताः।
स्थलभेदाः प्रकीर्त्यन्ते पञ्चाशत् सप्त चाधुना॥ ३॥

ஶ்ரீரேணுகர் கூறுகிறார்
பக்தன் முதலான ஸ்தலங்களுக்குட்பட்ட குருமுதல் ஞானசூனியமீறாய் ஐம்பத்தேழு ஸ்தலங்கள் தற்போது விளக்கப்படும்.

தொலைந்த பந்தபத் தாதியா மறுதலந் தொடர்ந்த
விலங்கு மொண்குரு முதன்ஞான சூனிய மீறாய்ப்
பலந்த ருந்தல மேழ்தலை யிட்டவைம் பதுவு
நலந்த ரும்பொறை முனியினி நவின்றிடப் படுமால்.

பக்தன் முதலான ஸ்தலங்களுக்குட்பட்ட குருமுதல் ஞானசூனியமீறாய் ஐம்பத்தேழு ஸ்தலங்கள் தற்போது விளக்கப்படும்.

आदौ नव स्थलानीह भक्तस्थलसमाश्रयात्।
कथ्यन्ते गुणसारेण नामान्येषां पृथक् शृणु॥ ४॥
दीक्षागुरुस्थलं पूर्वं ततः शिक्षागुरुस्थलम्।
प्रज्ञागुरुस्थलं चाथ क्रियालिङ्गस्थलं ततः॥ ५॥
भवलिङ्गस्थलं चाथ ज्ञानलिङ्गस्थलं ततः।
स्वयं परं चरं चेति तेषां लक्षणमुच्यते॥ ६॥

முதலில் பக்தஸ்தலத்துக்குட்பட்ட ஒன்பது ஸ்தலங்களின் பெயர்கள் கூறப்படுகின்றன: அவை தீக்ஷாகுருஸ்தலம், சிக்ஷாகுருஸ்தலம், பிரஜ்ஞாகுருஸ்தலம், கிரியாலிங்கஸ்தலம், பவலிங்கஸ்தலம், ஞானலிங்கஸ்தலம். சுயம், பரம் சரம் என இவற்றின் இலக்கணம் விரித்துக் கூறப்படுகிறது.

முன்ன ரொன்பதிங் குளபத்தத் தலந்தொடர் முறையா
லன்ன முன்றிதழ் தீட்சைபின் சிட்சைஞா னத்தாற்
பன்னு றுங்குரு கிரியையொண் பாவஞா னத்தான்
மன்னி லிங்கநற் றலஞ்சுய சரபரம் வகுப்பாம்.

முதலில் பக்தஸ்தலத்துக்குட்பட்ட ஒன்பது ஸ்தலங்களின் பெயர்கள் கூறப்படுகின்றன: அவை தீக்ஷாகுருஸ்தலம், சிக்ஷாகுருஸ்தலம், பிரஜ்ஞாகுருஸ்தலம், கிரியாலிங்கஸ்தலம், பவலிங்கஸ்தலம், ஞானலிங்கஸ்தலம். சுயம், பரம் சரம் என இவற்றின் இலக்கணம் விரித்துக் கூறப்படுகிறது.

दीयते परमं ज्ञानं क्षीयते पाशबन्धनम्।
यया दीक्षेति सा तस्यां गुरुर्दीक्षागुरुः स्मृतः॥७॥

எதன் வாயிலாகப் பாசத்தளை அகற்றப்பட்டு மேலான ஞானம் பெறப்படுகிறதோ அது தீக்ஷையாகும்; அதை வழங்கும் குரு தீக்ஷாகுரு.

யாதி னாற்பர ஞானமீந் திடப்படு மிங்ங
னோது பாசபந் தநங்கெடுத் திடப்படு மதுதான்
றீதில் தீட்சையென் றுரைத்திடப் படுமிது செய்யு
நீதி யொண்குரு மிக்கதீட் சாகுரு நிகழ்த்தின்.

முதலில் பக்தஸ்தலத்துக்குட்பட்ட ஒன்பது ஸ்தலங்களின் பெயர்கள் கூறப்படுகின்றன: அவை தீக்ஷாகுருஸ்தலம், சிக்ஷாகுருஸ்தலம், பிரஜ்ஞாகுருஸ்தலம், கிரியாலிங்கஸ்தலம், பவலிங்கஸ்தலம், ஞானலிங்கஸ்தலம். சுயம், பரம் சரம் என இவற்றின் இலக்கணம் விரித்துக் கூறப்படுகிறது.

गुणातीतं गुकारं च रूपातीतं रुकारकम्।
गुणातीतमरूपं च यो दद्यात् स गुरुः स्मृतः॥८॥

குகாரம் குணங்களுக்கப்பாற்பட்டது, ருகாரம் உருவங்களைக் கடந்தது; குணங்களுக்கப்பாற்பட்ட அருவத்தை நல்குபவரே குரு.

கூற ருங்குணா தீதமே குகாரமாம் ருகாரம்
வேறி லங்குரூ பாதீத மென்குவர் மேலோர்
தேறி டுங்குணா தீதமா மருவருள் செய்யு
மாற டைந்தவ னியாரவன் குருவென மதிப்பாய் .

குகாரம் குணங்களுக்கப்பாற்பட்டது, ருகாரம் உருவங்களைக் கடந்தது; குணங்களுக்கப்பாற்பட்ட அருவத்தை நல்குபவரே குரு.

आचिनोति च शास्त्रार्थानाचारे स्थापयत्यलम्।
स्ववयमाचरते यस्मादाचार्यस्तेन चोच्यते॥९॥

சாத்திரப்பொருள்களைக் கற்றறிந்து அதில் சொல்லப்பட்ட ஆசாரத்தைத் தானும் கடைப்பிடித்து சீடர்களையும் அவ்வாறு ஒழுகுமாறு செய்பவரே ஆசாரியர்.

சாத்தி ரப்பொருள் விளங்குற விரித்திடுந் தகையால்
வாய்த்த மிக்கவா சாரத்தின் வழிநிறுத் துதலாற்
சீர்த்த வச்செய றானுமா சரித்திடுஞ் செயலா
லேத்து றப்படு மென்றுமா சாரிய னென்றே.

சாத்திரப்பொருள்களைக் கற்றறிந்து அதில் சொல்லப்பட்ட ஆசாரத்தைத் தானும் கடைப்பிடித்து சீடர்களையும் அவ்வாறு ஒழுகுமாறு செய்பவரே ஆசாரியர்.

षडध्वातीतयोगेन यतते यस्तु देशिकः।
मायाब्धितारणोपायहेतुर्विश्वगुरुः शिवः॥१०॥
अखण्डं येन चैतन्यं व्यज्यते सर्ववस्तुषु।
आत्मयोगप्रभावेण स गुरुर्विश्वभासकः॥११॥
इति दीक्षागुरुस्थलम्

அறுவகை அத்துவாக்களைக் கடந்த யோகத்தின் வாயிலாக இம்மாயைக் கடலை கடக்கும் உபாயமறிந்த தேசிகர் சிவபிரானே; ஆன்மயோகசக்தியினுல் எவருடைய பரந்த சைதன்னியம் எல்லாப் பொருள்களிலும் வெளிப்படுகிறதோ அந்த குரு அனைத்தையும் பிரகாசிக்கச் செய்கிறவர்.

அத்து வாமுடி யோகமுற் றருஞ்சிவ மாகு
மெய்த்த தேசிக னேபவக் கடற்கரை விடுவோ
னெய்த்தி டாவறி வாயுல கிலங்குறு மெவனா
லத்த யாகுரு வுலகெலாம் விளக்குறு பவனாம்.

அறுவகை அத்துவாக்களைக் கடந்த யோகத்தின் வாயிலாக இம்மாயைக் கடலை கடக்கும் உபாயமறிந்த தேசிகர் சிவபிரானே; ஆன்மயோகசக்தியினுல் எவருடைய பரந்த

சைதன்னியம் எல்லாப் பொருள்களிலும் வெளிப்படுகிறதோ அந்த குரு அனைத்தையும் பிரகாசிக்கச் செய்கிறவர்.

தீட்சாகுருஸ்தலம் முற்றும்.

## अथ शिक्षागुरुस्थलम्

दीक्षागुरुरसौ शिक्षाहेतुः शिष्यस्य बोधकः।
प्रश्नोत्तरप्रवक्ता च शिक्षागुरुरितीर्यते॥ १२॥

தீக்ஷாகுருவானர் சீடனுக்கு வினுவிடை வாயிலாக போதிப்பவவர்; அவரே சிக்ஷாகுரு எனப்படுகிருர்.

போத கத்தின னாகியே தனையடை புதல்வர்க்
கேத மற்றிடு கடாவினுக் கெதிர்விடை யிசைப்பாற்
றீத கற்றுசிட் சாகுருப் பெயரினைச் செறியு
மோத லுற்றதீட் சாகுரு வேயென வுணர்வாய்.

தீக்ஷாகுருவானர் சீடனுக்கு வினுவிடை வாயிலாக போதிப்பவவர்; அவரே சிக்ஷாகுரு எனப்படுகிருர்.

बोधकोऽयं समाख्यातो बोध्यमेतदिति स्फुटम्।
शिष्ये नियुज्यते येन स शिक्षागुरुरुच्यते॥ १३॥

சீடனுக்குப் போதிக்கப்படவேண்டியவற்றை நன்கறிந்து அவற்றை போதிப்பவர் சிக்ஷாகுரு.

போத கஞ்சிவ தந்திரம் போதகப் படுத
லோத ருஞ்சிவ ஞானமென் றுணர்வுற வுரைப்போன்
றீத கன்றசிட் சாகுருப் பவவிருள் சிதைக்கு
மேது விந்துவாம் வாசக னாரிய னென்பான்.

சீடனுக்குப் போதிக்கப்படவேண்டியவற்றை நன்கறிந்து அவற்றை போதிப்பவர் சிக்ஷாகுரு.

संसारतिमिरोन्माथिशरच्चन्द्रमरीचयः।
वाचो यस्य प्रवर्तन्ते तमाचार्यं प्रचक्षते॥ १४॥

ददाति यः पतिज्ञानं जगन्मायानिवर्तकम्।
अद्वैतवासनोपायं तमाचार्यवरं विदुः॥ १५॥

எவருடைய சொற்கள் சம்சாரமெனும் பேரிருளிலிருந்து விடுவிக்கும் சரத்கால சந்திரனுடைய ஒளியைப் போலுள்ளனவோ அவரே ஆசாரியர்; மாயா உலகவாழ்விலிருந்து விடுவிக்கும் அத்துவைத அனுபவத்தை நல்கும் சிவஞானத்தைப் போதிப்பவரே சிறந்த ஆசாரியர்.

உலகமுற்றிடு மாயையை யொழித்திட வற்றா
யிலகு மத்துவி தத்தினுக் கேதுவா யிருந்த
தலைமை யிற்பதி ஞானநல் குறுமவன் றானே
புலமை பெற்றுள வாரிய னென்பவன் புவியில்.

எவருடைய சொற்கள் சம்சாரமெனும் பேரிருளிலிருந்து விடுவிக்கும் சரத்கால சந்திரனுடைய ஒளியைப் போலுள்ளனவோ அவரே ஆசாரியர்; மாயா உலகவாழ்விலிருந்து விடுவிக்கும் அத்துவைத அனுபவத்தை நல்கும் சிவஞானத்தைப் போதிப்பவரே சிறந்த ஆசாரியர்.

पूर्वपक्षं समासाद्य जगद्भेदविकल्पनम्।
अद्वैतकृतसिद्धान्तो गुरुरेष गुणाधिकः॥ १६॥

வேறுபட்ட உலக அனுபவமெனும் பூருவபட்சத்தை உணர்த்தி அதை நீக்கும் அத்துவைத சித்தாந்தத்தை உணர்த்துபவரே மிகவும் சிறந்த குரு.

பேத மாகிய சகவிகற் பத்தொடு பிறங்கு
மாதி பூருவ பக்கமாக் கொண்டுமுற் றறிவாற்
றீதி லாதவோ ரத்துவி தஞ்செய்சித் தாந்த
மேதை யோடுள விக்குரு பரன்குண மிகுத்தோன்.

வேறுபட்ட உலக அனுபவமெனும் பூருவபட்சத்தை உணர்த்தி அதை நீக்கும் அத்துவைத சித்தாந்தத்தை உணர்த்துபவரே மிகவும் சிறந்த குரு.

सन्देहवनसन्दोहसमुच्छेदकुठारिका।
यत्सूक्तिधारा विमला स गुरूणां शिखामणिः॥१७॥
यत्सूक्तिदर्पणाभोगे निर्मले दृश्यते सदा।
मोक्षश्रीर्विम्बरूपेण स गुरुर्भवतारकः॥१८॥

ஐயங்கள் எனும் அடர்ந்த காட்டினை அழிக்கவல்ல கோடரி போன்ற போதனைகளை உடையவர் எல்லா குரவர்களிலும் சிகாமணியாகத் திகழ்கிறார்; எந்த குருவினுடைய போதனைகளெனும் மாசற்ற கண்ணாடியில் மோட்சமெனும் பெரும் செல்வம் பிம்பமாகக் காணப்படுகிறதோ அந்த குருவே சம்சாரக் கடலிலிருந்து கடைத்தேற உதவுபவர்.

யாவன் வாய்மொழி யையமென் வனத்தினை யெறிய
வாவு மொண்பர சாமவன் குருசிகா மணியா
மேவு தன்மொழி யாடியில் விம்பமாய் விளங்கு
மேவின் முத்தியந் திருவுளன் பவக்கட லெடுப்பான்.

ஐயங்கள் எனும் அடர்ந்த காட்டினை அழிக்கவல்ல கோடரி போன்ற போதனைகளை உடையவர் எல்லா குரவர்களிலும் சிகாமணியாகத் திகழ்கிறார்; எந்த குருவினுடைய போதனைகளெனும் மாசற்ற கண்ணாடியில் மோட்சமெனும் பெரும் செல்வம் பிம்பமாகக் காணப்படுகிறதோ அந்த குருவே சம்சாரக் கடலிலிருந்து கடைத்தேற உதவுபவர்.

शिष्याणां हृदयालेख्यं प्रद्योतयति यः स्वयम्।
ज्ञानदीपिकयाऽनेन गुरुणा कः समो भवेत्॥१९॥
परमाद्वैतविज्ञानपरमौषधिदानतः।
संसाररोगनिर्माथी देशिकः केन लभ्यते॥२०॥

## इति शिक्षागुरुस्थलम्

சீடர்களுடைய இதயங்களை ஞானதீபத்தால் பிரகாசிக்கச் செய்யும் குருவுக்கு யார் தான் சமம்?

மிக உயர்ந்த அத்துவைதஞானமெனும் மருந்தையளித்து சம்சாரப் பிணியை முற்றிலும் அழிக்க வல்ல குரு யாருக்குக் கிடைப்பார்?

பரிந்து சீடர்த மகத்தினை ஞானதீ பத்தாற்
றிருந்த விங்கில குறுபவற் கொப்பிலை செப்பிற்
பொருந்து றும்பவப் பிணியினுக் கேகமாம் போத
மருந்து தந்தருள் குருபரன் வாய்க்குமோ மண்ணில்.

சீடர்களுடைய இதயங்களை ஞானதீபத்தால் பிரகாசிக்கச் செய்யும் குருவுக்கு யார் தான் சமம்?
மிக உயர்ந்த அத்துவைதஞானமெனும் மருந்தையளித்து சம்சாரப் பிணியை முற்றிலும் அழிக்க வல்ல குரு யாருக்குக் கிடைப்பார்?

சிக்ஷாகுருஸ்தலம் முற்றும்

## अथ ज्ञानगुरुस्थलम्

उपदेष्टोपदेशानां संशयच्छेदकारकः।
सम्यग्ज्ञानप्रदः साक्षादेष ज्ञानगुरुः स्मृतः॥२१॥
निरस्तविश्वसम्भेदं निर्विकारं चिदम्बरम्।
साक्षात्करोति यो युक्त्या स ज्ञानगुरुरुच्यते॥२२॥

போதிக்க வேண்டியவற்றைப் போதித்து ஐயங்களை அறவே நீக்கி உண்மையான ஞானத்தை அளிப்பவர் ஞானகுரு; தக்க யுக்திகளால் வேற்றுமைப் பட்ட உலகஞானத்தை நீக்கி சிதம்பரமெனும் சிவஞானத்தை உணர்த்துபவரே ஞானகுரு.

ஐய நீக்குப தேசஞ்செய் திவன்றிக ழறிவைச்
செய்யு முண்மையாற் பெயர்ஞான குருவெனச் செறியு
மைய லின்றியே வளரொளி மலிசிதம் பரத்தை
யுய்ய நல்குவோன் ஞானதே சிகனென வுரைப்பார்.

போதிக்க வேண்டியவற்றைப் போதித்து ஐயங்களை அறவே நீக்கி உண்மையான ஞானத்தை அளிப்பவர் ஞானகுரு; தக்க

யுக்திகளால் வேற்றுமைப் பட்ட உலகஞானத்தை நீக்கி சிதம்பரமெனும் சிவஞானத்தை உணர்த்துபவரே ஞானகுரு.

कलङ्कवानसौ चन्द्रः क्षयवृद्धिपरिप्लुतः।
निष्कलङ्कस्थितो ज्ञानचन्द्रमा निर्विकारवान्॥२३॥
पार्श्वस्थतिमिरं हन्ति प्रदीपो मणिनिर्मितः।
सर्वगामि तमो हन्ति बोधदीपो निरङ्कुशः॥२४॥

சந்திரன் சிறிய களங்கத்தையுடையவன், தேய்வும் வளர்ச்சியும் கொண்டவன்; ஆனல் ஞானசந்திரனே களங்கமும் அழிவுமற்றவன். சிறந்த மணிகளால் செய்யப்பட்ட தீபமோ தனதருகிலுள்ள இருளைத்தான் அகற்றவல்லது, ஆனல் ஞானதீபமோ தடையற்று எல்லா இடத்திலுமுள்ள இருளையும் நீக்கவல்லது.

தேய்ந்து தானல மருமதி மறுவொடு செறியும்
வாய்ந்த ஞானமா மதிமறு வற்றது மருங்கிற்
சேர்ந்த வல்லிரு ளகற்றுவ தொளிமணித் தீப
மேய்ந்த ஞானநல் விளக்கிரு ளிரிப்பதெவ் விடத்தும்.

சந்திரன் சிறிய களங்கத்தையுடையவன், தேய்வும் வளர்ச்சியும் கொண்டவன்; ஆனல் ஞானசந்திரனே களங்கமும் அழிவுமற்றவன். சிறந்த மணிகளால் செய்யப்பட்ட தீபமோ தனதருகிலுள்ள இருளைத்தான் அகற்றவல்லது, ஆனல் ஞானதீபமோ தடையற்று எல்லா இடத்திலுமுள்ள இருளையும் நீக்கவல்லது.

सर्वार्थसाधकज्ञानविशेषादेशतत्परः।
ज्ञानाचार्यः समस्तानामनुग्रहकरः शिवः॥२५॥
कटाक्षचन्द्रमा यस्य ज्ञानसागरवर्धनः।
संसारतिमिरच्छेदी स गुरुर्ज्ञानपारगः॥२६॥

அனைத்தையும் உணர்ந்து செயலாற்ற வல்ல உயர்ந்த ஞானத்தைப் போதிப்பவரே எல்லோருக்கும் அருளும் ஞானசாரியர், அவரே சிவபெருமான். எவருடைய கடைக்கண்

பார்வை எனும் சந்திரனால் ஞானமாகிய கடல் பொங்குகிறதோ சம்சார இருளை நீக்கும் அந்த குரு எல்லா ஞானமும் பெற்றவர்.

> அனைத்தி னுக்குமோர் காரண மாகிய வறிவை
> நுனித்து ரைத்தருள் குரவனே சிவனரு ணோக்காம்
> பனிக்க திர்க்குஞா னக்கடல் பொங்குறப் பவமாந்
> தனித்தி ருட்டற வருகுரு ஞானபா ரகனால்.

அனைத்தையும் உணர்ந்து செயலாற்ற வல்ல உயர்ந்த ஞானத்தைப் போதிப்பவரே எல்லோருக்கும் அருளும் ஞானாசாரியர், அவரே சிவபெருமான். எவருடைய கடைக்கண் பார்வை எனும் சந்திரனால் ஞானமாகிய கடல் பொங்குகிறதோ சம்சார இருளை நீக்கும் அந்த குரு எல்லா ஞானமும் பெற்றவர்.

> बहिस्तिमिरविच्छेत्ता भानुरेषः प्रकीर्तितः।
> बहिरन्तस्तमश्छेदी विभुर्देशिकभास्करः॥२७॥

வெளியிலுள்ள இருளை நீக்க வல்லது சூரியன்; அகத்திலுள்ள பேரிருளை முற்றிலும் அழிக்கவல்லவர் எங்கும் பரந்த தேசிகசூரியன்.

> பொங்கு செங்கதிர்ப் புறத்துநின் றிணைவிழி புதைக்குங்
> கங்குல் வல்லிரு ளொன்றையே போக்குறுங் கருதி
> னிங்கு நல்லருண் ஞானதே சிகனெனு மிரவி
> தங்கு முள்ளொடு புறத்துறு மிருளெலாந் தள்ளும்.

வெளியிலுள்ள இருளை நீக்க வல்லது சூரியன்; அகத்திலுள்ள பேரிருளை முற்றிலும் அழிக்கவல்லவர் எங்கும் பரந்த தேசிகசூரியன்.

> कटाक्षलेशमात्रेण विना ध्यानादिकल्पनम्।
> शिवत्वं भावयेद्यत्र स वेदः शाम्भवो मतः॥२८॥
> शिववेदकरे ज्ञाने दत्ते येन सुनिर्मले।
> जीवन्मुक्तो भवेच्छिष्यः स गुरुर्ज्ञानसागरः॥२९॥

इति ज्ञानगुरुस्थलम्

கணநேரக் கடைக்கண் பார்வையால் தியானம் முதலியன ஏதுமின்றி சிவத்துவத்தைச் சீடனுக்கு உணர்த்தவல்லது சாம்பவ வேதம்; அத்தகைய மாசற்ற சிவஞானத்தைப் பெற்ற சீடனை ஜீவன்முக்தனுக்க வல்ல குரு ஞானக்கடலாவார்.

கடைக்க ணோக்கினாற் றியாநாதி கற்பனை யின்றி
யடுக்கு மோர்சிவ வேதக மாக்குறு மறிவை
விடுக்கு மாலுடை யுயர்சீவன் முத்தனாய் மேவக்
கொடுக்கு மாரியன் ஞானசா கரனெனக் குறிப்பாய்.

கணநேரக் கடைக்கண் பார்வையால் தியானம் முதலியன ஏதுமின்றி சிவத்துவத்தைச் சீடனுக்கு உணர்த்தவல்லது சாம்பவ வேதம்; அத்தகைய மாசற்ற சிவஞானத்தைப் பெற்ற சீடனை ஜீவன்முக்தனுக்க வல்ல குரு ஞானக்கடலாவார்.

## अथ क्रियालिङ्गस्थलम्

गुरोर्विज्ञानयोगेन क्रिया यत्र विलीयते।
तत्क्रियालिङ्गमाख्यातं सर्वैरागमपारगैः॥ २०॥

குருவின் ஞானயோகத்தால் கிரியை எங்கு சென்று ஒடுங்குகிறதோ அதுவே கிரியாலிங்கமெனப்படுகிறது.

ஞான தேசிகன் ஞானயோ கங்கொடு நண்ணி
மான மேவிய கிரியையெவ் விடத்தினின் மாயு
மான விங்கது தான்கிரி யாலிங்க மாமென்
றூன மின்றிய நூன்முறை யுணர்ந்தவ ருரைப்பார்.

குருவின் ஞானயோகத்தால் கிரியை எங்கு சென்று ஒடுங்குகிறதோ அதுவே கிரியாலிங்கமெனப்படுகிறது.

परानन्दचिदाकारं परब्रह्मैव केवलम्।
लिङ्गं सद्रूपतापन्नं लक्ष्यते विश्वसिद्धये॥ २१॥
लिङ्गमेव परं ज्योतिर्भवति ब्रह्म केवलम्।
तस्मात् तत्पूजनादेव सर्वकर्मफलोदयः॥ २२॥

பேரானந்த சித்தான பரப்பிரமமே இவ்வுலகத்திற்காக லிங்கவடிவம் கொண்டுள்ளது; அதுவே பரஞ்சோதி, பரப்பிரம்மம். அதை வழிபடுவதே அனைத்துச் செயல்களும் உருப்பெறுகின்றன.

அறிவு மேனியா யுண்மையா யாநந்த வடிவாய்ப்
பொறியு றாவொரு பிரமமே கிரியையின் பொருட்டுக்
குறியு றாவரு மிலிங்கமென் றாதலாற் கொண்ட
மறிவி லாவிலிங் கார்ச்சனை பலமெலாம் வழங்கும்.

பேரானந்த சித்தான பரப்பிரமமே இவ்வுலகத்திற்காக லிங்கவடிவம் கொண்டுள்ளது; அதுவே பரஞ்சோதி, பரப்பிரம்மம். அதை வழிபடுவதே அனைத்துச் செயல்களும் உருப்பெறுகின்றன.

परित्यज्य क्रियाः सर्वा लिङ्गपूजैकतत्पराः।
वर्तन्ते योगिनः सर्वे तस्माल्लिङ्गं विशिष्यते॥३३॥
यज्ञादयः क्रियाः सर्वा लिङ्गपूजांशसम्मिताः।
इति यत्पूज्यते सिद्धैस्तत्क्रियालिङ्गमुच्यते॥३४॥

மற்ற செயல்களை நீக்கி மிக உயர்ந்த லிங்கபூஜை ஒன்றையே யோகிகள் எப்போதும் செய்கின்றனர்; யாகம் முதலானவை லிங்கபூஜையின் மிகச் சிறிய அம்சமே என்று ஸித்தர்களால் கொள்ளப்படுவதால் அது கிரியாலிங்கமெனப்படுகிறது.

யாக மாதிய கிரியைகள் யாவையும் விடுத்து
யோக மாதவர் சித்தர்கள் யாவரு முவந்தே
யேக மாகிய விலிங்கபூ சனையையே யிசைவ
ராகை யாலிலிங் கஞ்சிறந் தொப்பிலா தாகும்.

மற்ற செயல்களை நீக்கி மிக உயர்ந்த லிங்கபூஜை ஒன்றையே யோகிகள் எப்போதும் செய்கின்றனர்; யாகம் முதலானவை லிங்கபூஜையின் மிகச் சிறிய அம்சமே என்று ஸித்தர்களால் கொள்ளப்படுவதால் அது கிரியாலிங்கமெனப்படுகிறது.

किं यज्ञैरग्निहोत्राद्यैः किं तपोभिश्च दुश्चरैः।

लिङ्गार्चनरतिर्यस्य स सिद्धः सर्वकर्मसु॥३५॥

அக்கினிஹோத்திரம் போன்ற யாகங்களாலும் கடும் தவத்தாலும் யாது பயன்? லிங்க அருச்சனை ஒன்றையே இடையறாது செய்பவன் எல்லாக் கருமங்களிலும் வெற்றி பெறுகிறான்.

அரிய மாதவ மியாகங்க ளாற்பய னென்கொல்
பெருகு மாதர விலிங்கபூ சனையினிற் பெற்றான்
கிரியை யாவையுந் தரும்பல மவனரோ கிடைத்தான்
றெரியி லோவவற் கரிதென வில்லையோர் சிறிதும்.

அக்கினிஹோத்திரம் போன்ற யாகங்களாலும் கடும் தவத்தாலும் யாது பயன்? லிங்க அருச்சனை ஒன்றையே இடையறாது செய்பவன் எல்லாக் கருமங்களிலும் வெற்றி பெறுகிறான்.

ब्रह्मविष्ण्वादयः सर्वे विबुधा लिङ्गमाश्रिताः।
सिद्धाः स्वस्वपदे भान्ति जगत्तन्त्राधिकारिणः॥३६॥

इति क्रियालिङ्गस्थलम्

பிரம்மன், விஷ்ணு முதலான எல்லா தேவர்களும் லிங்கமொன்றையே தஞ்சமடைந்து தத்தம் பதவியில் நிலைபெற்றுள்ளனர்.

வேதன் மான்முத லாகிய விண்ணவர் குழாமுந்
தீதி லாதுயர் சித்தர்தங் கணங்களுஞ் சிறந்த
போத மாகிய விலிங்கபூ சனையினைப் புரிந்து
பேதமாயதம் பதமொடு தந்தொழில் பெற்றார்.

பிரம்மன், விஷ்ணு முதலான எல்லா தேவர்களும் லிங்கமொன்றையே தஞ்சமடைந்து தத்தம் பதவியில் நிலைபெற்றுள்ளனர்.

கிரியாலிங்கத்தலம் முற்றும்

## अथ भावलिङ्गस्थलम्

क्रिया यथा लयं प्राप्ता तथा भावोऽपि लीयते।
यत्र तद् देशिकैरुक्तं भावलिङ्गमिति स्फुटम्॥ ३७॥

கிரியையைப் போல் மனத்தில் தோன்றும் எண்ணங்களும் எங்கு ஒடுங்குகின்றனவோ அதுவே பாவலிங்கமாகும்.

கிரியை யெவ்வண மிலயமுற் றிட்டது கிளத்தி
னரிய பாவமு மவ்வகை யவ்விடத் தடங்கு
முரிய தாமது வேபாவ லிங்கமென் றுரைப்பர்
தெரிய நூல்பல கற்றுணர் வுடையதே சிகரே.

கிரியையைப் போல் மனத்தில் தோன்றும் எண்ணங்களும் எங்கு ஒடுங்குகின்றனவோ அதுவே பாவலிங்கமாகும்.

भावेन गृह्यते देवो भगवान् परमः शिवः।
किं तेन क्रियते तस्य नित्यपूर्णो हि स स्मृतः॥ ३८॥

பரமேசுவரன் பக்திபாவத்தால் ஆட்கொள்ளப்படுகிறான்; பரிபூரணனாகிய சிவபெருமானை அடைந்தோர்க்கு வேறு செய்வதென்?

பகவ னாகிய பரசிவன் பாவமுற் றிடுவன்
றிகழ்ப ராபரற் கனையதாற் செய்திடுஞ் செயலெ
னிகரி லாதவவ் விறையவ னித்தபூ ரணனாந்
தகையு ளானென வுள்கவென் றருமறை சாற்றும்.

பரமேசுவரன் பக்திபாவத்தால் ஆட்கொள்ளப்படுகிறான்; பரிபூரணனாகிய சிவபெருமானை அடைந்தோர்க்கு வேறு செய்வதென்?

अखण्डपरमानन्दबोधरूपः परः शिवः।
भक्तानामुपचारेण भावयोगात् प्रसीदति॥ ३९॥

அகண்ட பரிபூரணனான சிவபிரான் பக்தர்களின் ஆழ்ந்த பக்திபாவத்தினால் உவகை கொள்கிறான்.

கண்டி தப்படா வறிவுரு வாகிய கடவுள்
கொண்டு பத்தர்செய் துறுமுப சாரமே கொள்வான்
விண்ட வத்துயர்ப் பாவத்தின் விளங்குறு மென்று
பண்டு கற்றறி நல்லிசைப் புலவர்தாம் பகர்வார்.

அகண்ட பரிபூரணனான சிவபிரான் பக்தர்களின் ஆழ்ந்த பக்திபாவத்தினால் உவகை கொள்கிறான்.

मृच्छिलाविहिताल्लिङ्गाद् भावलिङ्गं विशिष्यते।
निरस्तसर्वदोषत्वाद् ज्ञानमार्गप्रवेशनात्॥४०॥

மண், கல் போன்றவற்றால் ஆகிய லிங்கங்களைக் காட்டிலும் பக்திபாவத்தால் ஆகிய லிங்கம் சாலச் சிறந்தது; ஏனெனில் அது ஞானமார்க்கத்தில் செல்ல உதவுகிறது.

மண்ணி லஞ்சிலை முதலிய கொண்டுதாம் வகுத்துப்
பண்ணு றுஞ்செய லிலிங்கமெங் கதினிகழ் பாவ
நண்ணி லிங்கமே சிறந்தது ஞானகா ரணமா
யெண்ணு றுங்குறை யின்றியே யமைவுறு மியல்பால்.

மண், கல் போன்றவற்றால் ஆகிய லிங்கங்களைக் காட்டிலும் பக்திபாவத்தால் ஆகிய லிங்கம் சாலச் சிறந்தது; ஏனெனில் அது ஞானமார்க்கத்தில் செல்ல உதவுகிறது.

विहाय बाह्यलिङ्गानि चिल्लिङ्गं मनसि स्मरन्।
पूजयेद् भावपुष्पैर्यो भावलिङ्गीति कथ्यते॥४१॥

வெளிப்புறத்திலுள்ள லிங்கங்களை விட்டு சித் வடிவான லிங்கத்தைப் பக்திபாவத்தலான பூக்களால் பூஜிப்பவன் பாவலிங்கியாவான்.

புறத்தி லிங்கம்விட் டுளத்தினிற் போதலிங் கத்தை
மறப்ப றும்படி வைத்துளிப் பாவமென் மலராற்
சிறப்பு றுஞ்சிவ பூசனை யன்பொடு செய்யு
மறப்பெ ருந்தகை தனைப்பாவ லிங்கியென் றறிவாய்.

வெளிப்புறத்திலுள்ள லிங்கங்களை விட்டு சித் வடிவான லிங்கத்தைப் பக்திபாவத்தலான பூக்களால் பூஜிப்பவன் பாவலிங்கியாவான்.

मूलाधारेऽथवा चित्ते भ्रूमध्ये वा सुनिर्मलम्।
दीपाकारं यजन् लिङ्गं भावद्रव्यैः स योगवान्॥४२॥

மூலாதாரத்திலோ, சித்தத்திலோ புருவநடுவிலோ நிர்மலமான தீபவடிவான லிங்கத்தைப் பாவனையாலான பொருட்களால் வழிபடுவோன் யோகத்தையுடையவன்.

மருவு மாதியா தாரநன் மனமலர் வரிவிற்
புருவ நாப்பணென் றுரைத்திடப் பொருந்திவற் றொன்றிற்
றிரிவி னல்விளக் குருவமாஞ் சிவன்றனைப் பாவ
வுருவ நற்பொருள் கொண்டருச் சிப்பவன் யோகி.

மூலாதாரத்திலோ, சித்தத்திலோ புருவநடுவிலோ நிர்மலமான தீபவடிவான லிங்கத்தைப் பாவனையாலான பொருட்களால் வழிபடுவோன் யோகத்தையுடையவன்.

स्वानुभूतिप्रमाणेन ज्योतिर्लिङ्गेन संयुतः।
शिलामृद्दारुसम्भूतं न लिङ्गं पूजयत्यसौ॥४३॥
क्रियारूपा तु या पूजा सा ज्ञेया स्वल्पसंविदाम्।
आन्तरा भावपूजा तु शिवस्य ज्ञानिनां मता॥४४॥

इति भावलिङ्गस्थलम्

தனது அனுபவத்திற்கேற்ற சோதிவடிவான பாவலிங்கத்தைப் பூஜிப்பவன் கல், மண் முதலானவற்றாலான லிங்கத்தைப் பூஜிப்பதில்லை; லிங்கபூஜையை ஒரு கிரியையாகச் சிற்றறிவுடையோர் நோக்குவர், ஆனால் ஞானிகள் அகத்தில் இயற்றும் சிவபூஜையை பாவபூஜையாகக் கொள்வர்.

மரங்கல் மண்ணினால் வகுத்துள விலிங்கவந் தனையைப்
புரிந்தி டானநு பூதியாற் பரஞ்சுடர்ப் புணர்வோன்
விரிந்தி டுங்கிரி யாபூசை புல்லறி வினர்க்கந்
தரங்க பூசனை யுரித்து மெய்ஞ் ஞானிக டமக்கே.

தனது அனுபவத்திற்கேற்ற சோதிவடிவான பாவலிங்கத்தைப் பூஜிப்பவன் கல், மண் முதலானவற்ருலான லிங்கத்தைப் பூஜிப்பதில்லை; லிங்கபூஜையை ஒரு கிரியையாகச் சிற்றறிவுடையோர் நோக்குவர், ஆனல் ஞானிகள் அகத்தில் இயற்றும் சிவபூஜையை பாவபூஜையாகக் கொள்வர்.

பாவலிங்கத்தலம் முற்றும்

## अथ ज्ञानलिङ्गस्थलम्

तद्भावज्ञापकज्ञानं लयं यत्र समश्नुते।
तज्ज्ञानलिङ्गमाख्यातं शिवतत्त्वार्थकोविदैः ॥४५॥

பாவலிங்கஞானம் சென்று ஒடுங்குவதே ஞானலிங்கமாகும்.

அன்ன பாவஞா பகஞான மெவ்விடத் தடங்கி
மன்னி நின்றிடு மதுஞான லிங்கமா மதிக்கி
னென்ன விங்குரை யாடுவர் நன்றுற விலங்க
வுன்ன ருஞ்சிவ தத்துவ முணர்ந்திடு முரவோர்.

பாவலிங்கஞானம் சென்று ஒடுங்குவதே ஞானலிங்கமாகும்.

त्रिमूर्तिभेदनिर्मुक्तं त्रिगुणातीतवैभवम्।
ब्रह्म यद् बोध्यते तत्तु ज्ञानलिङ्गमुदाहृतम् ॥४६॥

பிரம்மா முதலான மும்மூர்த்தி வேற்றுமைகளற்றதும், சத்துவம், தமஸ், ரஜஸ் ஆகிய முக்குண வேற்றுமையற்றதுமான பரப்பிரம்மத்தைப் போதிப்பதே ஞானலிங்கமெனப்படும்.

முக்கு ணங்கண் மும்மூர்த்திகள் கடந்துணர் முதன்மை
தக்கு றும்பரப் பிரமமே ஞானலிங் கந்தான்
பக்க தூலதூக் குமங்களிற் கிரியைநற் பாவம்
புக்கு றும்பராற் பரத்தினின் ஞானமே பொருந்தும்.

பிரம்மா முதலான மும்மூர்த்தி வேற்றுமைகளற்றதும், சத்துவம், தமஸ், ரஜஸ் ஆகிய முக்குண வேற்றுமையற்றதுமான பரப்பிரம்மத்தைப் போதிப்பதே ஞானலிங்கமெனப்படும்.

स्थूले क्रियासमापत्तिः सूक्ष्मे भावस्य सम्भवः।
स्थूलसूक्ष्मपदातीते ज्ञानमेव परात्मनि॥४७॥
कल्पितानि हि रूपाणि स्थूलानि परमात्मनः।
सूक्ष्माण्यपि च तैः किं वा परबोधं समाचरेत्॥४८॥

தூலத்தில் கிரியைகளும், சூக்குமத்தில் மனத்தின் பாவங்களும் உண்டாகின்றன; பரமான்மாவின் தூல சூக்கும உருவங்கள் எல்லாம் மனத்தால் கற்பிக்கப்பட்டவையே. அவற்ருல் அனைத்துக்கும் மேலான பரத்தை உணர இயலாது.

தூல சூக்கும வுருவங்கள் கற்பனை சொல்லின்
மேல தாம்பரஞ் சுடர்க்கவற் றால்விளை பயனென்
மாலி லாதுயர் ஞானலிங் கத்தையே மதிக்க
நூலெ லாமொரு வந்தமிங் குரைத்திடு நுனித்து.

தூலத்தில் கிரியைகளும், சூக்குமத்தில் மனத்தின் பாவங்களும் உண்டாகின்றன; பரமான்மாவின் தூல சூக்கும உருவங்கள் எல்லாம் மனத்தால் கற்பிக்கப்பட்டவையே. அவற்ருல் அனைத்துக்கும் மேலான பரத்தை உணர இயலாது.

परात्परं तु यद् ब्रह्म परमानन्दलक्षणम्।
शिवाख्यं ज्ञायते येन ज्ञानलिङ्गीति कथ्यते॥४९॥
बाह्यक्रियां परित्यज्य चिन्तामपि च मानसीम्।
अखण्डज्ञानरूपत्वं यो भजेन्मुक्त एव सः॥५०॥

## इति ज्ञानलिङ्गस्थलम्

சிவனெனும் பரப்பிரமமானது இவற்றைக் கடந்தது; அதை உணர்கிறவனே ஞானலிங்கியாவான். அவனே வெளிப்புற உறுப்புகள் மற்றும் மனத்தின் கிரியைகளை அறவே நீக்கி அகண்டமான ஞானவடிவத்தைத் தியானித்து முக்தியடைகிருன்.

சிறந்த சச்சிதா நந்தமெய்ச் சோதியாஞ் சிவனை
யறிந்து ளானெவ னவன்ஞா னலிங்கியென் றறிவாய்

புறந்த ருஞ்செயற் கிரியையும் பாவமும் போக்கி
நிறைந்தி டுஞ்சிவ மடைப வனேமுத்த னிகழ்த்தின்.

சிவனெனும் பரப்பிரமமானது இவற்றைக் கடந்தது; அதை உணர்கிறவனே ஞானலிங்கியாவான். அவனே வெளிப்புற உறுப்புகள் மற்றும் மனத்தின் கிரியைகளை அறவே நீக்கி அகண்டமான ஞானவடிவத்தைத் தியானித்து முக்தியடைகிறான்.

ஞானலிங்கத்தலம் முற்றும்.

## अथ स्वयंस्थलम्

तद्भावज्ञापकज्ञानं यत्र ज्ञाने लयं व्रजेत्।
तद्वानेष समाख्यातः स्वाभिधानो मनीषिभिः॥५१॥

பாவத்தை உணர்த்தும் ஞானம் எந்த ஞானத்தில் ஒடுங்குகிறதோ அதை உடையவன் ஸ்வன் எனப்படுகிறான்.

பாவ ஞாபக ஞானமெய்ஞ் ஞானத்தின் பாற்போய்
மேவி யேயொடுங் குறுமந்த ஞானவான் விளம்பிற்
பூவின் மேவுறுஞ் சுயனாம மென்னவே புகல்வர்
காவி வாணெடுங் கண்ணுமை பங்கனூல் கற்றோர்.

பாவத்தை உணர்த்தும் ஞானம் எந்த ஞானத்தில் ஒடுங்குகிறதோ அதை உடையவன் சுயன் எனப்படுகிறான்.

स्वच्छन्दाचारसन्तुष्टो ज्योतिर्लिङ्गपरायणः।
आत्मस्थसकलाकारः स्वाभिधो मुनिसत्तमः॥५२॥

அந்த ஸ்வன் தன்னிச்சையாகக் களிப்படைந்து சோதிலிங்கத்தையே எப்போதும் தியானித்து தன்னிடத்தே அனைத்தையும் உணர்கிறான்.

சோதி லிங்கதற் பரனுமாய்த் தோன்றுறு முலக
மியாது மோர்சிவ மயமெனக் கண்டுதன் னிச்சை
நீதி செய்துறு மொருமுனி புங்கவ னிகழ்த்தி
னாதி யாயுயர் சுயனாம முடையவ னாகும்.

அந்த ஸ்வன் தன்னிச்சையாகக் களிப்படைந்து சோதிலிங்கத்தையே எப்போதும் தியானித்து தன்னிடத்தே அனைத்தையும் உணர்கிறான்.

निर्ममो निरहङ्कारो निरस्तक्लेशपञ्चकः।
भिक्षाशी समबुद्धिश्च मुक्तप्रायो मुनिर्भवेत्॥५३॥

தான் தனது என்ற எண்ணமின்றி ஐம்பொறிகளால் உண்டாகும் துன்பங்கள் யாதுமின்றி பிச்சை உண்டு அனைத்தையும் சமமாக நோக்கும் அவன் முத்தியடைந்தவனே.

பிச்சை யூணடைந் தொழிந்தவாங் காரமும் பெற்று
நிச்ச மிந்திய மவித்துறு கிலேசங்க ணீக்கி
நச்சு பூதிய னாகியே நடுநிலை நண்ணி
யிச்சை யோடுவர்ப் பிலான்பர முத்தனென் றிசைப்பர்.

தான் தனது என்ற எண்ணமின்றி ஐம்பொறிகளால் உண்டாகும் துன்பங்கள் யாதுமின்றி பிச்சை உண்டு அனைத்தையும் சமமாக நோக்கும் அவன் முத்தியடைந்தவனே.

यदृच्छालाभसन्तुष्टो भस्मनिष्ठो जितेन्द्रियः।
समवृत्तिर्भवेद् योगी भिक्षुके वा नृपेऽथवा॥५४॥
पश्यन् सर्वाणि भूतानि संसारस्थानि सर्वशः।
स्मयमानः परानन्दे लीनात्मा वर्तते सुधीः॥५५॥

அவன் கிடைத்ததைக் கொண்டு மனமகிழ்ந்து, திருநீற்றின்பால் உறுதியான பக்தி கொண்டு பிச்சையுண்ணியையும் அரசனையும் சமமாகவே நோக்குகிறான். சம்சாரத்திலுழலும் எல்லா ஜீவராசிகளையும் கண்டு தான் பேரானந்தத்தில் மூழ்கியிருப்பான்.

துன்ப வெம்பவ நேமியிற் சுழன்றிடு பவரைத்
தன்பெ ருங்கணிற் கண்டிறும் பூதொடு சார்வுற்
றின்ப வெள்ளத்தின் மூழ்கினோ னாகியே யிருப்பன்
முன்ப கர்ந்துள நிலையிடை நின்றிடு முனிவன்.

சம்சாரத் துண்பத்திலுழலும் எல்லா ஜீவராசிகளையும் கண்டு தான் பேரானந்தத்தில் மூழ்கியிருப்பான்.

ध्यानं शैवं तथा ज्ञानं भिक्षा चैकान्तरशीलता।
यतेश्चत्वारि कर्माणि न पञ्चममिहेष्यते॥५६॥

इति स्वयंस्थलम्

சிவத்தியானம், சிவஞானம், பிச்சை எடுத்தல், தனித்திருத்தல் ஆகிய நான்கு செயல்களே ஒரு முனிவருக்கு உள்ளன; இவற்றைத் தவிர ஐந்தாம் செயல் யாதும் இல்லை.

நண்ணு றுஞ்சிவத் தியாநநற் சைவஞா னந்தா
னுண்ணு றுஞ்செயற் பிச்சையே காந்தசீ லத்தோ
டெண்ணு மிங்கிவை நான்கையு மன்றிமே லெண்ணப்
பண்ணு றுஞ்செய லொன்றிலை பரமயோ கிக்கே.

சிவத்தியானம், சிவஞானம், பிச்சை எடுத்தல், தனித்திருத்தல் ஆகிய நான்கு செயல்களே ஒரு முனிவருக்கு உள்ளன; இவற்றைத் தவிர ஐந்தாம் செயல் யாதும் இல்லை.

சுயத்தலம் முற்றும்

अथ चरस्थलम्

स्वरूपज्ञानसम्पन्नो ध्वस्ताहंममताकृतिः।
स्वयमेव स्वयंभूत्वा चरतीति चराभिधः॥५७॥

தனது உண்மைச் சொரூபத்தையறிந்தவனாய் நான் எனது என்ற எண்ணங்களற்றவனாய் தானே தன்னுண்மை நிலையிலேயே இருப்பவன் சரன் என்றழைக்கப்படுகிறான்.

ஒழிந்து போகுமாங் காரமு மமதையு முளனாய்
மொழிந்தி டாததன் சொரூபஞா னத்தினின் முதிர்ந்தோன்
றழங்கு வேலைதூ ழுலகினிற் றானேதா னாகி
வழங்க வேசரித் திடுதலாற் சரப்பெயர் மருவும்.

தனது உண்மைச் சொரூபத்தையறிந்தவனாய் நான் எனது
என்ற எண்ணங்களற்றவனாய் தானே தன்னுண்மை
நிலையிலேயே இருப்பவன் சரன் என்றழைக்கப்படுகிறான்.

कामक्रोधादिनिर्मुक्तः शान्तिदान्तिसमन्वितः।
समबुद्ध्या चरेद् योगी सर्वत्र शिवबुद्धिमान्॥५८॥
इदं मुख्यमिदं हीनमिति चिन्तामकल्पयन्।
सर्वत्र संचरेद् योगी सर्वं ब्रह्मेति भावयन्॥५९॥

காமம் குரோதம் முதலியன அற்றவனாய் மனம் மெய்
ஆகியவற்றை அடக்கி எங்கும் சிவபெருமானையே காண்பவனாய்
எல்லாவற்றையும் சமமாக நோக்குபவன் யோகி; இது
உயர்ந்தது இது தாழ்ந்தது என்ற எண்ணமில்லாதவனாய்
யோகியானவன் அனைத்தையும் பிரம்மமாகவே காண்கிறான்.

தீர்ந்த காமமே முதலன செறிந்துயர் சாந்தி
தாந்தி யோடெலாஞ் சிவமய மாகவே சார்ந்து
போந்து வீதுயர் வீதிழி வென்பது போக்கிச்
சார்ந்தி டுஞ்சம புத்தியாற் சரித்திடும் யோகி.

காமம் குரோதம் முதலியன அற்றவனாய் மனம் மெய்
ஆகியவற்றை அடக்கி எங்கும் சிவபெருமானையே காண்பவனாய்
எல்லாவற்றையும் சமமாக நோக்குபவன் யோகி; இது
உயர்ந்தது இது தாழ்ந்தது என்ற எண்ணமில்லாதவனாய்
யோகியானவன் அனைத்தையும் பிரம்மமாகவே காண்கிறான்.

न सम्मानेषु सम्प्रीतिं नावमानेषु च व्यथाम्।
कुर्वाणः सञ्चरेद् योगी कूटस्थे स्वात्मनि स्थितः॥६०॥

தன்னை மதிப்போரிடம் பரிவும் இகழ்வோரைப் பகைக்காமலும்
என்றும் நிலைபெற்றுள்ள பிரம்மத்தையே நினைந்திருப்பவனே
யோகி.

அரிய கூடத்த னாயதன் னிலையினை யடைந்த
துரிய யோகிதான் றனைத்தொழு வாரிடைத் தோன்றும்

பரிவு றானிகழ்ந் தவரிடை வெறுத்துளம் பகைக்குந்
திரிவி லானொரு பரிசினாற் சரித்திடல் செய்யும்.

தன்னை மதிப்போரிடம் பரிவும் இகழ்வோரைப் பகைக்காமலும் என்றும் நிலைபெற்றுள்ள பிரம்மத்தையே நினைந்திருப்பவனே யோகி.

अप्राकृतैर्गुणैः स्वीयैः सर्वं विस्मापयन् जनम्।
अद्वैतपरमानन्दमुदितो देहिवच्चरेत्॥ ६१॥

பிரகிருதியைக் கடந்த தனது உயர்ந்த குணங்களால் மக்களை எல்லாவற்றையும் மறக்கச் செய்து அத்துவைத பரமானந்தத்தால் களிப்படைந்து இந்த உடலில் வாழ்கிறான்.

மாயை பெற்றிடாக் குணமொடு மருவியே யென்று
மாய வத்துவி தாநந்தப் பெருங்களிப் படைந்த
தூய மெய்ச்சிவ யோகிதான் றொல்சக நகைத்துச்
சாயு மற்றுள வுடம்பிபோற் சரித்திடு மன்றே.

பிரகிருதியைக் கடந்த தனது உயர்ந்த குணங்களால் மக்களை எல்லாவற்றையும் மறக்கச் செய்து அத்துவைத பரமானந்தத்தால் களிப்படைந்து இந்த உடலில் வாழ்கிறான்.

न प्रपञ्चे निजे देहे न धर्मे न च दुष्कृते।
गतवैषम्यधीर्धीरो यतिश्चरति देहिवत्॥ ६२॥
प्राकृतैश्वर्यसम्पत्तिपराङ्मुखमनःस्थितिः।
चिदानन्दनिजात्मस्थो मोदते मुनिपुङ्गवः॥ ६३॥

## इति चरस्थलम्

இப்பிரபஞ்சத்திலும், தனது உடலிலும், தருமம் அதருமம் ஆகியவற்றிலும் மனவேறுபாடின்றி ஒரு வீரனைப் போல் துறவியானவன் இவ்வுடலில் வாழ்கிறான்; அழியக்கூடிய மாயா செல்வங்களை அறவே ஒதுக்கி தனது சைதன்னிய ஆனந்தத்திலேயே திளைப்பவனே முனிவர்களில் சிறந்தவன்.

விதிவி லக்கினிற் பட்டிடா வொருஞான வீரன்
கதிய டுத்திடு புண்ணிய பாவமுங் கருதான்
மதிம யக்குறு மாயைவாழ் வினையுள மதியா
னதிகந் வத்துவி தாநந்த முற்றக மகிழ்வான்.

இப்பிரபஞ்சத்திலும், தனது உடலிலும், தருமம் அதருமம் ஆகியவற்றிலும் மனவேறுபாடின்றி ஒரு வீரனைப் போல் துறவியானவன் இவ்வுடலில் வாழ்கிறான்; அழியக்கூடிய மாயா செல்வங்களை அறவே ஒதுக்கி தனது சைதன்னிய ஆனந்தத்திலேயே திளைப்பவனே முனிவர்களில் சிறந்தவன்.

சரத்தலம் முற்றும்.

## अथ परस्थलम्

स्वयमेव स्वयं भूत्वा चरतः स्वस्वरूपतः।
परं नास्तीति बोधस्य परत्वमभिधीयते॥६४॥

தான் தானாகவே தன்னிலையிலேயே இருந்து இதனினும் உயர்ந்தது வேறொன்றில்லை என்று இருப்பது பரத்துவம் எனப்படுகிறது.

வேண்டு மாறுதான் சரித்திடும் விமலநல் யோகி
யீண்டு தன்சொரூ பந்தனிற் பரமிலை யென்னு
மாண்ட ஞானத்தி னுக்குயர் பரமரூஉ மெனவே
நீண்ட நூற்பொரு ளுணர்ந்துளோர் நிகழ்த்துவ ரன்றே.

தான் தானாகவே தன்னிலையிலேயே இருந்து இதனினும் உயர்ந்தது வேறொன்றில்லை என்று இருப்பது பரத்துவம் எனப்படுகிறது.

स्वतन्त्रः सर्वकृत्येषु परत्वेन भावितः।
तृणीकुर्वन् जगज्जालं वर्तते शिवयोगिराट्॥६५॥

சிவயோகிகளுள் அரசனானவர் எல்லாச் செயல்களிலும் சுவதந்திரமாய் மேலான பரதத்துவத்தையே நினைந்து இவ்வுலகத்தைத் துரும்பாக எண்ணுகிறான்.

தன்னை யேபரத் துவத்தினாற் பாவிக்குந் தகையா
னென்ன வாயின தொழில்களுஞ் சுதந்தரத் தியற்றி
யின்ன லாமுல கினையொரு பொருளென வெண்ணான்
வன்ன மாச்சிர மங்களா சாரங்கள் மதியான்.

சிவயோகிகளுள் அரசனானவர் எல்லாச் செயல்களிலும் சுவதந்திரமாய் மேலான பரதத்துவத்தையே நினைந்து இவ்வுலகத்தைத் துரும்பாக எண்ணுகிறான்.

वर्णाश्रमसमाचारमार्गनिष्ठापराङ्मुखः।
सर्वोत्कृष्टं स्वमात्मानं पश्यन् योगी तु मोदते॥६६॥

विश्वातीतं परब्रह्म शिवाख्यं चित्स्वरूपकम्।
तदेवाहमिति ज्ञानी सर्वोत्कृष्टः स उच्यते॥ ६७॥

யோகியானவன் வருணாசிரம ஒழுக்கங்களில் மனஈடுபாடின்றி அனைத்துக்கும் மேலான தனது ஆன்மாவை உணர்ந்து பேரானந்தம் கொள்கிறான். உலகங்களைக் கடந்த சிவனெனும் பரப்பிரமமே நான் என்றுணர்ந்த ஞானியே மிகச் சிறந்தவன்.

உருவ ஞானமா யுலகிறந் தொருசிவ மென்னப்
பரவு றும்பரப் பிரமமே நானெனப் பார்க்கு
முரவ னேயுயர்ந் தோனுல குறுமய லொழித்துக்
கரவி லாததன் சொரூபமே காண்பவன் முத்தன்.

உலகங்களைக் கடந்த சிவனெனும் பரப்பிரமமே நான் என்றுணர்ந்த ஞானியே மிகச் சிறந்தவன்.

अचलं ध्रुवमात्मानमनुपश्यन्निरन्तरम्।
निरस्तविश्वविभ्रान्तिर्जीवन्मुक्तो भवेन्मुनिः॥ ६८॥

எவ்வித மாறுபாடுமில்லாத நிலையான தனது ஆன்மாவையே எதிலும் எப்போதும் கண்டு உலக மயக்கம் சிறிதுமின்றி இருப்பவனே ஜீவன்முக்தனாகிறான்.

ब्रह्माद्याः किं नु कुर्वन्ति देवताः कर्ममार्गगाः।
कर्मातीतपदस्थस्य स्वयं ब्रह्मस्वरूपिणः॥ ६९॥

கருமமார்க்கத்தை விட்டொழிந்து பிரம்மசொரூபியாய்த் திகழ்பவனை கருமங்களின் பிடியிலிருக்கும் பிரம்மா போன்ற தேவர்கள் என்ன செய்ய இயலும்?

பன்ன ருங்கரு மங்கடந் துளவொரு பதத்திற்
றன்னை யொண்சிவ மாகக்கண் டிருப்பவன் றனக்கு
முன்னு றுங்கரு மத்துறு பதத்தயன் முதலோ
ரென்ன செய்கில ரேவலென் றிசைப்பதற் கிசைந்து.

கருமமார்க்கத்தை விட்டொழிந்து பிரம்மசொரூபியாய்த் திகழ்பவனை கருமங்களின் பிடியிலிருக்கும் பிரம்மா போன்ற தேவர்கள் என்ன செய்ய இயலும்?

स्वेच्छया सञ्चरेद् योगी विमुञ्चन् देहमानिताम्।
दर्शनैः स्पर्शनैः सर्वज्ञानापि विमोचयेत्॥७०॥

தனது உடல் முதலியவற்றில் எவ்விதப் பற்றுமின்றி சுதந்திரமாகச் செயல்படும் யோகி தனது கண்பார்வையாலும், கரத்தால் தொடுவதாலும் முற்றுமுணர்ந்தோர்க்கும் முக்தியளிக்கவல்லவன்.

விட்ட தேகமா னத்தினை யுடையவன் வேண்டு
மிட்ட மாகிய நெறியினிற் சரித்திரு வினையுட்
பட்டு ளோர்க்குறு தரிசந பரிசனங் களினாற்
கட்டு மாய்வுறச் செய்வனென் றியம்புவர் கற்றோர்.

தனது உடல் முதலியவற்றில் எவ்விதப் பற்றுமின்றி சுதந்திரமாகச் செயல்படும் யோகி தனது கண்பார்வையாலும், கரத்தால் தொடுவதாலும் முற்றுமுணர்ந்தோர்க்கும் முக்தியளிக்கவல்லவன்.

नित्ये निर्मलभावेन निरुपमे निर्धूतविश्वभ्रमे
सत्तानन्दचिदात्मके परशिवे साम्यं गतः सम्यमी।
प्रध्वस्ताश्रमवर्णधर्मनिगलः स्वच्छन्दसञ्चारवान्
देहीवाद्भुतवैभवो विजयते जीवन्मुक्तः सुधीः॥७१॥

इति श्रीमत्षट्स्थलब्रह्मिणा शिवयोगिनाम्ना रेणुकाचार्येण विरचिते सिद्धान्तशिखामणौ लिङ्गस्थले भक्तस्थलगतनवविधलिङ्गप्रसङ्गो नाम पञ्चदशः परिच्छेदः समाप्तः॥१५॥

நிலையானதும் எவ்வித மாறுபாடற்றதும் மாசற்றதும் ஒப்பற்றதுமான ஸச்சிதானந்த பரப்பிரம்மத்துடன் சமநிலையடைந்த யோகியானவன் வருணாசிரம ஒழுக்கங்கள் முதலான தளைகள் எதுவுமின்றி சுதந்திரமாகத் திரிந்து பற்பல

அற்புத அனுபவங்களை அடைந்து ஜீவன்முக்தனாக விளங்குகின்றான்.

மயலிலா தசச் சிதாநந்த வடிவமாஞ் சிவத்தி
லயலி லாதவோர் சமாநதை யடைந்துள யோகி
செயலெ லாந்தன திச்சையாச் செய்துதே சிகன்போற்
சயமு றாவுயிர் முத்தனாய் வியப்பொடு சரிக்கும்.

நிலையானதும் எவ்வித மாறுபாடற்றதும் மாசற்றதும் ஒப்பற்றதுமான ஸச்சிதானந்தபரப்பிரம்மத்துடன் சமநிலையடைந்த யோகியானவன் வருணாசிரம ஒழுக்கங்கள் முதலான தளைகள் எதுவுமின்றி சுதந்திரமாகத் திரிந்து பற்பல அற்புத அனுபவங்களை அடைந்து ஜீவன்முக்தனாக விளங்குகின்றான்.

பரத்தலம் முற்றும்.

## षोडशः परिच्छेदः
## अथ क्रियागमस्थलम्

स्थलानां नवकं प्रोक्तं भक्तस्थलसमाश्रयम्।
माहेश्वरस्थले सिद्धं स्थलभेदं वदस्व मे॥ १॥

பக்தஸ்தலத்தைச் சேர்ந்த ஒன்பது ஸ்தலங்கள் கூறப்பட்டன; மாஹேசுவரஸ்தலத்திலுள்ள பிரிவுகளைக் கூறுக.

முன்புற மொழிந்து நின்ற முறைபத் தத்தலந் தொடர்ந்த
வொன்பது தலமு மைய வுரைத்தனை தமிய னேனுக்
கின்புற வினிமா கேசத் தலத்தினை யெய்தி நிற்குந்
துன்பறு தலபே தங்க டம்மையுந் தோன்றச் சொல்வாய்.

பக்தஸ்தலத்தைச் சேர்ந்த ஒன்பது ஸ்தலங்கள் கூறப்பட்டன; மாஹேசுவரஸ்தலத்திலுள்ள பிரிவுகளைக் கூறுக.

माहेश्वरस्थले सन्ति स्थलानि नव तापस।
क्रियागमस्थलं पूर्वं ततो भावागमस्थलम्॥ २॥
ज्ञानागमस्थलं चाथ सकायस्थलमीरितम्।
ततोऽकायस्थलं प्रोक्तं परकायस्थलं ततः॥ ३॥
धर्माचारस्थलं चाथ भावाचारस्थलं ततः।
ज्ञानाचारस्थलं चेति क्रमादेषां भिदोच्यते॥ ४॥

கிரியாகமம், பாவாகமம், ஞானகமம், ஸகாயம், அகாயம், பரகாயம், தர்மாசாரம், பாவாசாரம், ஞானசாரம் என மாஹேசுவரஸ்தலம் ஒன்பது பிரிவுகளையுடையது; அவற்றை முறையே கூறக் கேள்.

கிரியைநற் பாவஞானங் கிடைக்குமா கமஞ்ச காயம்
பரிவறு மகாயம் பின்னர்ப் பரகாயந் தருமம் பாவ
மருவறு மாசா ரத்தான் மகேசநற் றலமொன் பானா
முறைசெயு மவற்றி னுண்மை யுரைக்குது முனிவ கேண்மோ.

கிரியாகமம், பாவாகமம், ஞாஞகமம், ஸகாயம், அகாயம், பரகாயம், தர்மாசாரம், பாவாசாரம், ஞாஞசாரம் என மாஹேசுவரஸ்தலம் ஒன்பது பிரிவுகளையுடையது; அவற்றை முறையே கூறக் கேள்.

शिवो हि परमः साक्षात् पूजा तस्य क्रियोच्यते।
तत्परा आगमा यस्मात् तदुक्तोऽयं क्रियागमः॥५॥

சிவபெருமான் ஒருவனே அனைத்திற்கும் மேலானவன், அவனைப் பூஜிப்பதே கிரியை, சிவபெருமானைப் பற்றியே பேசுவன ஆகமங்கள்; அவஞல் கூறப்பட்டவையே கிரியாகமங்கள்.

அப்பர யோகி தானே யருஞ்சிவ மவன்றன் பூசை
யொப்புறு கிரியை யாகு முரைத்தவக் கிரியை தன்னை
மெய்ப்புறு முதன்மை யாக மேவுமோ கமந்த னக்குச்
செப்புறு பெயர்யா தென்னிற் செழுங்கிரி யாகமந்தான்.

சிவபெருமான் ஒருவனே அனைத்திற்கும் மேலானவன், அவனைப் பூஜிப்பதே கிரியை, சிவபெருமானைப் பற்றியே பேசுவன ஆகமங்கள்; அவஞல் கூறப்பட்டவையே கிரியாகமங்கள்.

प्रकाशते यथा नाग्निररण्यां मन्थनं विना।
क्रियां विना तथान्तःस्थो न प्रकाशो भवेच्छिवः॥६॥
न यथा विधिलोपः स्याद्यथा देवः प्रसीदति।
यथागमः प्रमाणं स्यात्तथा कर्म समाचरेत्॥७॥

அரணிக்கட்டையைக் கடைந்தாலொழிய அதிலுள்ள நெருப்பு வெளிப்படாதது போல் கிரியைகளின்றி அகத்திலுள்ள சிவபிரான் பிரகாசமடைவதில்லை; விதிகளை மீருமலும், சிவபெருமான் மனதில் உவகை கொள்ளுமாறும் ஆகமங்கள் பிரமாணமாக இருக்குமாறும் கிரியைகளைச் செய்யவேண்டும்.

ஒள்ளழ லரணி தன்னிற் கடைதலை யொழிந்துண் டாகா
துள்ளுறுஞ் சிவனுஞ் செய்யுங் கிரியையை யொழிந்து
தோன்றான்

றெள்ளுறு நியம நாசஞ் சேர்ந்திடா தாக மத்திற்
கொள்ளுறு முறைவ ழாமற் குறித்துநற் கிரியை செய்க.

அரணிக்கட்டையைக் கடைந்தாலொழிய அதிலுள்ள நெருப்பு வெளிப்படாதது போல் கிரியைகளின்றி அகத்திலுள்ள சிவபிரான் பிரகாசமடைவதில்லை; விதிகளை மீருமலும், சிவபெருமான் மனதில் உவகை கொள்ளுமாறும் ஆகமங்கள் பிரமாணமாக இருக்குமாறும் கிரியைகளைச் செய்யவேண்டும்.

विधिः शिवनियोगोऽयं तस्माद् विहितकर्मणि।
शिवाराधनबुद्ध्यैव निरतः स्याद् विचक्षणः॥८॥
गुरोरादेशमासाद्य पूजयेत् परमेश्वरम्।
पूजिते परमेशाने पूजिताः सर्वदेवताः॥९॥

ஆகமங்களில் விளக்கப்பட்ட அனைத்துக் கருமங்களும் சிவபெருமானுடைய ஆணை, அவை யாவும் சிவபெருமானை ஆராதிக்கும் உபாயங்களே என்ற எண்ணம் கொள்ளவேண்டும்; குருவின் கட்டளையைப் பெற்று பரமேசுவரனைப் பூஜிக்கவேண்டும்; அவரைப் பூஜிப்பதால் அனைத்துத் தேவர்களும் பூஜிக்கப்பட்டவர்களாவார்கள்.

விதித்திடு கருமந் தன்னுள் விசேடமாஞ் சிவன தேவன்
மதித்தது தனையே செய்க மாசிலா சானைக் கொண்டு
பொதுத்தவிர் பூசை செய்க புராரியைப் பரமன் றன்னைத்
துதிப்பொடு பூசை செய்வோன் சுரரெலாம் பூசை செய்வோன்.

ஆகமங்களில் விளக்கப்பட்ட அனைத்துக் கருமங்களும் சிவபெருமானுடைய ஆணை, அவை யாவும் சிவபெருமானை ஆராதிக்கும் உபாயங்களே என்ற எண்ணம் கொள்ள வேண்டும்; குருவின் கட்டளையைப் பெற்று பரமேசுவரனைப் பூஜிக்கவேண்டும்; அவரைப் பூஜிப்பதால் அனைத்துத் தேவர்களும் பூஜிக்கப்பட்டவர்களாவார்கள்.

सदा शिवार्चनोपायसामग्रीव्यग्रमानसः।
शिवयोगरतो योगी मुच्यते नात्र संशयः॥१०॥

சிவபூஜைக்குத் தேவையான பொருட்களைச் சேமிப்பதிலேயே மனநாட்டம் கொண்டு சிவயோகத்தில் ஈடுபட்ட யோகி முக்தி அடைதல் திண்ணம்.

கருதுறு சிவபூ சைக்கட் கருவிக ளான வற்றி
லொருதனி மனம்வைத் தென்று முயர்சிவ யோக வேட்கை
புரிதரு மமல யோகி பொருந்திய மலங்க ளெல்லா
மிரிதர வகற்ற வல்ல னிதிலிலை யைய மன்றே.

சிவபூஜைக்குத் தேவையான பொருட்களைச் சேமிப்பதிலேயே மனநாட்டம் கொண்டு சிவயோகத்தில் ஈடுபட்ட யோகி எல்லா மலங்களினின்றும் விடுபடுதல் திண்ணம்.

अन्धपङ्गुवदन्योऽन्यसापेक्षो ज्ञानकर्मणी।
फलौत्पत्तौ विरक्तस्य तस्मात् तद्द्वयमाचरेत्॥ ११॥

ஞானமும் கருமமும் குருடனையும் முடவனையும் போன்றவை; அவற்றின் பயனில் விருப்பமில்லாதோனும் அவ்விரண்டையும் செய்யவேண்டும்.

கண்ணிலன் முடவன்போலக் கருதரு ஞான கன்ம
மெண்ணுறு மிரண்டு மொன்றை யொன்றவா யிருத்த லாலே
நண்ணுறு பலன்வி ருப்பி னன்றுறத் துறந்தா னேனும்
பண்ணுக வவையிரண்டு மெனமறை பகரு மன்றே.

ஞானமும் கருமமும் குருடனையும் முடவனையும் போன்றவை; அவற்றின் பயனில் விருப்பமில்லாதோனும் அவ்விரண்டையும் செய்யவேண்டும்.

ज्ञाने सिद्धेऽपि विदुषां कर्मापि विनियुज्यते।
फलाभिसन्धिरहितं तस्मात् कर्म न संत्यजेत्॥ १२॥

ஞானம் கைவரப்பெற்றவனும் கருமங்களை விடலாகாது; எனவே பலன்களில் விருப்பமற்று அவற்றைச் செய்யவேண்டும்.

அறிவினர் தமக்கு ஞான மடைந்ததிங் கெனினு மென்று
நெறிதரு கருமங் கூடி நின்றிடு மதனா லம்ம

செறிதரு பலனிற் றீர்ந்து செய்கரு மங்க ளேனும்
வறிதென விடலென் றோது மதிமுடி வள்ள னூலே.

ஞானம் கைவரப்பெற்றவனும் கருமங்களை விடலாகாது; எனவே பலன்களில் விருப்பமற்று அவற்றைச் செய்யவேண்டும்.

आचार एव सर्वेषामलङ्काराय कल्प्यते।
आचारहीनः पुरुषो लोके भवति निन्दितः॥१३॥
ज्ञानेनाचारयुक्तेन प्रसीदति महेश्वरः।
तस्मादाचारवान् ज्ञानी भवेदादेहपातनम्॥१४॥

ஒழுக்கமொன்றே எல்லோருக்கும் அலங்காரம்; ஒழுக்கமற்றவன் உலகில் இகழ்ச்சியடைகின்றான். ஞானத்துடன் ஒழுக்கத்தையும் உடையவனாகில் மஹேசுவரன் மகிழ்ச்சியடைகிறார். இவ்வுடல் மாயும் வரை ஞானியானவன் ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்.

யாவர்க்கு மாசா ரந்தா னெழிலணி யாகி நிற்கு
மோவுற்றோ னதனை நிந்தை யுறுகுவ னாசா ரத்தை
மேவுற்ற ஞானந் தன்னால் விளங்குறு மீச னென்றாற்
சாவுற்று மெய்வீழ் காறுஞ் சார்வதா சார மன்றே.

ஒழுக்கமொன்றே எல்லோருக்கும் அலங்காரம்; ஒழுக்கமற்றவன் உலகில் இகழ்ச்சியடைகின்றான். ஞானத்துடன் ஒழுக்கத்தையும் உடையவனாகில் மஹேசுவரன் மகிழ்ச்சியடைகிறார். இவ்வுடல் மாயும் வரை ஞானியானவன் ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்.

கிரியாகமத்தலம் முற்றும்.

भावचिह्नानि विदुषो यानि सन्ति विरागिणः।
तानि भावागमत्वेन वर्तन्ते सर्वदेहिनाम्॥ १५॥

வைராக்கியமடைந்த ஞானியிடமுள்ள பாவசின்னங்களே பாவாகமம் என எல்லா மனிதர்களிடமும் காணப்படுகின்றன.

வீவுறு மவாவி னோடு விளங்கறி வுடைமை யோன்றன்
பாவசின் னங்க டாமே பகர்பாவா கமம தென்ன
யாவரு மறிய நிற்கு மென்றுளந் துணிந்து கோடி
பூவல யங்க ளேத்தப் பொதியமா மலையி லுற்றாய்.

வைராக்கியமடைந்த ஞானியிடமுள்ள பாவசின்னங்களே பாவாகமம் என எல்லா மனிதர்களிடமும் காணப்படுகின்றன.

शिवोऽहमिति भावोऽपि शिवतापत्तिकारणम्।
न ज्ञानमात्रं नाचारो भावयुक्तः शिवो भवेत्॥ १६॥
ज्ञानं वस्तुपरिच्छेदो ध्यानं तद्भावकारणम्।
तस्माद् ज्ञाते महादेवे ध्यानयुक्तो भवेत् सुधीः॥ १७॥

சிவோஹம் எனும் பாவமே சிவத்துவத்தை அடையும் உபாயம்; ஞானம் மட்டிலுமோ அல்லது ஒழுக்கம் மட்டுமோ உபாயமன்று. அத்தகைய பாவத்தையுடையவன் சிவனே ஆகிறான். ஞானம் ஒரு பொருளை மட்டுமே அளவாகக் கொண்டது, தியானம் பாவத்திற்குக் காரணம். எனவே மஹாதேவரை உணர்ந்த ஞானி தியானம் கைவரப்பட்டவனாகிறான்.

சீரணி சிவோக மென்னும் பாவனை சிவம தற்குக்
காரணம் வேறு ஞான கருமங்கா ரணமே யாகா
பூரண வத்து வாகும் பொலிதரு ஞான மத்தின்
காரணந் தியாந மந்தத் தியாநமே கருத்திற் கொள்க.

சிவோஹம் எனும் பாவமே சிவத்துவத்தை அடையும் உபாயம்; ஞானம் மட்டிலுமோ அல்லது ஒழுக்கம் மட்டுமோ உபாயமன்று. அத்தகைய பாவத்தையுடையவன் சிவனே ஆகிறான். ஞானம் ஒரு பொருளை மட்டுமே அளவாகக் கொண்டது, தியானம்

பாவத்திற்குக் காரணம். எனவே மஹாதேவரை உணர்ந்த ஞானி தியானம் கைவரப்பட்டவனாகிறான்.

अन्तर्बहिश्च सर्वत्र परिपूर्णं महेश्वरम्।
भावयेत् परमानन्दलब्धये पण्डितोत्तमः॥१८॥

கற்றோரில் சிறந்தவன் பேரானந்தம் அடையும் பொருட்டு எங்கும் பரிபூரணமாய் விளங்கும் மஹேசுவரனை உள்ளும் புறமும் எப்போதும் பாவிக்க வேண்டும்

நிரந்தர முட்பு றம்பு நிறைந்துள மகேசன் றன்னைப்
பரந்தரு பரமா நந்தப் பயன்பெறும் பொருட்டு மேவி
விரிந்துள கலைக ளெல்லாம் விளங்கிய வறிவி னாலே
தெரிந்துள புலவ ரென்றுந் தியாநமே செய்க மாதோ.

கற்றோரில் சிறந்தவன் பேரானந்தம் அடையும் பொருட்டு எங்கும் பரிபூரணமாய் விளங்கும் மஹேசுவரனை உள்ளும் புறமும் எப்போதும் பாவிக்க வேண்டும்.

अर्थहीना यथा वाणी पतिहीना यथा सती।
श्रुतिहीना यथा बुद्धिर्भावहीना तथा क्रिया॥१९॥

பொருளற்ற சொல்லும், கணவனற்ற ஸதியும், கேள்விஞானமற்ற அறிவும் போன்றதே பாவமற்ற கிரியை.

பொருளறு மொழியு நூலிற் புக்குறா மதியுந் தன்பா
லருளுறு கொழுநற் றீர்ந்த வரிமதர் மழைக்கட் செவ்வாய்ச்
சுருளுறு மலர்மென் கூந்தற் றுடியிடை மாதும் போலுந்
தெருளுறு பாவ மோடு சேர்ந்திடாக் கிரியை யன்றே.

பொருளற்ற சொல்லும், கணவனற்ற ஸதியும், கேள்விஞானமற்ற அறிவும் போன்றதே பாவமற்ற கிரியை.

चक्षुर्हीनो यथा रूपं न किञ्चिद्वीक्षितुं क्षमः।
भावहीनस्तथा योगी न शिवं द्रष्टुमीश्वरः॥२०॥

கண்ணில்லாதவன் எவ்வித உருவத்தையும் காண இயலாதது போல் மனத்தில் பாவமில்லாத யோகி சிவபிரானைக் காண இயலாதவன்.

கண்ணிலான் வடிவ மொன்றுங் காண்கிலா வாறு போல
வெண்ணுபா வனையி லாதா னிறைவனைக் காணான் முக்கட்
பண்ணவன் றனையர்ச் சிக்கப் பாவனை மனத்தி னோடு
நண்ணுறான் சிவனை யந்தப் பாவனை நழுவி னோனே.

கண்ணில்லாதவன் எவ்வித உருவத்தையும் காண இயலாதது போல் மனத்தில் பாவமில்லாத யோகி சிவபிரானைக் காண இயலாதவன்.

भावशुद्धेन मनसा पूजयेत् परमेष्ठिनम्।
भावहीनं न गृह्णाति पूजां सुमहतीमपि॥२१॥
नैरन्तर्येण सम्पन्ने भावे ध्यातुं शिवं प्रति।
तद्भावो जायते यद्वत् क्रिमेः कीटस्य चिन्तनात्॥२२॥

மாசற்ற பாவத்துடன் பரமேசுவரனை பூஜிக்கவேண்டும்; மிக உயர்ந்த பூஜையாயினும் பாவமற்றிருந்தால் அப்பூஜையைப் பரமேசுவரன் ஏற்றுக் கொள்வதில்லை. இடையறாது மனத்தில் சிவபாவனை இருந்தால் அதனால் தியானம் கைகூடும், ஒரு சிறிய பூச்சியும் கிருமிசிந்தனையாலே கிருமியாவது போல் அவன் சிவனே ஆகிறான்.

கீடசிந் தனையி னாலே கிருமியுங் கீட மாகும்
பீடுறுஞ் சிவனை யென்றும் பிரிவறத் தியாநஞ் செய்வோ
னீடுறு சிவமே யாவ னிட்கள சிவத்தி யாநங்
கூடருந் தகைய தேனுங் குறிக்கொணீ யவன்றன் வாழ்வே.

இடையறாது மனத்தில் சிவபாவனை இருந்தால் அதனால் தியானம் கைகூடும், ஒரு சிறிய பூச்சியும் கிருமிசிந்தனையாலே கிருமியாவது போல் அவன் சிவனே ஆகிறான்.

பாவாகமத்தலம் முற்றும்.

निष्कलङ्कं निराकारं परब्रह्म शिवाभिधम्।
निर्ध्यातुमसमर्थोऽपि तद्विभूतिं विभावयेत्॥ २३॥
परस्य ज्ञानचिह्नानि यानि सन्ति शरीरिणाम्।
तानि ज्ञानागमत्वेन प्रवर्तन्ते विमुक्तये॥ २४॥

உருவமற்ற பரப்பிரமான சிவபெருமானைத் தியானம் செய்ய இயலாதவன் கூட சிவசின்னங்களையேனும் தியானம் செய்ய வேண்டும்; மனிதர்களிடையே காணப்படும் மேலான ஞானசின்னங்களே ஞானாகமமென்று முத்தியடையும் உபாயமாக அமைந்துள்ளன.

நவின்றிடும் பரம யோகி ஞானசின் னங்க டாமே
பவந்தொடர் மனிதர்க் கெல்லாம் பவமற வின்ப வீடிங்
குவந்தருள் செய்யு ஞானா கமமென வுரைப்பர் மேலோர்
தவந்தனி யுருவு கொண்ட தனையசந் தநவெற் புள்ளோய்.

உருவமற்ற பரப்பிரமான சிவபெருமானைத் தியானம் செய்ய இயலாதவன் கூட சிவசின்னங்களையேனும் தியானம் செய்ய வேண்டும்; மனிதர்களிடையே காணப்படும் மேலான ஞானசின்னங்களே ஞானாகமமென்று முத்தியடையும் உபாயமாக அமைந்துள்ளன.

भावेन किं फलं पुंसां कर्मणां वा किमिष्यते।
भावकर्मसमायुक्तं ज्ञानमेव विमुक्तिदम्॥ २५॥
केवलं कर्ममात्रेण जन्मकोटिशतैरपि।
नात्मनां जायते मुक्तिर्ज्ञानं मुक्तेर्हि कारणम्॥ २६॥

பாவபக்தி மட்டுமோ அல்லது கருமம் மட்டுமோ பயனளிக்காது; பாவமும் கருமமும் சேர்ந்த ஞானம் ஒன்றே முக்தியளிக்கவல்லது. கோடிக்கணக்கான பிறவியெடுத்தாலும் கருமங்களால் மட்டும் முக்தி கிட்டாது; ஞானம் ஒன்றே முக்திக்குக் காரணம்.

கிரியைபா வங்க டம்மாற் கிடைத்திடும் பயனொன் றில்லை
கிரியைபா வங்கண் மேவு ஞானத்தாற் கிடைக்கு முத்தி

பிரிவிலா நூறு கோடி பிறப்பினி லெனினுங் கன்ம
முரியவீடுதவா தம்ம வுதவுவ துயர்ஞா னங்காண்.

பாவபக்தி மட்டுமோ அல்லது கருமம் மட்டுமோ பயனளிக்காது; பாவமும் கருமமும் சேர்ந்த ஞானம் ஒன்றே முக்தியளிக்க வல்லது. கோடிக்கணக்கான பிறவியெடுத்தாலும் கருமங்களால் மட்டும் முக்தி கிட்டாது; ஞானம் ஒன்றே முக்திக்குக் காரணம்.

ज्ञानहीनं सदा कर्म पुंसां संसारकारणम्।
तदेव ज्ञानयोगेन संसारविनिवर्तकम्॥ २७॥

ஞானமற்ற கருமம் சம்சாரத்திற்குக் காரணம்; ஞானத்தோடு கூடிய கருமம் முக்திக்குக் காரணம்.

ஞானமற் றொழிந்த கன்ம நவைதரு பிறப்பிற் கேது
வானவக் கருமந் தானே யறிவொடு கூடு மாயி
னீனவப் பிறவி மாற்று மீவது கருமம் பொன்றும்
வானிலைப் பதமே ஞானம் வழங்குவ தழியா வீடு.

ஞானமற்ற கருமம் சம்சாரத்திற்குக் காரணம்; ஞானத்தோடு கூடிய கருமம் முக்திக்குக் காரணம்.

फलं क्रियावतां पुंसां स्वर्गाद्यं नश्वरं यतः।
तस्मात् स्थायिफलप्राप्त्यै ज्ञानमेव समभ्यसेत्॥ २८॥
शास्त्राभ्यासादियत्नेन सद्गुरोरुपदेशतः।
ज्ञानमेव समभ्यस्येत् किमन्येन प्रयोजनम्॥ २९॥

கிரியைகளால் மனிதர்களுக்குச் சுவர்க்கம் போன்ற நிலையற்ற பயனே கிட்டும்; நிலையான பயனை அடைய ஞானத்தை மட்டுமே கைக்கொள்ளவேண்டும். சாத்திரங்களைக் கற்று நற்குருவின் உபதேசத்துடன் ஞானம் ஒன்றையே அப்பியாசம் செய்யவேண்டும்.

முன்னுறு நூல்க ளாதி முயற்சியாற் குரவன் சொல்லாற்
பன்னரு ஞான மொன்றே பயிலுக வொழிந்த வற்றா
லென்னுறு பலன்ஞா னந்தா னியல்சிவாத் துவித நல்கித்
துன்னுறு பவங்க ளெல்லாந் தொலைத்திடு நல்லோர்க் கன்றே.

சாத்திரங்களைக் கற்று நற்குருவின் உபதேசத்துடன் ஞானம் ஒன்றையே அப்பியாசம் செய்யவேண்டும். அது ஒன்றுதான் சிவாத்துவைத ஞானப்பேற்றை அளித்து பிறவிப் பிணியை நீக்கவல்லது.

ज्ञानं परशिवाद्वैतपरिपाकविनिश्चयः।
येन संसारसम्बन्धविनिवृत्तिर्भवेत् सताम्॥ ३०॥
शिवात्मकमिदं सर्वं शिवादन्यन्न विद्यते।
शिवोहमिति या बुद्धिस्तदेव ज्ञानमुत्तमम्॥ ३१॥

பரமசிவாத்துவைதத்தில் உறுதியான ஞானமே சம்சாரபந்தத்தை நீக்கவல்லது; யாவும் சிவமே, சிவத்தைத் தவிர வேறொன்றுமில்லை, நானே சிவன் என்னும் ஞானமே மிக உயர்ந்தது.

தெரிந்திடு முலக மெல்லாஞ் சிவமயஞ் சிவனில் வேறா
யிருந்துள பொருளொன் றில்லை யாதலாற் சிவனா னென்றே
யுரந்தரு முணர்வு தானே யுத்தம ஞான மென்ப
ரருந்தவ முனிவ ரேறே யாகம நெறியு ணர்ந்தோர்.

பரமசிவாத்துவைதத்தில் உறுதியான ஞானமே சம்சாரபந்தத்தை நீக்கவல்லது; யாவும் சிவமே, சிவத்தைத் தவிர வேறொன்றுமில்லை, நானே சிவன் என்னும் ஞானமே மிக உயர்ந்தது.

अन्धो यथा दूरस्थानि वस्तूनि च न पश्यति।
ज्ञानहीनस्तथा देही नात्मस्थं वीक्षते शिवम्॥ ३२॥
शिवस्य दर्शनात् पुंसां जन्मरोगनिवर्तनम्।
शिवदर्शनमप्याहुः सुलभं ज्ञानचक्षुषाम्॥ ३३॥

குருடன் எதிரிலுள்ளவற்றைக் காண இயலாதது போல் ஞானமில்லாதவன் தன் ஆன்மாவிலுள்ள சிவபெருமானைக் காண்பதில்லை; சிவபிரானை நேரிடையாக உணர்வதால் பிறவியெனும் கொடிய நோய் நீங்குகிறது; ஞானக் கண்ணுடையோர்க்கு சிவதரிசனம் எளிது.

கண்ணிலா னெதிர்ந்த தொன்றைக் காண்கிலா னதுபோ னீங்கா
துண்ணிலா மிறையை ஞான மொழிந்தவன் காணா னென்று
நண்ணுறா தொழிக்கும் பாச நற்சிவ காட்சி ஞானக்
கண்ணுளார் தங்கட் கந்தக் காட்சிதா னெளிது மாதோ.

குருடன் எதிரிலுள்ளவற்றைக் காண இயலாதது போல் ஞானமில்லாதவன் தன் ஆன்மாவிலுள்ள சிவபெருமானைக் காண்பதில்லை; சிவபிரானை நேரிடையாக உணர்வதால் பிறவியெனும் கொடிய நோய் நீங்குகிறது; ஞானக் கண்ணுடையோர்க்கு சிவதரிசனம் எளிது.

दीपं विना यथा गेहे नान्धकारो निवर्तते।
ज्ञानं विना तथा चित्ते मोहोऽपि न निवर्तते॥३४॥

इति ज्ञानागमस्थलम्

விளக்கின்றி வீட்டிலுள்ள இருள் நீங்காதது போல் ஞானமின்றி மனத்திலுள்ள மயக்க இருள் விலகாது.

எறிசுட ரன்றி யில்லி லிருளறா ததுவே போல
வறிவினை யொழிய நீங்கா தகத்துறு மோகந் தானு
மறிவறு ஞான மாகும் வலிகெழு கதவங் கொண்டு
பொறிவழி யடைத்து மிக்க பொதியில்வீற் றிருக்க வல்லோய்.

விளக்கின்றி வீட்டிலுள்ள இருள் நீங்காதது போல் ஞானமின்றி மனத்திலுள்ள மயக்க இருள் விலகாது.

ஞானாகமத்தலம் முற்றும்.

## अथ सकायस्थलम्

परस्य या तनुर्ज्ञेयाऽदेहकर्माभिमानिनः।
तया सकायो लोकोऽयं तदात्मत्वनिरूपणात्॥ ३५॥
कायं विना समस्तानां न क्रिया न च भावना।
न ज्ञानं यत्ततो योगी कायवानेव संचरेत्॥ ३६॥

கருமம் மற்றும் உடல் ஆகியவற்றில் பற்றுதலற்ற பரதத்துவத்தின் உடலாலே இவ்வுலகமும் உடலைப் பெறுகின்றது; உடலின்றி கிரியையோ மனத்தில் பாவனையோ அல்லது ஞானமோ கிட்டாது. ஆதலின் யோகி உடலுடன் இருப்பானாக.

கிரியைநற் பாவ ஞானங் கிடைத்திடா காய மின்றேல்
விரிதரு முலகில் யார்க்கும் விளம்புறி னதனால் யோகி
தரையுறு சகாய னாகச் சரிப்பனென் றெடுத்து ரைப்ப
ரரிமதர் மழைக்கண் மங்கை பாகனா கமங்கள் வல்லோர்.

உடலின்றி கிரியையோ மனத்தில் பாவனையோ அல்லது ஞானமோ கிட்டாது. ஆதலின் யோகி உடலுடன் இருப்பானாக.

शिवैकज्ञानयुक्तस्य योगिनोऽपि महात्मनः।
काययोगेन सिध्यन्ति भोगमोक्षादयः सदा॥ ३७॥
काष्ठं विना यथा वह्निर्जायते न प्रकाशवान्।
मूर्तिं विना तथा योगी नात्मतत्त्वप्रकाशवान्॥ ३८॥

சிவைக்கியஞானமுடைய யோகியும் தனக்கென ஒருகாயமிருந்தால் தான் போகம் மோட்சம் முதலியவற்றை அடைய இயலும்; மரக்கட்டையின்றி நெருப்பு பிரகாசமடையாதது போல் உருவமின்றி யோகியானவன் ஆன்ம ஒளியை அடைய இயலாது.

ஏகமா ஞான யோகி யென்னினு முடம்பி னானே
போகமா முத்தி யாதி பொருந்துவன் விறகை யின்றி
யாகுறா தொளிரு மங்கி யதுவென வாக்கை யின்றி
யோகிதா னான்ம ஞான முடையவ னாகா னன்றே.

சிவைக்கியஞானமுடைய யோகியும் தனக்கென ஒருகாயமிருந்தால் தான் போகம் மோட்சம் முதலியவற்றை அடைய இயலும்; மரக்கட்டையின்றி நெருப்பு பிரகாசமடையாதது போல் உருவமின்றி யோகியானவன் ஆன்ம ஒளியை அடைய இயலாது.

मूर्त्यात्मनैव देवस्य यथा पूज्यत्वकल्पना।
तथा देहात्मनैवास्य पूज्यत्वं परयोगिनः॥३९॥
निष्कलो हि महादेवः परिपूर्णः सदाशिवः।
जगत्सृष्ट्यादिसंसिद्ध्यै मूर्तिमानेव भासते॥४०॥

தெய்வம் கூட தனது மூர்த்தியால் தான் பூஜிக்கத்தக்கதாயுள்ளது; அவ்வாறே சிறந்த யோகியும் தனது காயத்திஞல் தான் எல்லோராலும் வணங்கப்படுகிருன். நிஷ்களனுயும் பரிபூரணனுயும் விளங்கும் ஸதாசிவன் உலகத்தைச் சிருஷ்டிக்கும் பொருட்டு உருவம் கொள்கிருர்.

ஒப்பறு பரமன் றானு முருவொடு பூசை கொள்வ
னப்பரி சுடம்பின் மேவி யருச்சனை கொள்வன் யோகி
செப்புமைந் தொழிற்கு மாகச் சிந்மய னாகு மீசன்
மெய்ப்புறு மூர்த்தி மானாய் விளங்குவ னென்பர் மேலோர்.

தெய்வம் கூட தனது மூர்த்தியால் தான் பூஜிக்கத்தக்கதாயுள்ளது; அவ்வாறே சிறந்த யோகியும் தனது காயத்திஞல் தான் எல்லோராலும் வணங்கப்படுகிருன். நிஷ்களனுயும் பரிபூரணனுயும் விளங்கும் ஸதாசிவன் உலகத்தைச் சிருஷ்டிக்கும் பொருட்டு உருவம் கொள்கிருர்.

ब्रह्माद्या देवताः सर्वा मुनयोऽपि मुमुक्षवः।
कायवन्तो हि कुर्वन्ति तपः सर्वार्थसाधकम्॥४१॥
तपो हि मूलं सर्वासां सिद्धीनां यज्जगत्त्रये।
तपस्तत्कायमूलं हि तस्मात् कायं न सन्त्यजेत्॥४२॥

## इति सकायस्थलम्

பிரம்மா முதலான தேவர்களும் முனிவர்களும் முத்தியடையும் பொருட்டு தங்களது உடல்களாலே தான் தவம் மேற்கொள்கின்றனர்; மூவுலகிலும் தவம் ஒன்றே அனைத்து சித்திகளுக்கும் மூலம், அந்தத் தவத்திற்கு அடிப்படையான உடலை வெறுக்கலாகாது.

அயன்முத லாகி நின்ற வமரரு முத்தி வேட்ட
மயன்முனி முனிவர் தாமு மியாவையும் வழங்க வல்ல
செயன்மிகு தவமு டம்பாற் செய்தன ரத்த வத்திற்
கியன்முத லாய வாக்கை யினைவிட லாகா தன்றே.

பிரம்மா முதலான தேவர்களும் முனிவர்களும் முத்தியடையும் பொருட்டு தங்களது உடல்களாலே தான் தவம் மேற்கொள்கின்றனர்; மூவுலகிலும் தவம் ஒன்றே அனைத்து சித்திகளுக்கும் மூலம், அந்தத் தவத்திற்கு அடிப்படையான உடலை வெறுக்கலாகாது.

சகாயத்தலம் முற்றும்.

## अथ अकायस्थलम्

औपचारिकदेहित्वाज्जगदात्मत्वभावनात्।
मायासम्बन्धराहित्यदकायो हि परः स्मृतः॥४३॥
परस्य देहयोगेऽपि न देहाश्रयविक्रिया।
शिवस्येव यतस्तस्मादकायोऽयं प्रकीर्तितः॥४४॥

உபசார வழக்கிற்காக உடலை உடையதாலும், உலகமே உடலாக உடையதாலும் மாயையின் தொடர்பற்றதாலும் பரம்பொருள் காயமற்றது; உடலைக் கொண்டிருந்தாலும் சிவபெருமானுக்கு எவ்வித மாற்றமும் இல்லை.

சாற்றிய பரம யோகி சகஞ்சிவ மயம தாகத்
தோற்றுறு நிலையி னாற்பொய் மாயையின் றொடக்கி லாத

வாற்றலா லுதவி யாகு மாக்கைய னாத லாலே
போற்றுறு மகாய னென்றே புகன்றிடப் படுவ னன்றே.

உபசாரவழக்கிற்காக உடலை உடையதாலும், உலகமே உடலாக உடையதாலும் மாயையின் தொடர்பற்றதாலும் பரம்பொருள் காயமற்றது; உடலைக் கொண்டிருந்தாலும் சிவபெருமானுக்கு எவ்வித மாற்றமும் இல்லை.

परलिङ्गे विलीनस्य परमानन्दचिन्मये।
कुतो देहेन सम्बन्धो देहिवद्भासनं भ्रमः ॥ ४५ ॥
देहाभिमानहीनस्य शिवभावे स्थितात्मनः।
जगदेतच्छरीरं स्याद् देहेनैकेन का व्यथा ॥ ४६ ॥

பரமானந்த சின்மயமான லிங்கத்தில் ஒடுங்கியவனுக்கு உடலுடன் எவ்விதத் தொடர்புமில்லை; அத்தகைய தொடர்பும் ஒரு மனமயக்கமே. தனது உடலின்கண் எவ்விதப் பற்றுமற்று சிவபாவனையிலேயே ஆழ்ந்தவனுக்கு இவ்வுலகமே ஒரு சரீரம், அதனால் அவனுக்கு எந்த மாற்றமும் இல்லை.

சங்கர னெனமெய் யோடு சாரினும் பரம யோகிக்
கிங்குறு முடல்வி கார மிலாமையா லகாய னாகும்
பொங்கொளி யம்பரத்திற் புக்குறு மியோகிக் காக
மெங்குள துடம்பி போல விருப்பது பிராந்தி யன்றே.

பரமானந்த சின்மயமான லிங்கத்தில் ஒடுங்கியவனுக்கு உடலுடன் எவ்விதத் தொடர்புமில்லை; அத்தகைய தொடர்பும் ஒரு மனமயக்கமே. தனது உடலின்கண் எவ்விதப் பற்றுமற்று சிவபாவனையிலேயே ஆழ்ந்தவனுக்கு இவ்வுலகமே ஒரு சரீரம், அதனால் அவனுக்கு எந்த மாற்றமும் இல்லை.

शिवज्ञानैकनिष्ठस्य नाहङ्कारभवभ्रमः।
न चेन्द्रियभवं दुःखं त्यक्तदेहाभिमानिनः ॥ ४७ ॥

சிவஞானம் ஒன்றிலேயே உறுதியாக நிலைத்திருந்து உடலின் மேல் பற்றற்றும் இருப்பவனுக்கு நான் எனும் உணர்வால் ஏற்படும் குழப்பமோ, பொறிபுலன்களால் விளையும் துன்பங்களோ இல்லை.

ஆக்கையின் மான மில்லா தருஞ்சிவ மாகி நிற்கு
நோக்குறு மியோகிக் காக்கை நுவன்றிடு முலக மென்றாற்
போக்கறு முடல மொன்றாற் பொருந்துறும் வாதை யாதோ
வீர்க்குமிந் தியவாங் கார விடரவற் கில்லை யன்றே.

சிவஞானம் ஒன்றிலேயே உறுதியாக நிலைத்திருந்து உடலின் மேல் பற்றற்றும் இருப்பவனுக்கு நான் எனும் உணர்வால் ஏற்படும் குழப்பமோ, பொறிபுலன்களால் விளையும் துன்பங்களோ இல்லை.

न मनुष्यो न देवोऽहं न यक्षो नैव राक्षसः।
शिवोऽहमिति यो बुद्ध्यात् तस्य किं देहकर्मणा॥४८॥

इत्यकायस्थलम्

நான் மனிதனோ, தேவனோ, யட்சனோ அல்லது அரக்கனோ அல்லேன்; நான் சிவனே என்ற உணர்வுடையோனுக்கு இவ்வுடலால் யாது பயன்?

மயக்குறு மனித னல்லேன் வானவன் றானு மல்லே
னியக்கனு மல்லேன் மிக்க விராக்கத னல்லே னென்று
முயர்த்துறு சிவமே நானென் றுணர்ந்தவன் றனக்கு வந்து
பயக்குறு முடம்பு செய்யுங் கருமமென் பயனைச் செய்யும்.

நான் மனிதனோ, தேவனோ, யட்சனோ அல்லது அரக்கனோ அல்லேன்; நான் சிவனே என்ற உணர்வுடையோனுக்கு இவ்வுடலால் யாது பயன்?

## अथ परकायस्थलम्

वशीकृतत्वात् प्रकृतेर्मायामार्गातिवर्तनात्।
परकायोऽयमाख्यातः सत्यज्ञानसुखात्मकः॥४९॥

பிரகிருதியை வசப்படுத்தியதாலும், மாயையின் பிடியிலிருந்து மீண்டதாலும் பேரானந்த வடிவானவன் பரகாயன் எனப்படுகின்ருன்.

பகுதியை வசிக ரிக்கும் பான்மையான் மாயா மார்க்கத்
தொகுதியை நீங்கி நிற்குந் தூய்மையா லறிவா நந்தத்
தகுதிகொள் பிரமந் தானாய்த் தகும்பர காய னாவன்
மிகுதிகொ டவத்தர் கோவே விளம்புறு மகாய னென்றே.

பிரகிருதியை வசப்படுத்தியதாலும், மாயையின் பிடியிலிருந்து மீண்டதாலும் பேரானந்த வடிவானவன் பரகாயன் எனப்படுகின்ருன்.

परब्रह्मवपुर्यस्य प्रबोधानन्दभासुरम्।
प्राकृतेन शरीरेण किमेतेनास्य जायते॥५०॥
सम्यग्ज्ञानाग्निसन्दग्धजन्मबीजकलेवरः।
शिवतत्त्वावलम्बी यः परकायः स उच्यते॥५१॥

பேரானந்த சின்மயமான பரப்பிரமமே எவனுக்கு உடலோ அவனுக்கு இந்தப் பிரகிருதியினுலான உடலால் யாது பயன்? முற்றறிவெனும் தீயினுல் பிறவிப்பிணிக்குக் காரணமான உடலே பொசுக்கப்பட்டு சிவதத்துவத்தையே பற்றியிருப்பவன் பரகாயன் எனப்படுகிருன்.

பேரறி வுருவாய் நின்ற பிரமமே வடிவ மானோற்
கேரறு மாயை யாக்கை யாற்பய மென்னே ஞான
வாரழ லாற்பி றப்பிற் காதியா முடலஞ் சுட்டு
நேரறு சிவம டைந்தோ னிகழ்பர காய னென்பான்.

பேரானந்த சின்மயமான பரப்பிரமமே எவனுக்கு உடலோ அவனுக்கு இந்தப் பிரகிருதியினுலான உடலால் யாது பயன்?

முற்றறிவெனும் தீயினுல் பிறவிப்பிணிக்குக் காரணமான உடலே பொசுக்கப்பட்டு சிவதத்துவத்தையே பற்றியிருப்பவன் பரகாயன் எனப்படுகிருன்.

इन्द्रियाणि मनोवृत्तिवासनाः कर्मसम्भवाः।
यत्र यान्ति लयं तेन सकायोऽयं परात्मना॥५२॥
पराहन्तामनुप्राप्य पश्येद् विश्वं चिदात्मकम्।
सदेहोऽतिभ्रमस्तस्य निश्चिता हि शिवात्मता॥५३॥

கருமங்களினுல் தோற்றுவிக்கப்படும் பொறிகள், மனத்தின் எண்ண அலைகள் முதலியன எங்கு சென்று ஒடுங்குகின்றனவோ அந்த பரமாத்மாவினுல் ஸகாயன் எனப்படுகிருன். விரிந்து அகண்டமான நான் எனும் உணர்வுடையோன் இவ்வுலகத்தைச் சிவமாகவே காண்பதால் உடல் இருப்பினும் அவன் சிவனே.

வினைதரு மநோவி ருத்தி விடயவிந் தியங்க ளெல்லா
மெனையதி லடங்கு மந்த விருஞ்சிவ மேயி வற்குத்
தனியுறு வாகு நானே சிவமெனச் சகங்க ளெல்லா
நனியறி வாகிக் கண்டோற் குடல்சொல னன்மா லாகும்.

கருமங்களினுல் தோற்றுவிக்கப்படும் பொறிகள், மனத்தின் எண்ண அலைகள் முதலியன எங்கு சென்று ஒடுங்குகின்றனவோ அந்த பரமாத்மாவினுல் ஸகாயன் எனப்படுகிருன். விரிந்து அகண்டமான நான் எனும் உணர்வுடையோன் இவ்வுலகத்தைச் சிவமாகவே காண்பதால் உடல் இருப்பினும் அவன் சிவனே.

स्वस्वरूपं चिदाकारं ज्योतिः साक्षाद्विचिन्तयन्।
देहवानपि निर्देहो जीवन्मुक्तो हि साधकः॥५४॥

தனது உண்மைச் சொரூபமான சின்மயசோதி வடிவத்தையே தியானித்திருப்பவன் உடல் பொருந்தியிருப்பினும் ஜீவன்முக்தனே.

சோதியாம் பிரம மேதன் சொரூபமாய்ச் சிந்தை செய்வோன்
மேதையா முடம்போ டுற்று மெய்யிலி சீவன் முத்தன்

போதமா மியோகி யாக்கை யிருப்பினும் போகி னுந்தான்
றீதிலா முத்தி யாகு மென்பர்நூ றிருந்தக் கற்றோர்.

தனது உண்மைச் சொரூபமான சின்மயசோதி வடிவத்தையே தியானித்திருப்பவன் உடல் பொருந்தியிருப்பினும் ஜீவன்முக்தனே.

देहस्तिष्ठतु वा यातु योगिनः स्वात्मबोधिनः।
जीवन्मुक्तिर्भवेत् सद्यश्चिदानन्दप्रकाशिनी॥५५॥
आत्मज्ञानावसानं हि संसारपरिपीडनम्।
सूर्योदयेऽपि किं लोकस्तिमिरेणोपरुध्यते॥५६॥
देहाभिमाननिर्मुक्तः कलातीतपदाश्रयः।
कथं याति परिच्छेदं शरीरेषु महाबुधः॥५७॥

इति परकायस्थलम्

உடல் இருந்தாலும் மாய்ந்தாலும் தன் ஆன்மசொரூபத்தை உணர்ந்தவன் ஜீவன்முக்தனே; இந்த சம்சாரப்பிணி ஆன்மஞானம் அடையும் வரைதான் இருக்கும். சூரியன் உதித்த பின்னரும் மக்கள் இருளால் மயங்குவரோ? தனது உடலின் மேல் எவ்விதப் பற்றுமில்லாது கலைகளையெல்லாம் கடந்த நிலையை அடைந்தவன் இந்தச் சிறிய உடலுக்குள் அடைபடுவதில்லை.

பெரும்பவ நோய்வ ருத்தல் பிறங்குதன் சொரூப ஞானம்
பொருந்துறு மளவே யன்றோ பொங்கொளி யிரவி தோன்றப்
பரந்திடு மிருளு முண்டோ பகர்ந்திடிற் காலா தீத
வரும்பத மடைந்து ளோனுக் காக்கையுட் படுத லின்றே.

உடல் இருந்தாலும் மாய்ந்தாலும் தன் ஆன்மசொரூபத்தை உணர்ந்தவன் ஜீவன்முக்தனே; இந்த சம்சாரப்பிணி ஆன்மஞானம் அடையும் வரைதான் இருக்கும். சூரியன் உதித்த பின்னரும் மக்கள் இருளால் மயங்குவரோ? தனது உடலின் மேல் எவ்விதப் பற்றுமில்லாது கலைகளையெல்லாம் கடந்த நிலையை அடைந்தவன் இந்தச் சிறிய உடலுக்குள் அடைபடுவதில்லை.

பரகாயத்தலம் முற்றும்

## अथ धर्माचारस्थलम्

तस्यैव परकायस्य समाचारो य इष्यते।
स धर्मः सर्वलोकानामुपकाराय कल्प्यते॥५८॥

அந்தப் பரகாயன் பின்பற்றும் நெறிகள்தாம் மற்றவர்களுக்கெல்லாம் மிகவும் உதவியாயிருப்பன.

அப்பர காயன் செய்வ தியாதொரா சார மம்ம
செப்புறு மதுதான் யார்க்குஞ் செய்திடுந் தரும மாகி
யொப்பறு முதவி யாமென் றுரைப்பர்க ளுணர்வின் மிக்கோர்
துப்புறழ் சடிலக் கற்றைச் சுடர்முடி முனிவர் வேந்தே.

அந்தப் பரகாயன் பின்பற்றும் நெறிகள்தாம் மற்றவர்களுக்கெல்லாம் மிகவும் உதவியாயிருப்பன என்று கற்றோர் கூறுவர்.

अहिंसा सत्यमस्तेयं ब्रह्मचर्यं दया क्षमा।
दानं पूजा जपो ध्यानमिति धर्मस्य संग्रहः॥५९॥

அஹிம்சை, உண்மைநிலை பிறழாமை, திருடாதிருத்தல், புலனடக்கம், அன்பு, பொறுமை, மற்றவர்களுக்கு ஈதல், பூஜைசெய்தல், மந்திரஜபம், தியானம் என்பன அவனது நெறிகள்.

கூறருந் தருமா சாரங் கொல்லாமை வாய்மை யோடு
வேறுறுங் களவி லாமை வெகுளாமை பிரம சரியம்
பேறெனுந் தயையே தாநம் பிறங்குறு செபந்தி யாந
மாறரும் பூசை யென்று வகுத்துரை செய்வர் மேலோர்.

அஹிம்சை, உண்மைநிலை பிறழாமை, திருடாதிருத்தல், புலனடக்கம், அன்பு, பொறுமை, மற்றவர்களுக்கு ஈதல், பூஜைசெய்தல், மந்திரஜபம், தியானம் என்பன அவனது நெறிகள்.

शिवेन विहितो यस्मादागमैर्धर्मसंग्रहः।
तस्मात्तमाचरन् विद्वान् तत्प्रसादाय कल्प्यते॥६०॥
अधर्मं न स्पृशेत् किञ्चिद् विहितं धर्ममाचरेत्।
तं च कामविनिर्मुक्तं तमपि ज्ञानपूर्वकम्॥६१॥

சிவபெருமானால் அருளப்பட்ட ஆகமங்களால் கூறப்படும் இத்தருமங்களைச் செய்வதனால் யோகி சிவனது அருளுக்குத் தகுதியடைகிறான். இந்நெறிப்படி காமம் முதலியன இன்றி ஞானத்துடன் ஒழுகுவதால் அதருமம் அவனை அணுகாது.

வினையிலி யாக மத்தின் விதித்தவித் தருமா சாரம்
புனையிழை யாகக் கொள்வோன் புராரிதன் னருளுக் கேற்றோ
னினைவற வறம லாமை நியமஞ்செய் தருமந் தன்னை
நனிவரு காம மின்றி நவிற்றுதன் ஞான வேது.

சிவபெருமானால் அருளப்பட்ட ஆகமங்களால் கூறப்படும் இத்தருமங்களைச் செய்வதனால் யோகி சிவனது அருளுக்குத் தகுதியடைகிறான். இந்நெறிப்படி காமம் முதலியன இன்றி ஞானத்துடன் ஒழுகுவதால் அதருமம் அவனை அணுகாது.

आत्मवत् सर्वभूतानि संपश्येद् योगवित्तमः।
जगदेकात्मताभावान्निग्रहादिविरोधतः॥६२॥
एक एव शिवः साक्षाज्जगदेतदिति स्फुटम्।
पश्यतः किं न जायेत ममाकारो हि विभ्रमः॥६३॥

தனது ஆன்மாவைப் போலவே அனைத்துயிர்களையும் நோக்கி சிவபெருமானே இவ்வுலகமெனும் பாவனையுடன் எவ்விதப் பகையுமின்றி இருக்கும் யோகிக்கு நான் எனது எனும் மயக்கங்கள் வாரா.

உலகெலா மொருதா னாக வுன்னலால் வடிவ மாதி
விலகலா லுயிர்க ளெல்லாம் வேறறத் தானாய்க் காண்பா
னுலகெலாஞ் சிவமொன் றாக வுணர்ந்தவற் கெனதென்
றெண்ண
விலகுமோர் பொருளு முண்டோ விலையென விளம்பு நூலே.

தனது ஆன்மாவைப் போலவே அனைத்துயிர்களையும் நோக்கி சிவபெருமானே இவ்வுலகமெனும் பாவனையுடன் எவ்விதப் பகையுமின்றி இருக்கும் யோகிக்கு நான் எனது எனும் மயக்கங்கள் வாரா.

धर्म एव समस्तानां यतः संसिद्धिकारणम्।
निःस्पृहोऽपि महायोगी धर्ममार्गं च न त्यजेत्॥६४॥

அனைத்துக்கும் தருமம் ஒன்றே காரணமாதலால் மனதில் காமவேட்கைகளின்றி தருமத்தைக் கடைப்பிடிக்கவேண்டும்.

அறநெறி முத்தியேது வாதலா லவ்வ றத்தைத்
துறவின னெனினுஞ் செய்க தொல்லறி வமுதந் தன்னா
னிறையினு மறத்தை நீங்கா னின்றதன் னொழுக்க நோக்கிப்
பிறரிது நெறியென் றெய்தப் பெறுதலாற் பரம யோகி.

அனைத்துக்கும் தருமம் ஒன்றே காரணமாதலால் மனதில் காமவேட்கைகளின்றி தருமத்தைக் கடைப்பிடிக்கவேண்டும். ஞானமுதத்தைப் பருகியவனாயினும் யோகியானவன் தருமத்தை விடலாகாது; சான்றோர்களின் ஒழுக்கத்தைக் கண்டே ஏனையோர்களும் அவ்வாறு ஒழுகுகின்றனர்.

ज्ञानामृतेन तृप्तोऽपि योगी धर्मं न संत्यजेत्।
आचारं महतां दृष्ट्वा प्रवर्तन्ते हि लौकिकाः॥६५॥
सदाचारप्रियः शम्भुः सदाचारेण पूज्येत।
सदाचारं विना तस्य प्रसादो नैव जायते॥६६॥

## इति धर्माचारस्थलम्

ஞானமுதத்தைப் பருகியவனாயினும் யோகியானவன் தருமத்தை விடலாகாது; சான்றோர்களின் ஒழுக்கத்தைக் கண்டே ஏனையோர்களும் அவ்வாறு ஒழுகுகின்றனர். சிவபிரான் நல்லொழுக்கத்தை விரும்புபவர், நல்லொழுக்கத்தாலேயே அவர் பூஜிக்கப்படுகின்றார். நல்லொழுக்கமின்றி அவருடைய அருள் கிட்டாது.

விமலனுஞ் சதாசா ரத்தில் விருப்புள னாகி யென்று
மமலுறு மாசா ரத்தா லருச்சிக்கப் படுவன் கண்டாய்
நிமலமா மாசா ரத்தை யன்றியே நெற்றி நாட்டத்
துமையொரு பாகன் செய்யு மோங்கரு ளுண்டா காதால்.

சிவபிரான் நல்லொழுக்கத்தை விரும்புபவர், நல்லொழுக்கத்தாலேயே அவர் பூஜிக்கப்படுகின்றார். நல்லொழுக்கமின்றி அவருடைய அருள் கிட்டாது.

தருமாசாரத்தலம் முற்றும்.

## अथ भावाचारस्थलम्

भाव एवास्य सर्वेषां भावाचारः प्रकीर्तितः।
भावो मानसचेष्टात्मा परिपूर्णः शिवाश्रयः॥ ६७॥

அனைத்திலும் அவனுடைய மனத்தின் பாவமே பாவாசாரமெனப்படும்; அது மனத்தின் செயல்பாடே, அது பூரணமாயும் சிவபெருமானைச் சார்ந்துமிருக்கும்.

அறமுறு மிவன்றன் பாவ மனைவர்க்கும் பாவா சாரந்
திறமுறு பாவந் தன்னைச் செப்புறின் மனவ ழக்காய்
நிறைதரு சிவனைப் பற்றி நிற்பதென் றறிந்து கொண்ணீ
மறிதிரை சுருட்டு மாழி வாய்மடுத் துண்ண வல்லோய்.

அனைத்திலும் அவனுடைய மனத்தின் பாவமே பாவாசாரமெனப்படும்; அது மனத்தின் செயல்பாடே, அது பூரணமாயும் சிவபெருமானைச் சார்ந்துமிருக்கும்.

भावनाविहितं कर्म पावनादपि पावनम्।
तस्माद् भावनया युक्तं परधर्मं समाचरेत्॥ ६८॥
भावेन हि मनःशुद्धिर्भावशुद्धिश्च कर्मणा।
इति सञ्चिन्त्य मनसा योगी भावं न संत्यजेत्॥ ६९॥

பாவனையால் நிச்சயிக்கப்பட்ட கருமம் மிகவும் புனிதமானது; எனவே முழுபாவனையுடன் உயர்ந்த தருமத்தைச்

செய்யவேண்டும். பாவத்தினுல் தான் மனம் சுத்தமடைகிறது, பாவம் கருமத்தினுல் சுத்தமடைகிறது என எண்ணி பாவத்தைக் கைவிடக்கூடாது.

பாவனை யாற்செய் கன்மம் பாவநங் களினுண் மேலாம்
பாவனை யால றத்தைப் பண்ணுக வதனா லென்றும்
பாவனை யாற்செய் கன்மம் பலித்திடு மனமுந் தூய்தாம்
பாவனை யாலென் றெண்ணிப் பாவனை விடாமற் செய்க.

பாவனையால் நிச்சயிக்கப்பட்ட கருமம் மிகவும் புனிதமானது; எனவே முழுபாவனையுடன் உயர்ந்த தருமத்தைச் செய்யவேண்டும். பாவத்தினுல் தான் மனம் சுத்தமடைகிறது, பாவம் கருமத்தினுல் சுத்தமடைகிறது என எண்ணி பாவத்தைக் கைவிடக்கூடாது.

शिवभावनया सर्वं नित्यनैमित्तिकादिकम्।
कुर्वन्नपि महायोगी गुणदोषैर्न बाध्यते॥७०॥
अन्तः प्रकाशमानस्य संवित्सूर्यस्य सन्ततम्।
भावेन यदुपस्थानं तत्सन्ध्यावन्दनं विदुः॥७१॥

சிவபாவனையுடன் நித்திய நைமித்திகம் முதலான கருமங்களைச் செய்வதால் யோகி அவற்றின் குணங்களாலும் குற்றங்களாலும் எவ்விதத்திலும் பாதிக்கப்படான்; அகத்தில் ஒளிவீசி விளங்கும் ஆன்மசைதன்னிய சூரியனை நெருங்கி வணங்குதலே ஸந்தியாவந்தனமாகும்.

நித்திய கரும மாதி நிகழ்சிவ பாவந் தன்னாற்
சுத்தநல் யோகி செய்து துரிசினிற் சட்டு றானாற்
சித்தெனு மிரவி தன்னைச் சிந்தையிற் பாவித் தெய்த
லுத்தம மாய சந்தி வந்தனை யுணர்ந்து கொள்ளே.

சிவபாவனையுடன் நித்திய நைமித்திகம் முதலான கருமங்களைச் செய்வதால் யோகி அவற்றின் குணங்களாலும் குற்றங்களாலும் எவ்விதத்திலும் பாதிக்கப்படான்; அகத்தில் ஒளிவீசி விளங்கும் ஆன்மசைதன்னிய சூரியனை நெருங்கி வணங்குதலே ஸந்தியாவந்தனமாகும்.

आत्मज्योतिषि सर्वेषां विषयाणां समर्पणम्।
अन्तर्मुखेन भावेन होमकर्मेति गीयते॥ ७२॥

மனத்தை உள்நோக்காகத் திருப்பி ஆன்மசோதியில் எல்லாவற்றையும் சமர்ப்பித்தலே ஹோமமாகும்.

பரசிவ வங்கி தன்னிற் படர்புல விந்த நத்தைத்
துரிசறு பாவத் தாலே சுடுதலே யாக மாகும்
பரிசுறு கரும மெல்லாம் பரமனுக் காவ வாகக்
கரிசுறு பவந்தொ லைப்பான் கருத்தினிற் கொள்க மாதோ.

மனத்தை உள்நோக்காகத் திருப்பி ஆன்மசிவசோதியில் எல்லாவற்றையும் சமர்ப்பித்தலே ஹோமமாகும். அதனுல் பிறவி நோய் நீங்கப்பெறுவான்.

भावयेत् सर्वकर्माणि नित्यनैमित्तिकानि च।
शिवप्रीतिकराण्येव सङ्गराहित्यसिद्धये॥ ७३॥
शिवे यो महाभागः स सङ्गरहितो भवेत्॥ ७४॥
आत्मानमखिलं वस्तु शिवमानन्दचिन्मयम्।
एकभावेन सततं सम्पश्यन्नेव पश्यति॥ ७५॥

इति भावाचारस्थलम्

விருப்பு வெறுப்பின்றி நித்திய நைமித்திக கருமங்களைச் சிவபெருமானின் மகிழ்ச்சிக்காகச் செய்து எப்போதும் ஆனந்த வடிவான சிவத்தையே சிந்தித்திருப்பவனே உண்மையாகப் பார்ப்பவன்.

செயத்தகு செயல்செய் யாத செயலெல்லாஞ் சிவன்பால் வைத்த
மயக்கமி லறிவன் றீமை மருவுறா னென்பர் தன்னை
வியக்குறு முலகை ஞான விமலனை வேறி லாம
லயிர்ப்பற வொன்றாய்க் கண்டோன் கண்டவ னாகு மன்றே.

விருப்பு வெறுப்பின்றி நித்திய நைமித்திக கருமங்களைச் சிவபெருமானின் மகிழ்ச்சிக்காகச் செய்து எப்போதும் ஆனந்த

வடிவான சிவத்தையே சிந்தித்திருப்பவனே உண்மையாகப் பார்ப்பவன்.

பாவாசாரத்தலம் முற்றும்.

## अथ ज्ञानाचारस्थलम्

अस्य ज्ञानसमाचारो योगिनः सर्वदेहिनाम्।
ज्ञानाचारो यदुक्तोऽयं ज्ञानाचारः स कथ्यते॥७६॥

இந்த யோகி ஞான நிலையிலிருந்து செய்வன எல்லாம் அனைத்து மக்களுக்கும் ஞானாசாரமாகக் கொள்ளப்படுகின்றன.

இந்நிலை யோகி தன்பா லிலங்குறு ஞானா சார
மன்னிய வுலகில் யார்க்கு மருவிய ஞானா சார
மென்னநன் குரைப்பர் கற்றோ ரிரைந்திழி யருவிக் குன்றந்
தன்னைவென் றிணையெ றிந்த தவத்தினி லுயர்ந்த மேலோய்.

இந்த யோகி ஞான நிலையிலிருந்து செய்வன எல்லாம் அனைத்து மக்களுக்கும் ஞானாசாரமாகக் கொள்ளப்படுகின்றன.

शिवाद्वैतपरं ज्ञानं ज्ञानमित्युच्यते बुधैः।
सिद्धेन वाप्यसिद्धेन फलं ज्ञानान्तरेण किम्॥७७॥

சிவாத்துவைத ஞானமே ஞானமென அறிஞர்கள் கூறுவர்; அதை எய்தினாலும் இல்லாவிடினும் மற்ற ஞானத்தால் என்ன பயன்?

ஞானமா வதுசி வாத்து விதஞான மென்பர் நல்லோ
ரேனைய ஞான மெய்திற் றென்னினு மெய்தா தேனுந்
தானதா லாவ தென்கொல் சாற்றுமப் பரஞா னத்தா
லூனமாம் பிறவி நீங்கு மொழிந்ததா லொழிந்தி டாதால்.

சிவாத்துவைத ஞானமே ஞானமென அறிஞர்கள் கூறுவர்; அதை எய்தினாலும் இல்லாவிடினும் மற்ற ஞானத்தால் என்ன பயன்?

निर्मलं हि शिवज्ञानं निःश्रेयसकरं परम्।
रागद्वेषादिकलुषं भूयः संसृतिकारणम्॥७८॥
परिपूर्णं महाज्ञानं परतत्त्वप्रकाशकम्।
अवलम्ब्य प्रवृत्तो यो ज्ञानाचारः स उच्यते॥७९॥

சிவஞானம் மலமற்று சுத்தமானது, விருப்பு வெறுப்புகளுடன் கூடிய மற்றவையெல்லாம் பிறவி நோய்க்குக் காரணமானவையே. பரதத்துவத்தைப் பிரகாசிக்கச் செய்யும் அந்தப் பரிபூரணஞானத்தைப் பின்பற்றி ஒழுகுபவன் ஞானசாரனுவான்.

பூரண ஞானம் பற்றிப் புரிவதே ததுதான் மிக்க
வேரணி ஞானா சார மென்பர்நற் சிவமி தென்னும்
பேரணி பரத்தி லெல்லாம் பேரறி வாலொ டுக்குஞ்
சீரணி பவனே யாகுந் திகழ்தரு ஞானா சாரி.

சிவஞானம் மலமற்று சுத்தமானது, விருப்பு வெறுப்புகளுடன் கூடிய மற்றவையெல்லாம் பிறவி நோய்க்குக் காரணமானவையே. பரதத்துவத்தைப் பிரகாசிக்கச் செய்யும் அந்தப் பரிபூரணஞானத்தைப் பின்பற்றி ஒழுகுபவன் ஞானசாரனுவான்.

निर्विकल्पे परे धाम्नि निष्कले शिवनामनि।
ज्ञानेन योजयेत् सर्वं ज्ञानाचारी प्रकीर्तितः॥८०॥
ज्ञानं मुक्तिप्रदं प्राप्य गुरुदृष्टिप्रसादतः।
कः कुर्यात् कर्मकार्पण्ये वाञ्छां संसारवर्धने॥८१॥

ஞானசாரியானவன் மாற்றங்களற்ற அழியாத சிவநாமத்தில் முழுதும் ஈடுபட்டிருத்தல் வேண்டும்; குருவின் அருளால் முக்திக்கு ஏதுவான ஞானத்தையடைந்தவன் பிறவியையே விளைவிக்கும் உலகக் கருமங்களில் ஈடுபடமாட்டான்.

முத்தியை யுதவு ஞானங் குருவருண் முறையிற் பெற்றோ
னெய்த்திடும் பவம்பெ ருக்குங் கருமத்தி லிச்சை செய்யான்

றத்தலை யொழுகு நீர்போற் சார்ந்துள கரும பந்தஞ்
சுத்தமெய்ஞ் ஞானத் தீயாற் சுடுதலான் மறித்துந் தோன்றா.

ஞாஞசாரியானவன் மாற்றங்களற்ற அழியாத சிவநாமத்தில் முழுதும் ஈடுபட்டிருத்தல் வேண்டும்; குருவின் அருளால் முக்திக்கு ஏதுவான ஞானத்தையடைந்தவன் பிறவியையே விளைவிக்கும் உலகக் கருமங்களில் ஈடுபடமாட்டான்.

कर्म ज्ञानाग्निना दग्धं न प्ररोहेत् कथञ्चन।
यदाहुः संसृतेर्मूलं प्रवाहानुगतं बुधाः॥८२॥
ज्ञानेन हीनः पुरुषः कर्मणा बध्यते सदा।
ज्ञानिनः कर्मसङ्कल्पा भवन्ति किल निष्फलाः॥८३॥
शुद्धाचारे शुद्धभावे विवेकी
ज्योतिः पश्यन् सर्वतश्चैवमेकम्।
ज्ञानध्वस्तप्राकृतात्मप्रपञ्चो
जीवन्मुक्तश्चेष्टते दिव्ययोगी॥८४॥

इति श्रीमत्षट्स्थलब्रह्मिणा शिवयोगिनाम्ना रेणुकाचार्येण विरचिते सिद्धान्तशिखामणौ माहेश्वरस्थलाश्रितनवलिङ्गप्रसङ्गो नाम षोडशः परिच्छेदः॥१६॥

ஞானத்தால் பொசுக்கப்பட்ட கருமம் மீண்டும் விளையாது; சம்சாரத்திற்குக் காரணமான கருமம் ஆற்றுநீர் ஒழுகுவது போல் செல்லும். ஞானமற்றவன் கருமத்தால் கட்டப்படுகிறுன். ஞானிகளுக்குக் கருமங்களால் எவ்விதத் தீங்கும் விளைவதில்லை. விவேக ஞானமுள்ளவன் சுத்தாசாரத்தில் நிலைத்து தூய மனுேபாவத்துடன் ஒப்பற்ற சோதியைக் கண்டு ஆன்ம ஞானத்தால் மாயைத் தொடர்புகளற்று ஜீவன்முக்தனுய் விளங்குகிறுன்.

ஞானமி லாதான் கன்ம நாணினாற் கட்டுப் பட்டான்
ஞானமு ளானக் கன்ம பந்தனை நழுவி னோனாம்
ஞானவா சார நண்ணிப் பரசிவ நாட்டம் பெற்ற
ஞானிதான் சீவன் முத்த னாகியே நடிக்கு மன்றே.

ஞானமற்றவன் கருமத்தால் கட்டப்படுகிருன். ஞானிகளுக்கு கருமங்களால் எவ்விதத் தீங்கும் விளைவதில்லை. விவேக ஞானமுள்ளவன் சுத்தாசாரத்தில் நிலைத்து தூய மனுேபாவத்துடன் ஒப்பற்ற சோதியைக் கண்டு ஆன்ம ஞானத்தால் மாயைத் தொடர்புகளற்று ஜீவன்முக்தனுய் விளங்குகிருன்.

ஞானுசாரத்தலம் முற்றும்.

## सप्तदशः परिच्छेदः
## अथ प्रसादिस्थलम्

स्थलानि तानि चोक्तानि यानि माहेश्वरस्थले।
वदस्व स्थलभेदं मे प्रसादिस्थलसंश्रितम्॥ १॥

மாஹேசுவரஸ்தலத்துள் அடங்கிய ஸ்தலங்கள் கூறப்பட்டன; பிரஸாதிஸ்தலத்தில் அடங்கிய பிரிவிகளைக் கூறுக.

தாவி லாதமா கேசநற் றலத்தவாந் தலங்கள்
யாவு மோதினை யினிப்பிர சாதியத் தலத்தை
மேவு றுந்தல பேதமும் விளங்குற வெனக்கு
நாவலோர் புகழ் தருகண நாயக நவில்வாய்.

மாஹேசுவரஸ்தலத்துள் அடங்கிய ஸ்தலங்கள் கூறப்பட்டன; பிரஸாதிஸ்தலத்தில் அடங்கிய பிரிவிகளைக் கூறுக.

श्री रेणुक उवाच
स्थलभेदा नव प्रोक्ताः प्रसादिस्थलसंश्रिताः।
कायानुग्रहणं पूर्वमिन्द्रियानुग्रहं ततः॥ २॥
प्राणानुग्रहणं पश्चात् ततः कायार्पितं मतम्।
करणार्पितमाख्यातं ततो भावार्पितं मतम्॥ ३॥
शिष्यस्थलं ततः प्रोक्तं शुश्रूषास्थलमेव च।
ततः सेव्यस्थलं चैषां क्रमशः शृणु लक्षणम्॥ ४॥

ரேணுகர் கூறுகிறார்
பிரஸாதிஸ்தலம் ஒன்பது பிரிவுகளுடையது; அவை காயானுக்கிரகம், இந்திரியானுக்கிரகம், பிராணானுக்கிரகம், காயார்ப்பிதம், கரணார்ப்பிதம், பாவார்ப்பிதம், சிஷ்யஸ்தலம், சுசுருஷாஸ்தலம், ஸேவியஸ்தலம் என்பன.

காய மிந்தியம் பிராணநல் லநுக்கிர கந்தாங்
காய மோடுறு கரணபா வார்ப்பிதங் கருதி
னேய சீடனற் சிசுருடை சேவியத் தலமென்
றாய வத்தல மொன்பதா மவற்றையு மறைவாம்.

பிரஸாதிஸ்தலம் ஒன்பது பிரிவுகளுடையது; அவை காயானுக்கிரகம், இந்திரியானுக்கிரகம், பிராணானுக்கிரகம், காயார்ப்பிதம், கரணார்ப்பிதம், பாவார்ப்பிதம், சிஷ்யஸ்தலம், சுசுரூஷாஸ்தலம், ஸேவியஸ்தலம் என்பன.

## अथ कायानुग्रहस्थलम्

अनुगृह्णाति यल्लोकान् स्वकायं दर्शयन्नसौ।
तस्मादेष समाख्यातः कायानुग्रहनामकः॥५॥

தனது உடலைக் காட்டி உலகோரை அனுக்கிரகம் செய்வதால் காயானுக்கிரகமெனப்படுகிறான்.

இந்த யோகிதன் மெய்யினை யிலங்குறக் காட்டி
வந்தி யாரையு முலகினி லளித்திடு மாற்றா
லுந்து பேரெழி லுடலநுக் கிரகனென் றுரைக்கு
முந்து நாமமுற் றிடுமென வறைகுவர் முன்னோர்.

தனது உடலைக் காட்டி உலகோரை அனுக்கிரகம் செய்வதால் காயானுக்கிரகமெனப்படுகிறான்.

यथा शिवोऽनुगृह्णाति मूर्तिमाविश्य देहिनः।
तथा योगी शरीरस्थः सर्वानुग्राहको भवेत्॥६॥

சிவபெருமான் திருவுருவம் கொண்டு அருள் புரிவதைப் போல் யோகியும் இந்த உடலில் வசித்துக் கொண்டே அனைவரையும் அருள்கிறான்.

அண்ண லாகிய பரசிவன் வடிவுகொண் டடுத்திங்
கெண்ணி லாவுயி ரியாவையு மளித்திடு மியல்போன்
மண்ணில் யோகியும் வடிவொடு மருவியா வரையு
நண்ணி யேயளித் திடுபவ னாமென நவில்வார்.

சிவபெருமான் திருவுருவம் கொண்டு அருள் புரிவதைப் போல் யோகியும் இந்த உடலில் வசித்துக் கொண்டே அனைவரையும் அருள்கிறான்.

शिवः शरीरयोगेऽपि यथा सङ्गविवर्जितः।
तथा योगी शरीरस्थो निःसङ्गो वर्तते सदा॥७॥
शिवभावनया युक्तः स्थिरया निर्विकल्पया।
शिवो भवति निर्धूतमायावेशपरिप्लवः॥८॥

பற்பல திருவுருவங்களைத் தாங்கினும் சிவபிரான் எவ்விதப் பற்றும் இல்லாதிருப்பது போல் யோகியும் உடலோடு இருப்பதால் பற்றற்று விளங்குகிறான்; என்றும் நிலையான சிவபாவனையோடு இருப்பவன் மாயைக் குழப்பங்களின்றி சிவபெருமானாகவே விளங்குகிறான்.

ஈசன் மேனியோ டொன்றினும் பற்றில னென்ப
மாசில் யோகியு முடம்பின னெனினுமவ் வாறாம்
பாச மாய்வுறு மருஞ்சிவ பாவனை யதனாற்
றேசு லாவுறு பரசிவ னாமவன் றிண்ணம்.

பற்பல திருவுருவங்களைத் தாங்கினும் சிவபிரான் எவ்விதப் பற்றும் இல்லாதிருப்பது போல் யோகியும் உடலோடு இருப்பதால் பற்றற்று விளங்குகிறான்; என்றும் நிலையான சிவபாவனையோடு இருப்பவன் மாயைக் குழப்பங்களின்றி சிவபெருமானாகவே விளங்குகிறான்.

चित्तवृत्तिषु लीनासु शिवे चित्सुखसागरे।
अविद्याकल्पितं वस्तु नान्यत् पश्यति संयमी॥९॥
नेदं रजतमित्युक्ते यथा शुक्तिः प्रकाशते।
नेदं जगदिति ज्ञाते शिवतत्त्वं प्रकाशते॥१०॥

மனத்தின் அனைத்து நிலைகளும் சிதானந்தமயமான சிவனிடத்தில் ஒடுங்கிய பின் மாயையின் தோற்றம் எதையும் யோகி காண்பதில்லை; இது வெள்ளியன்று என அறிந்தபின் இப்பி நன்கு விளங்குவது போல் இது உலகமன்று எனக் கண்ட பின் சிவதத்துவம் பிரகாசிக்கின்றது.

இன்ப வெள்ளமாஞ் சிவத்தினின் மனவழுக் கிறந்த
துன்பில் யோகிமா யைப்பொரு டோன்றுறக் காணான்

முன்பு வெள்ளியன் றிதுவென விப்பிகாண் முறைபோற்
பின்பி லங்குறு மிதுசக மன்றெனப் பிரமம்.

மனத்தின் அனைத்து நிலைகளும் சிதானந்தமயமான சிவனிடத்தில் ஒடுங்கிய பின் மாயையின் தோற்றம் எதையும் யோகி காண்பதில்லை; இது வெள்ளியன்று என அறிந்தபின் இப்பி நன்கு விளங்குவது போல் இது உலகமன்று எனக் கண்ட பின் சிவதத்துவம் பிரகாசிக்கின்றது.

यथा स्वप्नकृतं वस्तु प्रबोधेनैव शाम्यति।
तथा शिवस्य विज्ञाने संसारं नैव पश्यति॥ ११॥

சொப்பனத்தில் கண்டவை கண்விழித்தவுடன் காணுமல் போவதுபோல் சிவஞானம் பெற்றவுடன் பிறவித் துன்பம் காணப்படுவதில்லை.

சொற்ப னப்பொருள் விழித்திடத் தோன்றிடா மாயா
கற்பனைப்பொருண் ஞானம்வந் துற்றிடிற் காணா
முற்பெ றச்சக மயக்கினுக் கவித்தையே முதன்மை
நிற்ப தற்றிடி னதுபினை யுலகெதிர் நில்லா.

சொப்பனத்தில் கண்டவை கண்விழித்தவுடன் காணுமல் போவதுபோல் சிவஞானம் பெற்றவுடன் பிறவித் துன்பம் காணப்படுவதில்லை.

अज्ञानमेव सर्वेषां संसारभ्रमकारणम्।
तन्निवृत्तौ कथं भूयः संसारभ्रमदर्शनम्॥ १२॥
गलिताहङ्कृतिग्रन्थिः क्रीडाकल्पितविग्रहः।
जीवन्मुक्तश्चरेद् योगी देहिवन्निरुपाधिकः॥ १३॥

इति कायानुग्रहस्थलम्

அஞ்ஞானம் ஒன்றே சம்சார நோய்க்குக் காரணம்; அது தொலைந்த பின் சம்சார மயக்கம் ஏது? நான் என்னும் உணர்வுக்கட்டு மூற்றும் நீங்கி விளையாட்டுக்காக உடலைத் தரித்திருக்கும் யோகி எவ்விதத் தடையுமின்றி ஏனையோரைப் போல் இவ்வுடலில் வசிக்கிருன்.

விண்ட மூலவாங் காரனாய் விளிந்திடு முபாதி
கொண்டு தான்விளை யாடலான் மெய்யொடு கூடிக்
கண்ட யோகிமெய் யாளர்போ னடித்திடுங் கண்டாய்
மண்டு வெண்டிரைக் கருங்கடன் மடுத்தவாய் மலரோய்.

அஞ்ஞானம் ஒன்றே சம்சார நோய்க்குக் காரணம்; அது தொலைந்த பின் சம்சார மயக்கம் ஏது? நான் என்னும் உணர்வுக்கட்டு முற்றும் நீங்கி விளையாட்டுக்காக உடலைத் தரித்திருக்கும் யோகி எவ்விதத் தடையுமின்றி ஏனையோரைப் போல் இவ்வுடலில் வசிக்கிருன்.

காயாநுக்கிரகத்தலம் முற்றும்

## अथेन्द्रियानुग्रहस्थलम्

दर्शनात् परकायस्य करणानां विवेकतः।
इन्द्रियानुग्रहः प्रोक्तः सर्वेषां तत्त्ववेदिभिः॥१४॥

பரகாயத்தை விவேகத்துடன் நோக்குவதால் இந்திரியானுக்கிரஹமெனப்படுகிறது.

வடிவு கொண்டருள் பவனது காட்சியான் மருவு
மொடிவி லிந்திய விவேகமே யுலகுளார் யார்க்கும்
படிவி லிந்தியா நுக்கிர கம்மெனப் பகர்வர்
முடிவ றுஞ்சிவ தத்துவ முணர்பெரு முனிவர்.

பரகாயத்தை விவேகத்துடன் நோக்குவதால் இந்திரியானுக்கிரஹமெனப்படுகிறது.

इन्द्रियाणां समस्तानां स्वार्थेषु सति सङ्गमे।
रागो वा जायते द्वेषस्तौ योगी परिवर्जयेत्॥१५॥
इन्द्रियाणां बहिर्वृत्तिः प्रपञ्चस्य प्रकाशिनी।
अन्तः शिवे समावेशो निष्प्रपञ्चस्य कारणम्॥१६॥

இந்திரியங்கள் அதனதன் பொருள்களுடன் சேரும்கால் அவற்றின்கண் விருப்போ அல்லது வெறுப்போ தோன்றுகிறது;

அவற்றை யோகியானவன் விலக்கவேண்டும். இந்திரியங்கள் வெளியில் சென்றால் அது வெளியுலகத்தையே காட்டும்; அகத்துள் விளங்கும் சிவனிடத்தில் செலுத்தினால் பிரபஞ்சமற்ற நிலையை அடையலாம்.

இந்தி யங்கடத் தம்புல னிதமொடு வெறுப்பாய்
வந்து றும்படி யடைந்திடு மிவனவை மருவா
னிந்தி யங்கடாம் புறந்திரிந் திடுதலே பந்த
மிந்தி யங்கணின் றகத்தடங் கிடுதலே முத்தி.

இந்திரியங்கள் அதனதன் பொருள்களுடன் சேரும்கால் அவற்றின்கண் விருப்போ அல்லது வெறுப்போ தோன்றுகிறது; அவற்றை யோகியானவன் விலக்கவேண்டும். இந்திரியங்கள் வெளியில் சென்றால் அது வெளியுலகத்தையே காட்டும்; அகத்துள் விளங்கும் சிவனிடத்தில் செலுத்தினால் பிரபஞ்சமற்ற நிலையை அடையலாம்.

क्षणमन्तः शिवं पश्यन् केवलेनैव चेतसा।
बाह्यार्थानामनुभवं क्षणं कुर्वन् दृगादिभिः॥ १७॥
सर्वेन्द्रियनिरूढोऽपि सर्वेन्द्रियविहीनवान्।
शिवाहितमना योगी शिवं पश्यति नापरम्॥ १८॥

கணநேரம் அகத்துள் சிவபிரானைக் கண்டு வெளியுலகக் காட்சியையும் பொறிகளால் கண்டு எல்லா இந்திரியங்களையும் செயல்படுத்தினாலும் சிவனிடத்திலேயே ஒடுங்கிய யோகி இந்திரியங்களற்றவனாய் சிவனையே காண்கிறான்.

உள்ளு றுஞ்சிவத் தொடுங்கிய மனமுடை யோகி
கொள்ளு மிந்திய மியாவையுங் கூடினுங் கூடான்
றெள்ளு றும்பர சிவத்தையே காண்குவன் சிறிதும்
விள்ளு றும்பிற பொருளினைக் கண்டிடான் விழித்து.

கணநேரம் அகத்துள் சிவபிரானைக் கண்டு வெளியுலகக் காட்சியையும் பொறிகளால் கண்டு எல்லா இந்திரியங்களையும் செயல்படுத்தினாலும் சிவனிடத்திலேயே ஒடுங்கிய யோகி இந்திரியங்களற்றவனாய் சிவனையே காண்கிறான்.

**न जरामरणं नास्ति न पिपासा न च क्षुधा।**
**शिवाहितेन्द्रियस्यास्य निर्मानस्य महात्मनः॥१९॥**

சிவனிடத்திலேயே நாட்டமுடைய யோகிக்கு மூப்பு, இறப்பு, வேட்கை, பசி முதலியன துன்புறுத்தா.

**மான மின்றியே சிவத்தினில் வைத்தவிந் தியத்தோ**
**னூன மொன்றிய மூப்பொடு முயிர்விடு மரணந்**
**தானு ணும்பசி தாகமென் றிவற்றினைச் சாரான்**
**வான மொன்றொடும் பற்றிலா வாறென மன்னோ.**

சிவனிடத்திலேயே நாட்டமுடைய யோகிக்கு மூப்பு, இறப்பு, வேட்கை, பசி முதலியன துன்புறுத்தா.

**मनो यत्र प्रवर्तेत तत्र सर्वेन्द्रियस्थितिः।**
**शिवे मनसि संलीने क्व चेन्द्रियविचारणा॥२०॥**
**यद्यत् पश्यन् दृशा योगी मनसा चिन्तयत्यपि।**
**तत्तत् सर्वं शिवाकारं संविद्रूपं प्रकाशते॥२१॥**

யோகியின் மனது சிவபெருமானிடத்திலேயே நாட்டமடைந்தபின் பொறிபுலன்களும் அவ்வாறே இயங்கும்; அவன் காண்பனவும் மனத்தால் நினைப்பனவும் சிவவடிவமாகவே தோன்றும்.

**எங்க ணெய்துறு மனமவ ணெய்துமிந் தியமுஞ்**
**சங்க ரன்றனை யுறின்மனஞ் சரிக்குமோ புலன்க**
**ளிங்க ருஞ்சிவ யோகிதான் மனத்திடை யெண்ணிப்**
**பங்க மின்றியே பார்த்திடும் பொருளெலாம் பரமாம்.**

யோகியின் மனது சிவபெருமானிடத்திலேயே நாட்டமடைந்தபின் பொறிபுலன்களும் அவ்வாறே இயங்கும்; அவன் காண்பனவும் மனத்தால் நினைப்பனவும் சிவவடிவமாகவே தோன்றும்.

**करणैः सहितं प्राणं मनस्याधाय संयमी।**
**योजयेत् स शिवः साक्षाद् यत्र नास्ति जगद्भ्रमः॥२२॥**

सर्वेन्द्रियप्रवृत्त्या च बहिरन्तः शिवं यजन्।
स्वच्छन्दचारी सर्वत्र सुखी भवति संयमी॥२३॥

इतीन्द्रियानुग्रहस्थलम्

பொறிபுலன்களைப் பிராணனுடன் சேர்த்து மனத்தில் ஒடுக்கி வெளியுலகப் பிரமையற்று, எல்லா இந்திரியங்களாலும் உள்ளும் புறமும் சிவபிரானை வழிபடும் யோகி சுதந்திரனாகத் திரிந்து எல்லையற்ற ஆனந்தமடைகிறான்.

கரண மோடுறு பிராணனா மனத்தொடு கலந்தோன்
புரண மாஞ்சிவ மாகுவன் சகமயல் பொன்றி
முரணு றும்புலன் யாவினு முயன்றுமுட் புறமோ
ராண வஞ்சிவ மடைந்தவ னெங்குமின் படைவான்.

பொறிபுலன்களைப் பிராணனுடன் சேர்த்து மனதில் ஒடுக்கி வெளியுலகப் பிரமையற்று, எல்லா இந்திரியங்களாலும் உள்ளும் புறமும் சிவபிரானை வழிபடும் யோகி சுதந்திரனாகத் திரிந்து எல்லையற்ற ஆனந்தமடைகிறான்.

இந்திரியாநுக்கிரகத்தலம் முற்றும்

## अथ प्राणानुग्रहस्थलम्

शिवस्य परकायस्य यत् तात्पर्यावलोकनम्।
तत्प्राणानुग्रहः प्रोक्तः सर्वेषां तत्त्वदर्शिभिः॥२४॥

பரகாயனாகிற சிவபிரானின் உண்மைநிலையினை அறிதலே பிராணானுக்கிரகமென்பர் அறிஞர்.

சிவமெ னும்பர வடிவமாய்த் திகழ்ந்திடு மிவன்ற
னுவகை யந்தரி சனமிகு முலகனைத் தினுக்கும்
பவம றும்படி யுயிரநுக் கிரகமாப் பகர்வர்
தவம டைந்துயர் தத்துவ முணர்ந்துள தலைவர்.

பரகாயனாகிற சிவபிரானின் உண்மைநிலையினை அறிதலே பிராணானுக்கிரகமென்பர் அறிஞர்.

प्राणो यस्य लयं याति शिवे परमकारणे।
कुतस्तस्येन्द्रियस्फूर्तिः कुतः संसारदर्शनम्॥२५॥

அனைத்துக்கும் காரணமான சிவபெருமானிடத்தில் பிராணன் லயமடைந்தால் இந்திரியங்களின் தாக்கமோ சம்சாரத் தோற்றமோ இராது.

யோகி னாற்சிவத் தொடுங்கிய வுயிருள னெனினு
மாக மேவுறுந் தன்சத்தி வாசனை யதனா
லேக மாஞ்சிவத் தடங்கிய பிராணனோ டிருப்போன்
போக மார்புல னொடுமன மெங்ஙனம் பொருந்தும்.

அனைத்துக்கும் காரணமான சிவபெருமானிடத்தில் பிராணன் லயமடைந்தால் இந்திரியங்களின் தாக்கமோ சம்சாரத் தோற்றமோ இராது.

करणेषु निवृत्तेषु स्वार्थसङ्गात् प्रयत्नतः।
तैः समं प्राणमारोप्य स्वान्ते शान्तमतिः स्वयम्॥२६॥

தத்தம் விஷயங்களினின்றும் விலகிய பொறிபுலன்களுடன் பிராணனை ஏற்றி உள்மனத்தில் சாந்தமடைகின்றான்.

தத்தம் வெவ்விட யங்களைச் சார்வுற மீள
வுய்த்தி டுங்கர ணங்களோ டுள்ளடங் குயிரான்
மெய்த்த சாந்திய னாகியே விளங்குவ னென்று
முத்த னாகம முழுதையு முணர்ந்தவர் மொழிவார்.

தத்தம் விஷயங்களினின்றும் விலகிய பொறிபுலன்களுடன் பிராணனை ஏற்றி உள்மனத்தில் சாந்தமடைகின்ருன்.

शान्तत्वात् प्राणवृत्तीनां मनः शाम्यति वृत्तिभिः।
तच्छान्तौ योगिनां किञ्चिच्छिवादन्यत्र दृश्यते॥२७॥

பிராணனது செயல்பாடுகள் சாந்தமடைந்தால் மனமும் அவ்வாறே சாந்தமடையும்; அதனுல் யோகி சிவபிரானைத் தவிர வேருென்றையும் காண்பதில்லை.

சாந்தி யாமெனி னிங்குயிர் விருத்திதான் றழைந்து
போந்த வன்மன விருத்தியோ டமைந்திடும் புகலி
னேய்ந்த வம்மனச் சாந்தியா லிலங்குறும் யோகி
யார்ந்தி டுஞ்சிவ மன்றிவே றொருபொரு ளறியான்.

பிராணனது செயல்பாடுகள் சாந்தமடைந்தால் மனமும் அவ்வாறே சாந்தமடையும்; அதனுல் யோகி சிவபிரானைத் தவிர வேருென்றையும் காண்பதில்லை.

प्राण एव मनुष्याणां देहधारणकारणम्।
तदाधारः शिवः प्रोक्तः सर्वकारणकारणम्॥२८॥
निराधारः शिवः साक्षात् प्राणस्तेन प्रतिष्ठितः।
तदाधारा तनुर्ज्ञेया जीवो येनैव चेष्टते॥२९॥

மனிதர்களுக்குப் பிராணன் ஒன்றே உடலின் ஆதாரம், அதற்கு ஆதாரம் எல்லாவற்றுக்கும் காரணரான சிவபிரான். சிவபெருமானுக்கு ஆதாரம் ஒன்றும் கிடையாது. அவரால் தான் பிராணன் நிலைநிறுத்தப்பட்டு அதனுல் உடல் இயக்கப்படுகிறது.

உடம்பி னுக்குயி ருயிரினுக் கிறைவனா தார
மடைந்த காரண னாகிய சிவனிரா தாரன்

தொடர்ந்து மாபர னாலுயி ருயிரினாற் றோன்றி
மடங்கு காயநின் றியங்குறு மெனமதி மதித்தே.

மனிதர்களுக்குப் பிராணன் ஒன்றே உடலின் ஆதாரம், அதற்கு ஆதாரம் எல்லாவற்றுக்கும் காரணரான சிவபிரான்.
சிவபெருமானுக்கு ஆதாரம் ஒன்றும் கிடையாது. அவரால் தான் பிராணன் நிலைநிறுத்தப்பட்டு அதனால் உடல் இயக்கப்படுகிறது.

शिवे प्राणो विलीनोऽपि योगिनो योगमार्गतः।
स्वशक्तिवासनायोगाद् धारयेत्येव विग्रहम्॥३०॥
स चाभ्यासवशाद् भूयः सर्वतत्त्वातिवर्तिनि।
निष्कलङ्के निराकारे निरस्ताशेषविक्लवे॥३१॥
चिद्विलासपरिस्फूर्तिपरिपूर्णसुखाह्वये।
शिवे विलीनःसर्वात्मा योगी चलति न क्वचित्॥३२॥

யோகமார்க்கத்தின் வாயிலாகச் சிவபெருமானிடத்தில் பிராணன் ஒடுங்கிய பின்னரும் தனது சக்தியின் யோகத்தால் உடலைத் தரிக்கிறான்; அவன் இடையறாத அப்பியாசத்தினால் தத்துவங்களைக் கடந்ததும் மாசற்றதும் உருவமற்றதும் சைதன்னிய ஆனந்தமே நிறைந்ததும் பரிபூரணமுமான சிவத்தினில் முழுதும் லயித்து அசைவற்று விளங்குகிறான்.

இந்த வாயுநற் பயிற்சியா லின்பபூ ரணமா
யந்த மாதியி லாததா யறிவுரு வாகிப்
பந்த மாகிய தத்துவங் கடந்துயர் பரத்தில்
வந்து மாய்தலில் யோகிதான் சலித்திடான் மன்னோ.

அவன் இடையறாத அப்பியாசத்தினால் தத்துவங்களைக் கடந்ததும் மாசற்றதும் உருவமற்றதும் சைதன்னிய ஆனந்தமே நிறைந்ததும் பரிபூரணமுமான சிவத்தினில் முழுதும் லயித்து அசைவற்று விளங்குகிறான்.

प्रध्वस्तवासनासङ्गात् प्राणवृत्तिपरिक्षयात्।
शिवैकीभूतसर्वात्मा स्थाणुवद् भाति संयमी॥३३॥

इति प्राणानुग्रहस्थलम्

மலவாசனைகளற்று பிராணனுடைய செயல்கள் மிகக் குறைந்து சிவனோடு ஒடுங்கி சிவமாகவே ஆகிய யோகி தன்னிலையிலேயே அசைவற்று விளங்குகிறான்.

நீங்கு வாசனை யுடையனாய் நிகழுயிர் விருத்தி
யீங்கு மாறுபு சிவத்தினி லேகமா யிருப்போ
னோங்கு தாணுவொத் தசைந்திடா னென்றுமென் றுணர்க
வாங்கு வார்திரைக் கடல்குடித் துயர்ந்திட வல்லோய்.

மலவாசனைகளற்று பிராணனுடைய செயல்கள் மிகக் குறைந்து சிவனோடு ஒடுங்கி சிவமாகவே ஆகிய யோகி தன்னிலையிலேயே அசைவற்று விளங்குகிறான்.

பிராணானுக்கிரகத்தலம் முற்றும்.

## अथ कायार्पितस्थलम्

शिवस्य पररूपस्य सर्वानुग्राहिणोऽर्चने।
त्यागो देहाभिमानस्य कायार्पितमुदाहृतम्॥ ३४॥

அனைவர்க்குமருளும் பரவடிவான சிவபெருமானை வழிபடுங்கால் தனது உடலைப் பற்றிய சிந்தனைகளை அறவே துறத்தல் காயார்ப்பிதமாகும்.

அருள்செ யப்பர யோகிதா னருச்சனைப் பொருட்டு
மருள்செய் யிவ்வுடன் மானமற் றிடுவதே மதிப்பிற்
றெருள்செய் கின்றகா யார்ப்பித மென்றுரை செய்வ
ரிருள்செய் வெம்பவ மகன்றுநல் லறிவறிந் திருப்போர்.

அனைவர்க்குமருளும் பரவடிவான சிவபெருமானை வழிபடுங்கால் தனது உடலைப் பற்றிய சிந்தனைகளை அறவே துறத்தல் காயார்ப்பிதமாகும்.

यदा योगी निजं देहं शिवाय विनिवेदयेत्।
तदा भवति तद्रूपं शिवरूपं न संशयः॥ ३५॥

इन्द्रियप्रीतिहेतूनि विषयासङ्गजानि च।
सुखानि सुखचिद्रूपे शिवयोगी निवेदयेत्॥ ३६॥

தனது உடலை யோகி சிவபிரானுக்கு அர்ப்பிக்குங்கால் அவன் சிவவடிவே ஆகிறான்; பொறிபுலன்களின் சுகத்திற்காக நுகரும் உலக இன்பங்களையும் அவன் சின்மயமான சிவபெருமானுக்கே அர்ப்பணம் செய்யக்கடவன்.

என்று தன்னுடம் பீசனுக் கர்ப்பிதஞ் செய்வ
னன்று தன்வடி வொருசிவ வடிவமே யாகு
மொன்று மிந்திய விடயவின் பங்களை யோகி
நின்ற சிந்மய சிவத்தினுக் காக்குவ னேர்ந்து.

தனது உடலை யோகி சிவபிரானுக்கு அர்ப்பிக்குங்கால் அவன் சிவவடிவே ஆகிறான்; பொறிபுலன்களின் சுகத்திற்காக நுகரும் உலக இன்பங்களையும் அவன் சின்மயமான சிவபெருமானுக்கே அர்ப்பணம் செய்யக்கடவன்.

दर्शनात् स्पर्शनाद् भुक्तेः श्रवणाद् घ्राणनादपि।
विषयेभ्यो यदुत्पन्नं शिवे तत्सुखमर्पयेत्॥ ३७॥
देहद्वारेण यद्यत् स्यात् सुखं प्रासङ्गमात्मनः।
तत्तन्निवेदयन् शम्भोर्योगी भवति निर्मलः॥ ३८॥

## इति कायार्पितस्थलम्

காணுதல், கேட்டல், தொடுதல், மூக்கினால் முகர்தல் போன்ற புலன்களால் நுகரும் எல்லா இன்பங்களையும் சிவபிரானுக்கே அர்ப்பணம் செய்தல் வேண்டும்; உடலின் வாயிலாக நுகரும் இன்பங்கள் அனைத்தையும் சிவபிரானுக்கு அர்ப்பித்தலால் யோகி மலங்களற்று விளங்குகிறான்.

கண்டு கேட்டுமற் றுண்டுயிர்த் துற்றிடு காலைக்
கொண்ட வின்பங்கள் யாவையுஞ் சிவத்தினிற் கொடுத்து
மண்டி யிவ்வுடல் வழிவரு மற்றுள சுகமும்
விண்ட வெந்தளைப் பரமனுக் காக்குவோன் விமலன்.

காணுதல், கேட்டல், தொடுதல், மூக்கினுல் முகர்தல் போன்ற புலன்களால் நுகரும் எல்லா இன்பங்களையும் சிவபிரானுக்கே அர்ப்பணம் செய்தல் வேண்டும்; உடலின் வாயிலாக நுகரும் இன்பங்கள் அனைத்தையும் சிவபிரானுக்கு அர்ப்பித்தலால் யோகி மலங்களற்று விளங்குகிருன்.

காயார்ப்பித்தலம் முற்றும்.

## अथ करणार्पितस्थलम्

आसञ्जनं समस्तानां करणानां परात्परे।
शिवे यत् तदिदं प्रोक्तं करणार्पितमागमे ॥ ३९ ॥

ஆதியான சிவபெருமானிடத்தில் எல்லாப் பொறிபுலன்களையும் சேர்ப்பித்தலே கரணூர்ப்பிதமாகும்.

ஆதி யாகிய சிவத்தினிற் கரணங்க ளனைத்தும்
வேதி யாவத நிடைப்புணர்த் திடுதலே விளங்கத்
தீதி னூல்கர ணார்ப்பித மென்னவே தெரிக்கும்
பூத நாயக னருள்கொடு பொதியிலிற் புகுந்தோய்.

ஆதியான சிவபெருமானிடத்தில் எல்லாப் பொறிபுலன்களையும் சேர்ப்பித்தலே கரணூர்ப்பிதமாகும்.

यद्यत्करणमालम्ब्य भुङ्क्ते विषयजं सुखम्।
तत्तच्छिवे समर्प्यैष करणार्पक उच्यते ॥ ४० ॥

எந்தெந்த புலன்களால் இன்பங்களை நுகர்கிருனே அவ்வவற்றைச் சிவபிரானுக்கே சமர்ப்பித்தல் கரணூர்ப்பகம் எனப்படும்.

யாது தானொரு கரணங்கொண் டுறுபுல னிடத்திற்
போது மோர்சுகஞ் சிவத்தினிற் சமர்ப்பணை புரியு
நீதி யான்கர ணார்ப்பித னென்னவே நிகழ்த்து
மாது பாதிய னருளிய வாகமம் வகுத்து.

எந்தெந்த புலன்களால் இன்பங்களை நுகர்கிறானோ அவ்வவற்றைச் சிவபிரானுக்கே சமர்ப்பித்தல் கரணார்ப்பகம் எனப்படும்.

अहङ्कारमदोद्रिक्तमन्तः करणवारणम्।
बध्नीयाद् यः शिवालाने स धीरः सर्वसिद्धिमान्॥४१॥

அஹங்காரம் மமதை முதலியவற்றால் மதம்பிடித்துத் திரியும் யானையை சிவமெனும் தூணில் கட்டுபவனே உண்மையில் வீரனாவான்.

அகந்தை யாமதம் பொழிதரு கரணவா ரணத்தை
மிகுந்த மாசிவ மெனுந்தறி பிணிப்பவன் வீரன்
பகுந்த விந்தியத் ததிபதி யாமனம் பரத்திற்
புகுந்து ளான்றனக் கதுதொடர் பொறிகொடென் பொருந்தும்.

அஹங்காரம் மமதை முதலியவற்றால் மதம்பிடித்துத் திரியும் யானையை சிவமெனும் தறியால் கட்டுபவனே உண்மையில் வீரனாவான்.

इन्द्रियाणां समस्तानां मनः प्रथममुच्यते।
वशीकृते शिवे तस्मिन् किमन्यैस्तद्वशानुगैः॥४२॥
इन्द्रियाणां वशीकारो निवृत्तिरिति गीयते।
लक्षीकृते शिवे तेषां कुतः संसारगाहनम्॥४३॥
संसारविषकान्तारसमुच्छेदकुठारिका।
उपशान्तिर्भवेत् पुंसामिन्द्रियाणां वशीकृतौ॥४४॥

இந்திரியங்களுள் முதன்மையான மனத்தை சிவத்தினில் செலுத்தி வசப்படுத்திய பின் மற்றவற்றைப் பற்றி யாதொரு சிந்தையுமில்லை; புலன்களை அடக்கி வசமாக்குதலே நிவிருத்தியாகும். சிவபிரானை அவற்றுக்கெல்லாம் இலட்சியமாகினால் சம்சாரத் தொல்லையே இராது. அவற்றை வசப்படுத்துவதால் சம்சாரமெனும் கொடிய விஷக்காடு அழிக்கப்படும்.

இந்தி யங்களை மறித்தருஞ் சிவத்தினி லிசைத்தோற்
கந்த வெம்பவ முழுகுத லியாண்டுள தறையி
னிந்தி யங்கடன் வழிபடுத் திடல்பவ மென்னும்
பந்த வல்வன மெறிந்திடற் கொருபெரும் பரசாம்.

புலன்களை அடக்கி வசமாக்குதலே நிவிருத்தியாகும். சிவபிரானை அவற்றுக்கெல்லாம் இலட்சியமாகினால் சம்சாரத் தொல்லையே இராது. அவற்றை வசப்படுத்துவதால் சம்சாரமெனும் கொடிய விஷக்காடு அழிக்கப்படும்.

इन्द्रियैरेव जायन्ते पापानि सुकृतानि च।
तेषां समर्पणादीशे कुतः कर्मनिबन्धनम्॥४५॥

பாவபுண்ணியங்கள் யாவும் புலன்களால் தான் உண்டாகின்றன; அவற்றை ஈசுவரனுக்குச் சமர்ப்பித்தால் கருமமலத் தொல்லை இராது.

இந்தி யங்களாற் பாவபுண் ணியங்கள் வந் தெய்து
மிந்தி யஞ்சிவத் தாக்கினாற் கிருவினை யில்லை
யந்த வெம்பவ முறான்மனத் தாஞ்சக வவியை
முந்து ஞானவா ரழலிடை யிட்டிடு முறைபோல்.

பாவபுண்ணியங்கள் யாவும் புலன்களால் தான் உண்டாகின்றன; அவற்றை ஈசுவரனுக்குச் சமர்ப்பித்தால் கருமமலத் தொல்லை இராது.

प्रकाशमाने चिद्वह्नौ बहिरन्तर्जगन्मये।
समर्प्य विषयान् सर्वान् मुक्तवज्जायते जनः॥४६॥
चित्तद्रव्यं समादाय जगज्जातं महाहविः।
चिद्वह्नौ जुह्वतामन्तः कुतः संसारविप्लवः॥४७॥

ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் சின்மயத் தீயில் அகம் மற்றும் புற உலகவிஷயங்களை இட்டு முக்தனைப் போல் விளங்குகிறான்; உலகமெனும் பெரும் ஹவிஸை சித்தத்துடன் சேர்த்து சைதன்னியத் தீயில் ஹோமம் செய்வோனுக்கு சம்சாரத் துன்பமே இல்லை.

அகம்பு றங்களு நிறைந்துள ஞானவங் கியினின்
மிகும்பு லன்களெ னவியிடை யிட்டுவேட் கின்றோ
னுகந்தி டும்பர முத்தனொத் தொருசிவ மாமென்
றிகம்ப ரங்களு முணர்ந்தவ ரியம்புவ ரன்றே.

ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் சின்மயத் தீயில் அகம் மற்றும் புற உலகவிஷயங்களே இட்டு முக்தனேப் போல் விளங்குகிருன்; உலகமெனும் பெரும் ஹவிஸை சித்தத்துடன் சேர்த்து சைதன்னியத் தீயில் ஹோமம் செய்வோனுக்கு சம்சாரத் துன்பமே இல்லே.

आत्मज्योतिषि चिद्रूपे प्राणवायुनिबोधिते।
जुह्वन् समस्तविषयान् तन्मयो भवति ध्रुवम्॥४८॥
इन्द्रियाणि समस्तानि शरीरं भोगसाधनम्।
शिवपूजाङ्गभावेन भावयन् मुक्तिमाप्नुयात्॥४९॥

इति करणार्पितस्थलम्

பிராணவாயுவினுல் தூண்டப்பட்ட சைதன்னியமான ஆன்மசோதியில் அனைத்து விஷயங்களேயும் ஹோமம் செய்வதால் அவன் சைதன்னியமாகவே ஆகிருன்; உலகத்தை அனுபவிக்கும் சாதனங்களான எல்லா இந்திரியங்கள் மற்றும் உடல் ஆகியவற்றை சிவபூஜைக்குரிய சாதனங்களாக எண்ணுபவன் முக்தியடைகிருன்.

பொறிகள் யாவையும் போகசா தநமெனும் புரமு
நெறிகொ ளீசன தருச்சனை யங்கமா நினைந்தோன்
குறிகொ ளங்கமி லொருபர முத்தியே குறுகும்
வெறிகொள் வண்டின மிசைமுரல் சந்தந வெற்போய்.

உலகத்தை அனுபவிக்கும் சாதனங்களான எல்லா இந்திரியங்கள் மற்றும் உடல் ஆகியவற்றை சிவபூஜைக்குரிய சாதனங்களாக எண்ணுபவன் முக்தியடைகிருன்.

கரணுர்ப்பிதத்தலம் முற்றும்.

## अथ भावार्पितस्थलम्

शिवे निश्चलभावेन भावानां यत्समर्पणम्।
भावार्पितमिदं प्रोक्तं शिवसद्भाववेदिभिः ॥५०॥

மனத்தின் அனைத்து பாவங்களையும் அமைதியாகச் சிவபிரானிடத்தில் சமர்ப்பித்தலே பாவார்ப்பிதமாகும்.

சலந மின்றிய பாவனை கொண்டுசற் பாவ
நலமு றுஞ்சிவ னிடத்தினி லர்ப்பித நவிற்று
நிலையி லங்குபா வார்ப்பித மென்னவே நிறுப்பர்
புலமை கொண்டுயர் சிவநிலை யுணர்ந்திடும் புலவர்.

மனத்தின் அனைத்து பாவங்களையும் அமைதியாகச் சிவபிரானிடத்தில் சமர்ப்பித்தலே பாவார்ப்பிதமாகும்.

चित्तस्थसकलार्थानां मननं यत्तु मानसे।
तदर्पणं शिवे साक्षान्मानसो भाव उच्यते॥५१॥
भाव एव हि जन्तूनां कारणं बन्धमोक्षयोः।
भावशुद्धौ भवेन्मुक्तिर्विपरीते तु संसृतिः॥५२॥

மனத்தில் தோன்றும் அனைத்து எண்ணங்களையும் சிவார்ப்பணம் செய்தல் மானஸபாவமெனப்படுகிறது; பாவங்கள் தான் பந்தம் மோட்சம் ஆகிய இரண்டிற்கும் காரணம். மனதின். பாவங்கள் சுத்தமாயின் முக்தி விளையும், இல்லையேல் சம்சாரபந்தம்.

மான சந்தனைப் பாவமென் றறைகுவர் மனத்தி
லான வப்பொரு ணினைவொரு சிவத்தி லர்ப்பிதமா
மீன வெம்பவ மடைகிலன் பாவசுத் தியினோன்
றான திங்கிலன் பவத்தினிற் சுழலுவன் றளர்ந்தே.

மனத்தில் தோன்றும் அனைத்து எண்ணங்களையும் சிவார்ப்பணம் செய்தல் மானஸபாவமெனப்படுகிறது; பாவங்கள் தான் பந்தம் மோட்சம் ஆகிய இரண்டிற்கும் காரணம். மனதின்

பாவங்கள் சுத்தமாயின் முக்தி விளையும், இல்லையேல் சம்சாரபந்தம்.

भावस्य शुद्धिराख्याता शिवोऽहमिति योजना।
विपरीतसमायोगे कुतो दुःखनिवर्तनम्॥५३॥
भोक्ता भोग्यं भोजयिता सर्वमेतच्चराचरम्।
भावयन् शिवरूपेण शिवो भवति वस्तुतः॥५४॥

சிவோஹம் எனும் பாவனையே பாவசுத்தியாகும்; மாறாகச் செய்தால் சம்சாரத் துன்பம் நீங்காது. நுகர்வோன், நுகரும் பொருட்கள், நுகரச் செய்பவன், இந்த உலகம் ஆகியன எல்லாம் சிவமயமாகப் பாவித்தலால் சிவமாகவே ஆகிறான்.

பாவ சுத்திதான் சிவோகமென் யோகமாய்ப் பகர்வர்
பாவ மற்றது தீர்ந்துளன் பவத்தினிற் படுவான்
மேவி யுண்பவ னுணும்பொரு ளூட்டுவோன் விளம்பின்
யாவு மோர்சிவ மயமென வெண்ணுவோன் சிவனாம்

சிவோஹம் எனும் பாவனையே பாவசுத்தியாகும்; மாறாகச் செய்தால் சம்சாரத் துன்பம் நீங்காது. நுகர்வோன், நுகரும் பொருட்கள், நுகரச் செய்பவன், இந்த உலகம் ஆகியன எல்லாம் சிவமயமாகப் பாவித்தலால் சிவமாகவே ஆகிறான்.

मिथ्येति भावयन् विश्वं विश्वातीतं शिवं स्मरन्।
सत्तानन्दचिदाकारं कथं बद्धुमिहार्हति॥५५॥

உலகங்கள் யாவும் இல்லாத பொருட்கள், சிவபெருமான் இவற்றையெல்லாம் கடந்தவன் என நினைக்கும் ஸச்சிதானந்த வடிவினனை சம்சாரத் தளைகள் கட்ட மாட்டா.

மித்தை யென்றுல கனைத்தையும் விடுத்தறி வின்பச்
சத்தெ னுஞ்சிவந் தன்னையே நினைந்துறுந் தகையோ
னெத்தி றங்களி னாயினு மலத்துட னிசையான்
முத்த னென்றவன் றனைமொழி குறுவர்மூ தறிஞர்.

உலகங்கள் யாவும் இல்லாத பொருட்கள், சிவபெருமான் இவற்றையெல்லாம் கடந்தவன் என நினைக்கும் ஸச்சிதானந்த வடிவினனை சம்சாரத் தளைகள் கட்ட மாட்டா.

सर्वं कर्मार्चनं शम्भोर्वचनं तस्य कीर्तनम्।
इति भावयतो नित्यं कथं स्यात् कर्मबन्धनम्॥५६॥
सर्वेन्द्रियगतं सौख्यं दुःखं वा कर्मसंभवम्।
शिवार्थं भावयन् योगी जीवन्मुक्तो भविष्यति॥५७॥

## इति भावार्पितस्थलम्

செய்யும் செயல்கள் யாவும் சிவார்ச்சனையே, பேசுவதெல்லாம் சிவத்தோத்திரமே என உறுதியாகப் பாவிப்போனுக்குக் கர்மபந்தனைதான் ஏது? இந்திரியங்களால் நுகரப்படும் சுகதுக்கங்கள் யாவும் கருமபந்தனையால் விளைபவை; அவற்றைச் சிவார்ப்பிதமாக பாவிப்போன் ஜீவன்முக்தனுகின்ருன்.

கருமம் யாவுமோர் பரசிவ பூசனை கழறு
முரைகள் யாவுமொண் டுதியென வுன்னுவோற் கில்லை
கரும பந்தனை யின்பதுன் பங்களைக் கருதா
தொருப ரன்றனக் காக்குவோ னுயர்சீவன் முத்தன்.

செய்யும் செயல்கள் யாவும் சிவார்ச்சனையே, பேசுவதெல்லாம் சிவத்தோத்திரமே என உறுதியாகப் பாவிப்போனுக்குக் கர்மபந்தனைதான் ஏது? இந்திரியங்களால் நுகரப்படும் சுகதுக்கங்கள் யாவும் கருமபந்தனையால் விளைபவை; அவற்றைச் சிவார்ப்பிதமாக பாவிப்போன் ஜீவன்முக்தனுகின்ருன்.

பாவார்ப்பிதத்தலம் முற்றும்.

## अथ शिष्यस्थलम्

शासनीयो भवेद्यस्तु परकायेन सर्वदा।
तत्प्रसादात्तु मोक्षार्थी स शिष्य इति कीर्तितः॥५८॥

பரகாயனுன சிவபெருமானுல் எப்போதும் ஆளப்பட்டு
அவனருளால் மோட்சமடைய விரும்புவோன் சீடனுவான்.

பிரம மேவடி வாகுமப் பெரியவன் றன்னா
லருள்பு ரிந்தளிக் கப்படு வோனவ னருளாற்
பரம வின்பவீ டவாவுளோ னெவனவன் பகரி
னிருமை தங்கிய சீடனென் றுயர்ந்தவ ரிசைப்பார்.

பரகாயனுன சிவபெருமானுல் எப்போதும் ஆளப்பட்டு
அவனருளால் மோட்சமடைய விரும்புவோன் சீடனுவான்.

भावो यस्य स्थिरो नित्यं मनोवाक्कायकर्मभिः।
गुरौ निजे गुणोदारे स शिष्य इति गीयते॥५९॥

மனம் வாக்கு உடல்களால் தனது பக்திபாவத்தை எப்போதும்
நற்குணங்கள் நிறைந்த குருவுக்குச் சமர்ப்பிப்பவன் சீடன்.

பாவ நற்குணங் கட்கிட மாகியே பரமாய்
மேவு சற்குரு பரனிடை மனமொழி மெய்யால்
யாவு முற்றவன் றன்னையே சீடனென் றிசைக்குங்
காவி யொத்தகண் மலைமகள் பாகனா கமங்கள்.

பரகாயனுன சிவபெருமானுல் எப்போதும் ஆளப்பட்டு
அவனருளால் மோட்சமடைய விரும்புவோன் சீடனுவான்.

शान्तो दान्तस्तपश्शीलः सत्यवाक् समदर्शनः।
गुरौ शिवे समानस्थः स शिष्याणामिहोत्तमः॥६०॥

மனம் மற்றும் பொறிபுலன்களின் அடக்கம், தவம், உண்மை
பேசுதல், எல்லாவற்றிலும் சமநோக்கு, குருவையும்
சிவபிரானையும் ஒக்க நோக்குதல் ஆகியன உடையவன்
சீடர்களுள் சிறந்தவன்.

சாந்தி தாந்திநற் றவஞ்சம தரிசனம் வாய்மை
வாய்ந்து மாண்குரு சிவனிடை யொத்தநன் மனத்தா
லேய்ந்து ளான்றனைச் சீடசூ டாமணி யென்பர்
தீர்ந்த மாலுடை யொருபர சிவமுணர் திறத்தோர்.

மனம் மற்றும் பொறிபுலன்களின் அடக்கம், தவம், உண்மை பேசுதல், எல்லாவற்றிலும் சமநோக்கு, குருவையும் சிவபிரானையும் ஒக்க நோக்குதல் ஆகியன உடையவன் சீடர்களுள் சிறந்தவன்.

गुरुमेव शिवं पश्येच्छिवमेव गुरुं तथा।
नैतयोरन्तरं किञ्चिद्विजानीयाद्विचक्षणः ॥ ६१ ॥
शिवाचारे शिवध्याने शिवज्ञाने च निर्मले।
गुरोरादेशमात्रेण परां निष्ठामवाप्नुयात् ॥ ६२ ॥

குருவைச் சிவனாகவும் சிவபிரானைக் குருவாகவும் அவர்களுள் எவ்வித வேறுபாட்டையும் காணாத சீடன் சைவ ஒழுக்கம், சிவத்தியானம், மாசற்ற சிவஞானம் ஆகியவற்றில் மிக உயர்ந்த நிட்டையை அவனது குருவின் ஆணையால் பெறுவான்.

குருவை மெய்ச்சிவ மாகவச் சிவன்றனைக் குருவா
யொருமை பெற்றிடக் காண்கவக் குருபர னுரைத்த
திரிவ றச்சிவ நெறிசிவத் தியாநமெய்ஞ் ஞான
மருவ லுற்றவை நிட்டையி னோங்குக மாதோ.

குருவைச் சிவனாகவும் சிவபிரானைக் குருவாகவும் அவர்களுள் எவ்வித வேறுபாட்டையும் காணாத சீடன் சைவ ஒழுக்கம், சிவத்தியானம், மாசற்ற சிவஞானம் ஆகியவற்றில் மிக உயர்ந்த நிட்டையை அவனது குருவின் ஆணையால் பெறுவான்.

ब्रह्माण्डबुद्बुदोद्भूतं मायासिन्धुं महत्तरम्।
गुरोः कवलयत्याशु कटाक्षवडवानलः ॥ ६३ ॥
गुरोः कटाक्षवेधेन शिवो भवति मानवः।
रसवेधाद् यथा लोहो हेमतां प्रतिपद्यते ॥ ६४ ॥

பிரம்மாண்டமெனும் பெரிய நீர்க்குமிழியில் தோன்றிய இந்த மாயைக் கடலை குருவின் கடைக்கண் பார்வையாகிற நெருப்பு வற்றச் செய்துவிடும்; ரசமணியின் தொடர்பினால் இரும்பு பொன்னாவது போல் குருவின் கடைக்கண் நோக்கால் சீடன் சிவனாகிறான்.

அண்ட மொக்குள்சேர் மாயையங் கடலுய ராசான்
கண்ட நல்லருள் கடைக்கணால் வற்றுறுங் கலப்பப்
பண்டிரும்பிர தத்தினாற் பசும்பொனா மாபோன்
மண்ட லந்தனின் மனிதருஞ் சிவமய மாவர்.

பிரம்மாண்டமெனும் பெரிய நீர்க்குமிழியில் தோன்றிய இந்த மாயைக் கடலை குருவின் கடைக்கண் பார்வையாகிற நெருப்பு வற்றச் செய்துவிடும்; ரசமணியின் தொடர்பினால் இரும்பு பொன்னாவது போல் குருவின் கடைக்கண் நோக்கால் சீடன் சிவனாகிறான்.

न लङ्घयेद् गुरोराज्ञां ज्ञानमेव प्रकाशयन्।
शिवासक्तेन मनसा सर्वसिद्धिमवाप्नुयात्॥ ६५॥
शिवादन्यज्जगन्मिथ्या शिवः संवित्स्वरूपकः।
शिवस्त्वमिति निर्दिष्टो गुरुणा मुक्त एव सः॥ ६६॥

குருவின் ஆணையை மீறாமல் சிவபெருமானிடத்திலே ஆழ்ந்த நிட்டையுடையோன் எல்லாச் சித்திகளையும் அடைவான்; சிவபிரானைத் தவிர ஏனைய அனைத்தும் நிலையற்றவை, சிவபிரான் சின்மயனானவன், நீ சிவபிரானே என்று குருவினால் போதிக்கப்பட்டவன் முக்தியடைந்தவனே.

தேசி கன்றன தாணையைக் கடந்திடல் செய்யா
னாச கன்றுள ஞானமுற் றடைகுவ னவனாற்
பேசு றுஞ்சக மித்தைபே ரறிவது பிரம
மேச லின்றது நீயென விசைந்தவன் முத்தன்.

குருவின் ஆணையை மீறாமல் சிவபெருமானிடத்திலே ஆழ்ந்த நிட்டையுடையோன் எல்லாச் சித்திகளையும் அடைவான்; சிவபிரானைத் தவிர ஏனைய அனைத்தும் நிலையற்றவை, சிவபிரான் சின்மயனானவன், நீ சிவபிரானே என்று குருவினால் போதிக்கப்பட்டவன் முக்தியடைந்தவனே.

गुरोर्लब्ध्वा महाज्ञानं संसारामयभेषजम्।
मोदते यः सुखी शान्तः स जीवन्मुक्त एव हि॥ ६७॥

## इति शिष्यस्थलम्

சம்சாரப் பிணியை நீக்கவல்ல மிக உயர்ந்த ஞானத்தைக் குருவின் வாயிலாக அறிந்தவன் நிலையான அமைதியடைந்து எப்போதும் இன்புறுவான்; அவன் ஜீவன்முக்தனே.

பிறவி நன்மருந் தாகிய பிரம ஞானத்தை
யறவ னென்றுயர் குரவனா லடைந்துவந் தமர்வோ
னுறவு வெம்பகை யிலாவுயிர் முத்தனென் றுரைப்பர்
மறுவ கன்றுள கலைமுழு துணர்ந்துறு மதிஞர்.

சம்சாரப் பிணியை நீக்கவல்ல மிக உயர்ந்த ஞானத்தைக் குருவின் வாயிலாக அறிந்தவன் நிலையான அமைதியடைந்து எப்போதும் இன்புறுவான்; அவன் ஜீவன்முக்தனே.

சீடத்தலம் முற்றும்.

## अथ शुश्रूषस्थलम्

बोध्यमानः स गुरुणा परकायेन सर्वदा।
तच्छुश्रूषारतः शिष्यः शुश्रूषुरिति कीर्त्यते॥ ६८॥

பரகாயனுன குருவினுல் போதிக்கப்பட்டு அவருக்குப் பணிவிடை செய்வதிலேயே நாட்டம் கொண்ட சீடன் சுசுரூஷு எனப்படுகின்ருன்.

பீடு றுங்குரு வாலருள் செய்திடப் பெற்ற
சீட னொண்குரு சிசுருடை விருப்பினைச் செயலா
னாடு றுஞ்சிசு ருடைப்பெயர் நண்ணுவ னென்னப்
பாடு றும்புகழ் மாதவ வாகமம் பகரும்.

குருவினுல் போதிக்கப்பட்டு அவருக்குப் பணிவிடை செய்வதிலேயே நாட்டம் கொண்ட சீடன் சுசுரூஷு என ஆகமங்கள் கூறும்.

किं सत्यं किं न वा सत्यं क आत्मा कः परः शिवः।
इति श्रवणसंसक्तो गुरोः शिष्यो विशिष्यते॥ ६९॥
श्रुत्वा श्रुत्वा गुरोर्वाक्यं शिवसाक्षात्क्रियावहम्।
उपशाम्यति यः स्वान्ते स मुक्तिपदमाप्नुयात्॥ ७०॥

மெய் யாது பொய் யாது, ஆன்மா யாது சிவபிரான் யார் என்பதைப் பற்றிய குருவின் போதனைகளில் மிகவும் நாட்டமுடைய சீடனே சிறந்தவன்; சிவபெருமானை நேரிடையாக உணர்வதற்குத் துணையான குருவின் சொற்களைக் கேட்டு கேட்டு மன அமைதியடையும் சீடன் முக்தியடைவான்.

மெய்ம்மை யாதுபொய் யாதுயிர் யாதுதான் விளங்குஞ்
செம்மை யார்சிவம் யாதென வினவுவோன் சீட
னிம்மை யேசிவ மருள்குரு வின்மொழி கேட்டுப்
பொய்ம்மை போயக மமைபவன் வீட்டினைப் பொருத்தும்.

மெய் யாது பொய் யாது, ஆன்மா யாது சிவபிரான் யார் என்பதைப் பற்றிய குருவின் போதனைகளைக் கேட்டு கேட்டு மன அமைதியடையும் சீடன் முக்தியடைவான்.

न बुध्यति गुरोर्वाक्यं विना शिष्यस्य मानसम्।
तेजो विना सहस्रांशोः कथं स्फुरति पङ्कजम्॥७१॥
सूर्यस्योदयमात्रेण सूर्यकान्तः प्रकाशते।
गुरोरालोकमात्रेण शिष्यो बोधेन भासते॥७२॥

சூரிய கிரணங்களின்றி தாமரை மலராதது போல் குருவின் போதனைகளின்றி சீடனுடைய மனம் எதையும் அறியாது; சூரியன் உதயமானவுடனேயே சூரியகாந்தக் கல் ஒளிவீசத் தொடங்குவது போல் குருவின் பார்வையாலேயே சீடன் அறிவு பெற்று விளங்குகிறான்.

ஆரியன்றன துரையிலா தலர்வுறா திதியஞ்
சூரி யன்றனை யலான்மரை யலர்வுறா சொல்லி
னாரி யன்றிகழ் வால்விளங் குவனருஞ் சீடன்
சூரி யன்றிகழ் வாற்கதிர்க் காந்தமுஞ் சுடரும்.

சூரிய கிரணங்களின்றி தாமரை மலராதது போல் குருவின் போதனைகளின்றி சீடனுடைய மனம் எதையும் அறியாது; சூரியன் உதயமானவுடனேயே சூரியகாந்தக் கல் ஒளிவீசத் தொடங்குவது போல் குருவின் பார்வையாலேயே சீடன் அறிவு பெற்று விளங்குகிறான்.

अद्वैतपरमानन्दप्रबोधैकप्रकाशकम्।
उपायं शृणुयाच्छिष्यः सद्गुरुं प्राप्य साञ्जलिः॥७३॥
किं तत्त्वं परमं ज्ञेयं केन सर्वे प्रतिष्ठिताः।
कस्य साक्षात्क्रिया मुक्तिः कथयेति समासतः॥७४॥

கூப்பிய கைகளுடன் சீடன் குருவைச் சென்றடைந்து அத்துவைத பரமானந்தம் அடையும் உபாயம் யாது? அனைத்துக்கும் மேலானதும் எல்லாவற்றுக்கும் ஆதாரமானதும் முக்தியடைய இன்றியமையாததுமான தத்துவம் தான் யாது என வினவ வேண்டும்.

சீட னக்குரு பரனெதி ரஞ்சலி செய்து
கேடி லத்துவி தாநந்த மொன்றையே கேட்க
நாடு தத்துவம் யாதுல கெதன்கணே நண்ணும்
வீட டுத்துறல் யாதினால் விளம்புக வென்பான்.

கூப்பிய கைகளுடன் சீடன் குருவைச் சென்றடைந்து அத்துவைத பரமானந்தம் அடையும் உபாயம் யாது? அனைத்துக்கும் மேலானதும் எல்லாவற்றுக்கும் ஆதாரமானதும் முக்தியடைய இன்றியமையாததுமான தத்துவம் தான் யாது என வினவ வேண்டும்.

इति प्रश्ने कृते पूर्वं शिष्येण नियतात्मना।
ब्रूयात् तत्त्वं गुरुस्तस्मै येन स्यात् संश्रुतेर्लयः॥७५॥
शिव एव परं तत्त्वं चिदानन्दसदाकृतिः।
स यथार्थस्तदन्यस्य जगतो नास्ति नित्यता॥७६॥

இவ்வாறு சீடன் கேட்கவும் குருவானவர் ஸச்சிதானந்த வடிவினனான சிவபிரானே பரதத்துவம்; அவனொருவனே உள்பொருள், ஏனைய பொருட்கள் யாவும் நிலையற்றவை என உண்மையைப் போதிக்க வேண்டும்.

இன்ன வாறருஞ் சீடனேர் வினாவுற விறைவ
னின்ன லம்பவ மொழிகுவான் றத்துவ மிசைப்ப
னுன்ன ருஞ்சிவ னேபர முண்மையு மவனே
யன்னி யங்களா மிச்சக மநித்தமென் றறிவாய்.

இவ்வாறு சீடன் கேட்கவும் குருவானவர் ஸச்சிதானந்த வடிவினனான சிவபிரானே பரதத்துவம்; அவனொருவனே உள்பொருள், ஏனைய பொருட்கள் யாவும் நிலையற்றவை என உண்மையைப் போதிக்க வேண்டும்.

अयथार्थप्रपञ्चोऽयं प्रतितिष्ठति शङ्करे।
सदात्मनि यथा शुक्तौ रजतत्वं व्यवस्थितम्॥७७॥
शिवोऽहमिति भावेन शिवे साक्षात्कृते स्थिरम्।
मुक्तो भवति संसारान्मोहग्रन्थेर्विभेदतः॥७८॥

உண்மையற்ற வெள்ளி இப்பியில் காணப்படுவது போல் உண்மையற்ற இப்பிரபஞ்சமும் என்றும் உண்மையான சிவபிரானிடத்தில் காணப்படுகிறது; நானே சிவன் எனும் நிலையான மனோபாவத்துடன் சிவபிரானை உணர்ந்தால் மனக்குழப்பங்கள் யாவும் நீங்கி முக்தியடைகிறான்.

மித்தை யாஞ்சகஞ் சிவனிடை மேவுறும் வெள்ளி
சுத்தி மேவல்போற் சிவோகமென் பாவனை தோன்றி
னத்த னாகிய சிவநிலை யுண்மையை யடைய
முத்த னாகுவன் பவநெறி மூலமா மோகம்.

உண்மையற்ற வெள்ளி இப்பியில் காணப்படுவது போல் உண்மையற்ற இப்பிரபஞ்சமும் என்றும் உண்மையான சிவபிரானிடத்தில் காணப்படுகிறது; நானே சிவன் எனும் நிலையான மனோபாவத்துடன் சிவபிரானை உணர்ந்தால் மனக்குழப்பங்கள் யாவும் நீங்கி முக்தியடைகிறான்.

शिवं भावय चात्मानं शिवादन्यं न चिन्मय।
एवं स्थिरे शिवाद्वैते जीवन्मुक्तो भविष्यसि॥७९॥

உனது ஆன்மாவைச் சிவமெனவே மதிப்பாயாக; சிவனைத் தவிர்த்து மற்றவற்றை நினையாதே; இவ்வாறு சிவாத்துவைத பாவனை உறுதியடைந்தால் ஜீவன்முக்தனாகின்றான்.

மைந்த நீயுனைச் சிவமய மென்னவே மதித்திங்
கிந்த வேறெனு முலகினை யெண்ணலை யிங்ஙன்
வந்து றுஞ்சிவாத் துவிதவின் பத்தினான் மருவிப்
பந்த மின்றிய வுயிர்முத்த னாயினை பகரின்.

உனது ஆன்மாவைச் சிவமெனவே மதிப்பாயாக; சிவனைத் தவிர்த்து மற்றவற்றை நினையாதே; இவ்வாறு சிவாத்துவைத பாவனை உறுதியடைந்தால் ஜீவன்முக்தனாகின்றான்.

एवं प्रचोदितः शिष्यो गुरुणा गुणशालिना।
शिवमेव जगत् पश्यन् जीवन्मुक्तोऽभिजायते॥८०॥

நற்குணங்கள் நிறைந்த குருவினுல் இவ்வாறு போதிக்கப்பட்ட சீடன் இவ்வுலகையும் சிவமாகவே கண்டு ஜீவன்முக்தனுக விளங்குகிறுன்.

## इति शुश्रूषुस्थलम्

மேவு நற்குணக் குன்றமாங் குரவனால் விளங்கப்
பாவ மற்றுயர் போதனை யருள்செயப் பட்டோ
னியாவு மிச்சகஞ் சிவமய மேயெனக் கண்டு
சீவன் முத்தனா குவனென வாகமந் தெருட்டும்.

நற்குணங்கள் நிறைந்த குருவினுல் இவ்வாறு போதிக்கப்பட்ட சீடன் இவ்வுலகையும் சிவமாகவே கண்டு ஜீவன்முக்தனுக விளங்குகிறுன்.

சிசுருடைத்தலம் முற்றும்.

## अथ सेव्यस्थलम्

गुरुवाक्यामृतस्वादात् प्राप्तबोधमहाफलः।
शुश्रूषुरेव सर्वेषां सेव्यत्वात् सेव्य उच्यते॥८१॥

குருவின் உபதேச மொழியமுதத்தைப் பருகுவதால் உண்மையை அறிதலான பெரும் பயனை அடைந்த சீடனே அனைவராலும் போற்றி வணங்கப்படுவதால் ஸேவியன் எனப்படுகிறுன்.

போத மாபலன் குருமொழி யமுதினாற் பொருந்து
மேதை யாமிவ னேயுல கடங்கவும் விரும்பித்
தீதி லாதுசே வித்திடப் படுவனாற் றெரியி
னாத லாலிவன் சேவிய னெனும்பெய ரடைவான்.

குருவின் உபதேச மொழியமுதத்தைப் பருகுவதால் உண்மையை அறிதலான பெரும் பயனை அடைந்த சீடனே அனைவராலும் போற்றி வணங்கப்படுவதால் ஸேவியன் எனப்படுகிறுன்.

गुरूपदिष्टे विज्ञाने चेतसि स्थिरतां गते।
साक्षात्कृतशिवः शिष्यो गुरुवत् पूज्यते सदा॥८२॥

குரு உபதேசித்த மெய்ஞ்ஞானம் மனத்தில் ஆழ்ந்து நிலைபெற்று அதனால் சிவபிரானை நேரிடையாக உணர்ந்த சீடன் குருவைப் போன்றே வணங்கப்படுகிறான்.

குரவ னல்குமெய்ஞ் ஞானநெஞ் சகத்தினிற் கூடி
விரவு றுஞ்சிவ வடிவமாஞ் சீடனும் விளம்பிற்
பரவு றுங்குரு பரனெனப் பூசிக்கப் படுவன்
வரமு றுஞ்சிவ ஞானவாழ் வினனென மதித்து.

குரு உபதேசித்த மெய்ஞ்ஞானம் மனத்தில் ஆழ்ந்து நிலைபெற்று அதனால் சிவபிரானை நேரிடையாக உணர்ந்த சீடன் குருவைப் போன்றே வணங்கப்படுகிறான்.

ज्ञानादाधिक्यसम्पत्तिर्गुरोर्यस्मादुपस्थिता।
तस्माज्ज्ञानागमाच्छिष्यो गुरुवत् पूज्यतां व्रजेत्॥८३॥
शिवोऽहमिति भावस्य नैरन्तर्याद् विशेषतः।
शिवभावे समुत्पन्ने शिववत् पूज्य एव सः॥८४॥

மெய்ஞ்ஞானச் செல்வம் குருவிற்கு நிறைந்துள்ளதாலும் அவரிடமிருந்து உயர்ந்த ஞானம் பெற்றதாலும் சீடனும் போற்றி வணங்கப்படுகிறான்; சிவோஹம் எனும் பாவனையை எப்போதும் உடையவனானதால் சிவனெனும் உணர்வு நிலைபெற்ற சீடன் சிவனைப் போன்றே வணங்கப்படுகின்றான்.

என்று மெய்ச்சிவ நானெனும் பாவனை யெய்தி
நின்ற வற்கிடை யீடிலா திறைநிலைத் திடலா
னன்று றச்சிவன் போலவே யிங்கவ னாளுங்
குன்ற லற்றுயர் பூசனை கொள்வனென் றறிவாய்.

சிவோஹம் எனும் பாவனையை எப்போதும் உடையவனானதால் சிவனெனும் உணர்வு நிலைபெற்ற சீடன் சிவனைப் போன்றே வணங்கப்படுகின்றான்.

विषयासक्तचित्तोऽपि विषयासङ्गवर्जितः।
शिवभावयुतो योगी सेव्यः शिव इवापरः॥८५॥

உலக விஷயங்களில் மனம் கொண்டிருந்தாலும் அவற்றில் பற்றற்றவனுயின் சிவபாவனையொன்றே உடைய யோகி சிவபிரானெனவே வணங்கத் தக்கவன்.

ஒழிவ றுஞ்சிவ பாவனை யுடையநல் யோகி
யிழிவு றுஞ்செயல் விடயநெஞ் சுடையவ னெனினு
மொழியு மவ்விட யங்களின் முத்தனாய் மருவும்
வழிப டுஞ்செயல் பரவுமா சிவனென மன்னோ.

உலக விஷயங்களில் மனம் கொண்டிருந்தாலும் அவற்றில் பற்றற்றவனுயின் சிவபாவனையொன்றே உடைய யோகி சிவபிரானெனவே வணங்கத் தக்கவன்.

मुक्तः संशयपाशतः स्थिरमना बोधे च मुक्तिप्रदे
मोहं देहभृतां दृशा विघटयन् मूलं महासंसृतेः।
सत्तानन्दचिदात्मके निरुपमे शिवे परस्मिन् पदे
लीनात्मा क्षयितप्रपञ्चविभवो योगी जनैः सेव्यते॥८६॥

इति श्रीमत्षट्स्थलब्रह्मिणा शिवयोगिनाम्ना रेणुकाचार्येण विरचिते
वीरशिवधर्मनिर्णये सिद्धान्तशिखामणौ
प्रसादिस्थलाश्रितनवलिङ्गप्रसङ्गो नाम
सप्तदशः परिच्छेदः॥१७॥

எல்லா மனக்குழப்பங்களிலிருந்தும் விடுபட்டவனுய், முக்திக்கு அடிகோலும் உயர்ஞானமொன்றிலேயே உறுதியான நாட்டமுடையோனுய், மக்களின் சம்சாரப்பிணிக்கு மூலமான மாயக்குழப்பங்களைத் தனது பார்வையாலேயே அழித்து, ஸச்சிதானந்த பரப்பிரம்மமான சிவபிரானிடத்திலேயே லயித்தவனுய் உலகப்பற்று சிறிதுமற்றவனுய் விளங்கும் யோகி அனைவராலும் வணங்கப்படுகின்றுன்.

பந்த நாசநஞ் செயுஞ்சிவ ஞானமே பற்றுஞ்
சிந்தை யாலுல கோர்பவந் தொலைத்திடல் செயுமா
நந்த ஞானமெய்ச் சிவபத மடைந்தநல் யோகி
யிந்த மாநிலத் தனைவரும் போற்றிட விருப்பன்.

எல்லா மனக்குழப்பங்களிலிருந்தும் விடுபட்டவனுய், முக்திக்கு அடிகோலும் உயர்ஞானமொன்றிலேயே உறுதியான நாட்டமுடையோனுய், மக்களின் சம்சாரப்பிணிக்கு மூலமான மாயக்குழப்பங்களைத் தனது பார்வையாலேயே அழித்து, ஸச்சிதானந்த பரப்பிரம்மமான சிவபிரானிடத்திலேயே லயித்தவனுய் விளங்கும் யோகி அனைவராலும் வணங்கப்படுகின்றுன்.

சேவியத்தலம் முற்றும்.

சிவலிங்கத்தலம் முற்றிற்று.

## अष्टादशः परिच्छेदः

प्रसादिस्थलसम्बद्धाः स्थलभेदाः प्रकीर्तिताः।
प्राणलिङ्गिस्थलारूढान् स्थलभेदान् वदस्व मे॥१॥

பிரஸாதிஸ்தலத்திலடங்கிய தலங்களை விளக்கினுய்;
பிராணலிங்கிஸ்தலத்தின் பிரிவுகளைப் பற்றிக் கூறுவாயாக.

நற்பிர சாதி யெய்துந் தலத்திற நயந்து ரைத்தாய்
பிற்பெறு பிராண லிங்கி தலத்தினிற் பேதந் தானுஞ்
சொற்பொருள் விளங்குமாறு சொல்லுக வடிய னேற்குப்
பொற்புறு கயிலை காக்கும் புகழ்மலி கணங்கள் வேந்தே.

பிரஸாதிஸ்தலத்திலடங்கிய தலங்களை விளக்கினுய்;
பிராணலிங்கிஸ்தலத்தின் பிரிவுகளைப் பற்றிக் கூறுவாயாக.

स्थलानां नवकं प्रोक्तं प्राणलिङ्गिस्थलाश्रितम्।
आदावात्मस्थलं प्रोक्तमन्तरात्मस्थलं ततः॥२॥
परमात्मस्थलं पश्चान्निर्देहागमसंज्ञकम्।
निर्भावागमसंज्ञं च ततो नष्टागमस्थलम्॥३॥
आदिप्रसादनामाथ ततोऽप्यन्त्यप्रसादकम्।
सेव्यप्रसादकं चाथ शृणु तेषां च लक्षणम्॥४॥

ஆத்மஸ்தலம், அந்தராத்மஸ்தலம், பரமாத்மஸ்தலம்,
நிர்தேஹாகமம், நிர்பாவாகமம், நஷ்டாகமம், ஆதிபிரஸாதம்,
அந்தியபிரஸாதகம், ஸேவியபிரஸாதகம் என அது ஒன்பது
பிரிவுகளடங்கியது.

பொற்புறு மான்மா மூன்றும் புகழுமா கமங்கண் மூன்றுந்
தற்பிரசாத மூன்று மாகவே தலங்க ளொன்பான்
சொற்பெறு பிராண லிங்கி தொடர்ந்துள தலமி வற்றை
வெற்பமர் முனிவர் வேந்தே விளம்புது முறையிற் கேண்மோ.

ஆத்மஸ்தலம், அந்தராத்மஸ்தலம், பரமாத்மஸ்தலம்,
நிர்தேஹாகமம், நிர்பாவாகமம், நஷ்டாகமம், ஆதிபிரஸாதம்,

அந்தியபிரஸாதகம், ஸேவியபிரஸாதகம் என அது ஒன்பது பிரிவுகளடங்கியது.

जीवभावं परित्यज्य यदा तत्त्वं विभाव्यते।
गुरोश्च बोधयोगेन तदात्मायं प्रकीर्तितः॥५॥

குருவின் போதனையால் தான் ஜீவன் எனும் பாவம் நீங்கி உண்மைத் தத்துவத்தைச் சிந்திக்கின்ற போது ஆத்மா எனப்படுகிறது.

ஆரிய னருளு ஞான போதனை யடைந்த விந்தச்
சீரியன் சீவ பாவந் தீர்ந்துநற் றத்து வத்தை
யோரியல் பொடுபா விக்குங் காலையி லுணர்ந்து ளோர்நற்
பேரிய லான்மா வென்னப் பெற்றிடு முலகி லன்றே

குருவின் போதனையால் தான் ஜீவன் எனும் பாவம் நீங்கி உண்மைத் தத்துவத்தைச் சிந்திக்கின்றபோது ஆத்மா எனப்படுகிறது.

वालाग्रशतभागेन सदृशो हृदयस्थितः।
अनश्नन् कर्मफलं सर्वमात्मा स्फुरति दीपवत्॥६॥

மயிரின் நுனியின் நூற்றிலொரு பாகத்தையொத்த ஆத்மா தீபச் சுடர்போல் கருமபலத்தை நுகராமல் இதயத்தில் பிரகாசிக்கின்றது.

பகர்ந்திடி னுண்மை வாலாக் கிரசத பாக மொத்து
நுகர்ந்துறு வினையின் பேறு நுண்ணிய னாகு மான்மா
வகந்தனி லிருளி ரிக்கு மருஞ்சுடர் போலிருந்து
திகழ்ந்திடு மென்று சொல்வர் சிவாகம நெறியு ணர்ந்தோர்.

மயிரின் நுனியின் நூற்றிலொரு பாகத்தையொத்த ஆத்மா தீபச் சுடர்போல் கருமபலத்தை நுகராமல் இதயத்தில் பிரகாசிக்கின்றது.

आत्मापि सर्वभूतानामन्तः करणमाश्रितः।
अणुभूतो मलासङ्गादादिकर्मनियन्त्रितः॥७॥

எல்லா உயிர்களிடத்தும் ஆத்மா அந்தக்கரணத்துடன் சேர்ந்து அணுவுருவாய் ஆணவமலத்தொடர்பினுல் பூருவகருமங்களின் பயனுல் கட்டுண்டு கிடக்கிறது.

ஆணவத் தடையி னாலோ ரணுவென வாதி கன்ம
நாணுற வசைக்கப் பட்டு நவிலினுண் ணியனா மான்மா
வேணுறுங் கரணந் தன்னை யிசைந்துளா னென்றி சைப்பர்
தாணுவி னமல நூலாற் றமையுணர்ந் தமைந்த மேலோர்.

எல்லா உயிர்களிடத்தும் ஆத்மா அந்தக்கரணத்துடன் சேர்ந்து அணுவுருவாய் ஆணவமலத்தொடர்பினுல் பூருவகருமங்களின் பயனுல் கட்டுண்டு கிடக்கிறது.

जपायोगाद्यथा रागः स्फटिकस्य मणेर्भवेत्।
तथाऽहङ्कारसम्बन्धादात्मनो देहमानिता॥८॥

செம்பருத்திப் பூவின் சிவப்பு நிறம் அதனருகிலுள்ள பளிங்கில் ஏற்றப்படுவது போல் அஹங்காரத் தொடர்பினுல்
ஆத்மாவிற்குத் தனது உடலின் மேல் பற்று உண்டாகிறது.

தெள்ளுறு பளிங்கு தானோர் சேயொளி யரத்தச் சார்வாற்
கொள்ளுறு மிலங்கு செம்மை குறித்திடி னவ்வா றேபோல்
விள்ளரு மாங்கா ரத்தின் சார்வினால் விளங்கு மான்மாத்
தள்ளரு முடலின் மானந் தரிக்குமென் றறிந்து கொள்ளே.

செப்பருத்திப் பூவின் சிவப்பு நிறம் அதனருகிலுள்ள பளிங்கில் ஏற்றப்படுவது போல் அஹங்காரத் தொடர்பினுல்
ஆத்மாவிற்குத் தனது உடலின் மேல் பற்று உண்டாகிறது.

अशरीरोऽपि सर्वत्र व्यापकोऽपि निरञ्जनः।
आत्मा मायाशरीरस्थः परिभ्रमति संसृतौ॥९॥

உடல்களற்று சுத்தமாய் எங்கும் வியாபித்திருக்கும் ஆத்மா மாயையினுல் ஏற்பட்ட உடலை ஏற்றுக்கொண்டு சம்சாரத்தில் உழல்கிறது.

நிரஞ்சந மாய வான்மா நிறைந்தவ னெங்கு மேனும்
வருஞ்செய லுடலி லாதா னாயினு மாயை தந்த

புரஞ்செறி பவனாய் நின்று புகலரும் பவங்க டோறுந்
திரிந்திடு மென்று கூறுஞ் சிவனருளாக மங்கள்.

உடல்களற்று சுத்தமாய் எங்கும் வியாபித்திருக்கும் ஆத்மா மாயையினால் ஏற்பட்ட உடலை ஏற்றுக்கொண்டு சம்சாரத்தில் உழல்கிறது.

आत्मस्वरूपविज्ञानं देहेन्द्रियविभागतः।
अखण्डब्रह्मरूपेण तदात्मप्राप्तिरुच्यते॥ १०॥

உடல்கள் மற்றும் பொறி புலன்களினின்றும் வேறாய் எல்லையற்றுப் பரந்து விரிந்த பிரம்ம வடிவாய் விளங்குவதே ஆத்மா என அறிவதே ஆத்மபிராப்தி எனப்படுகின்றது.

மெய்யுட னிந்தி யங்கள் வேறுசெய் வழியி னாலே
பொய்யறு மகண்டா நந்த பூரண பிரம ரூபா
லையம தறவே யான்ம சொரூபநன் கறிதல் செய்யச்
செய்யுமெந் நாளந் நாளான் மாவினைச் சேர்த லென்பார்.

உடல்கள் மற்றும் பொறி புலன்களினின்றும் வேறாய் எல்லையற்றுப் பரந்து விரிந்த பிரம்ம வடிவாய் விளங்குவதே ஆத்மா என அறிவதே ஆத்மபிராப்தி எனப்படுகின்றது.

न चास्ति देहसम्बन्धो निर्देहस्य स्वभावतः।
अज्ञानकर्मयोगेन देही भवति भुक्तये॥ ११॥

எவ்வித உடலுமின்றி பிரகாசிக்கும் ஆத்மா அஞ்ஞானம் மற்றும் கருமபயன் ஆகியவற்றின் தொடர்பினால் உலக இன்பதுன்பங்களை நுகரும் பொருட்டு உடலை ஏற்றுக் கொள்கிறது.

உடம்பறு மான்மா விற்கோ ருடலிலை யியல்பா லேனு
மடந்தரு மவித்தை கன்ம மருவலா லவன்றா னிங்குத்
தொடர்ந்துள நுகர்விற் காகத் தோன்றுவன் றேகி யாயென்
றோடுங்கிய புலவ ழக்க முடையவ ருரைப்ப ரன்றே.

எவ்வித உடலுமின்றி பிரகாசிக்கும் ஆத்மா அஞ்ஞானம் மற்றும் கருமபயன் ஆகியவற்றின் தொடர்பினால் உலக

இன்பதுன்பங்களை நுகரும் பொருட்டு உடலை ஏற்றுக் கொள்கிறது.

नासौ देवो न गन्धर्वो न यक्षो नैव राक्षसः।
न मनुष्यो न तिर्यक्च न च स्थावरविग्रहः॥१२॥

இவன் தேவனோ கந்தருவனோ யட்சனோ அரக்கனோ மனிதனோ பிராணி வருக்கமோ தாவரமோ அல்லன்.

தேவல னியக்கர் நற்கந் திருவரோ டரக்கர் மக்கண்
மாவல னிற்ப வற்றின் வடிவலன் வயங்கு மான்மா
யாவன்மற் றென்னி னவ்வவ் வுடம்புறு மிசைவி னாலே
மேவுவ னவற்றா னாம மென்றறி விளக்க மிக்கோய்.

இவன் தேவனோ கந்தருவனோ யட்சனோ அரக்கனோ மனிதனோ பிராணி வருக்கமோ தாவரமோ அல்லன்.

नानाकर्मविपाकाश्च नानायोनिसमाश्रिताः।
नानायोगसमापन्ना नानाबुद्धिविचेष्टिताः॥१३॥
नानामार्गसमारूढा नानासङ्कल्पकारिणः।
अस्वतन्त्राश्च किञ्चिज्ज्ञाः किञ्चित्कर्तृत्वहेतवः।
लीलाभाजनतां प्राप्ताः शिवस्य परमात्मनः॥१४॥

பற்பல கருமவினைகளால் பற்பல பிறப்புக்களில் பிறந்து பலவாறு உழன்று எவ்விதச் சுதந்திரமுமின்றி சிற்றறிவுடன் சிறிய செயல்களையே செய்பவர்களாய் சிவபெருமானது விளையாட்டுக்கு ஓரிடமாய்த் திகழ்கின்றனர்.

பற்பல கருமந் தன்னாற் பற்பல யோனி யெய்திப்
பற்பல மதிபொ ருந்திப் பற்பல நெறியி னெய்தி
யற்பமென் றறிவு டன்சிற் றிறைமையு மடைந்த சீவன்
சிற்பர னாட லுக்கோ ரிடமெனச் செறியு மன்றே.

பற்பல கருமவினைகளால் பற்பல பிறப்புக்களில் பிறந்து பலவாறு உழன்று எவ்விதச் சுதந்திரமுமின்றி சிற்றறிவுடன் சிறிய

செயல்களையே செய்பவர்களாய் சிவபெருமானது விளையாட்டுக்கு ஓரிடமாய்த் திகழ்கின்றனர்.

चोदिताः परमेशेन स्वस्वकर्मानुरूपतः।
स्वर्गं वा नरकं वापि प्राणिनो यान्ति कर्मिणः॥ १५॥
पुनः कर्मावशेषेण जायन्ते गर्भकोटरात्।
जाता मृताः पुनर्जाताः पुनर्मरणभाजिनः।
भ्रमन्ति घोरसंसारे विश्रान्तिकथया विना॥ १६॥

தங்களது வினைப்பயன்களுக்கேற்ற உடல்களைப் பரமேசுவரனால் பெற்று சுவர்க்கத்தையோ நரகத்தையோ அடைகின்றனர்; மீண்டும் வினைப்பயன்களுக்கேற்றவாறு கருப்பவாசம் செய்து பிறக்கின்றனர், மீண்டும் இறக்கின்றனர். இவ்வாறே இக்கொடிய சம்சாரத்திலிருந்து அமைதி பெறுவதைப்பற்றிய சிந்தனையின்றி உழல்கின்றனர்.

தன்னுறு வினையி னாலச் சம்புவா லியக்கப் பட்டு
வெந்நர கொடுதுறக்க மேவிய கரும சேட
மன்னுற வனைவ யிற்றில் வந்துதித் திறந்து தோன்றி
யின்னண முழலுஞ் சீவ நிரும்பவத் தமைதி யின்றி.

தங்களது வினைப்பயன்களுக்கேற்ற உடல்களைப் பரமேசுவரனால் பெற்று சுவர்க்கத்தையோ நரகத்தையோ அடைகின்றனர்; மீண்டும் வினைப்பயன்களுக்கேற்றவாறு கருப்பவாசம் செய்து பிறக்கின்றனர், மீண்டும் இறக்கின்றனர். இவ்வாறே இக்கொடிய சம்சாரத்திலிருந்து அமைதி பெறுவதைப்பற்றிய சிந்தனையின்றி உழல்கின்றனர்.

जीवत्वं दुःखसर्वस्वं तदिदं मलकल्पितम्।
निरस्यते गुरोर्बोधाज्ज्ञानशक्तिः प्रकाशते॥ १७॥

## इत्यात्मस्थलम्

இவ்வுலகில் பிறப்பது மலத்தினால் உண்டாக்கப்பட்டது, துன்பங்களே நிறைந்தது. அது குருவின் நற்போதனையினால் நீக்கமுற்று ஞானம் பிரகாசிக்கின்றது.

அருந்துயர்க் கிடம தாயஞ் ஞானகற் பிதமே யாகிப்
பொருந்திநின் றுள்ள சீவத் துவமுடன் போகு மாசான்
றிருந்தருண் மொழியான் ஞான சத்தியுந் திகழு மென்பர்
பரந்துள கலைகண் முற்றும் பழுதறக் கற்ற மேலோர்.

இவ்வுலகில் பிறப்பது மலத்திஞல் உண்டாக்கப்பட்டது, துன்பங்களே நிறைந்தது. அது குருவின் நற்போதனையிஞல் நீக்கமுற்று ஞானம் பிரகாசிக்கின்றது.

சீவான்மத்தலம் முற்றும்.

## அथान्तरात्मस्थलम्

यदा निरस्तं जीवत्वं भवेद् गुर्वनुबोधतः।
तदान्तरात्मभावोऽपि निरस्तस्य भवेद् ध्रुवम्॥१८॥

குருவின் போதனைகளால் ஜீவனெனும் பாவம் நீங்கியவுடனேயே உறுதியான அந்தராத்மபாவம் வந்து சேரும்.

தேசிக னருளி னாலே சீவபா வந்தா னென்று
நாசம தடையு மன்று நசித்திடப் பட்டவற்குப்
பாசமி லந்த ரான்ம பாவம்வந் துறுமென் றோர்வாய்
மாசறு தவத்தின் மிக்க மலயவெற் பமர்ந்த மேலோய்.

குருவின் போதனைகளால் ஜீவனெனும் பாவம் நீங்கியவுடனேயே உறுதியான அந்தராத்மபாவம் வந்து சேரும்.

देहस्थितोऽप्ययं जीवो देहसङ्गविवर्जितः।
बोधात् परात्मभावित्वादन्तरात्मेति कीर्तितः॥१९॥
आत्मान्तरालवर्तित्वाज्जीवात्मपरमात्मनोः।
योगादुभयधर्माणामन्तरात्मेति कीर्तितः॥२०॥

இவ்வுடலில் இருந்துகொண்டிருந்தாலும் ஜீவன் உடலின்பால் பற்றற்று விளங்குகிருன்; ஞானம் வந்தெய்தியதாலும் பரமாத்ம பாவனை மிகுந்ததாலும் அந்தராத்மாவென அழைக்கப்படுகின்ருன். ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும்

இடையில் விளங்குவதால் அவன் இருவருடைய குணங்களையும் பெறுகிறான்.

அறைந்தவச் சீவன் மெய்யோ டடுக்கினு முடல பந்தந்
துறந்தொரு பரமான் மாவை யுள்கலாற் றுளங்கு சீவ
னிறைந்துள பரம னாப்ப ணிற்றலா லுபயத் தன்மை
பெறுந்திற மதனா லெய்தும் பிறங்குமந் தரான்ம நாமம்.

இவ்வுடலில் இருந்துகொண்டிருந்தாலும் ஜீவன் உடலின்பால் பற்றற்று விளங்குகிறான்; ஞானம் வந்தெய்தியதாலும் பரமாத்ம பாவனை மிகுந்ததாலும் அந்தராத்மாவென அழைக்கப்படுகின்றான். ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் இடையில் விளங்குவதால் அவன் இருவருடைய குணங்களையும் பெறுகிறான்.

अहङ्कारस्य सम्बन्धान्मनुष्यत्वादिविभ्रमः।
न स्वभाव इति ज्ञानादन्तरात्मेति कथ्यते॥ २१॥
यथा पद्मपलाशस्य न सङ्गो वारिणा भवेत्।
तथा देहजुषोऽप्यस्य न शरीरेण सङ्गतिः॥ २२॥
नीडस्थितो यथा पक्षी नीडाद्भिन्नः प्रदृश्यते।
देहस्थितस्तथात्मायं देहादन्यः प्रकाशते॥ २३॥

அஹங்காரத்தின் தொடர்பினால் மனிதன் முதலான உடல்களை அடைகிறான்; அது அதன் இயற்கையன்று என்னும் ஞானம் தோன்றியவுடன் அந்தராத்மாவெனப்படுகிறான். தாமரையிலை நீருடன் தொடர்பு அற்று இருப்பதுபோல் உடலில் இருந்தாலும் அதனுடன் எவ்விதத் தொடர்புமற்று விளங்குகிறான். கூட்டில் வாழும் பறவை அதனின் வேறாக இருப்பது போல் உடலில் இருந்தாலும் ஆத்மா அதிலிருந்து வேறாகவே காண்கிறான்.

முற்றுறு மனிதத் தன்மை முதலவாங் காரச் சார்வான்
மற்றவை யியல்பன் றென்று மதிப்பவ னந்தரான்மாச்
சொற்றிடு மவன்பு னற்கட் டோன்றுபா சிலையுந் துன்னத்
தெற்றுறு குடம்பைப் புள்ளும் போலவே மெய்யிற் றீர்ந்தான்.

அஹங்காரத்தின் தொடர்பினுல் மனிதன் முதலான உடல்களை அடைகிருன்; அது அதன் இயற்கையன்று என்னும் ஞானம் தோன்றியவுடன் அந்தராத்மாவெனப்படுகிருன். தாமரையிலை நீருடன் தொடர்பு அற்று இருப்பதுபோல் உடலில் இருந்தாலும் அதனுடன் எவ்விதத் தொடர்புமற்று விளங்குகிருன். கூட்டில் வாழும் பறவை அதனின் வேருக இருப்பது போல் உடலில் இருந்தாலும் ஆத்மா அதிலிருந்து வேருகவே காண்கிருன்.

आच्छाद्यते यथा चन्द्रो मेघैरासङ्गवर्जितैः।
तथात्मा देहसङ्घातैरसङ्गपरिवेष्टितः॥२४॥
निर्ममो निरहङ्कारो निरस्तोपाधिविक्लबः।
देहस्थोऽपि सदा ह्यात्मा शिवं पश्यति योगतः॥२५॥

மேகங்கள் சந்திரனை மறைத்தாலும் அவற்றுடன் தொடர்பு அற்று இருப்பது போல் ஆத்மாவும் உடல் மனம் போன்றவற்ருல் மறைப்புண்டாலும் அவற்றுடன் பற்றற்றே இருக்கிறது; நான், எனது முதலிய எண்ணங்களற்று இருக்கும் ஆத்மா உடலில் வாழ்ந்திருந்தாலும் யோகத்தினுல் சிவபிரானைக் காண்கிருன்.

மதிதனை யடையா மேக மறைத்திடப் படல்போ லான்மாப்
பொதியுட லகல நின்று புணர்த்திடப் படுவன் மெய்யா
மிதனிடை யுறினு மாழ்கி யானென தென்பதில்லோன்
பதியெனுஞ் சிவனை யோகப் பயிற்சியாற் காண்ப னென்றும்.

மேகங்கள் சந்திரனை மறைத்தாலும் அவற்றுடன் தொடர்பு அற்று இருப்பது போல் ஆத்மாவும் உடல் மனம் போன்றவற்ருல் மறைப்புண்டாலும் அவற்றுடன் பற்றற்றே இருக்கிறது; நான், எனது முதலிய எண்ணங்களற்று இருக்கும் ஆத்மா உடலில் வாழ்ந்திருந்தாலும் யோகத்தினுல் சிவபிரானைக் காண்கிருன்.

भोक्तृभोज्यपरित्यागात् प्रेरकस्य प्रसादतः।
भोक्तृताभावगलितः स्फुरत्यात्मा स्वभावतः॥२६॥

सर्वेषां प्रेरकत्वेन शम्भुरन्तःस्थितः सदा।
तत्परिज्ञानयोगेन योगी नन्दति मुक्तवत्॥ २७॥

इत्यन्तरात्मस्थलम्

நான் உலகை நுகர்வோன், இது நுகரப்படும் உலகம் முதலிய பாவம் சிவபிரானருளால் அறவே நீங்கியவுடன் உள்ளே விளங்கும் உண்மையான ஆத்மா பிரகாசிக்கின்றது; எல்லாவற்றையும் இயக்கும் சிவபெருமான் எல்லாவற்றிற்கும் உள்ளே ஒளிவிட்டுப் பிரகாசிப்பதை உணர்ந்த யோகி முக்தியடைந்தவனைப் போல் ஆனந்தமடைகிறான்.

போத்துரு வாம வற்கும் போக்கிய மாமவற்றைப்
போர்த்திடு தலினான் மிக்க பிரேரகனருளினாலே
போத்துருப் பாவ நீங்கிப் பொலிகுவ னெங்கு நின்று
காத்தருள் பரமற் கண்டு களிக்குவ னந்த ரான்மா.

நான் உலகை நுகர்வோன், இது நுகரப்படும் உலகம் முதலிய பாவம் சிவபிரானருளால் அறவே நீங்கியவுடன் உள்ளே விளங்கும் உண்மையான ஆத்மா பிரகாசிக்கின்றது; எல்லாவற்றையும் இயக்கும் சிவபெருமான் எல்லாவற்றிற்கும் உள்ளே ஒளிவிட்டுப் பிரகாசிப்பதை உணர்ந்த யோகி முக்தியடைந்தவனைப் போல் ஆனந்தமடைகிறான்.

அந்தரான்மத்தலம் முற்றும்.

## अथ परमात्मस्थलम्

निर्धूते तत्प्रबोधेन मले संसारकारणे।
सामरस्यात्परात्मस्थात् परमात्मायमुच्यते॥ २८॥

சிவபிரானருளால் சம்சாரநோய்க்குக் காரணமான மலம் நீங்கிய பின்னர் சிவபெருமானுடன் பற்றுக் கொண்டதால் பரமாத்மா எனப்படுகிறான்.

பரமமெய்ஞ் ஞானந் தன்னாற் பவநெறிக் கேது வாகு
மிருண்மல மகலு மாற்றாற் பரமனோ டிருக்கும் பற்றா
லுரமுறு பரமான் மாவென் றுரைத்திடப் படுவ னன்னோன்
றிரைமலி கடல்கு டித்துத் தேக்கெறி முனிவ ரேறே.

சிவபிரானருளால் சம்சாரநோய்க்குக் காரணமான மலம் நீங்கிய பின்னர் சிவபெருமானுடன் பற்றுக் கொண்டதால் பரமாத்மா எனப்படுகிறான்.

सर्वेषामात्मभेदानामुत्कृष्टत्वात् स्वतेजसा।
परमात्मा शिवः प्रोक्तः सर्वगोऽपि प्रकाशवान्॥२९॥

எல்லா ஆன்மாக்களுள்ளும் தனது பேரொளியால் தலைசிறந்து விளங்குவதால் சிவபிரான் பரமாத்மாவென வழங்கப்படுகிறான்.

தன்னொளி யானிறைந்து தான்மிளிர் சிவனே யிங்ங
னுன்னுமான் மாக்கட் கெல்லா முயர்தலாற் பரமான் மாவா
மன்னுமா மாயை யென்னும் வாரியுளண்ட மொக்குள்
சின்னமா யெழுந்த டங்கச் செய்பவன் பரமான் மாவாம்.

எல்லா ஆன்மாக்களுள்ளும் தனது பேரொளியால் தலைசிறந்து விளங்குவதால் சிவபிரான் பரமாத்மாவென வழங்கப்படுகிறான்.

ब्रह्माण्डबुद्बुदस्तोमा यस्य मायामहोदधौ।
उन्मज्जन्ति निमज्जन्ति परमात्मा स उच्यते॥३०॥
यस्मिन् ज्योतिर्गणाः सर्वे स्फुलिङ्गा इव पावकात्।
उत्पत्य विलयं यान्ति तद्रूपं परमात्मनः॥३१॥
यस्मिन् समस्तवस्तूनि कल्लोला इव वारिधौ।
सम्भूय लयमायान्ति तद्रूपं परमात्मनः॥३२॥

எவருடைய மாயைக் கடலில் கணக்கற்ற பிரம்மாண்டங்களெனும் நீர்க்குமிழிகள் தோன்றி மறைகின்றனவோ அவரே பரமாத்மா; எவரிடத்திலிருந்து நெருப்புப் பொறிகள் போல பற்பல நட்சத்திரங்களும் கிரகங்களும் உண்டாகி மீண்டும் லயமடைகின்றனவோ அவரே பரமாத்மா; கடலில் அலைகள் தோன்றி லயமடைவது

போல் அந்த பரமாத்மாவினிடத்திலேயே அனைத்தும் தோன்றி மறைகின்றன.

> யாதினி லொளிக ளெல்லா மெரியினிற் பொறிபோற் றோன்றி
> மாய்தரும் பரம னுக்கவ் வடிவமாந் தத்து வங்கள்
> யாதினிற் கடற்ற ரங்க மென்னவந் தெழுந்தொ டுங்கு
> மோதுமவ் வடிவ மாகு மொருபர மான்மா விற்கே.

எவரிடத்திலிருந்து நெருப்புப் பொறிகள் போல பற்பல நட்சத்திரங்களும் கிரகங்களும் உண்டாகி மீண்டும் லயமடைகின்றனவோ அவரே பரமாத்மா; கடலில் அலைகள் தோன்றி லயமடைவது போல் அந்த பரமாத்மாவினிடத்திலேயே அனைத்தும் தோன்றி மறைகின்றன.

> निरस्तमलसम्बन्धं निःशेषजगदात्मकम्।
> सर्वतत्त्वोपरि प्रोक्तं स्वरूपं परमात्मनः॥ ३३॥
> यथा व्याप्य जगत्सर्वं स्वभासा भाति भास्करः।
> तथा स्वशक्तिभिर्व्याप्य परमात्मा प्रकाशते॥ ३४॥

எவ்வித மலங்களுமின்றி தத்துவங்களையெல்லாம் கடந்து எல்லா உலகிலும் அந்தர்யாமியாயிருந்து இயக்குபவரே பரமாத்மா; அனைத்துலகங்களையும் சூரியன் தனது ஒளியால் வியாபித்துப் பிரகாசிப்பது போள் பரமாத்மா தனது சக்திக் கிரணங்களால் வியாபித்திருக்கிறார்.

> உலகினுக் குயிரு மாகி யொழிந்திடு மலத்த னாகி
> யிலகுமப் பரமன் றன்னை யிசைப்பர்தத் துவத்தின் மேலா
> யலரிதன் கதிரா லெங்கு மவிர்தல்போற் பரமன் றானும்
> விலகிலச் சத்தி தன்னால் வியாபித்து விளங்கு மன்றே.

எவ்வித மலங்களுமின்றி தத்துவங்களையெல்லாம் கடந்து எல்லா உலகிலும் அந்தர்யாமியாயிருந்து இயக்குபவரே பரமாத்மா; அனைத்துலகங்களையும் சூரியன் தனது ஒளியால் வியாபித்துப் பிரகாசிப்பது போல் பரமாத்மா தனது சக்திக் கிரணங்களால் வியாபித்திருக்கிறார்.

विश्वतो भासमानोऽपि विश्वमायाविलक्षणः।
परमात्मा स्वयंज्योतीरूपो जीवात्मनां भवेत्॥ ३५॥

इति परमात्मस्थलम्

எங்கும் பிரகாசித்து விளங்கினுலும் சுயம்ஜோதியான பரமாத்மா மாயைக்கு அப்பாற்பட்டு விளங்குகிருன்.

எங்கணு மொளிர்வோ னேனு மகிலமு மிறந்து நின்ற
பொங்கறி வுருவ மாகப் புகன்றிடு பரமன் சீவர்
தங்களுக் கொருதன் சோதி வடிவமாய்ச் சாரு மென்பர்
மங்கலப் பொருனை யீன்ற மலயவெற் பமர்ந்த மேலோய்.

எங்கும் பிரகாசித்து விளங்கினுலும் சுயம்ஜோதியான பரமாத்மா மாயைக்கு அப்பாற்பட்டு விளங்குகிருன்.

பரமான்மத்தலம் முற்றும்.

## अथ निर्देहागमस्थलम्

देहिनोऽपि परात्मत्वभाविनो निरहङ्कृतेः।
निरस्तदेहधर्मस्य निर्देहागम उच्यते॥३६॥

உடலுடன் இருந்தாலும் அஹங்காரமின்றி உடலின் மேல் பற்றற்று பரமாத்மா ஒன்றையே சிந்தித்திருப்பவன் நிர்தேஹாகமன் எனப்படுகிருன்.

ஓவுறு மகந்தை யோனா யுயர்தரு பரமான் மாவைப்
பாவனை புரிவோ னாகிப் பழுதுடற் றரும நீங்கி
மேவுறு தேகிக் கிங்கு விளம்புவ ரறிவ றிந்த
நாவலர் விளங்கு நிர்த்தே காகம நயந்து மாதோ.

உடலுடன் இருந்தாலும் அஹங்காரமின்றி உடலின் மேல் பற்றற்று பரமாத்மா ஒன்றையே சிந்தித்திருப்பவன் நிர்தேஹாகமன் எனப்படுகிருன்.

गलिते ममताहन्ते संसारभ्रमकारणे।
पराहन्तां प्रविष्टस्य कुतो देहः कुतो रतिः॥३७॥
केवले निष्प्रपञ्चौघे गम्भीरे चिन्महोदधौ।
निमग्नमनसो योगी कथं देहं विचिन्तयेत्॥३८॥

ஸம்ஸாரத் துன்பத்திற்குக் காரணமான யான் எனது எனும் சிந்தையின்றி பராஹந்தை எனும் எல்லையற்ற அஹம் அனுபவத்தில் நுழைந்தவனுக்கு உடலோ அதன் மேல் பற்ருே ஏது? வேறுபாடுகளைக் கொண்ட இப்பிரபஞ்சத்தைக் கடந்து நிற்கும் சின்மயக்கடலில் மூழ்கிய யோகி இந்த உடலைப்பற்றி எவ்வாறு சிந்திப்பான்?

இரும்பவ மூல மாகு மியானென தென்ப தின்றி
யரும்பர நானென் றன்மை யடைந்தவற் குடல முண்டோ
வருஞ்சகங் கடந்து ஞான வாரிதி தன்னின் மூழ்கு
முரம்பெறு யோகி யெவ்வா றுடம்பினைச் சிந்தை செய்வான்.

ஸம்ஸாரத் துன்பத்திற்குக் காரணமான யான் எனது எனும் சிந்தையின்றி பராஹந்தை எனும் எல்லேயற்ற அஹம் அனுபவத்தில் நுழைந்தவனுக்கு உடலோ அதன் மேல் பற்ருே ஏது? வேறுபாடுகளேக் கொண்ட இப்பிரபஞ்சத்தைக் கடந்து நிற்கும் சின்மயக்கடலில் மூழ்கிய யோகி இந்த உடலேப்பற்றி எவ்வாறு சிந்திப்பான்?

अपरिच्छेद्यमात्मानं चिदम्बरमिति स्मरन्।
देहयोगेऽपि देहस्थैर्विकारैर्न विलिप्यते॥३९॥
अखण्डसंविदाकारमद्वितीयं सुखात्मकम्।
परमाकाशमात्मानं मन्वानः कुत्र मुह्यति॥४०॥

ஆன்மா எல்லேயற்ற சின்மயமான வெட்டவெளி என்று உறுதியாக எண்ணுபவன் இவ்வுடலுடன் இருந்தாலும் அதனுல் எவ்வித மாற்றமும் அடையான்; எல்லேயற்றதும் ஒப்பற்றதுமான ஸச்சிதானந்தமயமான வெட்டவெளியே ஆன்மா என எண்ணுபவன் ஒருபோதும் மனத்தில் மயக்கமடையமாட்டான்.

தன்னையோ ரெல்லை யில்லாத் தனிச்சிதம் பரமாய்க்
கொள்வோன்
மன்னுமா யினுமு டம்பில் வடிவுறு விகார மொன்றான்
றன்னைவே றிலாமற் சச்சிதா நந்த பரமா காச
மென்னவே யுணர்ந்த யோகி யாண்டுமோ கத்திற் சேர்வான்.

ஆன்மா எல்லேயற்ற சின்மயமான வெட்டவெளி என்று உறுதியாக எண்ணுபவன் இவ்வுடலுடன் இருந்தாலும் அதனுல் எவ்வித மாற்றமும் அடையான்; எல்லேயற்றதும் ஒப்பற்றதுமான ஸச்சிதானந்தமயமான வெட்டவெளியே ஆன்மா என எண்ணுபவன் ஒருபோதும் மனத்தில் மயக்கமடையமாட்டான்.

उपाधिविहिता भेदा दृश्यन्ते चैकवस्तुनि।
इति यस्य मतिः सोऽयं कथं देहमितो भवेत्॥४१॥
भेदबुद्धिः समस्तानां परिच्छेदस्य कारणम्।
अभेदबुद्धौ जातायां परिच्छेदस्य का कथा॥४२॥

உபாதியால் தான் ஒருபொருளிடத்தில் பற்பல வேறுபாடுகள் தோன்றுகின்றன என எண்ணுபவன் இவ்வுடலால் குறுகியவனுய்த் தோன்றுவதில்லை; வேற்றுமையை உணர்தலே எல்லாச் சிறுமைக்கும் காரணம், வேற்றுமையற்று ஒற்றுமையை உணர்தல் தோன்றியவுடன் குறுகிய எல்லைகள் நீங்கிவிடும்.

ஒருபொரு ளிடத்திற் பேத முபாதியாற் றோன்று மென்னத்
தெருளுற வுணர்வோற் குண்டோ தேகத்தி னளவா யுற்றல்
விரிவுறு பேத புத்தி வினைப்பரிச் சேத வேது
வரிதெனு மபேத புத்தி யதுதனக் கேது வாமோ.

உபாதியால் தான் ஒருபொருளிடத்தில் பற்பல வேறுபாடுகள் தோன்றுகின்றன என எண்ணுபவன் இவ்வுடலால் குறுகியவனுய்த் தோன்றுவதில்லை; வேற்றுமையை உணர்தலே எல்லாச் சிறுமைக்கும் காரணம், வேற்றுமையற்று ஒற்றுமையை உணர்தல் தோன்றியவுடன் குறுகிய எல்லைகள் நீங்கிவிடும்.

शिवोऽहमिति यस्यास्ति भावना सर्वगामिनी।
तस्य देहेन सम्बन्धः कथं स्यादमितात्मनः॥४३॥

इति निर्देहागमस्थलम्

நான் சிவபெருமானே எனும் உறுதியான மனநிலையைக் கொண்டவனுக்கு இவ்வுடலுடன் தொடர்பு எங்ஙனம் இருக்கும்?

நிரம்பிய சிவோக மென்னு நினைவுவந் தியார்க ணுண்டாம்
வரம்பெறு மவனுக் கெங்கு மருவுறா துடல பந்த
மிருங்கடன் முகட்டெ ழுந்த வமுதினு மினிமை பெற்ற
வருந்தமிழ் பயந்த செவ்வா யகத்தியப் பெயரி னானே.

நான் சிவபெருமானே எனும் உறுதியான மனநிலையைக் கொண்டவனுக்கு இவ்வுடலுடன் தொடர்பு எங்ஙனம் இருக்கும்?

நிர்த்தேகாகமத்தலம் முற்றும்.

## अथ निर्भावागमस्थलम्

व्यतिरेकात् स्वरूपस्य भावान्तरनिराकृतेः।
भावो विकारनिर्मुक्तो निर्भावागम उच्यते॥४४॥

தனது சொரூபம் சிதையாமல் வேறு பாவங்களையும் அடையாமல் தன்னிலையிலேயே விளங்குபவன் நிர்பாவாகமம் எனப்படுகிறான்.

அப்பெருஞ் சொரூப முள்ள வவற்குமா றாகு மென்னச்
செப்புறு பாவ பேதஞ் சிதைந்திட விகார நீங்கு
மெய்ப்புறு பாவ நிர்ப்பா வாகம மெனவி ளம்புங்
கைப்பொலி மழுவொன் றுள்ள கடவுளா கமங்க ளன்றே.

தனது சொரூபம் சிதையாமல் வேறு பாவங்களையும் அடையாமல் தன்னிலையிலேயே விளங்குபவன் நிர்பாவாகமம் எனப்படுகிறான்.

अहं ब्रह्मेति भावस्य वस्तुद्वयसमाश्रयः।
एकीभूतस्य चिद्व्योम्नि तदभावो विनिश्चितः॥४५॥
एकभावनिरूढस्य निष्कलङ्के चिदम्बरे।
क्व जातिवासनायोगः क्व देहित्वं परिभ्रमः॥४६॥

நான் பிரம்மம் என்னும் மனநிலையில் இருபொருட்கள் உள்ளன; ஆனால் சின்மய வெட்டவெளியில் ஒன்றாய்க் கலந்த நிலையில் அவை நீங்குகின்றன. சின்மய வெட்டவெளியில் ஒன்றாய்க் கலந்தவனுக்கு பிறப்பு, உடலுடன் தொடர்பு, ஆகிய மன மயக்கங்கள் ஏது?

பிரமநா னெனுமி ரண்டு பெரும்பொருள் பாவத் தெய்தும்
பரமதி லொன்றா தற்கப் பாவமின் றெனப துண்மை
புரையறு சிதம்ப ரத்தி லேகமாய்ப் பொருந்தி னோற்கு
வரையறு சாதி மேனி யலமரன் மருவு றாவால்.

நான் பிரம்மம் என்னும் மனநிலையில் இருபொருட்கள் உள்ளன; ஆனால் சின்மய வெட்டவெளியில் ஒன்றாய்க் கலந்த நிலையில்

அவை நீங்குகின்றன. சின்மய வெட்டவெளியில் ஒன்ருய்க் கலந்தவனுக்கு பிறப்பு, உடலுடன் தொடர்பு, ஆகிய மன மயக்கங்கள் ஏது?

शून्ये चिदम्बरे स्थाने दूरे वाङ्मानसाध्वनः।
विलीनात्मा महायोगी केन किं वाऽपि भावयेत्॥४७॥

வேறெதுவுமில்லாததும் வாக்குக்கும் மனதிற்கும் எட்டாததுமான சின்மயமான வெட்ட வெளியில் லயமடைந்த மஹாயோகி எதனுல் எதைச் சிந்திப்பான்?

உரைமன மிறந்து நின்ற வொருபெருஞ் சிதாகா சத்தி
லிருமையின் றிலயித் தொன்றா னேதினா லதைப்பா விப்பன்
றிரையறு ஞான வாரி சேர்ந்தடங் கினற்குச் சிந்தை
மருவுறு பாவஞ் சங்கற் பனையிவை மருவு மோதான்.

வேறெதுவுமில்லாததும் வாக்குக்கும் மனதிற்கும் எட்டாததுமான சின்மயமான வெட்ட வெளியில் லயமடைந்த மஹாயோகி எதனுல் எதைச் சிந்திப்பான்?

अविशुद्धे विशुद्धे वा स्थले दीप्तिर्यथा रवेः।
पतत्येवं सदाद्वैती सर्वत्र समवृत्तिमान्॥४८॥
न बिभेति जरामृत्योर्न क्षुधाया वशं व्रजेत्।
परिपूर्णनिजानन्दं समास्वादन् महासुखी॥४९॥

## इति निर्भावागमस्थलम्

நல்ல இடம் கெட்ட இடமென இல்லாது எவ்விடத்தும் சூரிய ஒளி விழுவது போல் அத்துவைத பாவனேயுடைய யோகி எப்போதும் சமநிலேயிலேயே இருப்பான்; பரிபூரண ஆன்மசுகத்தில் லயித்து மூப்பு, மரணம் ஆகியவற்ருல் அச்சமடையான், பசியின் வசம் வீழான்.

நல்லிட மல்லி டங்க ளெனாது செஞ் ஞாயிற் றின்பே
ரெல்லொளி விழல் போல் யோகி யெங்ஙனு மொப்பக்
காண்பன்

சொல்லரு மறிவா நந்த சுகிபசி தாகத் தின்கட்
செல்லுதல் செய்யான் மூப்பு மரணத்திற் சிறிது மஞ்சான்.

நல்ல இடம் கெட்ட இடமென இல்லாது எவ்விடத்தும் சூரிய ஒளி விழுவது போல் அத்துவைத பாவனையுடைய யோகி எப்போதும் சமநிலையிலேயே இருப்பான்; பரிபூரண ஆன்மசுகத்தில் லயித்து மூப்பு, மரணம் ஆகியவற்றால் அச்சமடையான், பசியின் வசம் வீழான்.

நிர்ப்பாவாகமத்தலம் முற்றும்.

## अथ नष्टागमस्थलम्

भेदशून्ये महाबोधे ज्ञात्रादित्रयहीनकः।
ज्ञानस्य नष्टभावेन नष्टागम इहोच्यते॥५०॥

எவ்வித வேறுபாடுமிலாததும், அறிவு, அறிவோன், அறியப்படுவது என்னும் மூவித பந்தமுமில்லாத நிலையில் ஞானமே அற்ற நிலையைப் போலுள்ளதே நஷ்டாகமம் எனப்படுகிறது.

பேதமிலாத மாபோ தத்தினிற் பிரிந்து நின்ற
ஞாதுரு வாதி யிங்கு நண்ணலான் ஞானத் தின்கட்
போதுறு நட்ட பாவம் புகல்வர்நட் டாக மந்தான்
நீதறு கலைகண் முற்றுந் திருந்துறக் கற்ற மேலோர்.

எவ்வித வேறுபாடுமிலாததும், அறிவு, அறிவோன், அறியப்படுவது என்னும் மூவித பந்தமுமில்லாத நிலையில் ஞானமே அற்ற நிலையைப் போலுள்ளதே நஷ்டாகமம் எனப்படுகிறது.

अद्वैतवासनाविष्टचेतसां परयोगिनाम्।
पश्यतामन्तरात्मानं ज्ञातृत्वं कथमन्यथा॥५१॥
अकर्ताऽहमवेत्ताऽहमदेहोऽहं निरञ्जनः।
इति चिन्तयतः साक्षात् संविदेव प्रकाशते॥५२॥

அத்துவைத அனுபவமுடைய மேலான யோகிகளுக்குத் தங்களது ஆன்மானந்தத்தை எப்போதும் உணரும் போது தாம் ஒரு பொருளை அறிகிறோம் என்ற உணர்வு ஏது? நான் கர்த்தா அல்லன்; அறிபவனல்லன்; எவ்வித உடலையும் உடையவனல்லன்; மலங்களற்றவன் என்று சிந்திக்கும் போது அவர்களது மேலான சைதன்னியம் ஒன்றே பிரகாசிக்கும்.

ஏகமா நினைவு தோன்று மிதயத்திற் றனைக்கண் டோன்வே
றாகுஞா துருத்து வத்தை யடைவதெவ் வாறு சொல்லா
யோகையார் கருத்தா வல்லே னுணர்பவ னல்லே னல்லேன்
றேகநா னிமல னென்னுஞ் சிந்தையாற் கொளிரு ஞானம்.

அத்துவைத அனுபவமுடைய மேலான யோகிகளுக்குத் தங்களது ஆன்மானந்தத்தை எப்போதும் உணரும் போது தாம் ஒரு பொருளை அறிகிறோம் என்ற உணர்வு ஏது? நான் கர்த்தா அல்லன்; அறிபவனல்லன்; எவ்வித உடலையும் உடையவனல்லன்; மலங்களற்றவன் என்று சிந்திக்கும் போது அவர்களது மேலான சைதன்னியம் ஒன்றே பிரகாசிக்கும்.

निरस्तभेदजल्पस्य निरीहस्य प्रशाम्यतः।
स्वे महिम्नि विलीनस्य किमन्यज्ज्ञेयमुच्यते॥५३॥
एकीभूते निजाकारे संविदा निष्प्रपञ्चया।
केन किं वेदनीयं तद्वेत्ता कः परिभाष्यते॥५४॥

எவ்வித பேதமுமற்று சாந்தமாய் சலனமின்றி தனது ஆன்மாவிலேயே ஆழ்ந்திருப்பவனுக்கு அறியவேண்டிய பொருள் வேறேது? தனது உண்மைச் சொரூபமான சைதன்னியத்தில் வேறறக் கலந்து திளைத்திருப்போனுக்கு அறிபவனோ அறியவேண்டியதோ யாதுமில்லை.

தணந்திடும் பேத முள்ள சாந்தனாய்த் தன்னிற் றானே
யணைந்தடங் குறுநல் யோகிக் கயலொரு ஞேய முண்டோ
விணங்கிடிற் றன்சொ ரூப ஞானத்தி லேக மாக
வுணர்ந்திடு பொருள்சி றந்த வுணர்வுணர் பவனெவ் வாறாம்.

எவ்வித பேதமுமற்று சாந்தமாய் சலனமின்றி தனது ஆன்மாவிலேயே ஆழ்ந்திருப்பவனுக்கு அறியவேண்டிய பொருள் வேறேது? தனது உண்மைச் சொரூபமான சைதன்னியத்தில் வேறறக் கலந்து திளைத்திருப்போனுக்கு அறிபவனே அறியவேண்டியதோ யாதுமில்லை.

महासत्ता महासंविद् विश्वरूपा प्रकाशते।
तद्विना नास्ति वस्त्वेकं भेदबुद्धिं विमुञ्चतः॥५५॥

इति नष्टागमस्थलम्

முக்காலத்திலும் விளங்குவதும் சின்மயமானதும் அனைத்துலகங்களையும் தன்னுள்ளடக்கியதும் எவ்வித பேதமுமற்றதுமான பரம்பொருளால் தான் எல்லாம் பிரகாசிக்கின்றன.

உண்டெனு மொருமா சித்தே யுலகமாய் விளங்கி நிற்குங்
கண்டிடு மறிவை யன்றிக் காண்பொருள் வேறொன் றில்லை
விண்டுறு பேத புத்தி மேவினோற் கென்று கூறும்
பண்டரு மறைக ளெல்லாம் பராரைவெற் பமர்ந்த மேலோய்.

முக்காலத்திலும் விளங்குவதும் சின்மயமானதும் அனைத்துலகங்களையும் தன்னுள்ளடக்கியதும் எவ்வித பேதமுமற்றதுமான பரம்பொருளால் தான் எல்லாம் பிரகாசிக்கின்றன.

நட்டாகமத்தலம் முற்றும்.

अथादिप्रसादिस्थलम्

अनेकजन्मशुद्धस्य निरहङ्कारभाविनः।
अप्रपञ्चस्यादिदेवः प्रसीदति विमुक्तये॥५७॥
शिवप्रसादसम्पत्त्या शिवभावमुपेयुषि।
शिवादन्यज्जगज्जालं दृश्यते न च दृश्यते॥५८॥

பற்பல பிறவிகளில் செய்த நற்றவத்தால் 'நான்' எனும் எண்ணமற்றவனாய் இருப்பவனுக்கு எவ்வித பேதமுமற்ற சிவபிரான் முக்தியளிக்க அருள்பாலிக்கிறான்; அவனது அருளால் சிவபாவம் அடைந்தவன் உலகங்கள் முதலிய வேற்றுமைகளை அறவே காண்பதில்லை.

அனைத்திநு மதிட்டித் துள்ள சம்புவே யாதி யாமத்
தனிப்பரன் பிரசா தத்தால் விகாரமில் பதத்தைச் சார்வுற்
றினைப்பறு மவனை யாதிப் பிரசாதி யென்று கூறும்
பனிக்கதிர் தவழும் வேணிப் பராபர னருளு நூலே.

பற்பல பிறவிகளில் செய்த நற்றவத்தால் 'நான்' எனும் எண்ணமற்றவனாய் இருப்பவனுக்கு எவ்வித பேதமுமற்ற சிவபிரான் முக்தியளிக்க அருள்பாலிக்கிறான்; அவனது அருளால் சிவபாவம் அடைந்தவன் உலகங்கள் முதலிய வேற்றுமைகளை அறவே காண்பதில்லை.

शम्भोः शिवप्रसादेन संसारच्छेदकारिणा।
मोहग्रन्थिं विनिर्भिद्य मुक्तिं यान्ति विवेकिनः॥५९॥

சிவபெருமானது அருளினால் ஸம்ஸாரமெனும் பிணியிலிருந்து விடுபட்டு மலங்களினின்றும் நீங்கி முக்தியடைகிறான்.

புனிதனாய்ப் பலபி றப்பிற் பொருசக வகந்தை யுள்ளோற்
கினிதுறு மாதி தேவ னிரும்பிர சாத மென்ப
வனைசிவப் பிரசா தத்தான் மலிசிவ மாயி னோற்குக்
கனைசகங் காண்ப தாயுங் காணுறப் படாது கண்டாய்.

சிவபெருமானது அருளினால் ஸம்ஸாரமெனும் பிணியிலிருந்து விடுபட்டு மலங்களினின்றும் நீங்கி முக்தியடைகிறான்.

विना प्रसादमीशस्य संसारो न निवर्तते।
विना सूर्योदयं लोके कुतः स्यात् तमसो लयः॥६०॥

சிவபெருமான் அருளின்றி ஸம்ஸார நோய் நீங்காது; சூரிய ஒளியின்றி உலகத்தின் இருள் எவ்வாறு நீங்கும்?

பிறப்பெறி மூல மாகும் பிரான்பிர சாதந் தன்னா
லறப்பெறு மோக முத்தி யடைகுவன் பிறவி வெந்நோய்
சிறப்பரன் பிரசா தத்தா லன்றியே தீர்ந்தி டாதால்
வெறுப்பிரு ளிரவி யன்றி வியுமோ வுலகந் தன்னில்.

சிவபெருமான் அருளின்றி ஸம்ஸார நோய் நீங்காது; சூரிய ஒளியின்றி உலகத்தின் இருள் எவ்வாறு நீங்கும்?

सर्वानुग्राहकः शम्भुः केवलं कृपया प्रभुः।
मोचयेत् सकलान् जन्तून् न किञ्चिदिह कारणम्॥६१॥

## इत्यादिप्रसादिस्थलम्

எல்லாம் வல்ல இறைவனுன சிவபிரான் தனது அருள் நோக்கால் அனத்து உயிர்களுக்கும் முக்தியளிக்கிறுன்; வேறுகாரணம் இல்லே.

அகிலமு மளிக்கு மீச னருளினா லுயிர்கட் கெல்லாம்
புகலுறு பாச நீக்கம் புரிவனிப் புரித லின்கண்
முகிழிள மதிய ணிந்த முதல்வனுக் கேது வின்றா
லிகலுறு புலன டங்க ஞானவா ளெடுத்த மேலோய்.

எல்லாம் வல்ல இறைவனுன சிவபிரான் தனது அருள் நோக்கால் அனத்து உயிர்களுக்கும் முக்தியளிக்கிறுன்; வேறுகாரணம் இல்லே.

ஆதிப்பிரசாதித்தலம் முற்றும்.

## अथान्त्यप्रसादिस्थलम्

लयः सर्वपदार्थानामन्त्य इत्युच्यते बुधैः।
प्रसादोऽनुभवस्तस्य तद्वानन्त्यप्रसादवान्॥६२॥

எல்லாப் பதார்த்தங்களும் ஒடுங்கிய நிலே அந்தியம் எனப்படுகிறது; அந்நிலேயை அனுபவிப்பவன் அந்தியப் பிரசாதி எனப்படுகிறுன்.

ஆகிய பதார்த்த மெல்லா மடங்குறு மிடமாய் நிற்கு
மேகனந் தியனா மென்ப ரிவனநு பவமே யிங்குச்
சீர்கெழு பிரசா தப்பேர் சேர்ந்திடு மிதனைப் பெற்ற
யோகியென் பவன் றானேயந் தியப்பிர சாதி யோர்வாய்.

எல்லாப் பதார்த்தங்களும் ஒடுங்கிய நிலே அந்தியம் எனப்படுகிறது; அந்நிலேயை அனுபவிப்பவன் அந்தியப் பிரசாதி எனப்படுகிருன்.

देवतिर्यङ्मनुष्यादिव्यवहारविकल्पना।
मायाकृता परे तत्त्वे तल्लये तत्क्षयो भवेत्॥ ६३॥
साक्षात्कृते परे तत्त्वे सच्चिदानन्दलक्षणे।
क्व पदार्थपरिज्ञानं कुतो ज्ञातृत्वसम्भवः॥ ६४॥

தேவர், மனிதர், மிருகம் எனும் வேற்றுமைகள் மாயையினுல் ஏற்பட்டவை; பரம்பொருளில் இவை யாவும் ஒடுங்கி அழியும். அந்தப் பரம்பொருளே நேரிடையாக அனுபவிக்கும் போது ஏனைய பதார்த்தங்களேப் பற்றிய ஞானமோ நான் அறிபவன் எனும் எண்ணமோ ஏது?

சுரர்நரர் மிருக மாதி தோற்றுறு மாயை மாயிற்
பரனிடை யதுப யந்த பதார்த்தமு மாயு மென்ப
ருரமுறு சத்தாநந்த வொருபொரு ளுண்மை பெற்றா
னிரைதரு பதார்த்த ஞானம் யாதுயர் ஞேயம் யாதோ.

தேவர், மனிதர், மிருகம் எனும் வேற்றுமைகள் மாயையினுல் ஏற்பட்டவை; பரம்பொருளில் இவை யாவும் ஒடுங்கி அழியும். அந்தப் பரம்பொருளே நேரிடையாக அனுபவிக்கும் போது ஏனைய பதார்த்தங்களேப் பற்றிய ஞானமோ நான் அறிபவன் எனும் எண்ணமோ ஏது?

सुषुप्तस्य यथा वस्तु न किञ्चिदपि भासते।
तथा मुक्तस्य जीवस्य न किञ्चिद्वस्तु दृश्यते॥ ६५॥
यथाकाशमविच्छिन्नं निर्विकारं स्वरूपतः।
तथा मुक्तस्य जीवस्य स्वरूपमवशिष्यते॥ ६६॥

ஆழ்ந்து உறங்குபவனுக்கு வேறெந்தப் பொருளும் விளங்காதது போல் முக்தியடைந்தவன் வேறெதையும் உணர்வதில்லை. ஆகாயம் விரிந்து பரந்து எவ்விதப் பிரிவுமற்று ஒரே பொருளாய் விளங்குவது போல் முக்தியடைந்தவனுடைய சைதன்னியம் விளங்குகின்றது.

கனவிடைக் கண்டதெல்லாங் கழிந்திடும் விழிப்ப மாயை
தனில்வரு வனமெய்ஞ் ஞானஞ் சார்ந்திட மாய்ந்து போகு
முனலருஞ் சுழுத்தி யோனுக் கொன்றுமங் கெதிரா வாபோ
லினலறு சீவன் முத்தற் கெதிர்ந்திடா தொன்று மன்றே.

ஆழ்ந்து உறங்குபவனுக்கு வேறெந்தப் பொருளும் விளங்காதது போல் முக்தியடைந்தவன் வேறெதையும் உணர்வதில்லை. ஆகாயம் விரிந்து பரந்து எவ்விதப் பிரிவுமற்று ஒரே பொருளாய் விளங்குவது போல் முக்தியடைந்தவனுடைய சைதன்னியம் விளங்குகின்றது.

न किञ्चिदपि मुक्तस्य दृश्यं कर्तव्यमेव वा।
सुखस्फूर्तिस्वरूपेण निश्चला स्थितिरुच्यते॥६७॥

முக்தியடைந்தவனுக்கு காணவேண்டியதோ அல்லது செய்யவேண்டியதோ வேறென்றும் இல்லை; தனது எல்லையற்ற ஆனந்த நிலையிலேயே அசைவற்றிருத்தலே அவனது நிலை.

அந்தரம் விகார மின்றி யகண்டித மாகுமாபோ
லுந்துறு சீவன் முத்த னுருவமும் விளங்கு மென்பர்
சிந்தனை செய்து காண்கை செய்கையம் முத்தற் கில்லை
நிந்தையில் சுகநி றைந்து நிச்சல னாகி மேவும்.

முக்தியடைந்தவனுக்கு காணவேண்டியதோ அல்லது செய்யவேண்டியதோ வேறென்றும் இல்லை; தனது எல்லையற்ற ஆனந்த நிலையிலேயே அசைவற்றிருத்தலே அவனது நிலை.

शिवाद्वैतपरिज्ञानशिथिलाशेषवस्तुनः।
केवलं संविदुल्लासदर्शिनः केन को भवेत्॥६८॥

इत्यन्त्यप्रसादिस्थलम्

சிவாத்துவைத ஞானம் பெற்று அதனால் வேறெந்தப் பொருளைப்பற்றிய ஞானமுமற்று தனது சைதன்னியமொன்றையே அறிந்து விளங்குபவனுக்கு மற்றவை ஏது?

பரசிவாத் துவித ஞான பலத்தினா னழுவப் பட்ட
விரிதரு பொருளு ளானாய் மெய்யுணர் வினையே காண்போற்
கொருவனா லாவ தாக வுறுபொரு ளில்லை யென்ப
ரரவுலாம் வேணி முக்க ணமலனா கமங்கள் வல்லோர்.

சிவாத்துவைத ஞானம் பெற்று அதனால் வேறெந்தப் பொருளைப்பற்றிய ஞானமுமற்று தனது சைதன்னியமொன்றையே அறிந்து விளங்குபவனுக்கு மற்றவை ஏது?

அந்தியப்பிரசாதித்தலம் முற்றும்.

## अथ सेव्यप्रसादिस्थलम्

सेव्यो गुरुः समस्तानां शिव एव न संशयः।
प्रसादोऽस्य परानन्दप्रकाशः परिकीर्त्यते॥ ६९॥

எல்லோருக்கும் குருவானவர் சிவபெருமான் ஒருவரே; அவரே வணங்கத்தக்கவர். இதில் யாதொரு ஐயமுமில்லை. அவருடைய பிரசாதமெனும் அருள் பரானந்தப் பிரகாசம் எனப்படுகிறது.

தேசிகன் சிவனே யந்தத் தேசிகன் சேவி யன்றா
னாசிலிங் கவன்ற னாதோ ரநுபவ மெவற்று மேலாய்ப்
பேசுறும் பிரசா தப்பேர் பெற்றுள ததனைப் பெற்றோன்
வீசுறும் பவமு றுஞ்சே வியப்பிர சாதி யாகும்.

எல்லோருக்கும் குருவானவர் சிவபெருமான் ஒருவரே; அவரே வணங்கத்தக்கவர். இதில் யாதொரு ஐயமுமில்லை. அவருடைய பிரசாதமெனும் அருள் பரானந்தப் பிரகாசம் எனப்படுகிறது.

सेव्यो गुरुः स्मृतो ह्यस्य प्रसादोऽनुभवो मतः।
तदेकावेशरूपेण तद्वान् सेव्यप्रसादवान्॥ ७०॥

गुरुदेवः परं तत्त्वं परतत्त्वं गुरुः स्मृतः।
तदेकत्वानुभावेन न किञ्चिदवशिष्यते॥७१॥

குருவானவர் வணங்கத்தக்கவர்; அவரது அருள் அனுபவமெனப்படும். அவ்வருளில் ஆழ்ந்திருப்பவன் ஸேவியப்பிரஸாதன் ஆவான். குருதேவரே பரம்பொருள், பரம்பொருளே குருதேவர். இதன் ஐக்கியத்தை உணர்ந்தால் வேறெதுவும் இல்லை.

குரவனே பரம னந்தப் பரமனே குரவ னென்ப
விரவுமிவ் வேகமாகு மநுபவ மெய்ம்மை யென்று
முரைமன மிறந்த தன்பே ருருவவின் பங்கண் டுற்றோன்
மருவுறு மயலொன் றின்கண் மனம் விழைந் திடுமோ
சொல்வாய்.

குருவானவர் வணங்கத்தக்கவர்; அவரது அருள் அனுபவமெனப்படும். அவ்வருளில் ஆழ்ந்திருப்பவன் ஸேவியப்பிரஸாதன் ஆவான். குருதேவரே பரம்பொருள், பரம்பொருளே குருதேவர். இதன் ஐக்கியத்தை உணர்ந்தால் வேறெதுவும் இல்லை.

अपरिच्छेद्यमात्मस्थमवाङ्मनसगोचरम्।
आनन्दं पश्यतां पुंसां रतिरन्यत्र का भवेत्॥७२॥
ज्ञानामृतेन तृप्तस्य किमन्यैर्भोज्यवस्तुभिः।
ज्ञानादेव परानन्दं प्रकाशयति सच्छिवः॥७३॥

எல்லையற்றதும் வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாததுமான பரமானந்தத்தைத் தனது ஆன்மாவிலேயே அனுபவிப்போனுக்கு வேறொரு பொருளிடம் பற்று இருக்குமோ? ஞானானந்தத்திலேயே திளைப்பவனுக்கு மற்றவை ஏது? சிவபெருமான் அந்த ஞானத்தின் வாயிலாகவே பிரகாசிக்கிறார் .

ஞானவா ரமுதந் தன்னா னன்றுற நிரம்பி னோனுக்
கேனையூண் பொருளா லென்கொ லெய்துதல் சத்தா மீசன்
ஞானமே கொண்டு பேரா நந்தநின் றிலக்கு மென்னும்
பானல்வா ளரிநெ டுங்கட் பாவைபங் குடையோ னூலே.

எல்லையற்றதும் வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாததுமான பரமானந்தத்தைத் தனது ஆன்மாவிலேயே அனுபவிப்போனுக்கு வேறொரு பொருளிடம் பற்று இருக்குமோ?
ஞானானந்தத்திலேயே திளைப்பவனுக்கு மற்றவை ஏது? சிவபெருமான் அந்த ஞானத்தின் வாயிலாகவே பிரகாசிக்கிறார் .

मुक्तिरेव परा तृप्तिः सच्चिदानन्दलक्षणा।
नित्यतृप्तस्य मुक्तस्य किमन्यैर्भोगसाधनैः॥७४॥

ஸச்சிதனந்தமயமான முக்தியொன்றே அனைத்துக்கும் மேலான திருப்தி; அம்முக்தியை அடைந்தவனுக்கு வேறு போகசாதனங்கள் ஏது?

சத்துட னறிவா நந்தத் தகுமிலக் கணத்த தாகு
முத்தியே யுயர்தி ருத்தி யென்குவர் முதனூல் கண்டோர்
நித்திய நிரம்பல் பெற்ற நிகரிலம் முத்த னுக்குத்
துய்த்திடு பொருள்க டம்மாற் றோன்றுறு பயனென் சொல்வாய்.

ஸச்சிதனந்தமயமான முக்தியொன்றே அனைத்துக்கும் மேலான திருப்தி; அம்முக்தியை அடைந்தவனுக்கு வேறு போகசாதனங்கள் ஏது?

न बाह्यं कर्म तस्यास्ति न चान्तर्नैव कुत्रचित्।
शिवैक्यज्ञानरूढस्य देहभ्रान्तिं विमुञ्चतः॥७५॥
न कर्मबन्धे न तपो विशेषे
न मन्त्रयोगाभ्यसने तथैव।
ध्याने न बोधे च तथात्मतत्त्वे
मनः प्रवृत्तिः परयोगभाजाम्॥७६॥

इति श्रीमत्षट्स्थलब्रह्मिणा शिवयोगिनाम्ना रेणुकाचार्येण विरचिते वीरशैवधर्मनिर्णये सिद्धान्तशिखामणौ
प्राणलिङ्गिस्थलविषयनवविधलिङ्गप्रसङ्गो नामाष्टादशः परिच्छेदः॥१८॥

சிவனோடு ஐக்கிய ஞானமாகிய அத்தகைய முக்தியைப் பெற்று பூதவுடல் மீது பற்றற்றவனுக்கு பொறிபுலன்களாலோ,

மனத்தாலோ செய்யவேண்டிய கருமங்கள் இல்லை; தவம், தியானம், மந்திரம், யோகாப்பியாசம், முதலியவற்றில் அவனது மனம் நாடாது.

**சிவம்பெறு மேக ஞானஞ் சேர்ந்துடன் மயக்கி லாற்குப்**
**பவம்பெறு கரும மில்லைப் பகர்தரிற் புறவ கத்துந்**
**தவஞ்செபந் தியாநம் யோகஞ் சார்ந்திடா வவற்றின் மேலா**
**யுவந்துள ஞானந் தன்னி லூற்றிடு மவனுக் குள்ளம்.**

சிவனோடு ஐக்கிய ஞானமாகிய அத்தகைய முக்தியைப் பெற்று பூதவுடல் மீது பற்றற்றவனுக்கு பொறிபுலன்களாலோ,

மனத்தாலோ செய்யவேண்டிய கருமங்கள் இல்லை; தவம், தியானம், மந்திரம், யோகாப்பியாசம், முதலியவற்றில் அவனது மனம் நாடாது.

சேவியப்பிரசாதித்தலம் முற்றும்.

## ॥ एकोनविंशः परिच्छेदः ॥

### अथ शरणस्थलम्

### अथ दीक्षापादोदकस्थलम्

स्थलभेदाः समाख्याताः प्राणलिङ्गिस्थलाश्रयाः।
कथय स्थलभेदं मे शरणस्थलसंश्रितम्॥ १॥

பிராணலிங்கிஸ்தலத்துக்குட்பட்ட ஸ்தலபேதங்கள் விளக்கப்பட்டன; சரணஸ்தலத்தின் பேதங்களை உரைப்பாயாக.

உரைத்தனை விளங்குற வுயிரி லிங்கித
நிரைத்தல மனைத்தையு நீயெ னக்கினி
யருட்சர ணத்தல மடைந்த வற்றையுங்
கருத்துற வருளுதி கணங்கள் வேந்தனே.

பிராணலிங்கிஸ்தலத்துக்குட்பட்ட ஸ்தலபேதங்கள் விளக்கப்பட்டன; சரணஸ்தலத்தின் பேதங்களை உரைப்பாயாக.

शरणस्थलमाश्रित्य स्थलद्वादशकं मया।
उच्यते नाम सर्वेषां स्थलानां श्रृणु तापस॥ २॥
दीक्षापादोदकं पूर्वं शिक्षापादोदकं ततः।
ज्ञानपादोदकं चाथ क्रियानिष्पत्तिकं ततः॥ ३॥
भावनिष्पत्तिकं चाथ ज्ञाननिष्पत्तिकं ततः।
पिण्डाकाशस्थलं चाथ बिन्द्वाकाशस्थलं ततः॥ ४॥
महाकाशस्थलं चाथ क्रियायाश्च प्रकाशनम्।
भावप्रकाशनं पश्चात् ततो ज्ञानप्रकाशनम्।
स्वरूपं पृथगेतेषां कथयामि यथाक्रमम्॥ ५॥

சரணஸ்தலம் பன்னிரண்டு பேதங்களைக் கொண்டது; அவை முறையே தீக்ஷாபாதோதகம், சிக்ஷாபாதோதகம், ஞானபாதோதகம், கிரியாநிஷ்பத்திகம், பாவநிஷ்பத்திகம், ஞானநிஷ்பத்திகம், பிண்டாகாசஸ்தலம், பிந்த்வாகாசஸ்தலம், மஹாகாசஸ்தலம், கிரியாபிரகாசனம், பாவபிரகாசனம்,

ஞானபிரகாசனம் என்பன. இவற்றின் சொரூபத்தை விளக்குகிறேன்.

> அத்தல மடைவுற வடிப்பு னற்பினிட்
> பத்திவிண் ணொளியின்மும் மூன்று பாலவாய்
> வைத்துள பன்னிரு தலமு மாசற*
> மெய்த்தவ வறைகுதும் விழைந்து னக்கரோ.

சரணஸ்தலம் பன்னிரண்டு பேதங்களைக் கொண்டது; அவை முறையே தீக்ஷாபாதோதகம், சிக்ஷாபாதோதகம், ஞானபாதோதகம், கிரியாநிஷ்பத்திகம், பாவநிஷ்பத்திகம், ஞானநிஷ்பத்திகம், பிண்டாகாசஸ்தலம், பிந்த்வாகாசஸ்தலம், மஹாகாசஸ்தலம், கிரியாபிரகாசனம், பாவபிரகாசனம், ஞானபிரகாசனம் என்பன. இவற்றின் சொரூபத்தை விளக்குகிறேன்.

> दीक्षयाऽपगतद्वैतं यज्ज्ञानं गुरुशिष्ययोः।
> आनन्दस्यैक्यमेतेन दीक्षापादोदकं स्मृतम्॥६॥

தீக்ஷையினால் குருவுக்கும் சீடனுக்குமிடையே இருந்த துவைதபாவம் நீங்குவதால் ஏற்படும் ஆனந்த ஐக்கிய ஞானமே தீக்ஷாபாதோதகம் எனப்படுகிறது.

> ஆரிய னோடு சீட னாநந்தத் தயிக்க மாகச்
> சீரிய தீட்சை யாலே தீர்ந்துள பேத முள்ள
> பேரியன் ஞானந் தன்னாற் பெருங்கலை யுணர்ந்த மேலோ
> ரேரியன் முனிவ தீட்சா பதோதக மியம்பு வாரால்.

தீக்ஷையினால் குருவுக்கும் சீடனுக்குமிடையே இருந்த துவைதபாவம் நீங்குவதால் ஏற்படும் ஆனந்த ஐக்கிய ஞானமே தீக்ஷாபாதோதகம் எனப்படுகிறது.

> अथवा पादशब्देन गुरुरेव निगद्यते।
> शिष्यश्चोदकशब्देन तयोरैक्यं तु दीक्षया॥७॥

அல்லது, பாதம் எனும் சொல்லால் குருவும், உதகமெனும் சொல்லால் சீடனும் குறிக்கப்படுகின்றனர்; தீக்ஷையினால்

ஏற்படும் இவ்விருவருடைய ஐக்கியம் தீக்ஷாபாதோதகம் எனப்படுகிறது.

> பாதமென் கிளவி யாலே பகர்தரப் படுவ னாசான்
> மேதைகொ ளுதகச் சொல்லால் விளம்புறப் படுவன் சீடன்
> றீதறு தீட்சை தன்னாற் செப்புறு மிவர யிக்க
> மேதமி லுலகிற் றீட்சா பதோதக மென்ன நிற்கும்.

அல்லது, பாதம் எனும் சொல்லால் குருவும், உதகமெனும் சொல்லால் சீடனும் குறிக்கப்படுகின்றனர்; தீக்ஷையினுல் ஏற்படும் இவ்விருவருடைய ஐக்கியம் தீக்ஷாபாதோதகம் எனப்படுகிறது.

> परमानन्द एवोक्तः पादशब्देन निर्मलः।
> ज्ञानं चोदकशब्देन तयोरैक्यं तु दीक्षया॥८॥
> परसंवित्प्रकाशात्मा परमानन्दभावनाम्।
> अधिगम्य महायोगी न भेदं क्वापि पश्यति॥९॥

பரமானந்தம் பாதமெனும் சொல்லாலும், உதகமெனும் சொல்லால் ஞானமும், தீக்ஷையினுல் அவற்றின் ஐக்கியமும் குறிக்கப்படுகின்றன; எல்லாவற்றுக்கும் மேலான ஞானனந்தத்தை அடைந்த மஹாயோகி எவ்வித வேற்றுமையையும் காண்பதில்லை.

> பரித்திடும் பரமா நந்தம் பாதமென் கிளவி ஞான
> முரைத்திடு முதகந் தீட்சை யுரைத்திடு மிவற்ற யிக்கந்
> தெரித்தவிஞ் ஞானா நந்தஞ் சேர்ந்துதான் பேத மின்றி
> வரைத்தொரு பொருளுங் கண்ணாற் காண்குறான் மான யோகி.

பரமானந்தம் பாதமெனும் சொல்லாலும், உதகமெனும் சொல்லால் ஞானமும், தீக்ஷையினுல் அவற்றின் ஐக்கியமும் குறிக்கப்படுகின்றன; எல்லாவற்றுக்கும் மேலான ஞானனந்தத்தை அடைந்த மஹாயோகி எவ்வித வேற்றுமையையும் காண்பதில்லை.

देशकालाद्यवच्छेदविहीनं नित्यनिर्मलम्।
आनन्दं प्राप्य बोधेन नान्यत् काङ्क्षति संयमी॥१०॥
ज्ञानामृतमपि स्वच्छं गुरुका(यैक) सम्भवम्।
आस्वाद्य रमते योगी संसारामयवर्जितः॥११॥

इति दीक्षापादोदकस्थलम्

காலத்திற்கும் தேசத்திற்கும் அப்பாற்பட்டு என்றுமழியாத ஆனந்தத்தைத் தனது ஞானத்தால் அடைந்த யோகி வேறெதையும் விரும்புவதில்லை; குருவினது உடலிலிருந்து தோன்றும் அந்த ஞானமிர்தத்தை அனுபவிக்கும் யோகி சம்சாரமெனும் கொடிய நோயிலிருந்து விடுபடுகிறுன்.

ஆரிய னருளி னாலே ஞானவா ரமுத முண்டு
சீரிய பரம யோகி தீர்ந்துவெம் பிறவி நோய்தா
னோரிய லாடல் செய்தே யொழுகுமென் றறிந்து கொண்ணீ
கூரிய விலைவேற் செங்கைக் குமரனாற் றருமங் கண்டோய்.

காலத்திற்கும் தேசத்திற்கும் அப்பாற்பட்டு என்றுமழியாத ஆனந்தத்தைத் தனது ஞானத்தால் அடைந்த யோகி வேறெதையும் விரும்புவதில்லை; குருவினது உடலிலிருந்து தோன்றும் அந்த ஞானமிர்தத்தை அனுபவிக்கும் யோகி சம்சாரமெனும் கொடிய நோயிலிருந்து விடுபடுகிறுன்.

தீக்ஷாபாதோதகஸ்தலம் முற்றும்

अथ शिक्षापादोदकस्थलम्

गुरुशिष्यामयं ज्ञानं शिक्षा योगिनमीर्यते।
तयोः समरसत्वं हि शिक्षापादोदकं स्मृतम्॥१२॥

யோகியைச் சென்றடையும் குருசீடமயமான ஞானம் சிக்ஷையாகும்; அதன் சமரசமே சிக்ஷாபாதோதகம்.

யாதொரு சிட்சை யிங்குக் குருசீட மயமா ஞானந்
தீதறு மியோகிக் காகச் செய்திடு மவையி ரண்டும்

பேதம தறக்க லந்த பெருமையை யுரைப்பர் நல்லோர்
மாதவ முனிவ சிட்சா பதோதக மென்ன மாதோ.

யோகியைச் சென்றடையும் குருசீடமயமான ஞானம் சிக்ஷையாகும்; அதன் சமரசமே சிக்ஷாபாதோதகம்.

मथिताच्छास्त्रजलधेर्युक्तिमन्थानवैभवात्।
गुरुणा लभ्यते बोधसुधा सुमनसां गणैः॥१३॥
ज्ञानचन्द्रसमुद्भूतां परमानन्दचन्द्रिकाम्।
पश्यन्ति परमाकाशे मुक्तिरात्रौ महाधियः॥१४॥

யுக்தியெனும் மந்தரமலையால் சாத்திரங்களாகிய கடலைக் கடைவதால் அறிவெனும் ஞானமிர்தத்தை ஆசாரியன் அடைகிறார்; பேரறிவு வாய்ந்தவர்கள் ஞானமெனும் சந்திரனின் குளிர்ச்சி பொருந்திய ஆனந்தத்தைப் பரமாகாசமெனும் வெட்ட வெளியில் முக்தியெனும் இரவில் காண்கிறார்கள்.

மதியெனு மந்த ரத்தால் வாய்த்தநூற் கடலை யாசான்
விதிமுறை கடையத் தோன்றும் விளங்கறி வமுத முண்ப
னெதிரறு மியோகி முத்தி யிரவினிற் பரமா காசத்
துதிதரு ஞானத் திங்க ளின்பநல் லொளியே காண்பன்.

யுக்தியெனும் மந்தரமலையால் சாத்திரங்களாகிய கடலைக் கடைவதால் அறிவெனும் ஞானமிர்தத்தை ஆசாரியன் அடைகிறார்; பேரறிவு வாய்ந்தவர்கள் ஞானமெனும் சந்திரனின் குளிர்ச்சி பொருந்திய ஆனந்தத்தைப் பரமாகாசமெனும் வெட்ட வெளியில் முக்தியெனும் இரவில் காண்கிறார்கள்.

दृष्टे तस्मिन् परमानन्दे देशकालादिवर्जिते।
द्रष्टव्यं विद्यते नान्यच्छ्रोतव्यं ज्ञेयमेव वा॥१५॥
आत्मानन्देन तृप्तस्य का स्पृहा विषये सुखे।
गङ्गाजलेन तृप्तस्य कूपतोये कुतो रतिः॥१६॥

தேசம் காலம் ஆகியவற்றைக் கடந்த அந்தப் பரமானந்தத்தைக் கண்ட பின்னர் காண்பதற்கும் கேட்பதற்கும் அறிவதற்கும் வேறு பொருளொன்றும் கிடையாது; ஆன்மானந்தத்தில்

திளைப்பவன் வேறெதையும் விரும்புவதில்லை; கங்கை நீரைப் பருகுபவன் கிணற்று நீரை விரும்புவதில்லையன்றோ?

> வரைந்துள தேச கால மருவறும் பரமா நந்தம்
> பொருந்தினோன் காண்ப கேட்ப வறிவவாம் பொருளிங் கில்லை
> யொருங்கிய பரமா நந்த யோகிபால் விடய வேட்கை
> வருங்கொலொண் கங்கை பெற்றோன் மதிப்பனோ கூவ நீரை.

தேசம் காலம் ஆகியவற்றைக் கடந்த அந்தப் பரமானந்தத்தைக் கண்ட பின்னர் காண்பதற்கும் கேட்பதற்கும் அறிவதற்கும் வேறு பொருளொன்றும் கிடையாது; ஆன்மானந்தத்தில் திளைப்பவன் வேறெதையும் விரும்புவதில்லை; கங்கை நீரைப் பருகுபவன் கிணற்று நீரை விரும்புவதில்லையன்றோ?

> यस्मिन्नप्राप्तकल्लोले सुखसिन्धौ निमज्जति।
> सामरस्यान्महायोगी तस्य सीमा कुतो भवेत्॥ १७॥
> गुरुप्रसादचन्द्रेण निष्कलङ्केन चारुणा।
> यन्मनःकुमुदं नित्यबोधितं तस्य को भ्रमः॥ १८॥

## इति शिक्षापादोदकस्थलम्

அலைகளற்ற அந்தப் பேரின்பக் கடலில் மூழ்கிய சமரச ஞானம் கொண்ட யோகி அதன் எல்லையை அறிவதில்லை; குருவருள் எனும் குளிர்ந்த சந்திரனின் நோக்கால் அவனது மனமெனும் அல்லிப்பூ மலர்வதால் மனதில் யாதொரு மயக்கமும் கொள்வதில்லை.

> அலையில்பே ரின்ப வாரி யமிழ்ந்துவன் பரம யோகி
> யெலையிலவ் வாரி திக்கோ ரெல்லையு முண்டோ சொல்வாய்
> கலைமலி குரவன் மிக்க கருணைவா னிலவு திப்ப
> மலர்தரு நெஞ்ச நீல மருவினோன் மயங்கு றானால்.

அலைகளற்ற அந்தப் பேரின்பக் கடலில் மூழ்கிய சமரச ஞானம் கொண்ட யோகி அதன் எல்லையை அறிவதில்லை; குருவருள் எனும் குளிர்ந்த சந்திரனின் நோக்கால் அவனது மனமெனும்

அல்லிப்பூ மலர்வதால் மனதில் யாதொரு மயக்கமும் கொள்வதில்லை.

சிக்ஷாபாதோதகஸ்தலம் முற்றும்

## अथ ज्ञानपादोदकस्थलम्

तदैक्यसम्पदानन्दज्ञानं ज्ञानगुरुर्मतः।
तत्सामरस्यं शिष्यस्य ज्ञानपादोदकं विदुः॥१९॥

அந்த ஐக்கியமெனும் ஆனந்தஞானமே ஞானகுருவாகும்; அந்த சமரசமே சீடனுக்கு ஞானபாதோதகமாகும்.

நாடுமா நந்த ஞானங்க ளேயிவண்
டேடரு ஞானதே சிகன்மற் றன்னவை
கூடிய சமரசங் குலவு பாதநீர்
சீடனென் றுரைத்திடச் சிறந்து ளோர்க்கரோ.

அந்த ஐக்கியமெனும் ஆனந்தஞானமே ஞானகுருவாகும்; அந்த சமரசமே சீடனுக்கு ஞானபாதோதகமாகும்.

अविद्याराहुनिर्मुक्तो ज्ञानचन्द्रः सुनिर्मलः।
प्रकाशते पराकाशे परानन्दमहाद्युतिः॥२०॥
अज्ञानमेघनिर्मुक्तः पूर्णज्ञानसुधाकरः।
आनन्दजलधेर्वृद्धिमनुपश्यन् विभासते॥२१॥

அவித்தை எனும் இராகுவின் மறைப்பிலிருந்து நீங்கிய ஞானமெனும் சந்திரன் பரமாகாசமெனும் வெட்டவெளியில் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. அஞ்ஞான மேகங்களின் மறைப்பிலிருந்து நீங்கிய பரிபூரணஞானமாகிய சந்திரன் ஆனந்தக் கடலின் கொந்தளிப்பினுல் பிரகாசிக்கின்றது.

நிறைவொடு நிமலமாய் நின்ற வித்தையா
மறையர வொடுபுயன் மாறி யின்பமா
மறைகடல் பொலியவா நந்தச் சோதியாற்
கறையறு ஞானவெண் கதிரி லங்குமால்.

அவித்தை எனும் இராகுவின் மறைப்பிலிருந்து நீங்கிய ஞானமெனும் சந்திரன் பரமாகாசமெனும் வெட்டவெளியில் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது.

ज्ञानचन्द्रोदये जाते ध्वस्तमोहतमोभरः।
पश्यन्ति परमां काष्ठां योगिनः सुखरूपिणीम्॥२२॥

ஞானசந்திரன் தோன்றவே அனைத்து இருளும் நீங்கிய யோகி எல்லாவற்றிற்கும் மேலான ஆனந்தநிலையை அடைகின்றனர்.

அறிவெனு மதிவர வவித்தை யாகிய
செறியிரு ளொழிதரச் சிதாநந் தங்களே
குறியெனு மொருபெருங் கோலந் தோன்றுமா
லுறவொடு பகைதவிர் யோகி கட்கரோ

ஞானசந்திரன் தோன்றவே அனைத்து இருளும் நீங்கிய யோகி எல்லாவற்றிற்கும் மேலான ஆனந்தநிலையை அடைந்து உறவு பகை முதலிய நிலையைக் கடந்து இருக்கின்றனர்.

मायारजन्या विरमे बोधसूर्ये प्रकाशिते।
निरस्तसर्वव्यापारश्चित्रं स्वपिति संयमी॥२३॥

மாயையெனும் கொடிய இரவு நீங்கி ஞானசூரியன் பிரகாசிக்கையில் மனம் முதலியவற்றை அடக்கிய யோகி எவ்விதச் செயலுமற்று அமைதியாக உறங்குகிறுன்.

மாயைவல் லிரவற வந்து ஞானமாஞ்
சேயொளி யிரவிதான் றிகழுங் காலையிற்
போயுற வுலகியல் வழக்கம் போற்றுறான்
றூயநல் யோகிதான் றுயிலு மென்பவே.

மாயையெனும் கொடிய இரவு நீங்கி ஞானசூரியன் பிரகாசிக்கையில் மனம் முதலியவற்றை அடக்கிய யோகி எவ்விதச் செயலுமற்று அமைதியாக உறங்குகிறுன்.

अनाद्यविद्याविच्छित्तिवेलायां वरयोगिनः।
प्रकाशते परानन्दः प्रपञ्चेन विना कृतः॥२४॥

नित्यानन्दे निजाकारे विमले परतेजसि।
विलीनचेतसां पुंसां कुतो विश्वविकल्पना॥२५॥

தொடக்கமற்றதான அஞ்ஞானம் நீங்கிய வேளையில் யோகியின் வேற்றுமைகளைக் கடந்த பரமானந்தம் பிரகாசிக்கின்றது; அத்தகைய நித்தியானந்தம் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் போது அவனுக்கு உலகம் முதலான வேற்றுமைகள் ஏது?

அகன்றிட வநாதியா மவித்தை நித்திய
சுகந்திகழ் பரமமாஞ் சூரி யன்றனிற்
புகுந்துறு மனமுடைப் புனித யோகிதான்
சகந்தரு கற்பனை தன்னிற் றோய்வுறான்.

தொடக்கமற்றதான அஞ்ஞானம் நீங்கிய வேளையில் யோகியின் வேற்றுமைகளைக் கடந்த பரமானந்தம் பிரகாசிக்கின்றது; அத்தகைய நித்தியானந்தம் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் போது அவனுக்கு உலகம் முதலான வேற்றுமைகள் ஏது?

कुतो ब्रह्मा कुतो विष्णुः कुतो रुद्रः कुतो रविः।
साक्षात्कृतपरानन्दज्योतिषः साम्यकल्पना॥२६॥
अपरोक्षपरानन्दविलासस्य महात्मनः।
ब्रह्मविष्ण्वादयो देवा विशेषाः सुखबिन्दवः॥२७॥

பரமானந்தத்தை நேரிடையாக அனுபவிக்கையில் பிரம்மா முதலான தேவர்கள் அவனுக்கு இல்லை; அத்தேவர்கள் அவனுடைய பேரானந்தத்தில் சில துளிகளே.

மெய்ப்பர சுகமொடு விளங்கு சோதியர்க்
கொப்பல ரயனரி யுருத்தி ரன்கதி
ரப்படி தமையுணர்ந் தவர்க்கத் தேவர்தாந்
துய்ப்புறு சுகஞ்சிறு துளியொன் றாகுமால்.

பரமானந்தத்தை நேரிடையாக அனுபவிக்கையில் பிரம்மா முதலான தேவர்கள் அவனுக்கு இல்லை; அத்தேவர்கள் அவனுடைய பேரானந்தத்தில் சில துளிகளே.

**यन्मात्रासहितं लोके वाच्छन्ति विषयं नराः।**
**तदप्रमेयमानन्दं परमं को न वाञ्छति॥२८॥**

## इति ज्ञानपादोदकस्थलम्

சிற்றின்பங்களை நுகரும் எந்த மானுடன் தான் அளவற்ற அப்பேரானந்தத்தை விரும்பமாட்டான்?

**மானுடர் சிறுசுக மருவு மிந்திய**
**ஞானம தடைகுவர் நச்சி யிந்திய**
**மானம தறுபரா நந்த வாழ்வினைத்**
**தானெவர் விரும்புவார் சார்தற் கெண்ணியே.**

பரமனந்தத்தை நேரிடையாக அனுபவிக்கையில் பிரம்மா முதலான தேவர்களோ அவனுக்கு இல்லை; அத்தேவர்கள் அவனுடைய பேரானந்தத்தில் சில துளிகளே.

ஞானபாதோதகத்தலம் முற்றும்.

## अथ क्रियानिष्पत्तिस्थलम्

**परकाये क्रियापत्तिः कल्पितैव प्रकाशते।**
**रज्जौ भुजङ्गवद् यस्मात् क्रियानिष्पत्तिमानयम्॥२९॥**

கயிற்றினில் பாம்பு தோன்றுவது போல் தனது உடலின் கிரியைகளை உணர்வதால் கிரியாநிஷ்பத்திமான் எனப்படுகிறான்.

**உன்னரும் பரமநல் யோகி தன்கணே**
**மன்னுறுங் கிரியையோர் வன்க யிற்றினிற்**
**பன்னகம் போன்றுகற் பிக்கப் பட்டதா**
**லன்னவன் றான்கிரி யாநிட் பத்திமான்.**

கயிற்றினில் பாம்பு தோன்றுவது போல் தனது உடலின் கிரியைகளை உணர்வதால் கிரியாநிஷ்பத்திமான் எனப்படுகிறான்.

ज्ञानिनां यानि कर्माणि तानि नो जन्महेतवः।
अग्निदग्धानि बीजानि यथा नाङ्कुरकारणम्॥ ३०॥

நெருப்பினால் வறுக்கப்பட்ட விதைகள் முளையைத் தோற்றுவிக்காதன போல் ஞானிகள் செய்யும் செயல்கள் எதுவும் மேலும் பிறவிகளைத் தோற்றுவிப்பதில்லை.

சிறப்புறு ஞானிசெய் செயல்கள் யாவுமிப்
பிறப்புறு காரண மல்ல பேரழல்
வறுப்புறு விதையினை மண்ணி னொண்முளைக்
குறப்பெறு மேதுவென் றுரைக்க லாகுமோ.

நெருப்பினால் வறுக்கப்பட்ட விதைகள் முளையைத் தோற்றுவிக்காதன போல் ஞானிகள் செய்யும் செயல்கள் எதுவும் மேலும் பிறவிகளைத் தோற்றுவிப்பதில்லை.

कर्मणा किं कृतेनापि ज्ञानिनो निरहङ्कृतेः।
विक्रिया प्रतिबिम्बस्था किं करोति हिमद्युतेः॥ ३१॥

பிரதிபிம்பத்தில் ஏற்படும் மாற்றங்கள் எதுவும் சந்திரனில் தோன்றாதது போல் 'நான்' என்னும் எண்ணமின்றி ஞானிகள் ஆற்றும் செயல்கள் எவ்வித வினையையும் தோற்றுவிப்பதில்லை.

தீதறு ஞானிதன் செயல்க ளாலவற்
கேதுள தெய்துவ திருள்வி ழுங்குறு
சோதிகொண் மதிக்கெதிர் தோன்றும் விம்பமார்
வாதைய துளதுகொன் மதித்து நாடினே.

பிரதிபிம்பத்தில் ஏற்படும் மாற்றங்கள் எதுவும் சந்திரனில் தோன்றாதது போல் 'நான்' என்னும் எண்ணமின்றி ஞானிகள் ஆற்றும் செயல்கள் எவ்வித வினையையும் தோற்றுவிப்பதில்லை.

चन्द्रस्य मेघसम्बन्धाद् यथा गमनकल्पना।
तथा देहस्य सम्बन्धादारोप्या स्यात् क्रियाऽऽत्मनः॥ ३२॥

மேகங்களின் தொடர்பினால் சந்திரனும் நகர்வது போல் தோன்றுகிறது; அது போல் உடலுடன் உள்ள தொடர்பினால் ஆன்மாவும் கிரியைகளைச் செய்வது போல் தோற்றமளிக்கிறது.

> திங்களுக் கிரிதருஞ் செயல்வி சும்பினா
> லிங்குரைத் திடுதல்போ லிசைந்த வாக்கையான்
> மங்கலத் தொளிகொளான் மாவி னுக்குமா
> றக்குமச் செயுந்தொழில் சாற்றப் பட்டிடும்.

மேகங்களின் தொடர்பினால் சந்திரனும் நகர்வது போல் தோன்றுகிறது; அது போல் உடலுடன் உள்ள தொடர்பினால் ஆன்மாவும் கிரியைகளைச் செய்வது போல் தோற்றமளிக்கிறது.

> ज्ञानी कर्मनिरूढोऽपि लिप्यते न क्रियाफलैः।
> घृतादिना यथा जिह्वा भोक्त्री चापि न लिप्यते॥३३॥

நெய்யைச் சுவைப்பதால் நாக்கினில் நெய் ஒட்டாதது போல் கிரியைகளில் ஞானியானவன் ஈடுபட்டிருந்தாலும் அவற்றின் பலன் அவனைச் சென்றடைவதில்லை.

> வினைபல விரவினும் விமல ஞானிதா
> னனையவை தருபய னவண டைந்திடா
> னினியன பலபொரு ளிசைந்த ருந்தினு
> நனியுணு நாவவை நண்ணு மோசொலாய்.

நெய்யைச் சுவைப்பதால் நாக்கினில் நெய் ஒட்டாதது போல் கிரியைகளில் ஞானியானவன் ஈடுபட்டிருந்தாலும் அவற்றின் பலன் அவனைச் சென்றடைவதில்லை.

> निरस्तोपाधिसम्बन्धे जीवे या या क्रियास्थितिः।
> सा सा प्रतीतिमात्रेण निष्फला चात्र लीयते॥३४॥
> गच्छंस्तिष्ठन् स्वपन् वापि न निष्कर्मास्ति कश्चन।
> स्वभावो देहिनां कर्म ज्ञानिनां तत्तु निष्फलम्॥३५॥

எவ்வித உபாதியின் தொடர்புமின்றி ஜீவன் செய்யும் கிரியைகள் யாவும் வெளித்தோற்றமே; அவற்றின் வினைப் பயன் ஜீவனைச் சென்றடையாது; நடத்தல் உறங்குதல் நிற்றல் போன்ற

கிரியைகளைச் செய்தல் சாதாரண மக்களுடைய இயற்கை, ஞானிகளுக்கு அவை கிரியைகளே அல்ல.

விடுத்துள வுபாதியான் வினைகள் யாவுமிங்
கடுத்துள வளவதா யவன்கண் மாயுமா
னடப்பினு மிருப்பினு நனியு றங்கினுந்
தொடக்குறு முயிர்வினை ஞானி தோய்ந்திடான்.

எவ்வித உபாதியின் தொடர்புமின்றி ஜீவன் செய்யும் கிரியைகள் யாவும் வெளித்தோற்றமே; அவற்றின் வினைப் பயன் ஜீவனைச் சென்றடையாது; நடத்தல் உறங்குதல் நிற்றல் போன்ற கிரியைகளைச் செய்தல் சாதாரண மக்களுடைய இயற்கை, ஞானிகளுக்கு அவை கிரியைகளே அல்ல.

परिपूर्णमहानन्दभाविनः शुद्धचेतसः।
न भवेत् कर्मकार्पण्यं नानाभोगफलप्रदम्॥ ३६॥

इति क्रियानिष्पत्तिस्थलम्

நிறைவான ஆனந்தத்தை அனுபவிக்கும் மஹான்களுக்கு பயன்களைத் தரும் சாதாரணக் கிரியைகளைச் செய்வதில் மனம் நாடாது.

நிறையுறு பராநந்த சுத்த நெஞ்சனா
மறிவுடை யவன்றனை யணங்கு வல்வினைச்
செறிதொடர் பந்தனை செயாதென் றோர்கநீ
குறுமுனி யென்றுயர் குணப்பொற் குன்றனாய்.

நிறைவான ஆனந்தத்தை அனுபவிக்கும் மஹான்களுக்கு பயன்களைத் தரும் சாதாரணக் கிரியைகளைச் செய்வதில் மனம் நாடாது.

கிரியாநிட்பத்தித்தலம் முற்றும்.

## अथ भावनिष्पत्तिस्थलम्

भावः प्रतीयमानोऽपि परकाये तु कल्पितः।
शुक्तौ रजतवद् यस्माद् भावनिष्पत्तिमानयम्॥ ३७॥

பாவங்களாகிய எண்ணங்கள் உணரப்பட்டாலும் அவை கிளிஞ்சலில் வெள்ளி தோன்றுவது போல் பரகாயத்தின்கண் கற்பிக்கப்பட்டவையே; ஆதலால் பாவநிஷ்பத்திமான் எனப்படுகிறுன்.

உடைத்திடு மயலுடை யோகி தன்கணே
யடுத்துள பாவமிப் பியின்க ணாகிய
கடுத்துள வெள்ளிபோற் காட்ட லாலிவன்
படைத்துள பாவநிட் பத்தி மானரோ.

பாவங்களாகிய எண்ணங்கள் உணரப்பட்டாலும் அவை கிளிஞ்சலில் வெள்ளி தோன்றுவது போல் பரகாயத்தின்கண் கற்பிக்கப்பட்டவையே; ஆதலால் பாவநிஷ்பத்திமான் எனப்படுகிறுன்.

भावेन नास्ति सम्बन्धः केवलज्ञानयोगिनः।
तथापि भावं कुर्वीत शिवे संसारमोचके॥ ३८॥

உயர்ந்த ஞானத்தையடைந்த யோகிக்குப் பாவத்துடன் எவ்விதத் தொடர்புமில்லே; எனினும் சம்சாரநோயை நீக்கவல்லவரான சிவபிரான்மீது பாவம் (பக்தி) கொள்ளவேண்டும்.

பரமஞா னிக்கொரு பாவ பந்தந
மருவுறா தெனினுமே வருத்து வெம்பவ
மொருவவா ரருள்புரி யொருசி வத்தினில்
விரவுபா வனையது மேவ வேண்டுமால்.

உயர்ந்த ஞானத்தையடைந்த யோகிக்குப் பாவத்துடன் எவ்விதத் தொடர்புமில்லே; எனினும் சம்சாரநோயை நீக்கவல்லவரான சிவபிரான்மீது பாவம் (பக்தி) கொள்ளவேண்டும்.

परिपूर्णप्रबोधेऽपि भावं शम्भौ न वर्जयेत्।
भावो हि निहितस्तस्मिन् भवसागरतारकः॥३९॥

பரிபூரண ஞானம் பெற்ற பின்னும் சிவபெருமானிடத்தில் பக்தி கொள்ளவேண்டும்; அந்த பக்தியொன்றே சம்சாரக் கடலிலிருந்து கரையேற்றவல்லது.

நிரம்பிய சிதாநந்த நித்தன் றன்கணே
விரும்பிய பாவனை விடேல வன்றனிற்
பரம்பெறு பாவனை பரவு வெம்பவக்
கருங்கடல் கடந்திடக் கடத்து மென்பவே.

பரிபூரண ஞானம் பெற்ற பின்னும் சிவபெருமானிடத்தில் பக்தி கொள்ளவேண்டும்; அந்த பக்தியொன்றே சம்சாரக் கடலிலிருந்து கரையேற்றவல்லது.

निवर्त्य जन्मजं दुःखं भावः शैवो निवर्तते।
यथा काष्ठादिकं दग्ध्वा स्वयं शाम्यति पावकः॥४०॥

மரக்கட்டையை எரித்துப் பொசுக்கிய பின் நெருப்பு தானகவே அணைந்து விடுவது போல் சிவபக்தியானது சம்சாரப் பிணியை நீக்கியபின் தானகவே நீங்கிவிடும்.

இங்குறு பவவிடா யாவு நீக்கியே
சங்கர பாவனை தானு நீங்குமாற்
பொங்கழல் விறகினைப் பொடித்து நின்றுதா
னங்கவி யாமலே யடுக்கு மோசொலாய்.

மரக்கட்டையை எரித்துப் பொசுக்கிய பின் நெருப்பு தானகவே அணைந்து விடுவது போல் சிவபக்தியானது சம்சாரப் பிணியை நீக்கியபின் தானகவே நீங்கிவிடும்.

प्रकाशिते शिवानन्दे तद्भावैः किं प्रयोजनम्।
सिद्धे साध्ये चिरेणापि साधनैः किं प्रयोजनम्॥४१॥

சிவானந்தானுபவம் பிரகாசிக்கையில் பாவங்களால் யாது பயன்? அடைய வேண்டியது கிட்டியபின் அந்தச் சாதனங்களால் யாது பயன்?

ஏத்துறு சிவாநந்த மெய்தி னென்செயும்
வாய்த்தபா வனையினி மனத்தி னெண்பொருள்
சாத்திய மாயுறிற் சாத நங்களாற்
பேர்த்தொரு பயனிலை பேசுங் காலையே.

சிவானந்தானுபவம் பிரகாசிக்கையில் பாவங்களால் யாது பயன்? அடைய வேண்டியது கிட்டியபின் அந்தச் சாதனங்களால் யாது பயன்?

एकीकृते शिवे भावे ज्ञानेन सह संयमी।
विस्मितात्मसमावेशः शिवभावे विभासते॥ ४२॥
न भावेन विना ज्ञानं न भावो ज्ञानमन्तरा।
मोक्षाय कारणं प्रोक्तं तस्मादुभयमाश्रयेत्॥ ४३॥

## इति भावनिष्पत्तिस्थलम्

ஞானத்தினுல் சிவபாவத்தில் ஐக்கியமடைந்த யோகி தனது ஆன்மாவுடன் ஒன்றி சிவபாவத்தில் பிரகாசிக்கிருன்; பாவமில்லையேல் ஞானமில்லை, ஞானமில்லையேல் பாவமின்று. எனவே மோட்சத்திற்குக் காரணமான இவ்விரண்டையும் கடைப்பிடிக்க வேண்டும்.

பாவமு ஞானமும் பரனி லேகமாய்
மேவிடி னொருசிவ மாய்வி ளங்குவான்
பாவமு ஞானமும் வேறு பட்டுநின்
றாவந வின்மையா லவைவி டேலரோ.

ஞானத்தினுல் சிவபாவத்தில் ஐக்கியமடைந்த யோகி தனது ஆன்மாவுடன் ஒன்றி சிவபாவத்தில் பிரகாசிக்கிருன்; பாவமில்லையேல் ஞானமில்லை, ஞானமில்லையேல் பாவமின்று.

எனவே மோட்சத்திற்குக் காரணமான இவ்விரண்டையும் கடைப்பிடிக்க வேண்டும்.

பாவநிட்பத்தித்தலம் முற்றும்.

ज्ञानस्य व्यवहारेऽपि ज्ञेयाभावात् स्वभावतः।
स्वप्नवज्ज्ञाननिष्पत्त्या ज्ञाननिष्पन्न इत्यसौ॥ ४४॥

ஞானம் செயல்படினும் அறியப்படவேண்டியது ஒன்றுமிலாமல் கனவு போல் இருக்கையில் அவன் ஞானநிஷ்பன்னன் எனப்படுகிறுன்.

உலகினி லுணர்பொரு ளுணர்விற் கின்மையா
லிலகுறு மிவன்கன வென்ன ஞாலமேற்
பலர்புகழ் ஞானநிட் பத்தி மேவலா
னலமலி ஞானநிட் பன்ன னென்பரால்.

ஞானம் செயல்படினும் அறியப்படவேண்டியது ஒன்றுமிலாமல் கனவு போல் இருக்கையில் அவன் ஞானநிஷ்பன்னன் எனப்படுகிறுன்.

स्वप्नजातं यथा ज्ञानं सह स्वार्थैर्निवर्तते।
तथात्मनि प्रकाशे तु ज्ञानं ज्ञेयं निवर्तते॥ ४५॥

சொப்பனத்தில் கண்டவை அந்த ஞானத்துடன் நீங்குவது போல் ஆன்மா பிரகாசிக்கையில் அறிவு, அறியப்படும் பொருள் ஆகியன நீங்கும்.

சொற்பனந் தனில்வரு முணர்வு தோன்றுமப்
பற்பல பொருளொடு போகும் பான்மைபோற்
றற்பர மிலகுறத் தன்னு ணர்ச்சியான்
முற்பெறு ஞேயமு முடிந்து போகுமால்.

சொப்பனத்தில் கண்டவை அந்த ஞானத்துடன் நீங்குவது போல் ஆன்மா பிரகாசிக்கையில் அறிவு, அறியப்படும் பொருள் ஆகியன நீங்கும்.

परिपूर्णे महानन्दे परमाकाशलक्षणे।
शिवे विलीनचित्तस्य कुतो ज्ञेयान्तरे कथा॥४६॥

பரமாகாசமென்றழைக்கப்படும் பரிபூரண பரமானந்த சிவனிடத்தில் இரண்டறக் கலந்தவனுக்கு அறியவேண்டியது வேறு உண்டோ?

நிறைந்திடு பராநந்த நிமலன் றன்னிடை
யிறந்துள மனமுடை யிவற்கு ஞேயமா
யறிந்திடு பொருள்சிவ மன்றி யில்லையென்
றுறுந்தவ முனிவர வுலக மோதுமால்.

பரமாகாசமென்றழைக்கப்படும் பரிபூரண பரமானந்த சிவனிடத்தில் இரண்டறக் கலந்தவனுக்கு அறியவேண்டியது வேறு உண்டோ?

अखण्डानन्दसंवित्तिस्वरूपं ब्रह्म केवलम्।
मिथ्या तदन्यदित्येषा स्थितिर्ज्ञानमिहोच्यते॥४७॥

விரிந்து பரந்த ஞானனந்தமான பிரம்மமொன்றே உண்மை, மற்றவை யாவும் பொய்யானவையே என உணர்தலே ஞானம்.

சச்சிதா நந்தமாந் தன்மை யோன்சிவ
னிச்சக மியாவுமோ மித்தை யென்பதிங்
கச்சுறா ஞானமென்றறிவி லக்கணம்
வச்சநூ லுணர்பவர் வகுத்துக் கூறுவார்.

விரிந்து பரந்த ஞானனந்தமான பிரம்மமொன்றே உண்மை, மற்றவை யாவும் பொய்யானவையே என உணர்தலே ஞானம்.

सत्तात्मनाऽनुवृत्तं यद् घटादिषु परं हि तत्।
व्यावर्तमाना मिथ्येति स्थितिर्ज्ञानमिहोच्यते॥४८॥

உலகிலுள்ள அனைத்துப் பொருள்களிலும் அவற்றின் அடிப்படையான இருத்தல் எனும் நிலையே என்றுமழியாத உண்மை; அதை நீக்கி மற்றவை யாவும் பொய்யே என உணர்தலே ஞானம்.

உற்றிடு பரனில்வே றாங்க டாதியிற்
பற்றிநின் றிடுவன பார்த்து மித்தையென்
றற்றிட விடுதலை யறிவென் றோதுவார்
தெற்றென வறிவறி திறத்தின் மேலையோர்.

உலகிலுள்ள அனைத்துப் பொருள்களிலும் அவற்றின் அடிப்படையான இருத்தல் எனும் நிலையே என்றுமழியாத உண்மை; அதை நீக்கி மற்றவை யாவும் பொய்யே என உணர்தலே ஞானம்.

अकारणमकार्यं यदशेषोपाधिवर्जितम्।
तद्ब्रह्म तदहं चेति निष्ठा ज्ञानमुदीर्यते॥ ४९॥

காரண காரிய நிலைகளைக் கடந்து எவ்வித உபாதியுமற்ற பிரம்மமே நான் என உணர்தலே ஞானமாகும்.

காரண காரி யங்கள் கடந்துபா திகள னைத்து
மாரண மடைய நின்ற வத்துவே பிரம மந்த
வேரணி பிரம நானென் றிருந்திடு நிட்டை தானே
சீரணி ஞான மென்பர் செழுமறை கற்று ணர்ந்தோர்.

காரண காரிய நிலைகளைக் கடந்து எவ்வித உபாதியுமற்ற பிரம்மமே நான் என உணர்தலே ஞானமாகும்.

ज्ञाताप्यहं ज्ञेयमिदमिति व्यवहृतिः कुतः।
अभेदब्रह्मस्वारस्ये निरस्ताखिलवस्तुनि॥ ५०॥

इति ज्ञाननिष्पत्तिस्थलम्

எவ்வித வேறுபாடுமற்ற பிரம்மானுபவ நிலையில் நான் அறிவோன், இது அறியப்படும் பொருள் எனும் வேறுபாடுகள் ஏது?

விரிந்துள பொருள னைத்தும் விடுத்தொரு முதலாய் நின்ற
பரந்தனி லபேத மெய்தப் படுமெனி னறிகு வேனான்
றெரிந்தறி ஞேய மீதென் றுணர்தருந் திறத்து ஞானம்
பொருந்துவ தெவ்வி டத்து மிலையெனப் புகல்வர் கற்றோர்.

எவ்வித வேறுபாடுமற்ற பிரம்மானுபவ நிலையில் நான் அறிவோன், இது அறியப்படும் பொருள் எனும் வேறுபாடுகள் ஏது?

ஞானநிட்பத்தித்தலம் முற்றும்.

## अथ पिण्डाकाशस्थलम्

यथा पिण्डस्थ आकाशस्तथात्मा पूर्ण उच्यते।
एतदर्थविवेको यः पिण्डाकाशस्थलं विदुः॥५१॥

பிண்டத்திலுள்ள ஆகாசம் போல் ஆன்மாவும் பரிபூரணமானது என்றறிதலே பிண்டாகாசஸ்தலம் எனப்படும்.

நெடியவான் பிண்டத் துற்று நிறைவெனப் படுதல் போலப்
படியறு மான்மா வுந்தா னிறைவெனப் படுமென் றோர்வாய்
விடலரு மிவன திந்தப் பொருடெரி விவேக மேதான்
றடையறு பிண்டா காசத் தலமென வறைவர் மேலோர்.

பிண்டத்திலுள்ள ஆகாசம் போல் ஆன்மாவும் பரிபூரணமானது என்றறிதலே பிண்டாகாசஸ்தலம் எனப்படும்.

घटोपाधिर्यथाकाशः परिपूर्णः स्वरूपतः।
तथा पिण्डस्थितो ह्यात्मा परिपूर्णः प्रकाशते॥५२॥

குடம் எனும் உபாதியில் விரிந்து பரந்த ஆகாயம் பிரகாசிப்பது போல் பிண்டத்திலுள்ள ஆன்மா விளங்குகிறது.

குடத்தினி லுறுவி சும்பு குறிக்கிற்பூ ரணமா மாபோ
லடுத்துறு பிண்டத் தான்மா வதனது சொரூபத் தானே
தடுப்பரு நிறைவ தாகித் தயங்குமென் றறைவர் மேலோர்
கடத்தினி லுதித்து மிக்க கடல்குடித் துயர்ந்த மேலோய்.

குடம் எனும் உபாதியில் விரிந்து பரந்த ஆகாயம் பிரகாசிப்பது போல் பிண்டத்திலுள்ள ஆன்மா விளங்குகிறது.

अन्तःस्थितं पराकाशं शिवमद्वैतलक्षणम्।
भावयेद् यः सुमनसा पिण्डाकाशः स उच्यते॥ ५३॥

அகத்திலுள்ள அத்துவைத சொரூபமான சிவமெனும் ஆகாசத்தை எப்போதும் தியானிப்பவன் பிண்டாகாசன் என அழைக்கப்படுகின்ருன்.

அகத்தினிற் பரவி சும்பா யத்துவி தத்த தாகி
மிகுத்துறு சிவத்தை யென்றும் விமலமா மனத்திற் பாவ
மிகப்பற வியற்று வோனே யியம்பிற்பிண் டாகா சத்தன்
றகக்கலை முழுது மோர்ந்து தயங்கிய முனிவ ரேறே.

அகத்திலுள்ள அத்துவைத சொரூபமான சிவமெனும் ஆகாசத்தை எப்போதும் தியானிப்பவன் பிண்டாகாசன் என அழைக்கப்படுகின்ருன்.

शिवागारमिदं प्रोक्तं शरीरं बोधदीपितम्।
षट्त्रिंशत्तत्त्वघटितं सुमनःपद्मपीठकम्॥ ५४॥

இந்த உடலானது சிவபிரானுடைய இருப்பிடம், முப்பத்தாறு தத்துவங்களால் ஆக்கப்பட்டது, ஞான விளக்கால் ஒளியூட்டப்பட்டு தூய்மையான மனமெனும் பத்மபீடத்தையுடையது.

தத்துவ முப்பத் தாறாற் சமைத்திடப் பட்டு மாசில்
சுத்தநன் மனமாம் பீடந் துளக்கற வமைத்து ஞானப்
புத்தொளி மணிவி ளக்குப் பொருந்துறு மிந்த யாக்கை
யத்தனஞ் சிவனி ருக்கு மாலய மென்பர் மேலோர்.

இந்த உடலானது சிவபிரானுடைய இருப்பிடம், முப்பத்தாறு தத்துவங்களால் ஆக்கப்பட்டது, ஞான விளக்கால் ஒளியூட்டப்பட்டு தூய்மையான மனமெனும் பத்மபீடத்தையுடையது.

पराकाशस्वरूपेण प्रकाशः परमेश्वरः।
हृदाकाशगुहालीनो दृश्यतेऽन्तः शरीरिणाम्॥ ५५॥

एतच्छिवपुरं प्रोक्तं सप्तधातुसमावृतम्।
अत्र हृत्पङ्कजं वेश्म सूक्ष्माम्बरमनोहरम्॥५६॥

பரமாகாச வடிவினஞன பரமேசுவரன் இவ்வுடலினுள் ஒளிவிட்டுப் பிரகாசிக்கிறுர்; சிவபுரமென விளங்கும் இவ்வுடல் ஏழு வகையான தாதுக்களால் சூழப்பட்டது; இங்கு இதயகமலமே சிவபிரானின் இருப்பிடம், சூக்ஷ்மமான ஆகாசத்தால் மிக அழகுற விளங்குகிறது.

மிக்குறு பரமா காச மேனியாய் விளங்கு மீசன்
மெய்க்கணி னவரு ளத்தின் மேவுவோ னாகக் காண்க
விக்குறி யுடல மாகுஞ் சிவபுரத் திதயக் கோயில்
புக்குறு மமல நீரிற் பொருந்திய விசும்பு போல.

பரமாகாச வடிவினஞன பரமேசுவரன் இவ்வுடலினுள் ஒளிவிட்டுப் பிரகாசிக்கிறுர்; சிவபுரமென விளங்கும் இவ்வுடல் ஏழு வகையான தாதுக்களால் சூழப்பட்டது; இங்கு இதயகமலமே சிவபிரானின் இருப்பிடம், சூக்ஷ்மமான ஆகாசத்தால் மிக அழகுற விளங்குகிறது.

तत्र सन्निहितं साक्षात् सच्चिदानन्दलक्षणम्।
नित्यसिद्धः प्रकाशात्मा जलस्थाकाशवच्छिवः॥५७॥
अन्तराकाशबिम्बस्थमशेषोपाधिवर्जितम्।
घटाकाश इव च्छिन्नं भावयेच्चिन्मयं शिवम्॥५८॥

## इति पिण्डाकाशस्थलम्

அங்கு எப்போதும் நீரும் ஆகாசமும் போல் பிரிவறக் கலந்து ஒளிவிட்டுப் பிரகாசிக்கிறுர் சிவபிரான்; எவ்வித உபாதியுமின்றி இதய ஆகாசத்தில் ஸச்சிதானந்த வடிவாக இலங்கும் சின்மயஞன சிவபிரானை எப்போதும் தியானம் செய்ய வேண்டும்.

அந்தரா காச விம்பத் தடுத்துபா திகள னைத்தும்
வந்துறா தொழிந்து நிற்கு மணிக்குட வானம் போல

முந்தையோர் சின்ன மாகி மூதறி வுருவாய் நின்ற
வெந்தையாஞ் சிவத்தை யென்று மியல்பிற்பா விக்க மாதோ.

அங்கு எப்போதும் நீரும் ஆகாசமும் போல் பிரிவறக் கலந்து ஒளிவிட்டுப் பிரகாசிக்கிறுர் சிவபிரான்; எவ்வித உபாதியுமின்றி இதய ஆகாசத்தில் ஸச்சிதானந்த வடிவாக இலங்கும் சின்மயஞன சிவபிராஜன எப்போதும் தியானம் செய்ய வேண்டும்.

பிண்டாகாசத்தலம் முற்றும்

## अथ बिन्द्वाकाशस्थलम्

यथाकाशो विभुर्ज्ञेयः सर्वप्राण्युपरि स्थितः।
तथात्मेत्युपमानार्थं बिन्द्वाकाशस्थलं विदुः॥५९॥

அனைத்து ஜீவர்களுக்கும் மேலாக ஆகாசம் விளங்குவது போல் ஆன்மாவும் அவ்வாறே விளங்குகிறது; இந்த உவமையைப் பிந்த்வாகாசஸ்தலம் என அழைக்கின்றனர்.

உலகினி லெவர்க்கு மேலா யுயர்தரு மகல்வி சும்பை
யிலகுற விபுவென் றோரு மியல்பென மேலா மான்மா
வலகறு விபுவென் றோர்க வாயவிவ் வுவமை கொண்டு
விலகறு பொருளை யேதான் விந்துவிண் டலம தென்பர்.

அனைத்து ஜீவர்களுக்கும் மேலாக ஆகாசம் விளங்குவது போல் ஆன்மாவும் அவ்வாறே விளங்குகிறது; இந்த உவமையைப் பிந்த்வாகாசஸ்தலம் என அழைக்கின்றனர்.

यथैको वायुराख्यातः सर्वप्राणिगतो विभुः।
तथात्मा व्यापकः साक्षात् सर्वप्राणिगतः स्वयम्॥६०॥
यथा वह्निरमेयात्मा सर्वत्रैकोऽपि भासते।
तथा शम्भुः समस्तात्मा परिच्छेदविवर्जितः॥६१॥

ஓரே வாயு எல்லாப் பிரணிகளிடத்தும் வியாபித்திருப்பது போல் ஆன்மாவும் அவ்வாறே வியாபித்திருக்கிறது; அளவற்ற திறன்

கொண்ட அக்கினி எவ்விடத்தும் பிரகாசிப்பது போல் சிவபெருமானும் எல்லையற்று எங்கும் வியாபித்திருக்கிருர்.

யாவர்த மிடத்து மோர்காற் றிருப்பினு நிறைவா மாபோல்
யாவர்த மிடத்துந் தானே யிருப்பினும் விபுவா மான்மா
மேவுறு வன்னி யொன்றே யெங்கணும் விளங்கல் போலத்
தேவர்க டேவன் றானுங் கண்டிதந் தீர்ந்தோ னாவான்.

ஒரே வாயு எல்லாப் பிரணிகளிடத்தும் வியாபித்திருப்பது போல் ஆன்மாவும் அவ்வாறே வியாபித்திருக்கிறது; அளவற்ற திறன் கொண்ட அக்கினி எவ்விடத்தும் பிரகாசிப்பது போல் சிவபெருமானும் எல்லையற்று எங்கும் வியாபித்திருக்கிருர்.

सर्वेषां देहिनामन्तश्चित् ततोऽयं प्रकाशते।
तस्मिन् प्रतिफलत्यात्मा शिवो दर्पणवद् विभुः॥६२॥
एको वशीकृतः संवित्प्रकाशात्मा परात्परः।
सर्वप्राणिगतो भाति तथापि विभुरुच्यते॥६३॥

எல்லா ஜீவர்களுக்குள்ளும் சித்தமாகிய பிரகாசிக்கின்றது; அந்தக் கண்ணுடியில் சிவனுகிய ஆன்மா பிரதிபலிக்கின்றது. அறிவுடைத்தாகிய ஆன்மா எல்லாப் பிராணிகளிடத்தும் பிரகாசிக்கிறது, எங்கும் வியாபித்தும் விளங்குகிறது.

தேகிக ளனைவ ருள்ளுஞ் சித்தமா கியகண் ணாடி
சேகற விளங்கு மென்றும் விபுவெனுஞ் சிவன்றா னான்மா
வாயுட லதில்விம் பித்திட் டமர்குவன் மேலின் மேலா
மேகனிவ் வனைவர் கண்ணு மிருப்பினும் விபுவா மென்பர்.

எல்லா ஜீவர்களுக்குள்ளும் சித்தமாகிய பிரகாசிக்கின்றது; அந்தக் கண்ணுடியில் சிவனுகிய ஆன்மா பிரதிபலிக்கின்றது. அறிவுடைத்தாகிய ஆன்மா எல்லாப் பிராணிகளிடத்தும் பிரகாசிக்கிறது, எங்கும் வியாபித்தும் விளங்குகிறது.

एक एव यथा सूर्यस्तेजसा भाति सर्वगः।
तथात्मा शक्तिभेदेन शिवः सर्वगतो भवेत्॥ ६४॥

### इति बिन्द्वाकाशस्थलम्

ஒரே சூரியன் எங்கும் நிறைந்து பிரகாசிப்பது போல் ஒரே சிவபிரான் தனது ஒப்பற்ற சக்தியால் எங்கும் வியாபித்து விளங்குகிறுர்.

**செங்கதி ரொன்று தானே தேசுறு கிரணந் தன்னா**
**லெங்கணு நிறைதலுற்றே யிலங்குறு மதனைப்போல**
**மங்கல வடிவா மான்மா மல்குதன் சத்தி தன்னா**
**லெங்கணு மிடைந்தோ னாகி யிலங்குவ னென்பர் மேலோர்.**

ஒரே சூரியன் எங்கும் நிறைந்து பிரகாசிப்பது போல் ஒரே சிவபிரான் தனது ஒப்பற்ற சக்தியால் எங்கும் வியாபித்து விளங்குகிறுர்.

விந்தாகாசத்தலம் முற்றும்.

### अथ महाकाशस्थलम्

पिण्डाण्डस्थं यथाकाशं न भिन्नं तद्वदात्मनः।
अभिन्नः परमात्मेति महाकाशस्थलं विदुः॥ ६५॥

உலகமாகிய அண்டத்திலும் ஆன்மாவாகிய பிண்டத்திலும் ஒரே ஆகாயம் விளங்குவது போல் பரமாத்மா அவ்வாறே விளங்குகிறுர் என்பதே மஹாகாசஸ்தலம் எனப்படும்.

**அண்டபிண் டத்தி லுற்ற வம்பரம் வேறா காமைக்**
**கண்டன மதனைப் போலக் கருதரு மிவனான் மாவி**
**லுண்டெனும் பரமான் மாவே றுறுவதின் றிதையுணர்ந்து**
**கொண்டிடன் மகதா காசத் தலமெனக் குறிப்ப ரன்றே.**

உலகமாகிய அண்டத்திலும் ஆன்மாவாகிய பிண்டத்திலும் ஒரே ஆகாயம் விளங்குவது போல் பரமாத்மா அவ்வாறே விளங்குகிறுர் என்பதே மஹாகாசஸ்தலம் எனப்படும்.

यथा न भिन्नमाकाशं घटेषु च मठेषु च।
तथाण्डेषु च पिण्डेषु स्थितो ह्यात्मा न भिद्यते॥ ६६॥

குடத்திலும் மடத்திலும் ஒரே ஆகாயம் விளங்குவது போல் அண்டத்திலும் பிண்டத்திலும் ஒரே ஆன்மாதான் பிரகாசிக்கிறது.

கடத்தினு மடத்தின் கண்ணுங் கலந்தவா காசம் வேறா
யடுத்திட லிலாதவாபோ லண்டபிண் டத்தின் கண்ணே
யெடுத்துரை செயுமான் மாவும் பின்னமன் றினைய மாற்றந்
தடுத்திட லரிய வேதந் தலையினாற் சுமக்கு மன்றே.

குடத்திலும் மடத்திலும் ஒரே ஆகாயம் விளங்குவது போல் அண்டத்திலும் பிண்டத்திலும் ஒரே ஆன்மாதான் பிரகாசிக்கிறது.

अनिर्देश्यमनौपम्यमवाङ्मनसगोचरम्।
सर्वतोमुखसम्पन्नं सत्तानन्दं चिदात्मकम्॥ ६७॥
कालातीतं कलातीतं क्रमयोगादिवर्जितम्।
स्वानुभूतिप्रमाणस्थं ज्योतिषामुदयस्थलम्॥ ६८॥
शिवाख्यं परमं ब्रह्म परमाकाशलक्षणम्।
लिङ्गमित्युच्यते सद्भिर्यद्विना न जगत्स्थितिः॥ ६९॥

இத்தகையது எனச் சுட்டி அறியவொண்ணுததும், உவமையற்றதும், வாக்கு மனம் ஆகியவற்றுக்கு அப்பாற்பட்டதும், எங்கும் குறைவற நிறைந்திருப்பதும், உண்மையானதும், காலம், கலை ஆகியவற்றிற்கு உட்படாததும், எவ்விதக் கட்டுப்பாட்டுக்குமுட்படாததும், அவரவர்களால் அனுபவித்து உணரப்படுவதற்கு மட்டுமே உரியதும், எல்லா ஒளிகளுக்கும் பிறப்பிடமானதும், எல்லாவற்றுக்கும் மேலான ஆகாசமாக விளங்குவதுமான சிவமெனும் பரம்பொருள் ஒன்றே லிங்கமென்று கற்றவர்களால் அழைக்கப்படுகிறது; அனைத்துலகங்களுக்கும் அது ஒன்றே ஆதாரம்.

ஓங்கொளி யாகிக் கால மொப்புரை மனங்க டந்து
தீங்கறு சுவாநு பூதிப் பிரமாணஞ் செறிவுற் றியாவுந்

தாங்குறு நிலைமை சச்சி தாநந்தம் பரமா காச
மாங்கது சிவமி லிங்கம் பிரமமென் றறையா நிற்கும்.

காலம்,கலை ஆகியவற்றிற்கு உட்படாததும், எவ்விதக் கட்டுப்பாட்டுக்குமுட்படாததும், அவரவர்களால் அனுபவித்து உணரப்படுவதற்கு மட்டுமே உரியதும், எல்லா ஒளிகளுக்கும் பிறப்பிடமானதும், எல்லாவற்றுக்கும் மேலான ஆகாசமாக விளங்குவதுமான சிவமெனும் பரம்பொருள் ஒன்றே லிங்கமென்று கற்றவர்களால் அழைக்கப்படுகிறது; அனைத்துலகங்களுக்கும் அது ஒன்றே ஆதாரம்.

परमाकाशमव्यक्तं प्रबोधानन्दलक्षणम्।
लिङ्गं ज्योतिर्मयं प्राहुर्लीयन्ते यत्र योगिनः ॥७०॥
संविदेव परा काष्ठा परमानन्दरूपिणी।
तामाहुः परमाकाशं मुनयो मुक्तसंशयाः ॥७१॥

மேலான ஆகாசமாக விளங்குவதும், அறிவு மற்றும் ஆனந்த வடிவானதும், பிரகாசிப்பதுமான பரம்பொருளினிடத்தில் எல்லாம் சென்று ஒடுங்குவதால் லிங்கம் என யோகிகளால் அழைக்கப்படுகிறது; அனைத்துக்கும் மேலான அதன் ஞானமே பரமானந்த வடிவாய் பரமாகாசமென முனிவர்களால் வழங்கப்படுகிறது.

யோகிகண் மனம டங்கு மொருபரஞ் சோதி யாய்மால்
போகிய வறிவா நந்த பூரண வுண்மை யாகி
மோகமின் முனிவர் கூறு முதன்மையாம் பரமா காச
மாகன லிங்க மென்று வகுத்துரை செய்வர் மேலோர்.

மேலான ஆகாசமாக விளங்குவதும், அறிவு மற்றும் ஆனந்த வடிவானதும், பிரகாசிப்பதுமான பரம்பொருளினிடத்தில் எல்லாம் சென்று ஒடுங்குவதால் லிங்கம் என யோகிகளால் அழைக்கப்படுகிறது; அனைத்துக்கும் மேலான அதன் ஞானமே பரமானந்த வடிவாய் பரமாகாசமென முனிவர்களால் வழங்கப்படுகிறது.

तरङ्गादि यथा सिन्धोः स्वरूपान्नातिरिच्यते ।
तथा शिवाच्चिदाकाशाद् विश्वमेतन्न भिद्यते॥ ७२॥
यथा पुष्पपलाशादि वृक्षरूपान्न भिद्यते।
तथा शिवात् पराकाशाज्जगतो नास्ति भिन्नता॥ ७३॥

அலைகள் முதலியன கடலினின்று வேறற்றன போல் சிவபிரானிலிருந்து இவ்வுலகங்கள் வேறன்று; பூ இலைகள் போன்றவை மரத்திலிருந்து வேறற்றன போல் பரமாகாசமான சிவபெருமானிடமிருந்து உலகங்கள் வேறன்று.

திரைநுரை கடல்வே றாகாச் செழுமல ரிலைகா யெல்லா
மரனில்வே றாகா வாபோல் வகுக்குமிவ் வுலகந் தானும்
பரனில்வே றாவ தின்று பற்பல வுடுக்கள் வானில்
விரவல்போற் பரமா காச மேவியிவ் வுலகி லங்கும்.

அலைகள் முதலியன கடலினின்று வேறற்றன போல் சிவபிரானிலிருந்து இவ்வுலகங்கள் வேறன்று; பூ இலைகள் போன்றவை மரத்திலிருந்து வேறற்றன போல் பரமாகாசமான சிவபெருமானிடமிருந்து உலகங்கள் வேறன்று.

यथा ज्योतींषि भासन्ते भूताकाशे पृथक् पृथक्।
तथा भान्ति पराकाशे ब्रह्माण्डानि विशेषतः॥ ७४॥
निरस्तोपाधिसम्बन्धं निर्मलं संविदात्मकम्।
पराकाशं जगच्चित्रविलासालम्बभित्तिकम्॥ ७५॥

## इति महाकाशस्थलम्

ஆகாயத்தில் பற்பல நட்சத்திரங்கள் ஒளிவிட்டுப் பிரகாசிப்பது போல் பரமாகாசமெனும் வெட்ட வெளியில் பற்பல உலகங்கள் தனித் தனியே பிரகாசிக்கின்றன; அறிவொளியாய் மலங்களற்றதாய் விளங்கும் பரமாகாசம் ஒன்றே உலகங்களாகிய பற்பல சித்திரங்கள் பிரகாசிப்பதற்கு ஆதாரமான சுவர் போல் திகழ்கின்றது.

நீங்கிய வுபாதி கொண்டு நிமலமாம் பரமா காச
மோங்குறு முலக மென்னு மோவியம் பலவுந் தோன்றத்

தாங்குறு பித்தி யாகித் தயங்குமென் றறிஞர் சொல்வர்
தீங்குறு புலக்கு றும்பு செற்றுயர் முனிவர் வேந்தே.

ஆகாயத்தில் பற்பல நட்சத்திரங்கள் ஒளிவிட்டுப் பிரகாசிப்பது போல் பரமாகாசமெனும் வெட்ட வெளியில் பற்பல உலகங்கள் தனித் தனியே பிரகாசிக்கின்றன; அறிவொளியாய் மலங்களற்றதாய் விளங்கும் பரமாகாசம் ஒன்றே உலகங்களாகிய பற்பல சித்திரங்கள் பிரகாசிப்பதற்கு ஆதாரமான சுவர் போல் திகழ்கின்றது.

மகதாகாசத்தலம் முற்றும்.

## अथ क्रियाप्रकाशस्थलम्

शिवस्य परिपूर्णस्य चिदाकाशस्वरूपिणः।
आत्मत्वेनानुसन्धानात् क्रियाद्योतनवान् यमी॥ ७६॥

பரிபூரணமான சைதன்னியமாய்த் திகழும் சிவபிரானே ஆன்மா என உணர்வதால் யோகியானவன் கிரியாத்யோதனன் எனப்படுகிறுன்.

நிறைவுறு மதுவாய் ஞான காசமாய் நிகழ்சி வத்தி
னறைவுறு சொருபந் தன்னோ டநுசந்தா நத்தி னாலே
யுறுவினை யறுமி வன்றான் கிரியைமா வொளிய னென்ன
மறுவறு கலையு ணர்ந்தோர் வகுத்துரை செய்வ ரன்றே.

பரிபூரணமான சைதன்னியமாய்த் திகழும் சிவபிரானே ஆன்மா என உணர்வதால் யோகியானவன் கிரியாத்யோதனன் எனப்படுகிறுன்.

निष्कलङ्कचिदानन्दगगनोपमरूपिणः।
शिवस्य परिपूर्णस्य वृत्तिश्चैतन्यरूपिणी॥ ७७॥
निष्कलङ्के निराकारे नित्ये परमतेजसि।
विलीनचित्तवृत्तस्य तथा शक्तिः क्रियोच्यते॥ ७८॥

களங்கமற்ற சைதன்னியமானதும் பேரானந்த வடிவானதும் ஆகாயம் போல் பரந்து விளங்குவதும் பரிபூரணமானதுமான சிவபிரானின் ஆற்றலாய் விளங்குவதே அதன் சக்தி; தூய்மையான அந்தப் பேரொளியில் ஓடுங்கிய சித்தத்தையுடைய யோகியின் சக்தி கிரியை எனப்படுகிறது.

மாசறு ஞானா காய மயமதாய் நிறைவ தாகு
மீசன துருவி றந்த வொளியினின் மனம டங்குந்
தேசுடை யவன்ற னாது திறல்வலிக் கிரியை யந்தப்
பாசமி லொளியே யாகப் பகர்ந்திடப் பட்டு நிற்கும்.

களங்கமற்ற சைதன்னியமானதும் பேரானந்த வடிவானதும் ஆகாயம் போல் பரந்து விளங்குவதும் பரிபூரணமானதுமான

சிவபிரானின் ஆற்றலாய் விளங்குவதே அதன் சக்தி; தூய்மையான அந்தப் பேரொளியில் ஒடுங்கிய சித்தத்தையுடைய யோகியின் சக்தி கிரியை எனப்படுகிறது.

सर्वज्ञः सर्वकर्ता च सर्वगः परमेश्वरः।
तदैक्यचिन्तया योगी तादृशात्मा प्रकाशते॥७९॥

எல்லாவற்றையுமுணர்ந்தோனுய் எல்லா ஆற்றலுமுடையோனுய் எங்கும் விளங்குபவனுய்த் திகழ்பவன் பரமேசுவரன்; அவனுடன் ஐக்கியமடைந்த யோகி சிவபிரானுகவே விளங்குகிருன்.

முழுமையு முணர்ந்தோ னாகி முழுவிறை யாகி யெங்கு
மொழிவற நிறைந்தோ னாவ னொருசிவ னவன்பாற் சென்றுற்
றழிதரு சிந்தை யானே யவன்றனி வடிவ மாகப்
பழுதற வொளிர்வ னென்று பகர்ந்தன ரறிஞ ரெல்லாம்.

எல்லாவற்றையுமுணர்ந்தோனுய் எல்லா ஆற்றலுமுடையோனுய் எங்கும் விளங்குபவனுய்த் திகழ்பவன் பரமேசுவரன்; அவனுடன் ஐக்கியமடைந்த யோகி சிவபிரானுகவே விளங்குகிருன்.

सर्वेन्द्रियाणां व्यापारे विद्यमानेऽपि संयमी।
प्रत्युङ्मुखेन मनसा शिवं पश्यन् प्रमोदते॥८०॥
कूटस्थमचलं प्राज्ञं गुणातीतं गुणोत्तरम्।
शिवतत्त्वं स्वरूपेण पश्यन् योगी प्रमोदते॥८१॥

எல்லா இந்திரியங்களும் தத்தம் செயலைச் செய்யும் நிலையிலும் எல்லாவற்றையும் அடக்கிய யோகியானவன் மனத்தை உள்ளே திருப்பி அனைத்துக்கும் ஆதாரமாக விளங்குவதும் என்றும் அழியாததும் எல்லாக் குணங்களையும் கடந்ததுமான சிவதத்துவத்தைத் தனது சொரூபமாகக் கண்டு இன்புறுகிருன்.

இந்திய வழக்க மெல்லா மெய்தியு மேனோக் குற்ற
சிந்தையா லசல மாகுஞ் சிவத்தினைக் கண்டு வப்ப
னுந்துறு மறிஞ னான வுயர்ந்தகூ டத்தன் றன்னைப்
பந்தமில் சிவமாய்க் கண்ட படிவத்தா லுவப்பன் யோகி.

எல்லா இந்திரியங்களும் தத்தம் செயலைச் செய்யும் நிலையிலும் எல்லாவற்றையும் அடக்கிய யோகியானவன் மனத்தை உள்ளே திருப்பி அனைத்துக்கும் ஆதாரமாக விளங்குவதும் என்றும் அழியாததும் எல்லாக் குணங்களையும் கடந்ததுமான சிவதத்துவத்தைத் தனது சொரூபமாகக் கண்டு இன்புறுகிறான்.

परात्मनि क्रिया सर्वा गन्धर्वनगरीमुखा।
प्रकाशत इति प्रोक्तं क्रियायास्तु प्रकाशनम्॥८२॥

इति क्रियाप्रकाशनस्थलम्

பரமாத்மாவினிடத்தில் அனைத்துக் கிரியைகளும் வானத்தில் தோன்றும் நகரைப் போல் நிலையற்றன என்பதே கிரியாபிரகாசனம் எனப்படும்.

கிரியைக ளனைத்தும் வானிற் கிளந்தகந் திருவ வூர்போற்
பரவடி வாயி னோன்பாற் பரந்துநின் றிலங்க லாலே
யுரவிய வறிஞ ரெல்லாங் கிரியைமா வொளிய தென்பர்
பொருவறு புகழ்ம லிந்த பொதியில்வீற் றிருக்கு மேலோய்.

பரமாத்மாவினிடத்தில் அனைத்துக் கிரியைகளும் வானத்தில் தோன்றும் நகரைப் போல் நிலையற்றன என்பதே கிரியாபிரகாசனம் எனப்படும்.

கிரியாப்பிரகாசத்தலம் முற்றும்.

## अथ भावप्रकाशस्थलम्

तरङ्गाद्या यथा सिन्धौ न भिद्यन्ते तथात्मनि।
भावा बुद्ध्यादयः सर्वे यत्तद्‌ भावप्रकाशनम्॥८३॥

அலைகள் முதலியன கடலினின்றும் வேறானவை அல்ல; அவ்வாறே புத்தி, மனத்தில் தோன்றும் எண்ணங்கள் முதலியனவும் ஆன்மாவினின்றும் வேறானவை அல்ல.

தரங்கமா திகடாம் வேலை தன்னில்வே றாகா வாபோற்
பரந்துள புத்தி யாதி பாவங்க ளான்மா வில்வே
றிருந்தன வலவென் றோது மிதுபாவ வொளியா மென்பர்
புரங்கடந் தவன்றன் னூலின் பொருடெரிந் துணர்ந்து ளோரே.

அலைகள் முதலியன கடலினின்றும் வேறானவை அல்ல; அவ்வாறே புத்தி, மனத்தில் தோன்றும் எண்ணங்கள் முதலியனவும் ஆன்மாவினின்றும் வேறானவை அல்ல.

शिव एव जगत्सर्वं शिव एवाहमित्यपि।
भावयन् परमो योगी भवदोषैर्न बाध्यते॥८४॥
शिवभावे स्थिरे जाते निर्लेपस्य महात्मनः।
ये ये भावाः समुत्पन्नास्ते ते शिवमयाः स्मृताः॥८५॥

சிவபெருமானே அனைத்தும், நானும் சிவனே என உறுதியாக உணர்ந்த யோகி பிறவிகளினால் ஏற்படும் குற்றங்களால் பாதிக்கப்படுவதில்லை; அந்தச் சிவபாவம் உறுதியானால் யோகியின் மனோபாவங்கள் யாவும் சிவமயமாகவே ஆகின்றன.

சகமெலாஞ் சிவமே தானுந் தற்சிவ மேயென் றுன்னும்
பகவிலா யோகி தான்வெம் பவத்தினால் வருத்த மெய்தா
னிகரிலாச் சிவபா வந்தா னிலைத்திடு மேல வற்குத்
திகழ்வுறு பாவ மெல்லாஞ் சிவமய மாகு மன்றே.

சிவபெருமானே அனைத்தும், நானும் சிவனே என உறுதியாக உணர்ந்த யோகி பிறவிகளினால் ஏற்படும் குற்றங்களால்

பாதிக்கப்படுவதில்லை; அந்தச் சிவபாவம் உறுதியானால் யோகியின் மனோபாவங்கள் யாவும் சிவமயமாகவே ஆகின்றன.

अद्वितीयशिवाकारभावनाध्वस्तकर्मणा।
न किञ्चिद् भाव्यते साक्षात् शिवादन्यन्महात्मना॥८६॥
गलिताज्ञानबन्धस्य केवलात्मानुभाविनः।
यत्र यत्रेन्द्रियासक्तिस्तत्र तत्र शिवात्मता॥८७॥

சிவாத்துவைத பாவனையால் எல்லாக் கருமங்களும் அழிக்கப்பட்ட யோகி சிவனைத் தவிர எதையும் எண்ணுவதில்லை; சிவபாவனையால் அஞ்ஞானம் அறவே நீங்கிய யோகி தனது புலன்களால் அறிவது யாவும் சிவமாகவே திகழ்கின்றன.

வேறறு சிவபா வத்தால் விலக்குறு வினைக ளுள்ளோன்
மாறறு சிவமே யன்றி மற்றொரு பொருளுங் காணான்
பாறிய மலமு டைத்தன் சொரூபாநு பவிபு லன்க
ளேறிய விடங்க ளெல்லா மிருஞ்சிவ மயமே யாகும்.

சிவாத்துவைத பாவனையால் எல்லாக் கருமங்களும் அழிக்கப்பட்ட யோகி சிவனைத் தவிர எதையும் எண்ணுவதில்லை; சிவபாவனையால் அஞ்ஞானம் அறவே நீங்கிய யோகி தனது புலன்களால் அறிவது யாவும் சிவமாகவே திகழ்கின்றன.

रागद्वेषादयो भावाः संसारक्लेशकारणम्।
तेषामुपरमो यत्र तत्र भावः शिवात्मकः॥८८॥
यथा सूर्यसमाक्रान्तौ न शक्नोति तमः सदा।
तथा प्रकाशमात्मानं नाविद्याक्रमति स्वयम्॥८९॥

इति भावप्रकाशस्थलम्

விருப்பு வெறுப்பு ஆகியன சம்சாரநோய்க்குக் காரணம்; அவை நீங்கியபின் சிவபாவமொன்றே பிரகாசிக்கின்றது. சூரியன் பிரகாசிக்கையில் இருட்டு மறைவது போல் சிவம் பிரகாசிக்கையில் அஞ்ஞானம் முற்றிலும் அழிந்து போகிறது.

விருப்பொடு வெறுப்பு மேவும் பாவனை விளையா நிற்கு
முருப்பவ மவையொ டுங்கும் பாவனை சிவமே நாட்டு
மிருட்படா மிரவி தன்னை யெய்திடா ததுபோற் பாவந்
தரிப்புட னிலகு மான்மாத் தனையுறா தவித்தை யன்றே.

விருப்பு வெறுப்பு ஆகியன சம்சாரநோய்க்குக் காரணம்; அவை நீங்கியபின் சிவபாவமொன்றே பிரகாசிக்கின்றது. சூரியன் பிரகாசிக்கையில் இருட்டு மறைவது போல் சிவம் பிரகாசிக்கையில் அஞ்ஞானம் முற்றிலும் அழிந்து போகிறது.

பாவப்பிரகாசத்தலம் முற்றும்.

## अथ ज्ञानप्रकाशनस्थलम्

मुख्यार्थेऽसम्भवे जाते लक्षणायोगसंश्रयात्।
तज्ज्ञानयोजनं यत्तदुक्तं ज्ञानप्रकाशनम्॥९०॥

முக்கியப் பொருளை விடுத்து லட்சணை மூலமாகப் பொருள் கொள்ளுதல் ஞானப்பிரகாசமெனப்படும்.

முக்கியப் பொருளிற் கூட்ட முளைத்திடு மாசெ யான்மன்
மிக்குறு மிலக்க ணார்த்த மேவுறு நிலமன் றன்னாற்
புக்குறு மந்த ஞானம் பொருந்துத றனைய வற்குத்
தக்கவர் மொழியு ஞானப் பிரகாசந் தானென் றோர்வாய்.

முக்கியப் பொருளை விடுத்து லட்சணை மூலமாகப் பொருள் கொள்ளுதல் ஞானப்பிரகாசமெனப்படும்.

मुक्तस्य ज्ञानसम्बन्धि ज्ञेयाभावः स्वभावतः।
उपाधिसहितं ज्ञानं न भेदमतिवर्तते॥९१॥

முக்தியடைந்தவனுக்கு ஞானத் தொடர்பால் அறிவது எதுவுமில்லை; உபாதியுடன் கூடிய ஞானம் யாவும் வேற்றுமையின் அடிப்படையிலேயே தோன்றுகின்றன.

முத்தனுக் கந்த ஞான சம்பந்த முறைமை கூறின்
வைத்திடு மியல்பான் ஞேய மிலாமையாம் வகுத்து நின்ற

மெத்துறு முபாதி யோடு மேவிநிற் கின்ற ஞான
மித்தலை யென்னும் பேத மிறந்திடா தென்பர் நல்லோர்.

முக்தியடைந்தவனுக்கு ஞானத் தொடர்பால் அறிவது எதுவுமில்லை; உபாதியுடன் கூடிய ஞானம் யாவும் வேற்றுமையின் அடிப்படையிலேயே தோன்றுகின்றன.

ज्ञानमित्युच्यते सद्भिः परिच्छेदोऽपि वस्तुनः।
परात्मन्यपरिच्छेदे कुतो ज्ञानस्य सम्भवः॥९२॥
ज्ञानस्याविषये तत्त्वे शिवाख्ये चित्सुखात्मनि।
आत्मैकत्वानुसन्धानं ज्ञानमित्युच्यते बुधैः॥९३॥

அறிவு என்பது ஒரு பொருளை வரையறைப்படுத்துவதால் மட்டுமே தோன்றுகிறது; ஆனால் எவ்வித வரையறைக்குமுட்படாத பரமாத்மாவை எவ்வாறு அறிவினால் அறிய இயலும்? அறிவுக்கு அப்பாற்பட்ட தத்துவமாகத் திகழ்வதும் ஆனந்த வடிவானதுமான சிவதத்துவத்தை ஆன்மாவுடன் ஐக்கியமாக உணர்வதே ஞானமெனப்படும்.

பொருளுறு பரிச்சே தந்தான் புகன்றிடு ஞான மாகு
மருளறும் பரிச்சே தம்பின் வரும்பர மான்மா வின்க
ணுரைசெயு ஞானமில்லை யுணர்விற்கு விடய மல்லாப்
பரசிவ னிடத்த யிக்கம் பண்ணலே ஞான மாகும்.

அறிவு என்பது ஒரு பொருளை வரையறைப்படுத்துவதால் மட்டுமே தோன்றுகிறது; ஆனால் எவ்வித வரையறைக்கும் உட்படாத பரமாத்மாவை எவ்வாறு அறிவினால் அறிய இயலும்? அறிவுக்கு அப்பாற்பட்ட தத்துவமாகத் திகழ்வதும் ஆனந்த வடிவானதுமான சிவதத்துவத்தை ஆன்மாவுடன் ஐக்கியமாக உணர்வதே ஞானமெனப்படும்.

अपरिच्छिन्नमानन्दं सत्ताकारं जगन्मयम्।
ब्रह्मेति लक्षणं ज्ञानं ब्रह्मज्ञानमिहोच्यते॥९४॥
ब्रह्मज्ञाने समुत्पन्ने विश्वोपाधिविवर्जिते।
सर्वं संविन्मयं भाति तदन्यन्नैव दृश्यते॥९५॥

அளவற்றதும் என்றும் உள்ளதும் ஆனந்தமயமானதும் இவ்வுலக வடிவாய்த் திகழ்வதுமான பொருள் பிரம்மம் ஒன்றே என அறிவதே பிரம்ம ஞானமாகும். பிரம்ம ஞானம் தோன்றியவுடன் உலகம் என வேருகக் காணுமல் அனைத்தும் ஞான வடிவாகவே தோன்றும்.

உலகொரு மயமா யின்ப வுண்மையா யபரிச் சேத
நலமலி பிரம மென்னு ஞானமே பிரம ஞான
மலிசக வுபாதி நீங்கி மலர்வுறு பிரம ஞான
மிலகுறி னறிவா மெங்குங் காண்பதொன் றில்லை வேறு.

அளவற்றதும் என்றும் உள்ளதும் ஆனந்தமயமானதும் இவ்வுலக வடிவாய்த் திகழ்வதுமான பொருள் பிரம்மம் ஒன்றே என அறிவதே பிரம்ம ஞானமாகும். பிரம்ம ஞானம் தோன்றியவுடன் உலகம் என வேருகக் காணுமல் அனைத்தும் ஞான வடிவாகவே தோன்றும்.

तस्मादद्वैतविज्ञानमपवर्गस्य कारणम्।
भावयन् सततं योगी संसारेण न लिप्यते॥ ९६॥
नित्ये निर्मलसत्त्वयोगिषु परे निर्वासने निष्कले
सर्वातीतपदे चराचरमये सत्तात्मनि ज्योतिषि।
संविद्व्योम्नि शिवे विलीनहृदयस्तद्भेदवैमुख्यतः
साक्षात् सर्वगतो विभाति विगलद्विश्वः स्वयं संयमी॥ ९७॥

इति श्रीमत्षट्स्थलब्रह्मिणा शिवयोगिनाम्ना रेणुकाचार्येण विरचिते
वीरशैवधर्मनिर्णये सिद्धान्तशिखामणौ
शरणस्थलविषयद्वादशविधलिङ्गप्रसङ्गो नामैकोनविंशः परिच्छेदः॥ १९॥

முக்திக்குக் காரணமான இந்த அத்துவைத ஞானத்தை அடைந்த யோகி மீண்டும் சம்சாரநோயால் துன்புறுவதில்லை. நித்தியமானதும் அனைத்துக்கும் மேலானதும் சராசரங்களாகிய உலகங்களைக் கடந்து அவற்றுக்கும் ஆதாரமாய்த் திகழ்வதுமான சிவமெனும் பரஞ்சோதியில் ஐக்கியமடைந்த யோகி வேற்றுமைகளைக் கடந்து சிவமயமாகவே விளங்குகிருன்.

முத்திகா ரணமா மத்து விதஞான முற்றி னானுக்
கெய்த்திடும் பவமே யில்லை யெங்கணு நிறைந்து நின்ற
நித்தியா நந்த ஞான நிட்கள சிவத்தொ டுங்குஞ்
சித்தனா மியோகி பேதந் தீர்ந்தொரு தானே யாகும்.

முக்திக்குக் காரணமான இந்த அத்துவைத ஞானத்தை அடைந்த யோகி மீண்டும் சம்சாரநோயால் துன்புறுவதில்லை. நித்தியமானதும் அனைத்துக்கும் மேலானதும் சராசரங்களாகிய உலகங்களைக் கடந்து அவற்றுக்கும் ஆதாரமாய்த் திகழ்வதுமான சிவமெனும் பரஞ்சோதியில் ஐக்கியமடைந்த யோகி வேற்றுமைகளைக் கடந்து சிவமயமாகவே விளங்குகிறான்.

ஞானப்பிரகாசத்தலம் முற்றும்.

பிரசாதலிங்கத்தலம் முற்றிற்று.

## विंशः परिच्छेदः
## अथैक्यस्थलम्

स्थलभेदास्त्वया प्रोक्ताः शरणस्थलसंश्रिताः।
ऐक्यस्थलगतान् ब्रूहि स्थलभेदान् गणेन्द्र मे॥ १॥

சரணஸ்தலத்திலடங்கிய பிரிவுகள் உங்களால் விரித்துக் கூறப்பட்டன; ஐக்கியஸ்தலத்தின் உட்பிரிவுகளையும் கூற வேண்டுகிறேன்.

இலங்க வோதினை யச்சர ணத்தல மெய்துந்
தலங்க ளியாவையு மினியயிக் கத்தலஞ் சார்ந்த
நலங்கு லாந்தல பேதமு மெனக்குநீ நவில்வாய்
கலங்கி லாவுளத் தருளினாற் கணங்கணா யகனே.

சரணஸ்தலத்திலடங்கிய பிரிவுகள் உங்களால் விரித்துக் கூறப்பட்டன; ஐக்கியஸ்தலத்தின் உட்பிரிவுகளையும் கூற வேண்டுகிறேன்.

स्थलानां नवकं चैक्यस्थलेऽस्मिन् परिकीर्त्यते॥ २॥
तत्स्वीकृतप्रसादैक्यस्थलमादौ प्रकीर्तितम्।
शिष्टोदनस्थलं चाथ चराचरलयस्थलम्॥ ३॥
भाण्डस्थलं ततः प्रोक्तं भाजनस्थलमुत्तमम्।
अङ्गालेपस्थलं पश्चात् स्वपराज्ञास्थलं ततः॥ ४॥
भावाभावविनाशं च ज्ञानशून्यस्थलं ततः।
तदेषां क्रमशो वक्ष्ये श‍ृणु तापस लक्षणम्॥ ५॥

ஐக்கியஸ்தலம் ஒன்பது பிரிவுகளையுடையது. அவை முறையே ஸ்வீக்ருதபிரஸாதைக்கியஸ்தலம், சிஷ்டோதனஸ்தலம், சராசரலயஸ்தலம், பாண்டஸ்தலம், பாஜனஸ்தலம், அங்காலேபஸ்தலம், ஸ்வபராஜ்ஞாஸ்தலம், பாவாபாவவினாசஸ்தலம், ஞானசூனியஸ்தலம் என்பன.

சாத மேவருஞ் சுவிகிரு தப்பிர சாத
மாதி ஞானசூ னியமுடி வாகிய வொன்பான்
பேத மாகிய தலங்களை யயிக்கியன் பெறுதற்
கோது வாமுறை யினிலவை யகத்திய வுணர்வாய்.

ஐக்கியஸ்தலம் ஒன்பது பிரிவுகளையுடையது. அவை ஸ்வீக்ருதபிரஸாதைக்கியஸ்தலம் முதலாக ஞானசூனியஸ்தலம் ஈறாக உள்ளன.

अथ ऐक्यस्थलगतस्वीकृतप्रसादैक्यस्थलम्
मुख्यार्थो लक्षणार्थश्च यत्र नास्ति चिदात्मनि।
विशृङ्खलतया तस्य प्रसादः स्वीकृतो भवेत्॥६॥

முக்கியார்த்தமும் லட்சணார்த்தமுமில்லாததான சின்மயமான ஆன்மா எதற்கும் உட்படாதது என்பதே ஸ்வீக்ருதபிரஸாதம்.

முக்கி யார்த்தமு மிலக்க ணார்த்தமு மிலைமொழியிற்
றக்க பேரறி வுருவமா மவற்கவன் றனக்கு
வைக்கு மோர்தடை யிலாமையான் மகிழ்பிர சாதந்
துய்க்கு மாறுகொண் டிடப்படு மெனமறை சொல்லும்.

முக்கியார்த்தமும் லட்சணார்த்தமுமில்லாததான சின்மயமான ஆன்மா எதற்கும் உட்படாதது என்பதே ஸ்வீக்ருதபிரஸாதம்.

मातृमेयप्रमाणादिव्यवहारे विहारिणीम्।
संवित्साक्षात्कृतिं लब्ध्वा योगी स्वात्मनि तिष्ठति॥७॥
अद्वैतबोधनिर्धूतभेदावेशस्य योगिनः।
साक्षात्कृतमहासंवित्प्रकाशस्य क्व बन्धनम्॥८॥

அறிபவன், அறிவு, அறியும் கருவி முதலியவற்றில் விளங்கும் பேரறிவை உணர்ந்த யோகியானவன் தனது ஆன்மாவிலேயே எப்போதும் நிலைகொள்கிறான்; அத்துவைத உணர்வு தோன்றி அனைத்து வேற்றுமைகளையும் கடந்து பேரறிவான பரமாத்மாவை நேரிடையாக உணர்ந்த யோகிக்கு சம்சாரத் தளைகள் ஏது?

மாது ருப்பிர மேயமொண் பிரமாண வழக்கிற்
பேத மற்றுயர் சிந்மய மாக்குறப் பெற்றே

யேத மற்றிடு யோகிதன் சொரூபமுற் றிருப்பன்
போத மற்றவத் துவிதனைப் பொருந்துமோ பந்தம்.

அறிபவன், அறிவு, அறியும் கருவி முதலியவற்றில் விளங்கும் பேரறிவை உணர்ந்த யோகியானவன் தனது ஆன்மாவிலேயே எப்போதும் நிலைகொள்கிறான்; அத்துவைத உணர்வு தோன்றி அனைத்து வேற்றுமைகளையும் கடந்து பேரறிவான பரமாத்மாவை நேரிடையாக உணர்ந்த யோகிக்கு சம்சாரத் தளைகள் ஏது?

चिदात्मनि शिवे न्यस्तं जगदेतच्चराचरम्।
ज्ञायते तन्मयं सर्वमग्नौ काष्ठादिकं यथा॥९॥
न भाति पृथ्वी न जलं न तेजो नैव मारुतः।
नाकाशो न परं तत्त्वं शिवे दृष्टे चिदात्मनि॥१०॥

நெருப்பில் எரியும் விறகுகள் நெருப்பின் வடிவாகவே தோன்றுவன போல் சைதன்னிய வடிவான சிவபரம்பொருளில் தான் அனைத்துலகங்களும் தோன்றுகின்றன; சிவபிரானைக் காண்கையில் நிலம், தீ, காற்று முதலானவை தோன்றுவதில்லை.

போத மாகிய சிவனிடைப் பொருந்துமிவ் வுலக
மியாது மாரழற் படுவன போற்சிவ மேயாஞ்
சோதி யாஞ்சிவங் கண்டிடின் மண்முதற் சொல்லும்
பூத மோடுமற் றுள்ளவும் பொருந்திநின் றிலங்கா.

நெருப்பில் எரியும் விறகுகள் நெருப்பின் வடிவாகவே தோன்றுவன போல் சைதன்னிய வடிவான சிவபரம்பொருளில் தான் அனைத்துலகங்களும் தோன்றுகின்றன; சிவபிரானைக் காண்கையில் நிலம், தீ, காற்று முதலானவை தோன்றுவதில்லை.

ज्योतिर्लिङ्गे चिदाकारे ज्वलत्यन्तर्निरन्तरम्।
विलीनं निखिलं तत्त्वं पश्यन् योगी न लिप्यते॥११॥
अन्तर्मुखेन मनसा स्वात्मज्योतिषि चिन्मये।
सर्वानप्यर्थविषयान् जुह्वन् योगी प्रमोदते॥१२॥

அகத்தினுள் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் பரஞ்சோதி வடிவான லிங்கத்தில் எல்லாத் தத்துவங்களும் ஐக்கியமடைவதைக் கண்ட யோகி எதனாலும் கட்டப்படுவதில்லை; சின்மயமான அந்த அகச்சோதியில் அனைத்தையும் ஆஹுதி செய்து யோகி எல்லையற்ற ஆனந்தமடைகிறான்.

சோதி லிங்கநின் றகத்தினிற் சுடர்வுற யோகி
பூத மாதிய தத்துவங் கண்டவை பொருந்தான்
போத வாரழ லிடைப்புல னியாவையும் போக்கித்
தீதி லாமனத் துவகைபெற் றிடுஞ்சிவ யோகி.

அகத்தினுள் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் பரஞ்சோதி வடிவான லிங்கத்தில் எல்லாத் தத்துவங்களும் ஐக்கியமடைவதைக் கண்ட யோகி எதனாலும் கட்டப்படுவதில்லை; சின்மயமான அந்த அகச்சோதியில் அனைத்தையும் ஆஹுதி செய்து யோகி எல்லையற்ற ஆனந்தமடைகிறான்.

सच्चिदानन्दजलधौ शिवे स्वात्मनि निर्मलः।
समर्प्य सकलान् भुङ्क्ते विषयान् तत्प्रसादतः॥ १३॥

इति स्वीकृतप्रसादिस्थलम्

ஸச்சிதானந்தக் கடலாக விளங்கும் தனது ஆன்மலிங்கத்தில் எல்லாவற்றையும் சமர்ப்பித்து சிவப்பிரஸாதத்தினால் ஆனந்தமடைகிறான்.

நவையில் யோகிதான் சச்சிதா நந்தமாய் நண்ணுஞ்
சிவனின் மேவுற விடயங்கள் சமர்ப்பணஞ் செய்தே
யவனி லாம்பிர சாதமுண் குவனென வறிவாய்
தவமெ லாமொரு வடிவுகொண் டனையமா தவனே.

ஸச்சிதானந்தக் கடலாக விளங்கும் தனது ஆன்மலிங்கத்தில் எல்லாவற்றையும் சமர்ப்பித்து சிவப்பிரஸாதத்தினால் ஆனந்தமடைகிறான்.

சுவிகிருதப்பிரசாதத்தலம் முற்றும்

## अथ शिष्टोदनस्थलम्

प्रकाशते या सर्वेषां माया सैवोदनाकृतिः।
लीयते तत्र चिल्लिङ्गे शिष्टं तत्परिकीर्तितम्॥ १४॥

அனைவராலும் உணரப்படும் மாயையே ஓதனமெனப்படும்; அது சைதன்னிய லிங்கத்தில் ஐக்கியமடவதே சிஷ்டோதனம் எனப்படும்.

மாயை யாத.ஃதி யாவர்க்குந் தோன்றியே மறையு
மாய மாயைதா னறிவுரு வாகிய வவற்குத்
தூய ராற்சொல் சிட்டோதநப் பெயர்பெறுந் தொன்மை
மூய மாமல விருளற முனிவுறு முனியே.

அனைவராலும் உணரப்படும் மாயையே ஓதனமெனப்படும்; அது சைதன்னிய லிங்கத்தில் ஐக்கியமடவதே சிஷ்டோதனம் எனப்படும்.

जगदङ्गे परिग्रस्ते मायापाशविजृम्भिते।
स्वात्मज्योतिषि बोधेन तदेकमवशिष्यते॥ १५॥
अखण्डसच्चिदानन्दपरब्रह्मस्वरूपिणः।
जीवन्मुक्तस्य धीरस्य माया कैङ्कर्यवादिनी॥ १६॥

மாயையினுல் தோற்றுவிக்கப்பட்ட உலகு ஸ்வாத்மசோதியான சைதன்னியத்தில் லயமடைந்தபின் அது ஒன்றே மீதமிருக்கிறது; அகண்ட ஸச்சிதானந்த பரப்பிரம்மமே சொரூபமான ஜீவன்முக்தனிடம் மாயை குற்றேவல் செய்கிறது.

மாயை தந்துள சகம்வடி வாயதன் சொரூபந்
தூய ஞானத்தின் மூடுறப் படுதலாற் றோன்று
மாயை யொன்றுமே யெஞ்சிய தொருசிவ மயமே
யாய முத்தனுக் கேவல்செய் தொழிலியம் மாயை.

மாயையினுல் தோற்றுவிக்கப்பட்ட உலகு ஸ்வாத்மசோதியான சைதன்னியத்தில் லயமடைந்தபின் அது ஒன்றே

மீதமிருக்கிறது; அகண்ட ஸச்சிதானந்த பரப்பிரம்மமே சொரூபமான ஜீவன்முக்தனிடம் மாயை குற்றேவல் செய்கிறது.

विश्वसम्मोहिनी माया बहुशक्तिनिरङ्कुशा।
शिवैकत्वमुपेतस्य न पुरः स्थातुमीहते॥१७॥
ज्योतिर्लिङ्गे चिदाकारे निमग्नेन महात्मना।
भुज्यमाना यथायोगं नश्यन्ति विषयाः स्वतः॥१८॥

அனைத்துலகங்களையும் மயக்கும் பற்பல ஆற்றல் கொண்ட மாயை சிவாத்துவைத ஞானத்தையடைந்த யோகியின் முன்னர் செயலற்றது; சைதன்னிய பரஞ்சோதியான சிவபிரானிடத்தில் ஐக்கியமடைந்த மஹாயோகிகளால் உணரப்படும் உலகப்பொருள்கள் யாவும் தாமாகவே நாசமடையும்.

எண்ணில் சத்தியா லுலகெலா மயக்குமிம் மாயை
நண்ணு மெய்ச்சிவத் தயிக்கனை நண்ணுற வற்றோ
கண்ணி னிற்றிகழ் சோதியாஞ் சிவத்தினிற் கலந்தோ
னுண்ண லுற்றிடு விடயங்க ளொழிந்திடுந் தாமே.

அனைத்துலகங்களையும் மயக்கும் பற்பல ஆற்றல் கொண்ட மாயை சிவாத்துவைத ஞானத்தையடைந்த யோகியின் முன்னர் செயலற்றது; சைதன்னிய பரஞ்சோதியான சிவபிரானிடத்தில் ஐக்கியமடைந்த மஹாயோகிகளால் உணரப்படும் உலகப்பொருள்கள் யாவும் தாமாகவே நாசமடையும்.

शब्दादयोऽपि विषया भुज्यमानास्तदिन्द्रियैः।
आत्मन्येव विलीयन्ते सरितः सागरे यथा॥१९॥
अर्थजातमशेषं तु पश्यन् योगी प्रशाम्यति।
स्वात्मनैवास्थितो भानुस्तेजोजालमशेषतः॥२०॥

## इति शिष्टोदनस्थलम्

பொறிபுலன்களால் உணரப்படும் அனைத்தும் கடலில் கலக்கும் நதிகளைப் போல் ஆன்மாவில் ஐக்கியமடைகின்றன; வெளியில் உணரப்படும் பொருட்களனைத்தையும் ஆன்மாவில்

லயமடைவதைக் கண்ட யோகி தனது ஆன்மசொரூபமாக விளங்குகிறுன்.

பொறிக ளாலுணும் புலன்கடல் புகுந்திடு நதிபோ
லறிஞ னாகியோ னிடத்திற்புக் கடங்குறு மென்பர்
மறிவில் யோகியிப் பொருளொழி வறவடி வடக்கிச்
செறியு மார்கதி ரெலாங்கொடு விழ்திந கரன்போல்.

பொறிபுலன்களால் உணரப்படும் அனைத்தும் கடலில் கலக்கும் நதிகளைப் போல் ஆன்மாவில் ஐக்கியமடைகின்றன; வெளியில் உணரப்படும் பொருட்களனைத்தையும் ஆன்மாவில் லயமடைவதைக் கண்ட யோகி தனது ஆன்மசொரூபமாக விளங்குகிறுன்.

சிட்டோதநத்தலம் முற்றும்

## अथ चराचरलयस्थलम्

लिङ्गैक्ये तु समापन्ने चरणाचरणे गते।
निर्देही स भवेद्योगी चराचरविनाशकः॥ २१॥

அனைத்துச் சராசரங்களும் லிங்கத்தில் ஐக்கியமடைந்த வேளையில் யோகியானவன் உடலவற்றனுய் (நிர்தேஹி) சராசரவிநாசகன் எனப்படுகிறுன்.

பாகு பாடுறு சராசரத் துறுபரத் தொன்றாம்
யோகி தானுடம் புறுகில னாகியே யொழிவி
லேக மாகிய சராசர நாசக னென்ன
மோக மாயையை முனிந்தவர் மொழிந்திடப் படுவான்.

அனைத்துச் சராசரங்களும் லிங்கத்தில் ஐக்கியமடைந்த வேளையில் யோகியானவன் உடலவற்றனுய் (நிர்தேஹி) சராசரவிநாசகன் எனப்படுகிறுன்.

अनाद्यविद्यामूला हि प्रतीतिर्जगतामियम्।
स्वात्मैकबोधात् तन्नाशे कुतो विश्वप्रकाशनम्॥ २२॥

வெளி உலகங்கள் யாவும் அநாதியான மாயையினுல் தோன்றியவை; ஆன்ம சிவ ஐக்கியஞானத்தால் அவை யாவும் அழிந்த பின் வெளி உலகத் தோற்றமேது?

உலக ஞானமோ ரவித்தையாங் காரண முடைத்திங்
கலகிலாததன் சொரூபஞா னம்பெற வவிச்சை
மலமி ராதெனி னிச்சகம் விளங்கிட வற்றோ
கலையெ லாமுணர்ந் துயர்தரு கலயமா முனிவ.

வெளி உலகங்கள் யாவும் அநாதியான மாயையினுல் தோன்றியவை; ஆன்ம சிவ ஐக்கியஞானத்தால் அவை யாவும் அழிந்த பின் வெளி உலகத் தோற்றமேது?

यथा मेघाः समुद्भूता विलीयन्ते नभस्थले।
तथात्मनि विलीयन्ते विषयाः स्वानुभाविनः॥ २३॥
स्वप्ने दृष्टं यथा वस्तु प्रबोधे लयमश्नुते।
तथा सांसारिकं सर्वमात्मज्ञाने विनश्यति॥ २४॥

மேகங்கள் ஆகாயத்திலேயே ஒடுங்குவது போல் உணரப்படும் அனைத்து விடயங்களும் ஆன்மாவிலேயே லயமடைகின்றன; சொப்பனத்தில் காணப்படும் பொருட்கள் அனைத்தும் விழித்தவுடன் ஆன்மபோதத்தில் லயமடைவது போல் சம்சாரமாகிய தோற்றம் ஆன்மஞானத்தில் ஒடுங்கிவிடும்.

வானின் மாமுகி லெழுந்தடங் குதலென மயங்கா
ஞானிபா லெழுந் தடங்குறும் விடயங்க ணவிலி
னான தோர்கன விற்பொரு ணனவிலற் றிடல்போ
லூன மாஞ்சகத் தோற்றமெய் யுணர்வினி லொழியும்

மேகங்கள் ஆகாயத்திலேயே ஒடுங்குவது போல் உணரப்படும் அனைத்து விடயங்களும் ஆன்மாவிலேயே லயமடைகின்றன; சொப்பனத்தில் காணப்படும் பொருட்கள் அனைத்தும் விழித்தவுடன் ஆன்மபோதத்தில் லயமடைவது போல் சம்சாரமாகிய தோற்றம் ஆன்மஞானத்தில் ஒடுங்கிவிடும்.

जाग्रत्स्वनसुषुप्तिभ्यः परावस्थामुपेयुषः।
किं वा प्रमाणं किं ज्ञेयं किं वा ज्ञानस्य साधनम्॥ २५॥
तुर्यातीतपदं यत्तद् दूरं वाङ्मनसाध्वनः।
अनुप्रविश्य तद्योगी न भूयो विश्वमीक्षते॥ २६॥

விழித்தநிலே, சொப்பனநிலே, ஆழ்ந்த உறக்கநிலே இவற்றைக் கடந்த மேலான நிலேயை அடைந்த யோகிக்கு அறிய வேண்டிய பொருள், அறியும் சாதனம் போன்றவை ஏது? வாக்கு மனதிற்கு எட்டாததும் நான்காம் நிலேக்கும் மேலானதுமான நிலேயை அடைந்த யோகி வேறுபட்ட உலகத்தை மீண்டும் காண்பதில்லே.

சாக்கி ரந்தொடர் சொற்பனஞ் சுழுத்தியைத் தணந்து
மீக்கி ளந்திடு மவத்தையை மேவிய வொருவ
னுக்கு ஞாதுரு ஞானஞே யங்களா மனைத்து
நீக்கி நின்றிடு மென்பர்நல் லறிவினி னிலைத்தோர்.

விழித்தநிலே, சொப்பனநிலே, ஆழ்ந்த உறக்கநிலே இவற்றைக் கடந்த மேலான நிலேயை அடைந்த யோகிக்கு அறிய வேண்டிய பொருள், அறியும் சாதனம் போன்றவை ஏது? வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாததும் நான்காம் நிலேக்கும் மேலானதுமான நிலேயை அடைந்த யோகி வேறுபட்ட உலகத்தை மீண்டும் காண்பதில்லே.

नान्यत् पश्यति योगीन्द्रो नान्यज्जानाति किञ्चन।
नान्यच्छृणोति सन्दृष्टे चिदानन्दमये शिवे॥ २७॥

சிதானந்தமயமான சிவத்தைக் காணும் யோகி வேறெதையும் அறிவதோ, உணர்வதோ, கேட்பதோ இல்லே.

துரியா தீதமாம் பதத்திடைத் துளக்கற விருந்த
பெரியா னிவ்வுல கத்துருக் காண்கிலன் பின்னர்க்
கரியாய் நின்றமெய்ச் சிவத்தினைக் கண்டவன் காணான்
றிரியா மற்றொரு பொருளினைச் செவிக்கொளா னறியான்.

சிதானந்தமயமான சிவத்தைக் காணும் யோகி வேறெதையும் அறிவதோ, உணர்வதோ, கேட்பதோ இல்லை.

असदेव जगत् सर्वं सदिव प्रतिभासते।
ज्ञाते शिवे तदज्ञानं स्वरूपमुपपद्यते॥ २८॥

इति चराचरमललयस्थलम्

இல்லாத உலகமே இருப்பது போல் தோன்றுகிறது; சிவபிரானை நேரிடையாக அறிந்தபின் அஞ்ஞானம் விலகுகிறது.

மித்தை யாகுமிவ் வுலகமுன் னுண்மைபோல் விளங்குஞ்
சத்த தாகிய பரசிவம் வெளிப்படிற் றனது
மெய்த்து நின்றமெய்ச் சொரூபமே யெங்கணும் விளங்குஞ்
சித்த மாமய லொழிந்துமுன் னூல்பல தெரிந்தோய்.

இல்லாத உலகமே இருப்பது போல் தோன்றுகிறது; சிவபிரானை நேரிடையாக அறிந்தபின் அஞ்ஞானம் விலகுகிறது.

சராசரலயத்தலம் முற்றும்.

अथ भाण्डस्थलम्

ब्रह्माण्डशतकोटीनां सर्गस्थितिलयान् प्रति।
स्थानभूतो विमर्शो यस्तद्भाण्डस्थलमुच्यते॥ २९॥

நூறு கோடி பிரம்மாண்டங்களின் தோற்றம், நிலை மற்றும் அழிவு ஆகியவற்றின் நிலைக்களமாக விளங்குவதே பாண்டஸ்தலமாகும்.

அண்ட நூறுகோ டிகள்படைப் புடனிலை யழிவு
கொண்ட தோரிட மாகிய வதனையே குறித்துக்
கண்ட தோர்விம ரிசந்தனைக் கசடற வுணர்வாற்
பண்டை நூலுணர் பவர்பாண்டத் தலமெனப் பகர்வார்.

நூறு கோடி பிரம்மாண்டங்களின் தோற்றம், நிலை மற்றும் அழிவு ஆகியவற்றின் நிலைக்களமாக விளங்குவதே பாண்டஸ்தலமாகும்.

विमर्शाख्या पराशक्तिर्विश्वोद्भासनकारिणी।
साक्षिणी सर्वभूतानां समिन्धे सर्वतोमुखी॥ ३०॥
विश्वं यत्र लयं याति विभात्यात्मा चिदाकृतिः।
सदानन्दमयः साक्षात् सा विमर्शमयी कला॥ ३१॥

உலகங்களைத் தோற்றுவிக்கும் அளவற்ற பராசக்தியே எல்லாவற்றுக்கும் சாட்சியாய் விமரிசம் எனப்படுகிறது; அதில்தான் அனைத்துலகங்களும் லயமடைகின்றன; அந்த சின்மய பரானந்தமே விமரிசகலை எனப்படுகிறது.

தத்து வங்களுக் கொருகரி யாகியே சகத்திற்
குய்த்த காரண மாய்விம ரிசப்பெய ருடைய
சத்தி தானிலங் குறுஞ்சக மடங்கிடத் தானாய்
மெய்த்த வாருயிர் விளங்கிடும் விமரிச கலையே.

உலகங்களைத் தோற்றுவிக்கும் அளவற்ற பராசக்தியே எல்லாவற்றுக்கும் சாட்சியாய் விமரிசம் எனப்படுகிறது; அதில்தான் அனைத்துலகங்களும் லயமடைகின்றன; அந்த சின்மய பரானந்தமே விமரிசகலை எனப்படுகிறது.

पराहन्तासमावेशपरिपूर्णविमर्शवान्।
सर्वज्ञः सर्वगः साक्षी सर्वकर्ता महेश्वरः॥ ३२॥
विश्वाधारमहासंवित्प्रकाशपरिपूरितम्।
पराहन्तामयं प्राहुर्विमर्शं परमात्मनः॥ ३३॥

எல்லாவற்றையும் இயக்கும் எல்லையற்ற ஆற்றல் கொண்ட மஹேசுவரன் மேலானதும் அனைத்தையும் தன்னுள்ளே காண்பதுமான 'நான்' (பராஹந்தா) என்னும் பரிபூரண உணர்வுடையவனாய், எல்லாவற்றுக்கும் ஆதாரமாய் விளங்கும் சைதன்னியம் முழுதும் நிரம்பியவனாய்த் திகழ்கிறான்.

ஈச னோர்பர வகந்தைசேர் விமரிச வானாய்ப்
பேசு மியாவையு முணர்ந்தொழி வறுபெருந் தகையாந்
தேசு லாம்பர வகந்தையிற் சிறந்துள தாகி
மாசி லாவிம ரிசநிகழ் வுறுமென மதிப்பாய்.

எல்லாவற்றையும் இயக்கும் எல்லேயற்ற ஆற்றல் கொண்ட மஹேசுவரன் மேலானதும் அனைத்தையும் தன்னுள்ளே காண்பதுமான 'நான்' (பராஹந்தா) என்னும் பரிபூரண உணர்வுடையவனாய், எல்லாவற்றுக்கும் ஆதாரமாய் விளங்கும் சைதன்னியம் முழுதும் நிரம்பியவனாய்த் திகழ்கிறான்.

विमर्शभाण्डविन्यस्तविश्वतत्त्वविजृम्भणः।
अनन्यमुखसम्प्रेक्षी मुक्तः स्वात्मनि तिष्ठति॥३४॥

इति भाण्डस्थलम्

இந்த விமரிசமெனும் பாண்டத்தில் அனைத்துலகங்களின் தோற்றம் ஆகியவற்றைக் கண்டு வேறெதையும் நோக்காமல் முக்தி பெற்றவன் தனது ஆன்மானந்தத்திலேயே திளைக்கின்றான்.

பரந்த தாகிய விமரிச பாண்டத்தி லடங்க
விரிந்த தத்துவ மியாவையு மேவுற வைத்துத்
தெரிந்த தன்னையே கண்டிருப் பன்றிகழ் முத்த
னருந்த வர்க்கர சாகிய வகத்திய முனியே.

இந்த விமரிசமெனும் பாண்டத்தில் அனைத்துலகங்களின் தோற்றம் ஆகியவற்றைக் கண்டு வேறெதையும் நோக்காமல் முக்தி பெற்றவன் தனது ஆன்மானந்தத்திலேயே திளைக்கின்றான்.

பாண்டத்தலம் முற்றும்.

## अथ भाजनस्थलम्

समस्तजगदंडानां सर्गस्थित्यन्तकारणम्।
विमर्शो भासते यत्र तद् भाजनमिहोच्यते॥ ३५॥

அனைத்து அண்டங்களின் தோற்றம், நிலை மற்றும் ஒடுக்கம் ஆகியவற்றுக்குக் காரணமான விமரிசமெனும் சக்தி எங்கு பிரகாசிக்கின்றதோ அதுவே பாஜனமெனப்படும்.

ஓது மண்டங்கள் யாவும்வந் துதித்துநின் றொடுங்கற்
கேது வாகிய விமரிச மியாதன்க ணிலங்கு
மேதை யாமது பாசந மெனவிவண் விளம்பு
மாது பாதிய னருளிய வாகம மறைகள்.

அனைத்து அண்டங்களின் தோற்றம், நிலை மற்றும் ஒடுக்கம் ஆகியவற்றுக்குக் காரணமான விமரிசமெனும் சக்தி எங்கு பிரகாசிக்கின்றதோ அதுவே பாஜனமெனப்படும்.

विमर्शाख्या परा शक्तिर्विश्ववैचित्र्यकारिणी।
यस्मिन् प्रतिष्ठिता ब्रह्म तदिदं विश्वभाजनम्॥ ३६॥

விரிந்து பரந்த இந்த உலகங்களுக்குக் காரணமான அந்த விமரிசமெனும் சக்தி எந்த ஆதாரத்தில் நிலைபெற்று விளங்குகிறதோ அந்த பிரம்மமே விசுவபாஜனமாகும்.

வேறு பாடுறு முலகினுக் கொருதனி வித்தாய்க்
கூறு மோர்விம ரிசப்பெயர் பராசத்தி குறுகும்
பேறி யாதெனிற் பெற்றிடும் பிரமமா மதுவே
தேறு பாசந மனைத்திற்கு மென்றுரை செய்வார்.

விரிந்து பரந்த இந்த உலகங்களுக்குக் காரணமான அந்த விமரிசமெனும் சக்தி எந்த ஆதாரத்தில் நிலைபெற்று விளங்குகிறதோ அந்த பிரம்மமே விசுவபாஜனமாகும்.

अन्तःकरणरूपेण जगदङ्कुररूपतः।
यस्मिन् विभाति चिच्छक्तिर्ब्रह्मभूतः स उच्यते॥ ३७॥

இந்த உலகங்கள் தோன்றுவதற்குக் காரணமாகத் திகழும் சிச்சக்தி அந்தக்கரண வடிவாய் விளங்குவதே பிரம்மபூதன் எனப்படுகிறது.

ஆதி யாயசிற் சத்தியிச் சகமுளை யாகி
யோது மாகர ணத்துரு வாலெதி லொளிருந்
தீதி லாவது பிரமமென் சிவமென வறைவர்
வேத மோடுய ராகம முணர்ந்திடு விமலர்.

இந்த உலகங்கள் தோன்றுவதற்குக் காரணமாகத் திகழும் சிச்சக்தி அந்தக்கரண வடிவாய் விளங்குவதே பிரம்மபூதன் எனப்படுகிறது.

यथा चन्द्रे स्थिरा ज्योत्स्ना विश्ववस्तुप्रकाशिनी।
तथा शक्तिर्विमर्शात्मा प्रकारे ब्रह्मणि स्थिता॥ ३८॥

அனைத்தையும் பிரகாசிக்கச் செய்யும் சந்திரனின் ஒளியைப் போல் விமரிசமெனும் சக்தி பிரம்மத்தினிடம் எப்போதும் விளங்குகிறது.

திங்கள் வெண்ணிலா வனைத்தையுந் திகழ்த்துதல் போலச்
சங்க ரன்றனி லுறுவிம ரிசமெனுஞ் சத்தி
யிங்க னைத்தையு மொருங்குற விளக்குமென் றிசைப்பர்
மங்க லப்பெருங் கலைகளி னுழைந்திடு மதியோர்.

அனைத்தையும் பிரகாசிக்கச் செய்யும் சந்திரனின் ஒளியைப் போல் விமரிசமெனும் சக்தி பிரம்மத்தினிடம் எப்போதும் விளங்குகிறது.

अकारः शिव आख्यातो हकारः शक्तिरुच्यते।
शिवशक्तिमयं ब्रह्म स्थितमेकमहंपदे॥ ३९॥

அகாரம் சிவபெருமானையும் ஹகாரம் சக்தியையும் குறிப்பதால் 'அஹம்' எனும் சொல் இவ்விருவரும் பிரிவற்று சிவசக்திமயமாய் விளங்கும் பிரம்மத்தைக் குறிப்பதாகும்.

ஆதி யிற்பெறு மகரமே யுயர்சிவ மந்தா
னோது தற்கருஞ் சத்தியிச் சிவசத்தி யுருவா

மேத மற்றிடு பிரமமொன் றேயக மென்னு
மேதை நற்பதம் பொருந்துமென் றறைகுவர் மேலோர்.

அகாரம் சிவபெருமானையும் ஹகாரம் சக்தியையும் குறிப்பதால் 'அஹம்' எனும் சொல் இவ்விருவரும் பிரிவற்று சிவசக்திமயமாய் விளங்கும் பிரம்மத்தைக் குறிப்பதாகும்.

अहन्तां परमां प्राप्य शिवशक्तिमयीं स्थिराम्।
ब्रह्मभूयङ्गतो योगी विश्वात्मा प्रतिभासते॥ ४०॥

சிவசக்திமயமானதும் எல்லாவற்றுக்கும் மேலானதுமான பராஹந்தா எனும் அனுபவத்தில் நிலைபெற்ற யோகி பிரம்மமயமாகவே ஆகி இவ்வனைத்துலகவடிவமாயும் திகழ்கிறான்.

திகழு றும்பர மாகியே சிவசத்தி மயமா
மகமெ னும்பத மடைந்துய ரருஞ்சிவ யோகி
சகம டங்கலுந் தன்னுரு வாகவே சார்ந்து
நிகழு மென்றுரை செய்திடு நிமலனா கமங்கள்.

சிவசக்திமயமானதும் எல்லாவற்றுக்கும் மேலானதுமான பராஹந்தா எனும் அனுபவத்தில் நிலைபெற்ற யோகி பிரம்மமயமாகவே ஆகி இவ்வனைத்துலகவடிவமாயும் திகழ்கிறான்.

वृक्षस्थं पत्रपुष्पादि वटबीजस्थितं यथा।
तथा हृदयबीजस्थं विश्वमेतत् परात्मनः॥ ४१॥

## इति भाजनस्थलम्

இலை பூ முதலியன மிகச் சிறிய விதையில் அடங்கியிருப்பது போல் இவ்வனைத்துலகங்களும் பரமாத்மாவின் இதயத்தில் அடங்கியிருக்கின்றன.

மரம டுத்துள பாசிலை மலர்முத லனவோர்
தரைய டுத்துள வித்தினி லடங்குறுந் தகைபோற்
பரவு மிச்சக மியாவுமோர் பரமநல் யோகி
யிருத யத்தனி வித்தினி லடங்குமென் றிசைப்பார்.

இலை பூ முதலியன மிகச் சிறிய விதையில் அடங்கியிருப்பது போல் இவ்வனைத்துலகங்களும் பரமாத்மாவின் இதயத்தில் அடங்கியிருக்கின்றன.

பாசநத்தலம் முற்றும்.

दिक्कालाद्यनवच्छिन्नं चिदानन्दमयं महत्।
यस्य रूपमिदं ख्यातं सोऽङ्गालेप इहोच्यते॥४२॥

இடம் காலம் ஆகியவற்றுக்கு அப்பாற்பட்டதாயும் சிதானந்தமயமாயும் விளங்கும் நிலையே அங்காலேபம் எனப்படும்.

காலந் திக்கிவை யாதியாற் கண்டித மின்றிக்
கோலஞ் சச்சிதா நந்தமா மிதுமுனங் கூறுஞ்
சீலங் கொண்டவற் குருவெனச் செப்புவ ரவன்றான்
மாலிங் கோவுமங் காலேப னென்பர்நூல் வல்லோர்.

இடம் காலம் ஆகியவற்றுக்கு அப்பாற்பட்டதாயும் சிதானந்தமயமாயும் விளங்கும் நிலையே அங்காலேபம் எனப்படும்.

समस्तजगदात्माऽपि संविद्रूपो महामतिः।
लिप्यते नैव संसारैर्यथा धूमादिभिर्णभः॥४३॥
न विधिर्न निषेधेश्च न विकल्पो न वासना।
केवलं चित्स्वरूपस्य गलितप्राकृतात्मनः॥४४॥

மஹாயோகியானவன் எல்லா உலகங்களையும் தன்னுள்ளடக்கிய சின்மயமாய்த் திகழ்ந்தாலும் புகையால் ஆகாயம் எவ்விதத் தொடர்பும் கொள்ளாதிருப்பது போல் சம்சாரமலங்களால் எவ்விதத் தொடர்புமடைவதில்லை; உலகியலைக் கடந்து சின்மயமாய் விளங்கும் அந்த மஹாயோகிக்கு விதி மற்றும் விலக்கு ஆகிய கட்டுப்பாடுகள் இல்லை.

போத மேனியா மதிஞன்வெண் புகைமுத லனவா
லோதும் வானென வொன்றொரு தொழிலொடு முறானான்

மேதை யாமிவன் றனக்கிலை விதியொடு விலக்காம்
பேத மாகிய விகற்பமு மென்றிடும் பெருநூல்.

மஹாயோகியானவன் எல்லா உலகங்களையும் தன்னுள்ளடக்கிய சின்மயமாய்த் திகழ்ந்தாலும் புகையால் ஆகாயம் எவ்விதத் தொடர்பும் கொள்ளாதிருப்பது போல் சம்சாரமலங்களால் எவ்விதத் தொடர்புமடைவதில்லை; உலகியலைக் கடந்து சின்மயமாய் விளங்கும் அந்த மஹாயோகிக்கு விதி மற்றும் விலக்கு ஆகிய கட்டுப்பாடுகள் இல்லை.

घटादिषु पृथग्भूतं यथाकाशं न भिद्यते।
तथोपाधिगतं ब्रह्म नानारूपं न भिद्यते॥ ४५॥

குடம் ஆகியவற்றிலுள்ள ஆகாயம் வேருகாதது போல் உபாதிகளால் பற்பல வேற்றுமைகளை அடைந்த பிரம்மமும் வேறுபாடு அடைவதில்லை.

வேறு பட்டிடு கடாதியால் விசும்புவே றுறினும்
வேறு பட்டிடா வாறென விமலமெய்ப் பிரமம்
வேறுபட்டிடு முபாதியால் வேறுவே றுறினும்
வேறுபட்டிடா தெனமறை விளங்குற விளம்பும்.

குடம் ஆகியவற்றிலுள்ள ஆகாயம் வேருகாதது போல் உபாதிகளால் பற்பல வேற்றுமைகளை அடைந்த பிரம்மமும் வேறுபாடு அடைவதில்லை.

अनश्वरमनिर्देश्यं यथा व्योम प्रकाशते।
तथा ब्रह्मापि चैतन्यमत्र वैशेषिकी कला॥ ४६॥
न देवत्वं न मानुष्यं न तिर्यक्त्वं न चान्यथा।
सर्वाकारत्वमाख्यातं जीवन्मुक्तस्य योगिनः॥ ४७॥

## इत्यज्ञालेपस्थलम्

பிரம்மானது என்றுமழியாததாயும் நிலைபெற்றதாயும் இத்தகையது எனக் கூறவொண்ணுததாயும் ஆகாயம் போல் விளங்குகிறது; ஜீவன்முக்தியடைந்த யோகி தேவன், மனிதன், மிருகம் ஆகிய நிலைகளைக் கடந்தவனுய் விளங்குகிருன்.

வான மேயென வளவற வயங்குறும் பிரம
மான வங்கதிற் சிற்கலை விசேடமென் றறிவாய்
மானி டங்கட வுளர்விலங் கெனுந்தகை மருவான்
ஞானி யாவையுந் தன்வடி வாகவே நண்ணும்.

பிரம்மானது என்றுமழியாததாயும் நிலைபெற்றதாயும் இத்தகையது எனக் கூறவொண்ணாததாயும் ஆகாயம் போல் விளங்குகிறது; ஜீவன்முக்தியடைந்த யோகி தேவன், மனிதன், மிருகம் ஆகிய நிலைகளைக் கடந்தவனாய் விளங்குகிறான்.

அங்கலேபத்தலம் முற்றும்.

## अथ स्वपराज्ञस्थलम्

अप्रमेये चिदाकारे ब्रह्मण्यद्वैतवैभवे।
विलीनः किं नु जानाति स्वात्मानं परमेव वा॥४८॥

அளவற்றதான சின்மய அத்துவைத பிரம்மத்தில் ஒன்றிய மஹாயோகி தனது ஆன்மாவையோ பரமாத்மாவையோ எவ்வாறு அறிவான்?

ஏக மாகியே யறிவுரு வாயள விசையா
தாகு மோர்பிர மத்தினிற் கலந்திடு மரிய
யோகி யாமவன் றன்னையும் பரனையு முணரும்
பாகு பாடுறு மியல்பினை யுடையனோ பகராய்.

அளவற்றதான சின்மய அத்துவைத பிரம்மத்தில் ஒன்றிய மஹாயோகி தனது ஆன்மாவையோ பரமாத்மாவையோ எவ்வாறு அறிவான்?

यत्र नास्ति भिदायोगादहं त्वमिति विभ्रमः।
न संयोगो वियोगश्च न ज्ञेयज्ञातृकल्पना॥४९॥
न बन्धो न च मुक्तिश्च न देवाद्यभिमानिता।
न सुखं नैव दुःखं च नाज्ञानं ज्ञानमेव वा॥५०॥
नोत्कृष्टत्वं न हीनत्वं नोपरिष्टान्न चाप्यधः।
न पश्चान्नैव पुरतो न दूरे किञ्चिदन्तरे॥५१॥

सर्वाकारे चिदानन्दे सत्यरूपिणि शाश्वते।
पराकाशमये तस्मिन् परे ब्रह्मणि निर्मले॥५२॥

ஆகாயம் போல் எல்லையற்றுப் பரந்த நிர்மலமான அந்த பிரம்மத்தையடைந்த நிலையில் பரஸ்பரம் தொடர்பு, பிரிவு, சுகம், துக்கம், ஞானம், அஞ்ஞானம், உயர்வு, தாழ்வு, மேல், கீழ், முன்புறம், பின்புறம், அண்மை, தொலைவு போன்ற எவ்வித வேறுபாடும் இல்லை.

ஞான சீலமே வினற்குநீ நானெனு மயலோ
டான வின்பதுன் பம்புணர் வகறறே வாதி
மான ஞாதுரு ஞேயம்வா லறிவறி யாமை
யீன மேலொடு பந்தம்வீ டிவைமுத லில்லை.

ஆகாயம் போல் எல்லையற்றுப் பரந்த நிர்மலமான அந்த பிரம்மத்தையடைந்த நிலையில் பரஸ்பரம் தொடர்பு, பிரிவு, சுகம், துக்கம், ஞானம், அஞ்ஞானம், உயர்வு, தாழ்வு, மேல், கீழ், முன்புறம், பின்புறம், அண்மை, தொலைவு போன்ற எவ்வித வேறுபாடும் இல்லை.

एकीभावमुपेतानां योगिनां परमात्मनाम्।
परापरपरिज्ञानपरिहासकथा कुतः॥५३॥
देशकालानवच्छिन्नतेजोरूपसमाश्रयात्।
स्वपरज्ञानविरहात् स्वपराज्ञस्थलं विदुः॥५४॥

## इति स्वपराज्ञस्थलम्

பரமாத்மாவுடன் ஐக்கியமடைந்த மஹாயோகிக்கு இது தன்னுடையது அது மற்றவருடையது என அறியும் நிலையே இல்லை; இடம் காலம் ஆகிய கட்டுப்பாடுகளைக் கடந்த பரந்த ஒளியில் கலந்ததால் அந்நிலை ஸ்வபராஜ்ஞஸ்தலமெனப்படும்.

தேச காலமற் றொளிதரு தேசடை தலினா
லாசி றன்னையும் பரனையு மறிந்திடா மையினா
லேசி றன்னொடு பரமறி யாத்தல மிதனைப்
பேசு மாகம மென்றறி யருந்தவப் பெரியோய்.

பரமாத்மாவுடன் ஐக்கியமடைந்த மஹாயோகிக்கு இது தன்னுடையது அது மற்றவருடையது என அறியும் நிலையே இல்லை; இடம் காலம் ஆகிய கட்டுப்பாடுகளைக் கடந்த பரந்த ஒளியில் கலந்ததால் அந்நிலை ஸ்வபராஜ்ஞஸ்தலமெனப்படும்.

சுபராஞ்ஞத்தலம் முற்றும்.

## अथ भावाभावलयस्थलम्

त्वन्ताहन्ताविनिर्मुक्ते शून्यकल्पे चिदम्बरे।
एकीभूतस्य सिद्धस्य भावाभावकथा कुतः॥५५॥

நீ நான் என்று பிரித்தறியும் நிலைகளைக் கடந்து சின்மயமான பிரம்மத்தில் ஐக்கியமடைந்த யோகி உண்மை இன்மை ஆகிய வேறுபாடுகளையும் கடந்து நிற்கிறான்.

பகுத்து நின்றுநீ நானெனும் பரிசில தாகி
யுகப்ப டைந்திடு சூனிய சிதம்பரத் தொன்றாந்
தகப்பெ ருந்தகை யாகிய யோகியைச் சாரா
மிகுத்து நின்றபா வாபாவ மெனவறி மேலோய்.

நீ நான் என்று பிரித்தறியும் நிலைகளைக் கடந்து சின்மயமான பிரம்மத்தில் ஐக்கியமடைந்த யோகி உண்மை இன்மை ஆகிய வேறுபாடுகளையும் கடந்து நிற்கிறான்.

अहंभावस्य शून्यत्वादभावस्य तथात्मनः।
भावाभावविनिर्मुक्तो जीवन्मुक्तः प्रकाशते॥५६॥
सुखदुःखादिभावेषु नाभावो भाव एव वा।
विद्यते चित्स्वरूपस्य निर्लेपस्य महात्मनः॥५७॥

நான் எனும் மிகச் சிறிய நிலையைக் கடந்த ஜீவன்முக்தன் உண்மை இன்மை ஆகிய நிலைகளிலிருந்து நீங்கி விளங்குகிறான்; சுகம், துக்கம் முதலியன அவனுக்கு உண்மையுமில்லை பொய்யுமில்லை.

ஈங்கு நானெனும் பாவத்திற் கிலாமைவந் துறலாற்
றீங்கி லாதவான் மாவினத பாவமுஞ் செப்புற்
றாங்கி லாமையை யடைதலா லச்சீவன் முத்த
னோங்கு பாவமோ டபாவமு மிலனென வுணர்வாய்.

நான் எனும் மிகச் சிறிய நிலையைக் கடந்த ஜீவன்முக்தன் உண்மை இன்மை ஆகிய நிலைகளிலிருந்து நீங்கி விளங்குகிறுன்; சுகம், துக்கம் முதலியன அவனுக்கு உண்மையுமில்லை பொய்யுமில்லை.

यस्मिन् ज्योतिषि चिद्रूपे दृश्यते नैव किञ्चन।
सद्रूपं वाप्यसद्रूपं भावाभावं विमुञ्चतः॥५८॥

எந்த சைதன்னியப் பரஞ்சோதியில் உண்மை இன்மை ஆகிய எவ்வித வேற்றுமைப்பட்ட அறிவும் விளங்குவதில்லையோ

பந்த மோவிய பெருமையோ னின்பதுன் பத்தில்
வந்த பாவமு மபாவமு மிலனென மதிப்பா
யுந்து ஞானியாய்ப் பாவமு மபாவமு மொழித்தோ
னந்தி லுள்ளதா யினுமில்ல தாயினு மறியான்.

எந்த சைதன்னியப் பரஞ்சோதியில் உண்மை இன்மை ஆகிய எவ்வித வேற்றுமைப்பட்ட அறிவும் விளங்குவதில்லையோ

प्रतीयमानौ विद्येते भावाभावौ न कुत्रचित्।
लिङ्गैक्ये सति यत्तस्माद् भावाभावलयस्थलम्॥५९॥

इति भावाभावास्थलम्

உண்மை இன்மை எனும் பாவ அபாவ நிலையினின்று நீங்கிய அந்த லிங்கைக்கிய நிலையே பாவாபாவலயஸ்தலமாகும்.

தோன்று பாவமு மபாவமு மெங்கணுந் தோயான்
சான்ற தாஞ்சிவத் தேகமாந் தகையினோ னதனா
லான்று நின்றபா வாபாவ லயத்தல மதனை
ஞான்ற வார்சடைக் கடவுளா கமமெலா நவிலும்.

உண்மை இன்மை எனும் பாவ அபாவ நிலையினின்று நீங்கிய அந்த லிங்கைக்கிய நிலையே பாவாபாவலயஸ்தலமாகும்.

பாவாபாலயத்தலம் முற்றும்.

## अथ ज्ञानशून्यस्थलम्

परापरसमापेक्षभावाभावविवेचनम्।
ज्ञानं ब्रह्मणि तन्नास्ति ज्ञानशून्यस्थलं विदुः॥६०॥

பரம் அபரம் என்பவற்றை அறியும் விவேக நிலையைக் கடந்த ஞானம் பிரம்மத்திலில்லை; அதுவே ஞானசூனியஸ்தலமாகும்.

பராப ரத்தினை விழைந்தபா வாபாவ விவேகம்
விராவு நற்பெரு ஞானமொண் பிரமத்தின் மேவுற்
றிராதெ னப்பட லான்ஞான சூனிய மிசைக்கு
மராவு டைச்சடை யெம்பிரா னாகம மனைத்தும்.

பரம் அபரம் என்பவற்றை அறியும் விவேக நிலையைக் கடந்த ஞானம் பிரம்மத்திலில்லை; அதுவே ஞானசூனியஸ்தலமாகும்.

जले जलमिव न्यस्तं वह्नौ वह्निरिवार्पितम्।
परे ब्रह्मणि लीनात्मा विभागेन न दृश्यते॥६१॥

நீரில் நீர் கலந்தாற் போலும் நெருப்பினில் நெருப்பு சேர்ந்தாற் பாலும் பரப்பிரமத்தில் இரண்டறக்கலந்த ஆன்மா தனித்துக் காணப்படுவதில்லை.

நீரி னீரும்வெந் நெருப்பினி னெருப்புமே போல
வாரு மோர்பிர மத்தினி லயிக்கமுற் றடைந்த
பேரி னோன்விபா கத்தினாற் காண்குறா னென்று
சாரு மாகம நெறியுணர்ந் தவருரை தருவார்.

நீரில் நீர் கலந்தாற் போலும் நெருப்பினில் நெருப்பு சேர்ந்தாற் பாலும் பரப்பிரமத்தில் இரண்டறக்கலந்த ஆன்மா தனித்துக் காணப்படுவதில்லை.

सर्वात्मनि परे तत्त्वे भेदशङ्काविवर्जिते।
ज्ञात्रादिव्यवहारोत्थं कुतो ज्ञानं विभाव्यते॥ ६२॥

எல்லா ஆன்மாக்களேயும் உள்ளடக்கியதும் பரதத்துவமானதும் எவ்வித வேற்றுமையுமற்றதுமான பரநிலேயில் அறிபவன், அறியப்படுவது போன்ற உலகியல் நடைமுறைகள் ஏது?

பேத மாறிய வனைத்துமா மொருபிர மத்தின்
ஞாது ராதிகள் வழக்கினாற் றோன்றுறு ஞானம்
யாது மேவுறு மியாதுமே வாதென வெய்ப்பாய்
போத வாரமு துண்டருந் தமிழ்க்கலை புகன்றோய்.

எல்லா ஆன்மாக்களேயும் உள்ளடக்கியதும் பரதத்துவமானதும் எவ்வித வேற்றுமையுமற்றதுமான பரநிலேயில் அறிபவன், அறியப்படுவது போன்ற உலகியல் நடைமுறைகள் ஏது?

निर्विकारं निराकारं नित्यं सीमाविवर्जितम्।
व्योमवत् परमं ब्रह्म निर्विकल्पतया स्थितम्॥ ६३॥

பிரம்மமானது ஆகாயத்தைப் போல் எவ்வித மாற்றங்களுமின்றி உருவமின்றி எல்லேயற்று என்றும் நிலேபெற்ற உண்மையாய்த் திகழ்கிறது.

வான மாமென வடிவில்சிந் மாத்திர மாகி
மான மின்றிவே றொன்றொடும் படாதுதான் மலர்ந்தொன்
றான வோர்பிர மத்தினி னானெனு மதனான்
ஞான பாவனை பாவிப்போன் யாவனீ நவில்வாய்.

பிரம்மமானது ஆகாயத்தைப் போல் எவ்வித மாற்றங்களுமின்றி உருவமின்றி எல்லேயற்று என்றும் நிலேபெற்ற உண்மையாய்த் திகழ்கிறது.

न पृथ्व्यादीनि भूतानि न ग्रहा नैव तारकाः।
न देवा न मनुष्याश्च न तिर्यञ्चो न चापरे॥ ६४॥
तस्मिन् केवलचिन्मात्रसत्तानन्दैकलक्षणे।
त्वन्ताहन्तादिसंरूढं विज्ञानं केन भाव्यते॥ ६५॥

நிலம், நீர், போன்ற பூதங்களோ, நட்சத்திரம், கிரஹங்கள் போன்றவையோ, தேவர், மனிதர், மிருகம் முதலியனவோ அங்கில்லை; அந்த பிரம்மம் சின்மயமானது; அந்நிலையில் நான் நீ போன்ற உலகியல் வேற்றுமைகள் எதுவும் காணப்படா.

ஞேய மாகவொன் றெதிருற நின்றிடா மையினாற்
பாய ஞானசூ னியமென்றும் பாவிக்கப் படுமாற்
றூய தானசத் தாநந்த வடிவமாஞ் சோதி
மேய வோர்பரா காசமொத் தெங்கணும் விளங்கும்.

அந்த பிரம்மம் சின்மயமானது; அந்நிலையில் நான் நீ போன்ற உலகியல் வேற்றுமைகளின் அடிப்படையில் தோன்றும் ஞானம் எதுவும் காணப்படாது.

ज्ञेयाभावाद्विशेषेण शून्यकल्पं विभाव्यते।
ज्ञातृज्ञेयादिभिः शून्यं शून्यं ज्ञानादिभिर्गुणैः॥ ६६॥

அறிவோன் அறியப்படும் பொருள் போன்ற வேற்றுமையின் அடிப்படையில் தோன்றும் ஞானம் இல்லாததால் அந்நிலை ஞானசூனியமெனப்படும்.

சூனி யம்பெறு ஞானாதி கற்பனைச் சோதி
யான வொண்சிவ லிங்கமாந் தன்னுரு வதனிற்
றானி ரண்டற வடைந்துள தகுதியோன் றனக்கு
ஞான மென்பதொன் றிலையென வறைகுவர் நல்லோர்.

அறிவோன் அறியப்படும் பொருள் போன்ற வேற்றுமையின் அடிப்படையில் தோன்றும் ஞானம் இல்லாததால் அந்நிலை ஞானசூனியமெனப்படும்.

आदावन्ते च मध्ये च शून्यं सर्वत्र सर्वदा।
द्वितीयेन पदार्थेन शून्यं शून्यं विभाव्यते॥ ६७॥
केवलं सच्चिदानन्दप्रकाशाद्वयलक्षणम्।
शून्यकल्पं पराकाशं परब्रह्म प्रकाशते॥ ६८॥
शून्यज्ञानादिसङ्कल्पे शून्यसर्वार्थसाधने।
ज्योतिर्लिङ्गे चिदाकारे स्वप्रकाशे निरुत्तरे।

एकीभावमुपेतस्य कथं ज्ञानस्य सम्भवः ॥ ६९ ॥
यस्य कार्यदशा नास्ति कारणत्वमथापि वा।
शेषत्वं नैव शेषित्वं स मुक्तः पर उच्यते ॥ ७० ॥

## इति ज्ञानशून्यस्थलम्

தொடக்கம், நடு, இறுதி ஆகிய முந்நிலையிலும் தன்னைத் தவிர வேறொன்றும் இலாதது சூனியமெனப்படுவது; ஸச்சிதானந்த வடிவான பரப்பிரமம் ஆகாயம் போல் சூனியமாய் விளங்குகிறது; அத்தகைய சூனியஞானலிங்கத்தில் ஐக்கியமடைந்த நிலையில் வேறு ஞானம் எதுவும் தோன்றாது; அது காரியம், காரணம் மற்றும் உடையான், உடைமை ஆகியன அனைத்தும் கடந்த நிலை. அதுவே பரமுக்தநிலை.

சாற்று காரணத் துவமொடு காரியத்தன்மை
யேற்ற சேடமோ டுற்றசே டித்துவ மிலானைப்
போற்று மோர்பர முத்தனென் றறைகுவர் புலவ
ராற்றல் சாறவத் துயர்தரு மகத்தியப் பெயரோய்.

அது காரியம், காரணம் மற்றும் உடையான், உடைமை ஆகியன அனைத்தும் கடந்த நிலை. அதுவே பரமுக்தநிலை.

ஞானசூனியத்தலம் முற்றும்.

மஹாலிங்கஸ்தலம் முற்றிற்று.

த்விதீய பரிச்சேதமாகிய லிங்கஸ்தலம் ஸம்பூர்ணம்

## अथोपदेशोपसंहारवर्णनम्

एतावदुक्त्वा परमप्रबोधमद्वैतमानन्दशिवप्रकाशम्।
देव्यै पुरा भाषितमीश्वरेण तूष्णीमभूद्ध्यानपरो गणेन्द्रः ॥७१॥

முன்பு தேவிக்கு ஈசுவரன் விளக்கிய உயர்ந்த அத்துவைதானந்த சிவப்பிரகாசஞானத்தை அகத்தியருக்கு உபதேசித்தபின் கணநாதர் சிறிது நேரம் மௌனநிலையிலிருந்தார்.

முக்கண னம்பிகைக்கு முன்சொலத் துவித ஞான
மக்கண நாத னிவ்வா றகத்திய முனிக்கு ணர்த்தி
நெக்குறு மனத்தி லீச னினைவொடு மவுனி யானான்
கைக்கமலங்கள் கூப்பிக் கடமுனி கசிந்து சொல்வான்.

முன்பு தேவிக்கு ஈசுவரன் விளக்கிய உயர்ந்த அத்துவைதானந்த சிவப்பிரகாசஞானத்தை அகத்தியருக்கு உபதேசித்தபின் ரேணுகராகிய கணநாதர் சிறிது நேரம் மௌனநிலையிலிருந்தார். அகத்தியர் கைகுவித்து அவரை நோக்கிப் பின்வருமாறு கூறினர்.

एवमुक्त्वा समासीनं शिवयोगपरायणम्।
रेणुकं तं समालोक्य बभाषे प्राञ्जलिर्मुनिः ॥७२॥
शिवयोगविशेषज्ञ शिवज्ञानमहोदधे।
समस्तवेदशास्त्रादिव्यवहारधुरन्धर ॥७३॥
आलोकमात्रनिर्धूतसर्वसंसारबन्धन।
स्वच्छन्दचरितोल्लास स्वप्रकाशात्मवच्छिव ॥७४॥
अवतीर्णमिदं शास्त्रमनवद्यं त्वदाननात्।
श्रुत्वा मे मोदते चित्तं ज्योतिः पश्ये शिवाभिधम् ॥७५॥

சிவயோகத்தில் நிலைபெற்று விளங்கும் ரேணுகமுனிவரை நோக்கி அகத்தியர் கூறினர்: "சிவயோகத்தில் சிறந்தவரே! சிவஞானக்கடலே! எல்லா வேதசாத்திரங்களையும் கற்றுணர்ந்தவரே! கடைக்கண் நோக்காலேயே மக்களின் சம்சார நோயை நீக்குபவரே! முற்றும் சுவதந்தரமானவரே!

சுவப்பிரகாச சிவபெருமானையொத்தவரே! தாங்கள் திருவாய்மலர்ந்தருளிய இவ்வுயர்ந்த சாத்திரத்தைக் கேட்ட என் மனம் எல்லையற்ற ஆனந்தமடைகிறது, எனது மனத்தில் சிவபரஞ்சோதியைக் காண்கிறேன்."

வருத்துறு பிறவி நோய்தீர் மருத்துவ நெஞ்சக் கோட்டந்
திருத்துறு முரவ ஞானச் செல்வவே தாக மங்கள்
கருத்துணர் புலவ நீநின் கருணையா லடிய னேனுக்
குரைத்தருண் ஞான நூலா லுளத்துறு முவகை பெற்றேன்.

எல்லா வேதசாத்திரங்களையும் கற்றுணர்ந்தவரே! கடைக்கண் நோக்காலேயே மக்களின் சம்சார நோயை நீக்குபவரே! தாங்கள் திருவாய்மலர்ந்தருளிய இவ்வுயர்ந்த சாத்திரத்தைக் கேட்ட என் மனம் எல்லையற்ற ஆனந்தமடைகிறது, எனது மனத்தில் சிவபரஞ்சோதியைக் காண்கிறேன்."

अद्य मे सफलं जन्म गतो मे चित्तविभ्रमः।
सञ्जाता पाशविच्छित्तिस्तपांसि फलितानि मे॥ ७६॥

இன்று எனது பிறவிப்பயனை அடைந்தேன்; என் மனக்குழப்பங்கள் நீங்கின. எனது பாசத்தளைகள் அறுந்தன, எனது தவம் பயனுற்றது.

இன்றுநான் மனித யாக்கை யெய்திய பயன டைந்தே
னின்றுநான் முனிவர்க் கெல்லா மிறைவனாம் பெரியோ
னானே
னின்றுநா னவிச்சை யென்னு மிருள்விடி காலை பெற்றே
னின்றுநா னளவி னோன்பா லெய்த்ததற் குறுதி கண்டேன்.

இன்று எனது பிறவிப்பயனை அடைந்தேன்; என் மனக்குழப்பங்கள் நீங்கின. எனது பாசத்தளைகள் அறுந்தன, எனது தவம் பயனுற்றது.

इदानीमेव मे जातं मुनिराजोत्तमोत्तमम्।
इतःपरं मया नास्ति सदृशो भुवनत्रये॥ ७७॥

शास्त्रं तव मुखोद्गीर्णं शिवाद्वैतपरम्परम्।
मां विना कस्य लोकेषु श्रोतुमस्ति तपः शुभम्॥७८॥
तपसां परिपाकेन शङ्करस्य प्रसादतः।
आगतस्त्वं महाभाग मां कृतार्थयितुं गिरा॥७९॥

ஓ முனிவருட் சிறந்தவரே! இன்றே என் பிறவி பயனடைந்தது; மூவுலகிலும் என்னையொத்தவர் எவருமில்லை; தாங்கள் திருவாய்மலர்ந்த சிவாத்துவைத சாத்திரத்தைக் கேட்க என்னைத் தவிர பாக்கியமுள்ளவர் யார்? சிவபெருமானது திருவருளாலும் எனது தவவலிமையாலும் தாங்கள் இங்கு எழுந்தருளி தங்களது திருவாக்கால் என்னைத் தனியனுக்கினீர்கள்.

பரமநூ லிதனைக் கேட்க வருந்தவம் பயின்றோ ரென்போ
லொருவரு முலகி லில்லை யுமையொரு பாக னெங்கோ
னருளினா லடிய னேனை யடிமைகொண் டருள வேண்டி
மருவினை யென்று சீர்சான் மலயமா தவன்று தித்தான்.

சிவாத்துவைத சாத்திரத்தைக் கேட்க என்னைத் தவிர பாக்கியமுள்ளவர் யார்? சிவபெருமானது திருவருளாலும் எனது தவவலிமையாலும் தாங்கள் இங்கு எழுந்தருளி தங்களது திருவாக்கால் என்னைத் தனியனுக்கினீர்கள்.

इति स्तुवन्तं विनयादगस्त्यं मुनिपुङ्गवम्।
आलोक्य करुणादृष्ट्या बभाषे स गणेश्वरः॥८०॥
अगस्त्य मुनिशार्दूल तपःसिद्धमनोरथ।
त्वां विना शिवशास्त्रस्य कः श्रोतुमधिकारवान्॥८१॥
पात्रं शिवप्रसादस्य भवानेको न चापरः।
इति निश्चित्य कथितं मया ते तन्त्रमीदृशम्॥८२॥

இவ்வாறு மிக்க பணிவுடன் தன்னை வணங்கி நிற்கும் அகத்தியரை ரேணுகர் கருணையுடன் நோக்கி ஓ அகத்தியரே! தவத்தில் சிறந்தோனே! உன்னைத் தவிர இச்சிவசாத்திரத்தைக் கேட்க வேறு யார் தான் தகுதியுடையவர்? சிவப்பிரசாதத்துக்குரிய ஓரே பாத்திரம் நீ ஒருவனே என

எண்ணி இத்தகைய ஒப்பற்ற தந்திரத்தை உனக்கு நான் உபதேசித்தேன்.

அறைந்தநூ லிதற்கு நீயே யதிகாரி யன்றி யில்லை
பிறந்திடா வடிவ முக்கட் பெருந்தகை யருளி னுக்குச்
சிறந்துளா யென்னு மாற்றாற் செப்பின னிதனைப் போல
மறைந்திடா திலகு ஞான சாதன மற்றொன் றில்லை.

உன்னைத் தவிர இச்சிவசாத்திரத்தைக் கேட்க வேறு யார் தான் தகுதியுடையவர்? சிவப்பிரசாதத்துக்குரிய ஒரே பாத்திரம் நீ ஒருவனே என எண்ணி இத்தகைய ஒப்பற்ற தந்திரத்தை உனக்கு நான் உபதேசித்தேன்.

स्थाप्यतां सर्वलोकेषु तन्त्रमेतम् त्वया मुने।
ईदृशं शिवबोधस्य साधनं नास्ति कुत्रचित्॥८३॥

ஓ முனிவரே! சிவஞானத்தையடைவதற்கு இதைத் தவிர வேறு சாத்திரம் வேறெங்குமில்லை; நீ இச்சாத்திரத்தை மூவுலகிலும் நிறுவுவாயாக.

ஆகம சார மாகி யருமறைப் பொருணி றைந்து
சீர்கெழு கிரியை ஞானந் திகழ்த்து மிவ்விணையி னூலைப்
பாகம தடைந்த சீடன் பாலுகந் தளிப்ப தன்றி
மோகம தடைந்து ளோற்கு மொழிந்திடத் தக்க தன்றே.

ஓ முனிவரே! சிவஞானத்தையடைவதற்கு அனைத்து ஆகமங்களின் சாரத்தையுடையதும் கிரியை, ஞானம் முதலியவற்றைத் தன்னுள்ளடக்கியதுமான இச்சாத்திரத்தைத் தவிர வேறு சாத்திரம் வேறெங்குமில்லை; நீ இச்சாத்திரத்தை மூவுலகிலும் நிறுவுவாயாக.

रहस्यमेतत् सर्वज्ञः सर्वानुग्राहकः शिवः।
अवादीत् सर्वलोकानां सिद्धये पार्वतीपतिः॥८४॥
तदिदं शिवसिद्धान्तसारणामुत्तमोत्तमम्।
वेदवेदान्तसर्वस्वं विद्याचारप्रवर्तकम्॥८५॥
वीरमाहेश्वरग्राह्यं शिवाद्वैतप्रकाशकम्।

परीक्षितेभ्यो दातव्यं शिष्येभ्यो नान्यथा क्वचित्॥८६॥
एतच्छ्रवणमात्रेण सर्वेषां पापसंक्षयः।
अवतीर्णं मया भूमौ शास्त्रस्यास्य प्रवृत्तये।
प्रवर्तये शिवाद्वैतं त्वमपि ज्ञानमीदृशम्॥८७॥

மிகவும் ரகசியமான இந்த ஞானத்தை முன்பு பார்வதீபதியாகிய சிவபெருமான் மூவுலகும் உய்யும் பொருட்டு உபதேசித்தார்; சிவஞானங்களுள் இது தலையாயது, வேத வேதாந்தங்களின் உட்பொருளைக் கொண்டது, வீரமாஹேசுவரர்கள் எப்போதும் கொள்ளத்தக்க இந்த சாத்திரம் சிவாத்துவைதஞானத்தை விளக்குவது; சீடர்களின் தகுதியை நன்கு சோதித்த பின்னரே அவர்களுக்கு இச்சாத்திரத்தை வழங்கவேண்டும்; இதைக் கேட்ட மாத்திரத்திலேயே அனைத்துப் பாவங்களும் விலகும்; அனைவரின் நலனையும் கருதியே நான் இச்சாத்திரத்தை இவ்வுலகில் பரப்புகிறேன்; நீயும் இதைப் பரவச் செய்வாயாக.

इति श्रीमत्षट्स्थलब्रह्मिणा शिवयोगिनाम्ना रेणुकाचार्येण विरचिते वीरशैवधर्मनिर्णये सिद्धान्तशिखामणौ शिवैक्यस्थलविषयनवविधलिङ्गप्रसङ्गो नाम विंशः परिच्छेदः॥२०॥

## एकविंशः परिच्छेदः

## विभीषणाभीष्टदानम्

इत्युक्त्वा पश्यतस्तस्य पुरस्तादेव रेणुकः।
अन्तर्दधे महादेवं चिन्तयन्नन्तरात्मना॥ १॥
य इदं शिवसिद्धान्तं वीरशैवमतं परम्।
श्रृणोति शुद्धमनसा स याति परमां गतिम्॥ २॥

இவ்வாறு கூறியவுடன் அகத்தியர் முன்னிலையிலேயே சிவபெருமானை நினைத்த வண்ணம் ரேணுகர் மறைந்து சென்றார்; இந்த வீரசைவமத சித்தாந்தத்தைத் தூய்மையான மனதுடன் கேட்பவன் எல்லாவற்றுக்கும் மேலான நிலையை அடைவான்.

**இப்பரி சருளி யெங்க ளிரேணுகன் கடிதெ ழுந்தங்**
**கொப்பரு முனிவர் கோமு னுயர்விசும் பிடைக்க ரந்தா**
**னப்பெரு முனிவ னோக்கி யற்புத முடனி ருந்தான்**
**செப்பரும் வீரசைவ சித்தாந்த நூலு ணர்ந்து.**

இவ்வாறு கூறியவுடன் அகத்தியர் முன்னிலையிலேயே சிவபெருமானை நினைத்த வண்ணம் ரேணுகர் மறைந்து சென்றார்; இந்த வீரசைவமத சித்தாந்தத்தைத் தூய்மையான மனதுடன் கேட்பவன் எல்லாவற்றுக்கும் மேலான நிலையை அடைவான்.

स्वच्छन्दाचाररसिकः स्वेच्छानिर्मितविग्रहः।
आससाद पुरीं लङ्कां रेणुको गणनायकः॥ ३॥

சுதந்திரத்தை மிகவும் விரும்புபவரும் தன்னிச்சையாக உருவம் கொள்பவருமான ரேணுக கணநாயகர் இலங்கை நகரைச் சென்றடைந்தார்.

**வேண்டுரு வடைய வல்ல விழுமிய விரேணு கன்றான்**
**சேண்டொடு மதிலி லங்கைத் திருநகர் தன்னிற் சென்றான்**
**பூண்டிகழ் குவவுத் திண்டோட் பொருவலி விபீட ணன்றான்**
**காண்டலு முவகை பூத்துக் கரிப்பகை யணையி லுய்த்தான்.**

சுதந்திரத்தை மிகவும் விரும்புபவரும் தன்னிச்சையாக உருவம் கொள்பவருமான ரேணுக கணநாயகர் இலங்கை நகரைச் சென்றடைந்தார்.

तमागतं महाभागं सर्वागमविशारदम्।
विभीषणः समालोक्य गेहं प्रावेशयन्निजम्॥४॥
भद्रासने निजे रम्ये निवेश्य गणनायकम्।
अर्घ्यपाद्यादिभिः सर्वैरुपचारैरपूजयत्॥५॥
पूजितेन प्रसन्नेन रेणुकेन निरूपितः।
निषसाद तदभ्याशे स निजासनमाश्रितः॥६॥
आबभाषे गणेन्द्रं तं कृताञ्जलिर्विभीषणः।
मानुषाकारसम्पन्नं साक्षाच्छिवमिवापरम्॥७॥

அனைத்து ஆகமங்களையும் கற்றுணர்ந்த அந்த ரேணுகர் தனது நகரை வந்தடைந்ததையறிந்த விபீஷணன் அருக்கியம் பாத்தியம் முதலானவற்ருல் வணங்கினுர்; மனமகிழ்ச்சியடைந்த ரேணுகரின் கட்டளையின் பேரில் விபீஷணரும் அவரருகில் ஆசனத்தில் அமர்ந்து கூப்பிய கைகளுடன் சிவபெருமான் மானுட வடிவம் தாங்கியது போல் தோற்றமளிக்கும் அந்த ரேணுக கணநாயகரை நோக்கிக் கூறினுர்.

அருக்கிய முதல ளித்தங் கருச்சனை முறையி னாற்றித்
திருக்கிளர் கமலப் பொற்றாள் சென்னியின் வணங்கி நிற்பச்
செருக்கொழி யுளத்த னன்பாற் செய்பணி யுவந்தி யோகி
யிருக்கென வயலொடுங்கி யிருந்தன னியம்ப லுற்றான்.

விபீஷணன் அருக்கியம் முதலானவற்ருல் ரேணுகரை வணங்கி அவரருகில் ஆசனத்தில் அமர்ந்து கூப்பிய கைகளுடன் அந்த ரேணுக கணநாயகரை நோக்கிக் கூறினுர்.

रेणुक त्वं गणाधीश शिवज्ञानपरायण।
अवतीर्णं महीमेनामिति सम्यक् श्रुतं मया॥८॥
मद्भाग्यगौरवादद्य समायास्त्वं पुरीमिमाम्।
कथं भाग्यविहीनानां सुलभाः स्युर्भवादृशाः॥९॥

मत्समो नास्ति लोकेषु भाग्यातिशयवत्तया।
यस्य गेहं स्वयं प्राप्तो भवान् साक्षान्महेश्वरः॥१०॥

ஓ ரேணுகரே! சிவஞானத்திற் சிறந்தோரே! தாங்கள் இப்பூவுலகை வந்தடைந்தீர்கள் எனக் கேட்டேன்; எனது பாக்கியவசத்தால் எனது நகருக்கு வந்துள்ளீர்கள். புண்ணியமில்லாதோர்க்குத் தங்களைப் போன்றோர் கிடைத்தல் அரிது. சிவபெருமானுக்கு நிகரான தாங்கள் எனது இல்லம் வந்தடைந்ததால் இன்று என்னைப் போன்ற பாக்கியசாலி எவனுமில்லை.

கண்ணுதல் கயிலை காக்குங் கணங்களிற் றலைவ நீயிம்
மண்ணுல குய்ய வந்த மாற்றமு முணர்ந்தி ருந்தேன்
புண்ணிய மூர்த்தி நீயிப் புரத்திடைத் திருத்தாள் வைக்கப்
பண்ணிய தவங்க ளென்னோ வுணர்ந்திலன் பண்டி யானே.

ஓ ரேணுகரே! சிவஞானத்திற் சிறந்தோரே! தாங்கள் இப்பூவுலகை வந்தடைந்தீர்கள் எனக் கேட்டேன்; எனது பாக்கியவசத்தால் எனது நகருக்கு வந்துள்ளீர்கள். புண்ணியமில்லாதோர்க்குத் தங்களைப் போன்றோர் கிடைத்தல் அரிது. சிவபெருமானுக்கு நிகரான தாங்கள் எனது இல்லம் வந்தடைந்ததால் இன்று என்னைப் போன்ற பாக்கியசாலி எவனுமில்லை.

कृतार्था मे पुरी ह्येषा कृतार्थो राक्षसान्वयः।
जीवितं च कृतार्थं मे यस्य त्वं दृष्टिगोचरः॥११॥

தாங்கள் என் முன் தோன்றியதால் எனது நகரம் பயனடைந்தது, ராட்சசகுலம் பயனடைந்தது. என் பிறவிப்பயனை அடைந்தேன்.

பரித்துட லிருந்த தற்குப் பயனுனை யின்று கண்ட
தொருத்தரு மென்னை யொப்பா ருளர்கொலோ வென்று கூறக்
கருத்துவ கையினின் மூழ்கிக் கணங்கணா யகனு ரைப்பான்
பெருத்துள வறத்தி னின்போற் பெரியரிவ் வுலகி லில்லை.

தாங்கள் என் முன் தோன்றியதால் எனது நகரம் பயனடைந்தது, ராட்சசகுலம் பயனடைந்தது. என் பிறவிப்பயனை அடைந்தேன்.

इति ब्रुवाणं कल्याणं राक्षसेन्द्रं गणेश्वरः।
बभाषे सस्मितो वाणीं विश्वोल्लासकरीं शुभाम्॥ १२॥

ராட்சசத் தலைவன் இவ்வாறு கூறக்கேட்ட அம்முனிவர் புன்முறுவலுடன் இனிய சொற்களைக் கூறினார்.

சங்கர பத்தி தன்னாற் றலைமையோய் நின்னைக் காண்பா
னிங்குற வடைந்தே மெம்பா லெய்துறும் வரமொன் றுண்டேற்
சங்கைய தறவு ரைத்தி தருதுமென் றவனுரைப்பப்
பங்கய மலர்த்தாள் போற்றி யரக்கர்கோன் பகர லுற்றான்.

உனது ஒழுக்கத்தால் மிக்க மன மகிழ்ச்சியடைந்த நான் நீ விரும்பும் வரத்தை அருளக் காத்திருக்கிறேன். வரத்தைக் கேள்" என்றார்.

विभीषण महाभाग जाने त्वां धर्मकोविदम्।
त्वां विना कस्य लोकेषु जायते भक्तिरीदृशी॥ १३॥
समस्तशास्त्रसारज्ञं सर्वधर्मपरायणम्।
अध्यात्मविद्यानिरतमाहुस्त्वां राक्षसेश्वर॥ १४॥
त्वदीयधर्मसम्पत्तिं श्रुत्वाहं विस्मिताशयः।
व्रजन् कैलासमचलं त्वदन्तिकमुपागतः॥ १५॥
प्रीतोऽस्मि तव चारित्रैः शोभनैर्लोकविश्रुतैः।
दास्यामि ते वरं साक्षात् प्रार्थयस्व यथेप्सितम्॥ १६॥

"ஓ விபீஷணரே! ராட்சசர்களின் தலைவரான நீ எல்லா சாத்திரங்களையும் கற்றவரென்றும், தருமநெறி வழுவாதவரென்றும் ஆன்மிக சாத்திரங்களில் மிக்க நாட்டமுடையோனென்றும் நான் கேட்டிருக்கிறேன்; ஆதலால் கைலாயத்திற்குச் செல்லும் வழியில் உன்னைக் காண வந்துள்ளேன். உனது ஒழுக்கத்தால் மிக்க மன

மகிழ்ச்சியடைந்த நான் நீ விரும்பும் வரத்தை அருளக் காத்திருக்கிறேன். வரத்தைக் கேள்" என்றார்.

इति प्रसादसुमुखे भाषमाणे गणेश्वरे।
प्रणम्य परया प्रीत्या व्याजहार विभीषणः॥१७॥
आगमानुग्रहादेव भवतः शिवयोगिनः।
दुर्लभाः सर्वलोकानां समपद्यन्त सम्पदः॥१८॥
तथापि प्रार्थनीयं मे किञ्चिदस्ति गणेश्वर।

மன மகிழ்ச்சியுடன் ரேணுகர் இவ்வாறு கூறக் கேட்ட விபீஷணர் அவரைப் பக்தியுடன் வணங்கிக் கூறினார்: தங்களைப் போன்ற தலைசிறந்த சிவயோகிகள் நேரில் வந்தாலே அனைத்துச் செல்வங்களையும் மக்கள் அடைவது உறுதி. எனினும் கேட்பதற்கு உள்ளது.

இன்றுநீயிங் கெழுந்த ருளப்பெறு
நன்றி மேவிய நான்குறை யீதெனச்
சென்று கூறுஞ் செயலிலை யாயினு
மொன்று கூறுவ துண்டுனக் கின்றரோ.

தங்களைப் போன்ற தலைசிறந்த சிவயோகிகள் நேரில் வந்தாலே அனைத்துச் செல்வங்களையும் மக்கள் அடைவது உறுதி. எனினும் கேட்பதற்கு உள்ளது.

सुकृते परिपक्के हि स्वयं सिद्ध्यति वाञ्छितम्॥१९॥
रावणो हि मम भ्राता माहेश्वरशिखामणिः।
अदृष्टशत्रुसम्बन्धं शशास हि जगत्त्रयम्॥२०॥
यस्य प्रतापमतुलं सोढुमक्षमशक्तयः।
इन्द्रादयः सुराः सर्वे राज्यलक्ष्म्या वियोजिताः॥२१॥
स तु कालवशेनेव स्वचारित्रविपर्ययात्।
रणे विष्णववतारेण रामेण निहतोऽभवत्॥२२॥
स तु रामशराविद्धः कण्ठस्खलितजीवितः।
अवशिष्टं समालोक्य मामवादीत् सुदुःखितः॥२३॥

புண்ணியங்கள் பக்குவமடைந்தால் விரும்புவது நிறைவேறும். எனது அண்ணனுன ராவணன் வீரத்திலும் சிவபக்தியிலும் சிறந்தவன், மூவுலகிலும் தனக்குப் பகையின்றி அரசு புரிந்தான். இந்திரன் முதலான தேவர்களும் அவனது வலிமையால் கோலோச்சி வந்தனர். காலவசத்தால் தனது ஒழுக்கத்தினின்றும் வழுவி விஷ்ணு அவதாரமான ராமனுல் போரில் தோல்வியுற்று உயிர் நீத்தான். அத்தறுவாயில் என்னிடம் கூறினுன்.

எனக்கு முன்னவ னாகு மிராவணன்
சினக்கும் வென்றியி ராமன் சிலையுமிழ்
நுனிக்கு மம்புற நொந்துயிர் போம்பொழு
துனிக்க வன்றிது ரைத்திடன் மேயினான்.

எனது அண்ணனுன ராவணன் காலவசத்தால் தனது ஒழுக்கத்தினின்றும் வழுவி ராமனுல் போரில் தோல்வியுற்று உயிர் நீத்தான். அத்தறுவாயில் என்னிடம் கூறினுன்.

विभीषण विशेषज्ञ महाबुद्धे सुधार्मिक।
अवशिष्टोऽसि वंशस्य रक्षसां भाग्यगौरवात्॥२४॥
वयमज्ञानसम्पन्ना महत्सु द्रोहकारिणः।
ईदृशीं तु गतिं प्राप्ता दुस्तरा हि विधिस्थितिः॥२५॥

ஓ அறிவிற் சிறந்த விபீஷணனே! தருமநெறி வழுவாதவனே! ராட்சசர்களின் புண்ணிய வசத்தால் நீ ஒருவனே மீதமுள்ளாய். நன்னடத்தையுள்ள பெரியோர்களிடம் நாங்கள் துரோகம் செய்து இத்தகைய கொடுமைக்கு உள்ளானேம். விதிப்பயனை எவரால் தான் மீற இயலும்?

நங்கு லம்பெறு நன்மைப் பெருக்கினாற்
றிங்க ளென்னத் திசைகள் விளங்குறும்
பொங்கி ரும்புகழ்ப் புண்ணிய னாகுநீ
யிங்கொ ழிந்தனை யெம்பியென் றோதினான்.

ராட்சசர்களின் புண்ணிய வசத்தால் நீ ஒருவனே மீதமுள்ளாய்.

नवकं लिङ्गकोटीनां प्रतिष्ठाप्यमिह स्थले।
इति सङ्कल्पितं पूर्वं मया तदवशिष्यते॥ २६॥
कोटिषट्कं तु लिङ्गानां मया साधु प्रतिष्ठितम्।

ஒன்பது கோடி லிங்கங்களை இப்பூவுலகில் நிறுவ நான் முன்னர் விருப்பம் கொண்டேன்; அதில் ஆறு கோடி லிங்கங்களை நான் நிறுவியுள்ளேன்.

இலங்கை யொன்றவி லிங்கம் புதியவாய்
'நிலங்க ளொன்பது கோடி நிறுவுவான்
மலங்க லின்றி மனங்கொண் டவற்றினு
ணலந்த யங்கறு கோடிக ணாட்டினேன்.

ஒன்பது கோடி லிங்கங்களை இப்பூவுலகில் நிறுவ நான் முன்னர் விருப்பம் கொண்டேன்; அதில் ஆறு கோடி லிங்கங்களை நான் நிறுவியுள்ளேன்.

कोटित्रयं तु लिङ्गानां स्थापनीयमतस्त्वया॥ २७॥
इति तस्य वचः श्रुत्वा दीनबुद्धेर्मरिष्यतः।
तथा साधु करोमीति प्रतिज्ञातं मया तथा॥ २८॥

மீதமுள்ள மூன்று கோடி லிங்கங்களை நீ நிறுவ வேண்டும்" என்றான். இறக்கும் தறுவாயிலிருந்த அவனுடைய சொற்களைக் கேட்ட நான் அவ்வாறே செய்வேன் என உறுதியளித்தேன்.

மூன்று கோடிலிங் கங்களிங் கொழிந்தன முறைநீ
யூன்று வாயென வுரைத்திறந் தனனவ னுரையா
லான்ற வாகம முறையது செயத்துணிந் தகத்தெஞ்
ஞான்று நானினைத் திருந்தன னென்றிது நவில்வான்.

மீதமுள்ள மூன்று கோடி லிங்கங்களை நீ நிறுவ வேண்டும்" என்றான். இறக்கும் தறுவாயிலிருந்த அவனுடைய சொற்களைக் கேட்ட நான் அவ்வாறே செய்வேன் என உறுதியளித்தேன்.

युगपच्छिवलिङ्गानां कोटित्रयमनुत्तमम्।
प्रतिष्ठाप्यं यथाशास्त्रमिति मे निश्चयोऽभवत्॥ २९॥

लिङ्गकोटित्रयस्येह युगपत् स्थापनाविधौ।
अविदन्नेकमाचार्यमहमेवमवस्थितः॥ ३०॥
शिवशास्त्रविशेषज्ञ शिवज्ञाननिधिर्भवान्।
आचार्यभावमासाद्य मम पूरय वाञ्छितम्॥ ३१॥
तस्येति वचनं श्रुत्वा राक्षसेन्द्रस्य धीमतः।
तथेति प्रतिशुश्राव सर्वज्ञो गणनायकः॥ ३२॥

அவ்வாறே மூன்று கோடி லிங்கங்களை உடனே நிறுவ வேண்டுமெனத் தீர்மானம் செய்து அதற்குத் தகுந்த ஆசாரியரை அடையாமல் இருந்தேன். சிவசாத்திரங்களில் வல்லவரே! தாங்கள் சிவசாத்திரமெனும் ஒப்பற்ற நிதியம் ஆகும். தாங்கள் எனக்கு ஆசாரியராயிருந்து எனது விருப்பத்தை நிறைவேற்றுவீராக. அறிவிற் சிறந்த அந்த ராட்சசவேந்தனின் சொற்களைக் கேட்ட கணநாயகர் அவ்வாறே ஆகுக என உறுதியளித்தார்.

மூர்த்த மொன்றின்முக் கோடிலிங் கமுமுறை நிறுவித்
தீர்த்த வென்கருத் தினைமுடித் தருளெனச் செப்பி
யேத்தி நின்றன னரக்கர்கோ னிரேணுக னதுகேட்
டாத்த நன்றது புரிகுவ னென்றன னருளால்.

தாங்கள் எனக்கு ஆசாரியராயிருந்து எனது விருப்பத்தை நிறைவேற்றுவீராக. அறிவிற் சிறந்த அந்த ராட்சசர் வேந்தனின் சொற்களைக் கேட்ட கணநாயகர் அவ்வாறே ஆகுக என உறுதியளித்தார்.

तत्र सन्तुष्टचित्तस्य पौलस्त्यस्येष्टसिद्धये।
कोटित्रयं तु लिङ्गानां यथाशास्त्रं यथाविधि।
त्रिकोट्याचार्यरूपेण स्थापितं तेन तत्क्षणे॥ ३३॥

புலஸ்தியர் மகனுன விபீஷணனின் விருப்பத்தை நிறைவேற்றும் வண்ணம் மூன்று கோடி ஆசாரியர்களின் வாயிலாக மூன்று கோடி லிங்கங்களைச் சாத்திர நெறி வழுவாது கணநாயகர் அக்கணமே நிறுவினுர்.

மூன்று கோடியா ரியவுரு வாயினன் முயன்று
மூன்று கோடிலிங் கங்களு முறையுளி வழாம
லூன்றி னானொருங் கெயினரு ளொருவனா லன்றி
யூன்றி னானிருங் கணத்தினு ளுயர்ந்துள வொருவன்.

புலஸ்தியர் மகனுன விபீஷணனின் விருப்பத்தை நிறைவேற்றும் வண்ணம் மூன்று கோடி ஆசாரியர்களின் வாயிலாக மூன்று கோடி லிங்கங்களைச் சாத்திர நெறி வழுவாது கணநாயகர் அக்கணமே நிறுவினுர்.

तादृशं तस्य माहात्म्यं समालोक्य विभीषणः।
प्रणनाम मुहुर्भक्त्या पादयोस्तस्य विस्मितः॥ ३४॥
प्रणतं विनयोपेतं प्रहृष्टं राक्षसेश्वरम्।
अनुगृह्य स्वमाहात्म्याद् रेणुकोऽन्तर्हितोऽभवत्॥ ३५॥

அத்தகைய ஒப்பற்ற மஹிமையைக் கண்ணுற்ற விபீஷணன் மிகுந்த பக்தியுடன் பலமுறை வீழ்ந்து அவரது திருவடிகளை வணங்கினுன். அவனைத் தனது சிவயோகமஹிமையால் அருள் புரிந்து ரேணுகர் அவ்விடத்தினின்று மறைந்தார்.

அரக்கர் கோனது கண்டுளத் தற்புத மடைந்து
நிரைக்கு மாமணி முடியக னிலம்பட விறைஞ்சி
யுரைக்கு மாறுள துதியெலா முரைத்திட வருளிச்
செருக்கு மாறிய கணேந்திரன் மறைந்தனன் சென்றான்.

அத்தகைய ஒப்பற்ற மஹிமையைக் கண்ணுற்ற விபீஷணன் மிகுந்த பக்தியுடன் பலமுறை வீழ்ந்து அவரது திருவடிகளை வணங்கினுன். அவனைத் தனது சிவயோகமஹிமையால் அருள் புரிந்து ரேணுகர் அவ்விடத்தினின்று மறைந்தார்.

विभीषणोऽपि हृष्टात्मा रेणुकस्य प्रसादतः।
शिवभक्तिरसासक्तः स्थिरराज्यमपालयत्॥ ३६॥
रेणुकोपि महातेजाः सञ्चरन् क्षितिमण्डले।

விபீஷணனும் ரேணுகரின் திருவருளால் மிக்க மனமகிழ்ச்சியுற்று சிவபக்தி எனும் அமிர்தத்தில் திளைத்தவனாய்

பல காலம் அரசு புரிந்தான். ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் ரேணுகரும் தன்னிச்சையாய் இப்பூவுலகில் சஞ்சரித்தார்.

சென்ற திக்கினை நோக்கின னஞ்சலி செய்தங்
கென்று மற்புட னிருந்தன னரக்கர்கோ னப்பா
னன்றி யுற்றருள் யோகிதா னல்லருள் புரிந்து
தன்ற னிச்சையிற் றடையற வுலகெலாஞ் சரித்தான்.

விபீஷணனும் ரேணுகரின் திருவருளால் மிக்க மனமகிழ்ச்சியுற்று ரேணுகர் சென்ற திசையை வணங்கினான். ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் ரேணுகரும் தன்னிச்சையாய் இப்பூவுலகில் சஞ்சரித்தார்.

प्रच्छन्नश्च प्रकाशश्च परमाद्वैतभावितः ॥ ३७॥
कांश्चिद् दृष्टिनिपातेन करुणारसवर्षिणा।
अपरानुपदेशेन शिवाद्वैताभिमर्शिना॥ ३८॥
अन्यांश्च सहवासेन समस्तमलहारिणा।
कृतार्थयन् जनान् कृतिनः पक्वकर्मिणः॥ ३९॥
दर्शयित्वा निजाधिक्यं शिवदर्शनलालसः।
खण्डयित्वा दुराचारान् पाषाण्डान् भिन्नदर्शनान्॥ ४०॥
यन्त्रमन्त्रकलासिद्धान् विमतान् सिद्धमण्डलान्।
विजित्य स्वप्रभावेण स्थापयित्वा शिवागमान्।
आजगाम निजावासं कोल्लिपाक्यभिधं पुरम्॥ ४१॥

எல்லாவற்றுக்கும் மேலான அத்துவைத நிலையையடைந்த ரேணுகரும் சிலகால் மறைந்தும் சிலகால் கண்களுக்குப் பிரத்தியட்சமாயும் தோன்றி சிலர்க்குத் தனது கருணைபொதிந்த நோக்காலும், மற்றுமுளோர்க்கு சிவாத்துவைதபாவம் நிறைந்த சொற்களாலும் மலபரிபாகம் அடைந்த மக்களுக்கு அருள்புரிந்து வந்தார்; தீய மதங்களையும் கொள்கைகளையும் வாதில் வென்றார்; யந்திரம் மந்திரம் ஆகியவற்றை மிகவும் பின்பற்றும் ஏனைய தீய மதங்களையும் வென்று தனது இருப்பிடமான கொல்லிபாகி ஏனும் தலத்திற்கு வந்தடைந்தார்.

எண்ணி லாவகை யாடல்கொண் டோங்குறு மின்ப
மண்ணு ளோர்தமக் குதவின னுலாவினன் வந்தே
யண்ணன் மேவிய கொல்லிபாக் கத்தினை யடைந்தான்
கண்ணி னாலடி யவர்கள்கண் டுவந்திடக் கணேசன்.

எண்ணற்ற திருவிளையாடல்களைப் புரிந்து மக்களுக்குப் பலவகையிலும் அருள்புரிந்து முடிவில் ரேணுகர் கொல்லிபாகமெனும் ஊருக்கு வந்தார்.

तत्र सम्भावितः सर्वैर्जनैः शिवपरायणैः।
सोमनाथाभिधानस्य शिवस्य प्राप मन्दिरम्॥४२॥
पश्यतां तत्र सर्वेषां भक्तानां शिवयोगिनाम्।
तन्वानो विस्मयं भावैस्तुष्टाव परमेश्वरम्॥४३॥

அங்கு சிவபக்தி கொண்ட ஊர்மக்கள் அவரை வணங்கினர்; ரேணுகர் ஸோமநாதரான சிவபிரான் திருக்கோயிலுக்குச் சென்றடைந்தார். சிவயோகிகள் எல்லோரும் ஆச்சரியமடையும் வண்ணம் மிக்க பக்தியுடன் ஸோமநாதரைத் துதித்தார்.

ஆல யத்தினி லடைந்துசோ மேசனா மரனை
மால யற்கரி யான்றனை யன்பொடு வணங்கிச்
சால மெய்த்துதி செய்திரு தடங்க ணீரருவி
போல நெக்குள முருகின னின்றிது புகலும்.

ரேணுகர் ஸோமநாதரான சிவபிரான் திருக்கோயிலுக்குச் சென்றடைந்தார். சிவயோகிகள் எல்லோரும் ஆச்சரியமடையும் வண்ணம் மிக்க பக்தியுடன் ஸோமநாதரைத் துதித்தார்.

देवदेव जगन्नाथ जगत्कारणकारण।
ब्रह्मविष्णुसुराधीशवन्द्यमानपदाम्बुज॥४४॥
संसारनाटकभ्रान्तिकलानिर्वहणप्रद।
समस्तवेदवेदान्तपरिबोधितवैभव॥४५॥
संसारवैद्य सर्वज्ञ सर्वशक्तिनिरङ्कुश।
सच्चिदानन्द सर्वस्व परमाकाशविग्रह॥४६॥
समस्तजगदाधारज्योतिर्लिङ्गविजृम्भण।

सदाशिवमुखानेकदिव्यमूर्तिकलाधर॥ ४७॥
गुणत्रयपदातीत मलत्रयविनाशन।
जगत्त्रयविलासात्मन् श्रुतित्रयविलोचन॥ ४८॥
पाहि मां परमेशान पाहि मां पार्वतीपते।
त्वदाज्ञया मयैतावत्कालमात्रं महीतले।
अचारि भवदुक्तानामागमानां प्रसिद्धये॥ ४९॥
अतः परं स्वरूपं ते प्राप्तुकामोऽस्मि शङ्कर।
अन्तरं देहि मे किञ्चिदनुकम्पाविशेषतः॥ ५०॥

ஓ தேவதேவரே! அனைத்துலகங்களுக்கும் காரணமானவரே! அனைத்துலக நாதரே! பிரம்மா விஷ்ணு முதலான அனைத்து தேவர்களும் போற்றும் திருவடியோனே! சம்சாரமெனும் நாடகத்தை அரங்கேற்றி நடத்தும் வல்லமையை அளிப்போனே! எல்லா வேதவேதாந்தசாத்திரங்களிலும் போற்றப்படும் பரம்பொருளே! சம்சார நோய்க்கு மருந்தே! எல்லாவற்றையும் உணர்ந்தவரே! அனைத்து வல்லமையும் பெற்றவரே! ஸச்சிதானந்த வடிவினரே! பரமாகாய வடிவானவரே! அனைத்துலகங்களுக்கும் ஆதாரமான சோதிலிங்கமே! ஸதாசிவன் முதலான பற்பல வடிவமுடையவரே! முக்குணங்களையும் கடந்தோனே! மும்மலங்களையும் அழிக்கவல்லானே! மூவுலகிலும் பிரகாசிப்பவரே! மூன்று வேதங்களையும் முக்கண்ணாக உடையவரே! பார்வதீ நாயகரே! என்னைக் காத்தருள்க. தங்களது திருக்கட்டளையால் நான் மூவுலகிலும் தங்களது ஆகமங்களைப் பரப்பினேன். இனியும் எனது பரமசொரூபத்தையடைய விரும்புகிறேன். தாங்கள் என்மீது கருணைகொண்டு எனக்கருள்புரிய வேண்டுகிறேன்.

இன்று காறுநின் னேவலான் மண்ணிடை யிருந்தே
னன்று நீயினித் திருவடித் தாமரை நல்கி
யென்று நானுடற் பொறையெடா தருளென விரந்து
நின்று ஞானமே னியனுருப் பெற்றிட நினைந்தான்.

தங்களது திருக்கட்டளையால் நான் மூவுலகிலும் தங்களது ஆகமங்களைப் பரப்பினேன். தங்களது திருவடித்தாமரையை என்மீது கருணைகொண்டு நல்கி ஞானமேனியடைய எனக்கருள்புரிய வேண்டுகிறேன்.

इत्युक्ते गणनायकेन सहसा लिङ्गात् ततः शाङ्कराद्
वत्सागच्छ महानुभाव भवतो भक्त्या प्रसन्नोऽस्म्यहम्।
इत्युच्चैरगदद् वचस्तनुभृतामश्चर्यमासीत् तदा
दिव्यो दुन्दुभिराननाद गगने पुष्पं ववर्षुर्गणाः॥५१॥

இவ்வாறு ரேணுகர் கூறவும் அச்சிவலிங்கத் திருமேனியிலிருந்து "குழந்தாய்! சிவானுபவம் நிறைந்தோனே! உனது செயலால் மிக்க மகிழ்ச்சியடைந்தோம். நீ வருக" எனும் சொற்கள் எல்லோரும் ஆச்சரியமடையும் வண்ணம் தோன்றின. வானத்தில் தெய்வீக துந்துபி போன்ற தாத்தியங்கள் முழங்கின; பூமாரி பொழிந்தது.

ஆன காலையி லங்கணன் றனதுபே ரருளான்
மான மாகுநின் பத்தியான் மகிழ்ந்தன முள்ள
ஞான மாமொழி மைந்தநீ வருகென நவின்றான்
வானு ளார்மலர் பொழிந்தனர் மண்ணுளா ரார்த்தார்.

இவ்வாறு ரேணுகர் கூறவும் அச்சிவலிங்கத் திருமேனியிலிருந்து "குழந்தாய்! சிவானுபவம் நிறைந்தோனே! உனது செயலால் மிக்க மகிழ்ச்சியடைந்தோம். நீ வருக" எனும் சொற்கள் எல்லோரும் ஆச்சரியமடையும் வண்ணம் தோன்றின. வானத்தில் பூமாரி பொழிந்தது. பூவுலகில் மக்கள் ஆச்சரியமடைந்தனர்.

श्रुत्वा लिङ्गाद् वचनमुदितं शाङ्करं सानुकम्पं
संहृष्टात्मा गणपतिरथो ज्योतिषा दीप्यमानः।
जातोत्कण्ठैः परमनुचरैर्योगिभिः स्तूयमानो
ज्योतिर्लिङ्गं परमनुविशत् स्वप्रकाशं तदानीम्॥५२॥

ஸ்ரீரேணுகர் மஹாலிங்கத்தந்தர்த்தாநமாதல்.

இவ்வாறு லிங்கத்தினின்றும் தோன்றிய சிவபெருமானின் மொழிகளைக் கேட்ட கணநாயகரான ரேணுகர் ஏனைய சிவயோகிகள் ஆச்சரியத்துடன் அவரைப் போற்றி வணங்கிய நேரத்தில் ஒளிவிட்டுப் பிரகாசித்துக் கொண்டே அந்த சோதிலிங்கத்தில் சென்று மறைந்தார்.

**ஆதி நாயக னருண்மொழி கேட்டக மகிழ்ந்து**
**போத மாதவ ரனைவரு முறைமுறை போற்றச்**
**சோதி யாயெழுந் திலங்குசோ மேசன்மெய்ச் சொரூபத்**
**தோதி யான்மிகு மிரேணுக கணேசனுற் றொளித்தான்.**

இவ்வாறு லிங்கத்தினின்றும் தோன்றிய சிவபெருமானின் மொழிகளைக் கேட்ட கணநாயகரான ரேணுகர் ஏனைய சிவயோகிகள் ஆச்சரியத்துடன் அவரைப் போற்றி வணங்கிய நேரத்தில் ஒளிவிட்டுப் பிரகாசித்துக் கொண்டே அந்த சோதிலிங்கத்தில் சென்று மறைந்தார்.

लीने तस्मिन् शाङ्करे स्वप्रकाशे
दिव्याकारे रेणुके सिद्धनाथे।
सर्वो लोको विस्मितोऽभूत् तदानीं
शैवी भक्तिः सप्रमाणा बभूव॥५२॥

தனது சிவப்பிரகாசத்தில் ரேணுகர் மறைந்தவுடன் அனைத்துலகங்களும் ஆச்சரியமடைந்தன; சிவபக்தியும் உண்மையே எனப் பிரமாணம் அடைந்தது.

**கணங்க ணாயகன் சிவலிங்கத் துற்றமை கண்டு**
**வணங்கி வானவர் கணங்கண்மா தவரெலாம் வழுத்தி**
**மணங்கொண் மாமலர் பொழிந்துநின் றார்த்தனர் மண்மே**
**லணங்கு பாதியன் புகழ்வளர்ந் தோங்கிய தம்மா.**

தனது சிவப்பிரகாசத்தில் ரேணுகர் மறைந்தவுடன் அனைத்துலகங்களும் ஆச்சரியமடைந்தன; சிவபக்தியும் உண்மையே எனப் பிரமாணம் அடைந்தது.

श्रीवेदागमवीरशैवसरणीं श्रीषट्स्थलोद्यन्मणिं
श्रीजीवेश्वरयोगपद्मतरणिं श्रीगोप्यचिन्तामणिम्।
श्रीसिद्धान्तशिखामणिं लिखयिता यस्तं लिखित्वा परान्
श्रुत्वा श्रावयित्वा स याति विमलां भुक्तिं च मुक्तिं पराम्॥५४॥

इति श्रीमत्षट्स्थलब्रह्मिणा शिवयोगिनाम्ना रेणुकाचार्येण विरचिते वीरशैवधर्मनिर्णये सिद्धान्तशिखामणौ रेणुकविभीषणसंवादे रेणुकशिवलिङ्गैक्यप्रसङ्गो नाम
एकविंशः परिच्छेदः॥२१॥

வேதாகமங்களின் சாரமான வீரசைவ சித்தாந்தமானதும் ஷட்ஸ்தல மதத்தை விளக்குவதும் ஜீவசிவ ஐக்கியத்தை அடிப்படைக் கொள்கையாகக் கொண்டதும் மிகவும் ரகசியமாகப் போற்றப்பட வேண்டியதுமான இந்த ஸித்தாந்தசிகாமணி எனும் நூலை எழுதுவோனும், மற்றவரை எழுதுவிப்போனும், நூலைக் கேட்போனும், மற்றவரைக் கேட்கச் செய்வோனும் அனைத்து போகங்களையும் பெற்று குற்றங்களற்ற தூயநிலையான முக்தியை அடைவான்.

வேதமோ டாக மங்கள் வேறுபா டின்றி நல்குந்
தீதறு பொருளை யெல்லாந் திரிவற வுலகிற் காட்டு
மாதவ னனைய விந்நூ லாதர வொடுபொ றிப்போ
ரோதுந ரொது விப்போ ருயர்தனி முத்தி சேர்வார்.

வேதாகமங்களின் சாரமான வீரசைவ சித்தாந்தமானதும் ஷட்ஸ்தல மதத்தை விளக்குவதும் ஜீவசிவ ஐக்கியத்தை அடிப்படைக் கொள்கையாகக் கொண்டதும் மிகவும் ரகசியமாகப் போற்றப்பட வேண்டியதுமான இந்த ஸித்தாந்தசிகாமணி எனும் நூலை எழுதுவோனும், மற்றவரை எழுதுவிப்போனும், நூலைக் கேட்போனும், மற்றவரைக் கேட்கச் செய்வோனும் அனைத்து போகங்களையும் பெற்று குற்றங்களற்ற தூயநிலையான முக்தியை அடைவான்.

மாரி பெய்க மநுநெறி யோங்குக
பாரி லொண்சிவ பத்தர்கண் மல்குக

**சீரின் மல்குஞ் சிவன் புகழ் வெல்குக**
**வீர சைவம் விளங்குக வெங்குமே.**

எங்கும் மாரி பெய்க! மநுநீதி ஓங்குக! பூவுலகில் சிவபக்தர்கள் நிறைந்து விளங்குக! சிவபெருமான் திருப்புகழ் வெல்க! எங்கும் வீரசைவ நெறி தழைத்து விளங்குக!

அந்தியகதை முற்றும்.

இவ்விதமாய் ஸ்ரீரேணுகாசார்யர் அகஸ்த்யமுனிவருக்கு
உபதேஶித்தருளிய
வீரஶைவசித்தாந்தசிகாமணி மூலம்
முற்றுப் பெற்றது.

